# தீங்கியல் சட்டம்

## (THE LAW OF TORTS)

With regards.
M. Shunmugasubramanian
3.2.64

To
Sri. Sam. Ganesan M.L.A.
Madras.


ஆசிரியர்:

திரு மா சண்முக சுப்பிரமணியம், பி ஏ, பி எல்


அணிந்துரை:

தமிழ்நாடு முதலமைச்சர்

உயர்திரு எம் பக்தவத்சலம் அவர்கள்

முகவுரை:

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி

உயர்திரு மா அனந்த நாராயணன் அவர்கள்


திருநெல்வேலித் தென்னிந்திய

சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம், லிமிடெட்,

திருநெல்வேலி-6. சென்னை-1.

1964

215

# பதிப்புரை

நாகரிகம் அடைந்துள்ள நாடுகளில் எல்லாம் சட்டத்தின் ஆட்சியே (Rule of Law) நடைபெறுகிறது. சட்டம் இன்றிச் சமுதாய வாழ்வும் அரசும் நடைபெற முடியாது. குடியாட்சி முறையில் சட்டங்களை இயற்றும் தனி உரிமை மக்களிடமே, மக்களால் தேர்ந்தெடுக்கப்பட்டவர்களிடமே, இருக்கிறது. ஆதலால், சனநாயக ஆட்சியில் பொதுமக்களுக்கு ஓரளவு சட்ட அறிவு இன்றியமையாததாகும்.

பொதுமக்களிடை சட்ட அறிவு பரவி, சனநாயகம் வளர்ச்சியுறுவதற்கும், தமிழ்மொழி வளம் பெறுவதற்கும் பலவகைச் சட்ட நூல்களைத் தமிழ்மொழியில் வெளியிடுவது முக்கியமான தொண்டாகும். எனவே, சட்டம்பற்றிய தமிழ் நூல்களை வெளியிடலானோம். இவ்வாசிரியரால் எழுதப்பட்ட "சட்ட இயல்" (Jurisprudence) என்ற நூலும், திரு. பு. ரா. பக்கிரி சங்கர் அவர்கள் இயற்றிய "சட்டமன்ற நடைமுறை" என்ற நூலும் கழகத்தின் வாயிலாக வெளிவந்துள்ளன.

"தீங்கியல் சட்டம்" (Law of Torts) என்பது மக்களின் அன்றாட வாழ்வுடன் நெருங்கிய தொடர்பு கொண்டது. பிறரால் நமக்குத் தீங்கு விளையாமலும், நாம் பிறருக்குத் தீங்கு இழைக்காமலும், நல்வாழ்வு வாழ்வதற்கு இச்சட்ட அறிவு மிகவும் தேவையாகும். பிறரால் நமக்குறும் தீங்கின் வகைகள் என்ன, அவைகளுக்குத் தீர்வு பெறும் விதங்கள் என்ன என்பதை இச்சட்டம் கூறுகின்றது. சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி உயர் திரு. மா. அனந்தநாராயணன் அவர்கள் அன்புடன் அளித்திருக்கும் முகவுரையில் உரைத்துள்ளபடி இந்நூல் பட்டப் படிப்பில் சமூகஇயல் கற்கும் மாணவர்களுக்கு முக்கியமாகத் தெரியவேண்டிய பகுதியாகும்.

இந் நூலாசிரியர் திரு. மா. சண்முக சுப்பிரமணியம் சட்டத்தில் ஆழ்ந்த அறிவும் தமிழிலக்கியத்தில் சிறந்த பயிற்சியும் கொண்டு தெள்ளிய இனிய நடையில் சட்டத்தின் நுட்பக் கருத்துக்களை எழுதியிருப்பது பெரிதும் பாராட்டுதற்குரியது. "Tort" என்ற இலத்தீன் சொல்லுக்கு ஏற்ற ஆங்கிலச் சொல் இல்லாது அச்சொல்லையே ஆங்கில நூலாசிரியர்கள் ஏற்று எழுத, அதனை அழகுற "உரிமைத் தீங்கு" என்றும், "Law of Torts" என்பதைத் "தீங்கியல் சட்டம்" என்றும் தமிழில் ஆக்கியிருப்பது இந் நூலாசிரியரின் சொல்லாக்குந் திறனுக்குச் சான்றாகும்.

தமிழக, முதலமைச்சர் கனம். பக்தவத்சலம் அவர்கள் அணிந்துரையில் கூறியுள்ளபடி, சட்ட நூல்களைத் தமிழ் மொழியில் இலக்கியச் சுவையுடன் எழுதமுடியும் என்பதற்கு இந்நூல் ஓர் எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறது.

எளிதில் தெரிந்துகொள்ள முடியாத சட்டக் கருத்துக்களைப் புரியாத ஆங்கிலத்தில் கற்கும் முயற்சியில் அல்லலுறும் சட்டக் கல்லூரி மாணவர்களுக்கு, அக் கொள்கைகளைத் தெளிவான தமிழில் எளிதாகக் கூறும் இந்நூல் இன்றியமையாத துணையாக இருக்குமென நம்புகிறோம். சட்டத்தைத் தமிழில் கற்கவும், கற்பிக்கவும் வகை செய்வதற்கு இந்நூல் பெருந் துணைபுரியும் என்பதில் ஐயமில்லை. இந் நூலாசிரியருக்குக் கழகத்தின் நன்றி உரித்தாகும்.

சட்டத்தின் பிற பகுதிகளைப்பற்றிய நூல்களையும் ஆற்றலும் ஆர்வமும் வாய்ந்த இந்நூலாசிரியரைக்கொண்டே இயற்றுவித்து வெளியிட எண்ணங்கொண்டிருக்கும் கழகத்திற்குத் தமிழ் மக்கள் ஊக்கமளிப்பார்கள் என்று நம்புகிறோம்.

**சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகத்தார்.**

தமிழ்நாடு முதலமைச்சர்

கனம். எம். பக்தவத்சலம் B. A., B. L. அவர்கள் அளித்த

# அணிந்துரை

தமிழ், தமிழக அரசாங்கத்தின் ஆட்சி மொழியாக வேண்டும் என்ற கொள்கை சட்டமன்றத்தில் 1956 ஆம் ஆண்டி லேயே ஏற்றுக்கொள்ளப்பட்டு, அதற்கென, சென்னை ஆட்சி மொழிச்சட்டம் இயற்றப்பட்டது. படிப்படியாகத் தமிழ் எல்லா அலுவலகங்களிலும் உபயோகிக்கப்பட வேண்டியதற்கான ஏற் பாடுகள் அமுல் நடத்தப்பட்டு வருகின்றன.

தமிழிலேயே சட்டங்களைப் பயிலுவதற்கும், வாதங்களை எடுத்துக் கூறுவதற்கும் முன்னேற்பாடாகத் தமிழ் மொழியில் சட்டப் புத்தகங்கள் வெளிவருவது அவசியமாகும்.

ஆங்கிலத்தில் 'Law of Torts' என்று கூறப்படும் சட்டத் தைத் தமிழ் மொழியில் "தீங்கியல் சட்டம்" என்ற தலைப்பில் எழுதியிருக்கும் இந் நூலாசிரியரின் நல்ல முயற்சி பாராட்டுதற் குரியது. இந்நூலாசிரியர் திரு. எம். சண்முகசுப்பிரமணியம், பி. ஏ., பி. எல்., ஏற்கனவே "சட்ட இயல்" (Jurisprudence) என்ற நல்ல நூலை எழுதியிருக்கின்றார்.

குற்ற இயல் (Law of Crimes) சட்டத்தைப் பற்றி ஓரளவு பலரும் அறிவார்கள். ஆனால், தீங்கியல் சட்டம் (Law of Torts) என்ன என்பது பற்றிச் சட்டம் பயின்றவர்கள் மட்டுமே அறிந் திருக்கின்றனர். பிறரால் நமக்கு விளையும் தீங்குகளுக்குச் சட்டம் எவ்வாறு தீர்வு அளிக்கின்றது என்பதைக் கூறுவது "தீங்கியல்" சட்டமாகும். பலவகைத் தீங்குகள் குறித்துக் கூறப்பட்ட தீர்ப்புக்களைக் கொண்டதாகவே இச்சட்டம் அமைந் திருக்கின்றது. அத்தீர்ப்புக்களை வகைப்படுத்தித் தொகுத்துக் கூறும் ஆங்கிலத்திலுள்ள சட்ட நூல்களை அடிப்படையாகக் கொண்டு தமிழ்மொழியில் இந்நூல் எழுதப்பட்டிருக்கிறது. தீங்கியல் சட்டத்தின் கொள்கைகள் சட்ட மன்றங்களால் இயற் றப்படாமல் நீதிபதிகளின் தீர்ப்புக்களில் அடங்கியவை என்பதை, "கூர்த்த மதித் திறனும் கொண்ட அனுபவமும், நடுவு நிலைத் தன்மையும் நல்ல மனச்சான்றும், ஒருங்கே அமைந்து உயர்ந்த சான்றோர்கள், உரிமைக்குத் தீங்கு உற்றதால் எழுந்த, வழக்கு களை ஆய்ந்து வகுத்த விதிகளே, தீங்கியல் சட்டத்தின் திறம்படு கொள்கைகள்," என்று ஆசிரியர் நன்கு கூறியிருக்கிறார்.

தீங்கியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகள் என்ன, தீங்கியலுக்கும் குற்ற இயலுக்கும் உள்ள வேறுபாடு என்ன, தீங்கியலுக்கும் ஒப்பந்த முறிவுக்கும் உள்ள வேற்றுமை என்ன என்பதைத் தெளிவாக எடுத்துரைத்துள்ளார். "உரிமைத் தீங்கு எனப்படுவது ஒருவரின் சட்டப்படியான உரிமைக்கு ஊறு செய்வதாகும் என்பது, அதற்குக் கழுவாய் கட்டாயம் உண்டு என்பது, அறுதியிடப்படாத இழப்பீடு (Unliquidated damages) அதற்குக் கழுவாய் ஆகும் என்பது, அதைச் செலுத்தும் பொறுப்பு தீங்கு இழைத்தவருக்கு உண்டு என்பது, என்ற இந்தக் கூறுகளை மனதிற்கொண்டால் 'உரிமைத் தீங்கின்' இலக்கணத்தை உணர்ந்தவராவோம்," என்று ஆசிரியர் விளக்கியிருப்பது மிகவும் பொருத்தமாகவும், எளிதில் யாரும் புரிந்து கொள்ளும் வகையிலும் இருக்கிறது. அவதூறு (Defamation), கவனமின்மை (Negligence), தீய நோக்குடன் குற்ற வழக்கிடல் (Malicious Prosecution) முதலிய தீங்குகளைப் பற்றி மிகத் தெளிவாக விளக்கியுள்ளார்.

சட்டத்திலுள்ள ஆங்கிலச் சொற்களைப் பொருள் தெரியும்படி மரபுக்கேற்பத் தமிழில் மொழிபெயர்த்தல் வேண்டும். Dominant heritage - வசதி பெறும் சொத்து, Servient heritage - வசதி தரும் சொத்து, Natural right - இயல்பான உரிமை (உற்ற உரிமை), Acquired right - ஈட்டிய உரிமை (பெற்ற உரிமை), Wrong committed in the course of employment........ ......உரிய பணியைப் புரியும் வகையில் உதித்த தீங்கு, இட்ட வேலையை இயற்றும் விதத்தில் இழைத்த தீங்கு,—இவ்வாறு நல்ல முறையில் ஆங்கிலத்திலுள்ள சட்டச் சொற்களைத் தமிழில் தந்திருக்கிறார். தீங்கியல் சட்ட விதிகளில் பல எவ்வாறு அறநெறியின் அடிப்படையில் அமைந்திருக்கின்றன என்பதைத் "தீங்கியலும், அறநெறியும்" என்ற கடைசிப் பகுதியில் விளக்கியிருக்கிறார்.

சட்ட நூல்களை இலக்கியச் சுவையோடு தமிழ்மொழியில் எழுத முடியும் என்பதற்கு இந்நூல் ஓர் எடுத்துக்காட்டாக அமைந்திருக்கிறதென்று நான் கருதுகிறேன்.

தமிழ் மொழியிலேயே சட்டத்தைப் பயிலும் முறையை ஏற்படுத்தவும், நீதிமன்றங்களில் தமிழிலேயே வழக்குகளை நடத்தவும் வேண்டுமெனில் இது போன்ற சிறந்த நூல்கள் பல வெளிவரவேண்டும். சட்டமும் தமிழும் நன்கு தெரிந்த பலரும் இதுபோன்ற நல்ல முயற்சிகளில் ஈடுபடுவது தமிழுக்குச் செய்யும் சேவையாகும்.

"பிற நாட்டு நல்லறிஞர்
சாத்திரங்கள் தமிழ் மொழியிற்
பெயர்த்தல் வேண்டும் . . . . . ."

என்ற கவி பாரதியின் கட்டளையை நிறைவேற்றுவதில் நாம் இன்னும் முழுமூச்சுடன் ஈடுபடவில்லை. வெறும் பிரசாரத்தால் மட்டும் தமிழ் வளர்ந்துவிடுவதில்லை. இதுபோன்ற ஆக்க வேலைகளின் பயனாகத்தான் தமிழ் மொழி உண்மையாகவே வளர்ச்சி பெறமுடியும்.

இந்த நல்ல முயற்சியில் ஆர்வத்துடன் தொண்டாற்றும் இந்நூலாசிரியரை நான் மனமாரப் பாராட்டுகிறேன். இது போன்ற இன்னும் பல நூல்கள் வெளிவர வேண்டுமென விரும்புகிறேன்.

சென்னை,
1—1—1964

எம். பக்தவத்ஸலம்,
தமிழ்நாடு முதலமைச்சர்.

சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி

கனம். மா. அனந்த நாராயணன் I. C. S. அவர்கள் அளித்த

# முகவுரை

திரு. எம். சண்முக சுப்பிரமணியம் இயற்றிய "தீங்கியல் சட்டம்" (Law of Torts) என்ற இந்நூல், சட்டப் பகுதிகளுள் மக்கள் சமூகத்திற்கு மிக நெருங்கிய தொடர்புகொண்ட பகுதியொன்றை விளக்குவதாகும். ஆங்கிலத்தில் இந்தச் சட்டப் பகுதியைக் குறித்து மிக அரிய நூல்கள் வெளிவந்துள்ளன வேனும், இதுவரை இவ்வளவு விரிவாகவும் தெளிவாகவும் தமிழில் இதன் கொள்கைகளை எடுத்துரைக்கும் நூலை நாம் கண்டிலம். இவ்வாசிரியர் விளக்கும்வண்ணம் Tort என்ற "உரிமைத் தீங்கின்" கூறுகள், சட்டப்படியான பிறரது உரிமைக்குப் பிழை இழைத்தலும், விளைந்த உரிமைத் தீங்கிற்கு இழப்பீடு பெறலும், அவ்விழப்பீடு தீங்கிழைத்தவரிடமிருந்தோ அவரைச் சார்ந்தவரிடமிருந்தோ அறுதியிடப்படாத நட்ட ஈடாகத் தீங்கிழைக்கப்பட்டவர் வழக்கிட்டுக் கோரிப் பெறுவதும் எனலாம்.

இவ்வகையான சட்டப்பகுதி நீதிமன்றத்தால் ஆக்கப் பெறும் வழக்குத்தீர்ப்புகள் (Precedents) மூலமாகவே வளர்ச்சி பெறுகின்றது; சட்ட மன்றத்தில் இயற்றப்படும் சட்ட வடிவத்தாலன்று. இதன் காரணத்தை இவ்வாசிரியர் நன்கு விளக்கியுள்ளார். சமூக வளர்ச்சியினாலும் விஞ்ஞானப் பெருக்காலும் "உரிமைத் தீங்குகள்" எண்ணிறந்த புதிய உருக்களாகப் பிறந்தோங்குகின்றன. ஒலி பெருக்கியின் தொல்லையும், தொழிலாலையில் உற்பத்தியாகும் நாசப்பொருள்களால் ஏற்படக்கூடிய உடல் தீங்குகளும் "விஞ்ஞான யுகத்தின்" தனி இலக்கணங்களாவன. இவைகளை எல்லாம் விஞ்ஞான யுகத்திற்கு முன்பு கனவிலும் நினைத்திருக்க முடியாது. அதுபோலவே நாளை தோன்றக் கூடிய "உரிமைத் தீங்குகளை" யார் தாம் முன்கூட்டி வகுக்கவல்லார்? இதுபற்றியே இச்சட்டப் பகுதி சட்டமன்றங்கள் இயற்றும் சட்டவடிவத்தால் (Enactment) எளிதில் அமையக் கூடியதன்று. நமது நாட்டைக் குறித்த மட்டில் "தீங்கியல் சட்டம்" அவ்வளவு வளர்ச்சி பெறாத காரணம் "உரிமைத் தீங்கு" வழக்குகளின் குறைந்த எண்ணிக்கைதான். மேல் நாடுகளில் இச்சட்டப்பகுதி வழக்குத் தீர்ப்புக்களால் அன்றாடம் புத்துயிர் பெறுகின்றது. Times Law Reports போன்ற நீதிமன்றத் தீர்ப்புப் பிரசுரங்களைக் கவனித்தால் இது நன்கு புலனாகும்.

"தீங்கியல் சட்டத்தின்" உட்பிரிவுகளான கவனமின்மை (Negligence), அவதூறு (Defamation), பகரப் பொறுப்பு (Vicarious Liability) போன்ற அடிப்படைக் கருத்துக்களை ஆசிரியர் இனிது விவரித்துள்ளார். இந்நூலின் தனிச் சிறப்பு, இச்சட்டத்தின் "எல்லைக் கற்கள்" போன்ற மன்றத் தீர்ப்புக்களை விரித்துரைத்துள்ள அம்சமாகும். உதாரணமாக Rylands V. Fletcher (1866) L. R. I. Ex 265, Blyth V. Birmingham Waterworks Co. (1856) 11. Ex 781—("கவனமின்மை"யின் கூறுகளை நீதிபதி Alderson விளக்கியிருப்பது) போல்வனவாம்.

Actio personalis moritur cum persona போன்ற உரோம சட்டப் பண்பின் விளைவாகும் லத்தீன்விதி மொழிகளுக்கு இவர் உகந்த தமிழாக்கம் சிறு அளவில் வழங்கியிருப்பது இந்த நூலின் மற்றொரு தனி இயல்பாகும்.

மக்களின் அன்றாட வாழ்வுடன் நெருங்கிய தொடர்பு கொண்ட "தீங்கியல்" சட்டப்பகுதி பற்றி விளக்கிக்கூறும் இந்நூலைப் பட்டப்படிப்பிற்கான சமூக இயல் (Sociology) பிரிவிற்குப் பாடப்புத்தகமாக வைப்பது பெரிதும் பயனுடைத்தாகும்.

சட்டம் என்பது விஞ்ஞானம், கலை இவ்விரு அம்சங்களும் கலந்த ஓர் அறிவுப்பகுதி; இங்கு, தெளிவு, நேர்மை (Precision) இரண்டும் இன்றியமையாத குணங்கள். நுட்பக் கருத்துக்களை விளக்க மொழித்திறன் மிக வேண்டும். பாமரரால் அறியக்கூடிய எளிய மொழியில்தான் சட்டத்தின் தமிழாக்கம் அமைய வேண்டும், அன்றேல் அது நேரான தமிழாக்கம் அன்று என்று வாதிப்பது சட்டநூற் பண்பினை அறியாமையாகும். எளிமையையும் இயன்ற அளவில் கைப்பற்ற வேண்டும்; ஆனால் எளிமையின் பொருட்டு நுட்பத்தின் நேர்மையைக் கைவிடக் கூடாது. இவ்விலட்சியங்களைக் கைவிடாது திரு. சண்முகசுப்பிரமணியம் இந்நூலை இயற்றியிருப்பது தமிழுக்கும் சட்டநூல் ஆராய்ச்சிக்கும் ஒருங்கே புரிந்த நற்றொண்டாகும்.

சென்னை,<br>30—12—1963

மா. அனந்த நாராயணன்,<br>சென்னை உயர்நீதிமன்ற நீதிபதி.

# முன்னுரை

“சொல்லவுங் கூடுவதில்லை—அவை
சொல்லுந்திறமை தமிழ்மொழிக்கில்லை ;
மெல்லத் தமிழினிச் சாகும்—அந்த
மேற்குமொழிகள் புவிமிசை யோங்கும்,”
என்றந்தப் பேதை உரைத்தான்—ஆ !
இந்த வசையெனக் கெய்திடலாமோ ?
சென்றிடுவீர் எட்டுத்திக்கும்—கலைச்
செல்வங்கள்யாவும் கொணர்ந்திங்குச் சேர்ப்பீர் !

தமிழ்த் தாயின் கட்டளையாகப் பாரதியார் இயற்றிய பாடல்கள் இவை. சட்டம் தமிழ்மொழியில் ஏன் என்பதற்குத் தக்க விடையைக் கூறுகின்றன இப் பாடல்கள்.

“நீதி வழங்குவதை அனைவருக்கும் தெரியும்படி வழங்குவதே முறை,” என்பது சட்டத்தின் அடிப்படை விதியாகும். முறை செய்தலின் இறைமை எல்லோருக்கும் தெரியவேண்டும் என்ற நோக்கத்துடன்தான், பொதுமக்கள் அனைவரும் சென்று பார்க்கும் வகையில் நீதிமன்றங்கள் நடைபெறுகின்றன. நீதிமன்ற நடவடிக்கைகளும், சட்டநூல்களும் தாய்மொழியில் இருந்தால் தான் அனைவரும் அறிந்துகொள்ளும் வகையில் நீதி வழங்கும் முறை நிலைபெற முடியும்.

ஆங்கிலத்தில் அரை குறை அறிவு, தமிழிலறிவு அதைவிடக் குறைவு என்ற நிலையில் உள்ள சிலர், “சொல்லுந்திறமை தமிழ் மொழிக்கில்லை,” என்று இன்றும் தயங்காது கூறுகின்றனர். இவர்களைப் பற்றித்தான்,

“............
கொன்றிடல் போலொரு வார்த்தை—இங்குக்
கூறத்தகாதவன் கூறினன் கண்டீர் !”

என்று மனம் நொந்து பாடுகின்றார் பாரதியார். “அசைவில் செழுந் தமிழ் வழக்கே அயல் வழக்கின் துறை வெல்ல....” என்பது அமைச்சரடிகள் சேக்கிழாரின் வாக்கு. எண்ணூறு ஆண்டுகளுக்கு முன்னும் அயல்வழக்கின் துறைகளைத் தமிழ் வழக்கு வெல்லுவதற்கான முயற்சியும், அதற்கு இடையூறுகளும் இருந்திருக்கின்றன ! “பிறநாட்டு நல்லறிஞர் சாத்திரங்கள் தமிழ்மொழியில் பெயர்த்தல் வேண்டும்,” என்ற கவி பாரதியின் கட்டளையை நிறைவேற்றுவதில் மிக்க ஆர்வமும் ஆற்றலும் உடையோர்கள் முனைந்து நின்று பாடுபட்டால் “அசைவில்

செழுந்தமிழ் வழக்கு அயல்வழக்கின் துறை வெல்லும்'' ஏற்ற நிலை ஏற்படும் என்பதில் ஐயமில்லை.

சென்ற ஆண்டில் வெளியிடப்பட்ட ''சட்ட இயல்'' (Jurisprudence) என்ற நூலை அறிந்தோர்கள் ஆதரித்துப் பாராட்டினர். அதனால் பெற்ற ஊக்கத்தின் பயனாகவே "தீங்கியல் சட்டம்" (Law of Torts) என்ற இந்நூல் வெளிவருகின்றது. சட்டத்தின் நுட்பக் கருத்துக்களைத் தமிழ் மொழியில் கூறும் இம்முயற்சியில் குறைபாடுகள் இருக்கலாம். அதற்குக் காரணம் ஆக்கியோனின் திறமைக் குறைவு என்று கொள்ள வேண்டுமே யொழிய, "சொல்லுந் திறமை தமிழ்மொழிக் கில்லை" என்று கூறுதல் தகாது.

என்னை இப்பணியில் ஊக்குவிக்கும் பெரியோர் இருவர் இந்நூலுக்கு அணிந்துரையும், முகவுரையும் அன்புடன் அளித்திருக்கின்றனர். தமிழ்மொழி வளர்ச்சிக்கு உரிய பணியாற்றி, அதற்கு உற்ற ஆதரவை ஆர்வத்துடன், ஆனால் ஆரவாரமின்றி, அளிக்கும் பெருந்தகை தமிழக முதன்மந்திரி கனம். எம். பக்தவத்சலம் அவர்கள். சட்டத்துறை பற்றிய தமிழ் வளர்ச்சிப் பணிகள் அனைத்திற்கும் தலைமை தாங்கி வழிகாட்டி நிற்கும் சால்புடைச் சான்றோர் சென்னை உயர் நீதிமன்ற நீதிபதி கனம். மா. அனந்த நாராயணன் அவர்கள். இவர்கள் இருவருக்கும் எனது நன்றியைப் பணிவுடன் தெரிவித்துக் கொள்ளுகிறேன்.

தமிழ் வளர்ச்சிக்கு அரிய முறையில் பணிபுரிந்து வருவது சைவசித்தாந்த நூற்பதிப்புக் கழகம் என்றால் அது, அக் கழகத்தின் ஆட்சிப் பொறுப்பாளர் உயர்திரு. வ. சுப்பையா பிள்ளை அவர்களின் அயராத உழைப்பாலும், ஆர்வமிக்க தொண்டாலுமே யாம். விரைவில் இந்நூலை எழுதி முடிக்கும்படி இடைவிடாது என்னைத் தூண்டி, ஊக்கமளித்து, எழுதி முடித்த பின், இரண்டே மாதங்களில் இந்நூலைச் சிறந்த முறையில் வெளியிடும் அவர்களுக்கு எனது உளங்கனிந்த நன்றி என்றும் உரியதாகும்.

தமிழ்த்தாயின் பொன்னடிகளுக்கு இச் சிறிய, ஆனால் புதிய மலரைக் காணிக்கை யாக்குகிறேன்.

சென்னை
6-1-1964

மா. சண்முக சுப்பிரமணியம்

# உள்ளுறை

# முதலாவது பிரிவு

## 1. நீதிமுறை

வாழ்வில் இன்பம் நிலைப்பது இன்றியமையாததாகும் - வாழ்வில் துன்பம் விளைவது இயல்பாகின்றது - ஒருவருக்கு மற்றொருவரால் துன்பம் ஏன் விளைகின்றது - இசைந்த வாழ்வே இன்ப வாழ்வாகும் - 'முறை செய்தல்' என்றால் என்ன? - அரசு எவ்வாறு முறைசெய்து மக்களைக் காக்கின்றது? - நீதி வழங்குதலின் நீர்மை.

## 2. சட்டம்

முறை செய்வதற்குக் கருவியாகச் சட்டம் அமைகிறது - சட்டததின் மூலங்கள் - சட்டத்தின் தன்மை என்ன? – அறநெறியும், அரசின் வலியும் சட்டத்தில் அடங்கியிருக்கின்றன - சமுதாயப் பண்பின் பயனே சட்டத்தின் பயனுமாகும் - சமுதாய வளர்ச்சிக்குச் சட்டம் உதவுகிறது.

## 3. சட்டத்தின் வகைகளும், நீதி வழங்கும் முறைகளும்

உரிமை இயல் சட்டம் (Civil Law) - உரிமை நிறுத்தல்முறை (Civil Justice) - குற்றவியல் சட்டம் (Criminal Law) - ஒறுத்தல் முறை (Criminal Justice).

## 4. "தீங்கியல்" சட்டம்

உரிமை இயல் சட்டத்தின் ஒருவகை தீங்கியல் சட்டம் - "உரிமைக்கு ஊறு விளைந்தால் அதற்கான உய்தி உண்டு", "தீங்கு செய்யப்பட்டால் அதற்குத் தீர்வு உண்டு," என்ற கொள்கையின் விளக்கம் - தீங்கின் வகைகளையும் அவை தீரும் திறங்களையும் பற்றிக் கூறுவது தீங்கியல் சட்டம் - நீதிமன்றங்களால் வகுக்கப்பட்ட கொள்கைகளின் கோவையாக அமைகிறது.

## 5. "உரிமைத் தீங்கின்" (Tort) இலக்கணம்

Tort என்ற சொல்லின் உட்பொருள் - ஒரு செயல் எப்போது "உரிமைத் தீங்கு" ஆகிறது - உரிமைக்கு ஊறு விளைவிப்பது, சட்டப்படியான கடமையில் தவறிக் கேடு விளைவிப்பது, இதுவே உரிமைத் தீங்கு - அறுதியிட்ட நட்டஈடு - அறுதியிடப்படாத நட்ட ஈடு - உரிமைத் தீங்கிற்குரிய இலக்கணம் - உரிமைத் தீங்கிற்கும் (Tort) குற்றத்திற்கும் (Crime) உள்ள வேறுபாடுகள் - உரிமைத் தீங்கிற்கும் ஒப்பந்த முறிவுக்கும் (Breach of Contract) உள்ள வேறுபாடுகள் - உரிமைத் தீங்கு என்பதைத் "தீங்கு" என்றே குறிப்பிடலாம்.

6. தீங்கியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகள்

உரிமை மீறப்பட்டால் சட்டப்படியான இழப்பும் அதில் அடங்கி இருக்கிறது - நட்டமில்லாத் தீங்கு (Injuria sine damno), தீங்கினுல் விளையா நட்டம் (Damnum sine injuria) - தீங் கெண்ணம் (Malice) என்பது என்ன ? - தீய நோக்கமும், தீங்குச் செயலும் - இழப்பிற்கு ஈடு செய்வதே சட்டத்தின் குறிக்கோள்.

7. '' தீங்கியல் '' சட்டமும் அன்றைய அறமுறையும்

## இரண்டாவது பிரிவு

### பகுதி 1

உடலுரிமைக்கு விளையும் தீங்குகள் (Wrongs to the Person)

(அ) தீங்கின் வகைகள்

உடலைத் தாக்குதல் (Battery) - உடலைத் தாக்க முனைதல் (Assault) - உடலுக்கு ஊறுசெய்தல் (Causing Hurt) - முறை யின்றிச் சிறைப்படுத்தல் (False Imprisonment).

(ஆ) உடலுரிமையைப் பாதிக்கும் செயல்கள் தீங்கு ஆகாத தறுவாய்கள்

தற்காத்தல் – பொருளைக் காப்பாற்றுதல் – அமைதி நிலை நாட்ட அதிகாரம் செலுத்துதல் - பிள்ளைகளைத் திருத்துதல் - இசைவு பெற்ற செயல்.

(இ) நட்டஈட்டின் அளவு

பொது நட்டஈடு - தனி நட்டஈடு.

(ஈ) தீங்கினுல் மரணம் விளைதல்

மரண விபத்துச் சட்டம் (Fatal Accidents Act) - நட்ட ஈட்டை நிர்ணயித்தல்.

### பகுதி 2

பொருளைப் பொறுத்த தீங்குகள் (Wrongs to Property) நிலைச் சொத்தில் அத்துமீறுதல்

உடைமைக்கு ஊறுசெய்வதே தீங்காகிறது - நிலச் சொத்தில் அத்துமீறுதல் (Trespass to Land) - அதன் வகைகள் - அத்துமீறிப் புகுதல் - அத்துமீறி இடுதல் - அத்துமீறலுக்கும் தொல்லை விளை வித்தலுக்கும் உள்ள வேறுபாடு - கால் நடைகளைப் புகவிடுதல் (Cattle Trespass) - அத்துமீறி இருத்தல் - நிலப்பரப்பிற்கு மேலும்

கீழும் உள்ள உரிமை - தொடர்ந்து நிகழும் அத்து மீறுகை (Continuing Trespass) - நேரடி உடைமை உள்ளவரே வழக்குத் தொடர முடியும் - சொத்தின் சொந்தக்காரர் எப்பொழுது வழக்கிடலாம்?- நேரடி உடைமைக்காரரும், சொத்தின் சொந்தக்காரரும் - ஆக்கிரமிப்பை அகற்றுவது யார்? அத்துமீறுதல் எப்பொழுது தீங்காவதில்லை? அத்துமீறலை நாமே அகற்றும் வழிகள் - நீதி மன்றத்தின் மூலம் நிவாரணங்கள் - ஆக்கிரமித்தவரை வெளி யேற்றுதல் - நட்டஈடு பெறுதல் - தடைக் கட்டளை பெறுதல்.

## பகுதி 3

### அசைபொருள்கள் குறித்த தீங்குகள் (Wrongs to Movables)

உடைமைக்கு எதிரான செயலே 'தீங்கு' ஆகிறது-உடைமை என்பது எதைக் குறிக்கிறது? - நல்வழி வந்த உடைமை, தீ வழி வந்த உடைமை இரண்டுமே பாதுகாக்கப்படுகின்றன - தீய வழியில் வந்த உடைமையையும் சட்டம் பாதுகாப்பது ஏன்? - உடைமை குலைத்தல் (Trespass to chattels) - உடைமை அகற்றல் (Conversion) - உடைமை குலைத்தல் எப்போது தீங்காவதில்லை? - வழக்கிடத் தக்கவர்கள் - நட்டஈட்டின் அளவு - உடைமை அகற்றல் விளையும் விதங்கள் - நியாயமின்றி எடுத்துக்கொள்ளல், வைத்துக்கொள்ளல், உரிமை மாற்றல், அழித்தல் - தவறுதலால் உடைமை அகற்றப்படல் - (Conversion by mistake) - வழக்கிடும் வாதியின் பாத்தியம் - கண்டெடுப்பவரின் உடைமைப்பாத்தியம் - உடைமைப் பாத்தியம் எதுவரை நீடிக்கின்றது? - கூட்டுச் சொந்தம் உடையவர்கள் - நிவாரணங்கள் - நட்டஈடு பெறுதல் - குறித்தபொருளைத் திரும்பப் பெறுதல் (Specific restitution).

## பகுதி 4

### தொல்லை (Nuisance)

தொல்லை (Nuisance) என்பது என்ன? - தனித்த தொல்லை (Private Nuisance) - பொதுவான தொல்லை (Public Nuisance) - தனித்ததொல்லை விளையும் விதங்கள் - அயல் பொருள்களால் விளை யும் கேடு - சொத்து அல்லது அதில் உள்ள பொருள்கள் பழுது படல் - சொத்தைப் பயன்படுத்துவோருக்கு ஏற்படும் தொந்தரவு அல்லது வசதிக்குறைவு - தொந்தரவு அல்லது வசதிக் குறைவு என்பது என்ன? தொடர்ந்து நிகழ்வதே தொல்லையாகும் - ஏற்படும் இடைஞ்சல் நிகழ்ந்து கொண்டிருப்பதாக இருக்க வேண்டும் - ஏற்றுக்கொள்ளப்படாத எதிர்வாதங்கள்.

## பகுதி 5

### வசதி உரிமைபற்றிய தொல்லைகள் (Nuisance in relation to servitudes)

வசதிபெறும் சொத்து (Dominant heritage) - வசதிதரும் சொத்து (Servient heritage) - வசதியுரிமைகளின் வகைகள் - ஒளி வசதியுரிமை (Right to light) வளி வசதியுரிமை (Right to air) - வழி வசதியுரிமை (Right to way) - தாங்கு வசதியுரிமை (Right to support) - நீர் வசதியுரிமை (Right in respect of water) - இயல்பான உரிமை (உற்ற உரிமை) (Natural right) - ஈட்டிய உரிமை (பெற்ற உரிமை) (Acquired right) - ஏறுகரை நிலங்கள் (Upper riparian lands) - இறங்குகரை நிலங்கள் (Lower riparian lands) - நீரோட்டம் இயற்கையில் அமைந்ததாக இருக்க வேண்டும் - வகுத்தவழி செல்லும் நீரோட்டத்தைப் பொறுத்தே உரிமை உண்டு - கரை நிலத்தேவைகள் - நீர் வசதியுரிமைக்கு விளையும் தீங்குகள் - நீரை எடுத்தல் (Abstraction) - நீரைத் தடுத்தல் (Obstruction) - நீரின் தன்மையை மாற்றுதல் (Pollution).

## பகுதி 6

### வழக்கத்தால் தோன்றும் வசதியுரிமைகள் (Customary Easements)

## பகுதி 7

### பொதுவான தொல்லை (Public Nuisance)

பொதுவான தொல்லை என்பது என்ன? - பொதுப் பாதைகளில் தடை ஏற்படுத்துதல் (Obstruction to highway) - பொதுப் பாதைகளைப் பயன்படுத்துவோருக்கு ஆபத்து விளைவித்தல் - வழக்கிடும் முறை - பொதுப் பாதைகளைப் பராமரிப்பதில் தவறுதல்.

## பகுதி 8

### அவதூறு (Defamation)

(அ) அவதூறு என்பது என்ன?

பொன்றுது நிற்கும் புகழின் தன்மை - "அவதூறு" என்பது என்ன? - அவமதித்தலும், அவதூறும் - சொல்லோ, செயலோ அவதூறு என எப்பொழுது கருதப்படுகிறது? - நிலைத்த அவதூறு (Libel) - நிலையா அவதூறு (Slander).

(ஆ) அவதூறு வழக்கில் வாதி மெய்ப்பிக்கவேண்டிய கூறுகள்

எதிர்வாதியின் செயலிலுள்ள அவதூருன தன்மை - மறைமுக அவதூறு - (Innuendo) - அவதூறு வாதியைக் குறிப்பதாக இருக்க வேண்டும் - ஒரு வகுப்பினரைப் பற்றிய அவதூறு - ஒருபொருளைக் குறிக்கும் இழிசொல் நபர்களைப் பாதிக்கலாம் - அவதூறு பிறர் அறியப் பிரசுரம் ஆகியிருக்கவேண்டும் - வெளியிடுதல் அல்லது 'பிரசுரம்' (Publication) என்ருல் என்ன? கவனக் குறைவால வெளியிடுதல் ஒருவரின் சம்மதத்துடன் அவரைப் பற்றிய அவதூறை வெளியிடுதல்.

(இ) அவதூருன செய்தியைத் திரும்பவும் வெளியிடுவோர்

அவதூறை முதலில் வெளியிட்டவரின் பொறுப்பு.

(ஈ) அவதூறு விளைவது அனுமதிக்கப்படும் தறுவாய்கள்

அவதூறு வழக்கில் சட்டம் ஏற்றுக்கொள்ளும் எதிர் வாதங்கள் - உண்மை உரைத்தல் (Justification by truth) - அவதூறு பற்றிய குற்ற வழக்குகள் - நேர்மையான கருத்துரை - (Fair comment) - பொது நன்மைக்குச் சம்பந்தப்பட்ட காரியங்கள் எவை? - கருத்துரையைத் தோற்றுவித்த நிகழ்ச்சி உண்மையான தாக இருக்கவேண்டும் - நிகழ்ச்சி யுரைக்கும் கருத்துரைக்கும் தொடர்பு இருக்கவேண்டும் - சிறப்புரிமைத் தறுவாய்கள் (Privileged occasions) - வரம்பற்ற சிறப்புரிமை (Absolute privilege) - நீதிமன்ற நடவடிக்கைகள் - நாடாளுமன்ற நட வடிக்கைகள் - அரசின் விவகாரங்கள் குறித்த அறிக்கைகள் - வரம்புள்ள சிறப்புரிமை (Qualified privilege) - சிறப்புரிமையுள்ள தறுவாய் எது?-இணைந்த கடமை அல்லது நலன் உடையவர்கள் - சிறப்புரிமை பெற்ற செய்திகள் (Privileged communications) - சிறப்புரிமைச் செய்திகள் வெளியிடத்தக்க தறுவாய்கள் - நம் கடமையை நிறைவேற்றுவது - பணி முறையான கடமை - சமூக உறவு அல்லது ஒழுக்க முறையான கடமை - நம் நலனைப் பாதுகாப்பது - நம் செயல்கள் நியாயமானவை என நிலைநாட்டு வது - பிறர் நலன்களைப் பேணுவதற்குத் தகவல் அறிவித்தல் - பொது நலனைப் போற்றும் தகவல்கள் - வரம்புள்ள சிறப்புரிமை யின் முக்கிய மூன்று கூறுகள் - தீய நோக்கம் (Malice) என்பது என்ன? வரம்புள்ள சிறப்புரிமை பெற்ற அறிக்கைகள் அல்லது பிரசுரங்கள் - நீதிமன்ற நடவடிக்கைகள் பற்றிய அறிக்கைகள் - சட்டமன்ற நடவடிக்கைகள் - பொதுக்கூட்ட நடவடிக்கைகள் பற்றிய அறிக்கைகள்.

(உ) அவதூறுக்கான நட்டஈடு

அவதூறுக்கான நட்டஈடு - பொது நட்டஈடு - தனிப்பட்ட நட்ட ஈடு.

## பகுதி 9

### முறையற்ற சட்ட நடவடிக்கைகள் (Wrongful Process of law)

(அ) தீய நோக்குடன் குற்ற வழக்கிடல் (Malicious Prosecution)

வழக்கில் மெய்ப்பிக்கப் படவேண்டிய கூறுகள்:— (1) குற்ற வழக்கிட்டதற்கு எதிர்வாதியே பொறுப்பாயிருந்திருக்கவேண்டும் (2) நியாயமான, ஒப்பத்தகுந்த காரணங்களின்றிக் குற்ற வழக்கு இடப்பட்டிருக்கவேண்டும் (3) தீய நோக்குடன் குற்றம் சாட்டியிருக்கவேண்டும் (4) குற்ற வழக்கு வாதிக்கு அனுகூலமாக முடிந்திருக்கவேண்டும் (5) வாதிக்கு நட்டம் விளைந்திருக்கவேண்டும் - நட்டஈடு கோரி வழக்கிடுவோர் கவனிக்க வேண்டியது.

(ஆ) முறையற்ற இதர சட்ட நடவடிக்கைகள்

## பகுதி 10

I

### கவனமின்மை (Negligence)

"கவன மின்மை" என்பதன் பொருள் - கவனமின்மையான நடத்தை வேறு, கவனமின்மை என்ற தீங்கு வேறு - "கவன மின்மை" என்ற தீங்கு எப்பொழுது விளைகிறது - "தகுந்த கவனம்" என்றால் என்ன? - நல்லறிவுள்ளவர் நடக்கும் விதம் - கவன மின்மையின் முக்கிய கூறுகள் - தீங்கைத் தவிர்க்கவேண்டிய கடமை.

II

### கவனமின்மை விளையும் சில தறுவாய்கள்

சிறந்த திறமை வேண்டிய தொழில்கள் - தொற்று நோய்களைப் பரவச் செய்வது - நெடுஞ்சாலையைப் பயன்படுத்துவோர் - பள்ளி நடத்துபவர்கள் - இரயில்வேக்கள் - கைத்தொழில் பொருள்களைச் செய்பவர்கள் - பழுதுபார்ப்பவர்கள் - முதலாளி, தொழிலாளி இவர்களுக்குள்ள கடமைகள் - தொழிலாளிக்கும் முதலாளியைக் குறித்துக் கடமைகள் உண்டு - பாங்கி நடத்துபவர்களின் கடமைகள்.

III

### கவனமின்மையால் விளையும் நட்டம்

எதிர்வாதியின் கவனமின்மையை வாதியே மெய்ப்பிக்க வேண்டும் - "செயலே செப்புகிறது" (Res ipsa loquitur) என்று கூறத்தக்க செயல்கள்.

IV

### கவனமின்மைக்கும் விளைந்த தீங்கிற்கும் உள்ள காரண காரியத் தொடர்பு (Causal relation)

இசைந்து ஏற்றது தீங்காவது இல்லை - தற்கவனமின்மை - எதிர் வாதியின் கவனமின்மையால் ஏற்படும் ஆபத்துக்களைத் தவிர்ப்பதற்கான முயற்சிகள் - எதிர்வாதியின் நடத்தையால் வாதி விழிப்பின்றி இருத்தல் - தற்கவன மின்மை பற்றிய சில வழக்குகள் - தற்கவன மின்மைக் கொள்கை குழந்தைகளைப் பொறுத்து ஏற்கப்படுவதில்லை.

## பகுதி 11

### இடர் விளைக்கும் பொருள்களும் கடும்பொறுப்பும் (Dangerous Chattels and Strict Liability)

(அ) கடும் பொறுப்பு அல்லது வரம்பிலாப் பொறுப்பு (Absolute or Strict Liability)

கடும் பொறுப்பு (அல்லது வரம்பில்லாப் பொறுப்பு) (Strict Liability) என்றால்' என்ன? - Rylands V. Fletcher வழக்கிற் கூறப்பட்ட கொள்கை விளக்கம்.

(ஆ) "கடும் பொறுப்பு" விதிக்கு விலக்குகள்

(இ) விலங்குகள் வைத்திருப்போரின் கடமை

இடர் விளைக்கும் காட்டு விலங்குகள் - வீட்டு விலங்குகள் இவைகளைப் பொறுத்த வேறுபாடு - விலங்குகள் அத்துமீறி நுழைதல்.

(ஈ) ஆபத்து விளைவிக்கும் இதர பொருள்கள்

ஆபத்து விளைக்கும் இதர பொருள்கள் - இவைகளைக் கையாளுகையில் உள்ள கடமை.

## பகுதி 12

### நிலம், கட்டிடம் இவைகளை உடையவரின் கடமை (Duties of persons in possession of Buildings and Structures)

அழைக்கப்பட்டவர் (Invitee), அனுமதி பெற்றவர் (Licensee), அத்துமீறி நுழைபவர் (Trespasser), இவர்களைக் குறித்து நிலத்தை அல்லது கட்டிடத்தை உடையவர்களுக்கு உள்ள கடமைகள் - கட்டிடத்தில் அல்லது இடத்தில் நடக்கும் செயல்களால் விளையும் தீங்கு - அத்துமீறி நுழைபவர்களைப் பொறுத்துள்ள கடமைகள் - குழந்தைகளைப் பொறுத்துள்ள கடமைகள்.

## பகுதி 13

### I

### பொய்ம்மை (Falsehood)

பொய்ம்மை (Falsehood) - தீமை பயக்கும் பொய்ம்மையே தீங்காகிறது - இருவகைப் பொய்ம்மை - (1) ஏமாற்றுதல் (Fraud - Deceipt) (2) தீங்கான பொய்ம்மை (Injurious falsehood).

### II

### ஏமாற்றுதல் (வஞ்சித்தல்) (Fraud or Deceipt)

ஏமாற்றுதல் என்பது என்ன?-பொய்க்கூற்று (திரித்துரைத்தல்) (Misrepresentation) என்பது என்ன? - பொய்ம்மைத் தன்மையை நிச்சயிப்பது எவ்வாறு ? - நெஞ்சறிந்த பொய்ம்மையாக இருக்க வேண்டும் - வழக்கில் மெய்ப்பிக்க வேண்டிய கூறுகள்.

### III

### தீங்கான பொய்ம்மை (Injurious Falsehood)

ஏமாற்றுதல், அவதூறு, தீங்கான பொய்ம்மை இவைகளுக்குள்ள வேறுபாடுகள் - சொத்துரிமை பற்றிய பொய்ம்மை (Slander of title) - போலிப் பொருள் வாணிபம் (Passing of goods) - போலி வணிகக் குறிகள் (False Trade Marks)

## பகுதி 14

### அச்சுறுத்தல் (Intimidation)

அச்சுறுத்தல் என்பது என்ன ? - கட்டாயப் படுத்துவதற்குக் கையாளப்படும் செயல் சட்ட முரணானதாக இருந்தால்தான் அது தீங்காகும் - அச்சுறுத்தல் குற்றமுமாகும்.

## பகுதி 15

### சதி (Conspiracy)

சதி என்பது என்ன? - பிறருக்குக் கேடு விளைவிக்கும் நோக்குடன் சேர்ந்து செயல்படல், அதனால் பிறருக்கு விளையும் கேடு - இதுவே சதித்தீங்கின் சாரம் - தனி மனிதர் செய்வது சட்ட முரணான செயலாகாதிருக்கலாம், அதே செயல் கூட்டாகச் செய்யப்பட்டால் தீங்காகலாம் - வாணிபத் துறையில் கூடி இயங்குதல் - கூட்டியக்கத்தின் முக்கிய நோக்கத்தை வைத்தே செயலின் தன்மை உறுதி செய்யப்படுகிறது - சதிக் குற்றத்திற்கும் சதித் தீங்கிற்கும் உள்ள வேறுபாடு - முக்கிய வழக்குகள்.

## பகுதி 16

### ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல் (Interference with Contractual Relations)

ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல் என்பது என்ன?-அது எப்போது தீங்காகிறது ? - குறுக்கிடுதலின் வகைகள் - குறுக்கீடு எப்போது நியாயமாகிறது ? - தொழிற் பூசல்கள்.

## பகுதி 17

### இல்வாழ்விற்கு இடையூறுகள் (Injuries to Domestic Relations)

மனைவியைக் கணவனிடமிருந்து பிரித்தல் - பிறன் மனை நயத்தல் - பெற்றோர்களிடமிருந்து பிள்ளைகளைப் பிரித்தல் - மனைவி மக்களுக்கு உடலூறு விளைத்தல்-இவை யெல்லாம் தீங்குச் செயல்கள் - இல்வாழ்விற்கு இடையூறு விளைவிக்கும் செயல்கள்.

## பகுதி 18

### நுண்பொருட் செல்வங்களுக்கு விளையும் தீங்குகள் (Wrongs to Incorporeal Property)

"நுண் பொருட் செல்வம்" என்பது என்ன?-பதிப்புரிமைக்கு (Copyright) விளையும் தீங்குகள் - முதலாயமைந்த படைப்புக்களே (Original Works) பதிப்புரிமை உடையவை - முதலாயமைந்த நூல் எது ? - புதுப்புனைவு உரிமைகள் (Patent Rights).

# மூன்றுவது பிரிவு

## பகுதி 1

### பகரப் பொறுப்பு (Vicarious Liability)

பணியாளின் (Servant) செயலுக்குத் தலைவர் (Master) பொறுப்பாவது "பகரப் பொறுப்பு" - "பகரப் பொறுப்பு" எப்பொழுது தோன்றுகிறது? - பணியாள் என்பவர் யார்? - ஒப்பந்தக் காரருக்கும் (Contractor) பணியாளுக்கும் உள்ள வேறுபாடு - கண்காணிப்பிற்கும் கட்டளைக்கும் அடங்கியவர் பணியாள் - ஊதியம் பெறுபவர் தாம் ஊழியர் என்பது இல்லை - ஏவியவரும், ஏவலரும் - நுட்பத் தொழில் புரியும் பணியாளர்கள் - மேல் நிலை ஊழியர் தலைவராவதில்லை - உரிய பணியைப் புரியும் வகையில் உதித்த தீங்காய் இருத்தல்வேண்டும் - பணியாளர்களின் கவன

மின்மையால், தவறுதலால், ஒழுங்கு தவறிய நடத்தையால், தலைவர் உத்தரவைப் பணியாள் மீறியதால் விளையும் தீங்குகள் - உரிய பணிக்குப் புறம்பான செயல் - பணியாளரின் சொந்த நலனுக்கான செயல்கள் - "உரிய பணியைப் புரியும் வகை" என்பதன் விளக்கம் - ஒப்பந்தக்காரரால் விளையும் தீங்குகள் - கம்பெனிகளுக்கும் பகரப் பொறுப்பு உண்டு - முதல்வரும் முகவரும் - கூட்டாளிகள் - கூட்டாகத் தீங்கிழைத்தோர் - கூட்டு இணைப்பொறுப்பு - கூட்டு ஊழியம்.

## பகுதி 2

### தீங்கு ஆகாத் தறுவாய்கள்

(1) இசைந்து ஏற்கும் கேடுகள் - இசைந்து ஏற்றல் என்றால் என்ன ? - இசைவு வெளிப்படையாகவோ உட்கிடையாகவோ அமையலாம் - நெடுஞ்சாலை விபத்துக்கள் - ஆபத்தை ஏற்பது வேறு, அதை அறிந்தும் ஆபத்திற்கு உட்படுதல் வேறு - கடமையை ஆற்றுகையில் ஆபத்தை ஏற்றல் - சட்ட முறைக் கடமையும், ஒழுக்க முறைக் கடமையும் - ஏமாற்றி இசைவு பெறுதலைச் சட்டம் ஒப்புவதில்லை (2) தவிர்க்க முடியாத விபத்துக்கள் - தவிர்க்க முடியாத விபத்தும், தவற்றால் விளையும் செயலும் - (3) தற்காப்புச் செயல்கள் - (4) கட்டாயத் தேவையால் செய்யப்படுபவை - (5) சட்டம் விதிக்கும் செயல்கள் - சட்டம் விதிக்கும் கடமைகளும், அளிக்கும் அதிகாரங்களும்.

## பகுதி 3

### வழக்கிடுவதற்கும், வழக்கிடப்படுவதற்கும் தகுதி

(1) அயல் நாட்டு அரசர்கள், அந்நாட்டுத் தூதர்கள் - (2) வயதுவராதோர் - (3) சித்தப் பிரமை யுடையவர்கள் - (4) தண்டனை அனுபவிக்கும் குற்றவாளிகள் - (5) அயல்நாட்டார்கள் - (6) கம்பெனிகளும், கார்ப்பொரேஷன்களும் - (7) தொழிற் சங்கங்கள் - (8) பெற்றோர்கள் - பெற்றோர் நிலையில் உள்ளவர்கள்.

## பகுதி 4

### அரசும், அதன் செயல்களும்

(அ) மக்களின் உரிமைகள் - (ஆ) அரசின் அதிகாரங்கள் - சட்டம் இயற்றுதல், நீதி வழங்குதல், நிர்வாகத்தை நடத்துதல் - (இ) அரசின் தனிச் செயல்கள் (Acts of State).

## பகுதி 5

### வழக்கிடும் வகை

(அ) ஒரு தீங்குச் செயல் குறித்து ஒரு வழக்கே இடலாம் - ஒரே செயலால் இருவகை உரிமைகளுக்கு ஊறுவிளைதல், தொடர்ந்து நிகழும் தீங்குகள் - (ஆ) குற்றமான தீங்குச் செயல்கள் - (Felonious torts) (இ) கூட்டாகத் தீங்கிழைத்தோர்கள் - (Joint tort feasers) (ஈ) வெளிநாட்டில் விளைத்த தீங்குகள்.

## பகுதி 6

### தீங்குச் செயலுக்கும் விளைந்த கேட்டிற்கும் உள்ள தொடர்பு

(1) தீங்கிற்கும் கேட்டிற்கும் உள்ள தொடர்பு - (2) நேரடி விளைவுத் தொடர்பு - (3) முன்னறியத்தக்க விளைவுத் தொடர்பு - (4) இடைநிகழ் புதுச் செயல்கள் - (5) தீங்கிழைத்தோரின் பொறுப்பு என்ன ?

## பகுதி 7

### தீங்கு தீரும் வகைகள்

(தீங்கிற்கான நிவாரணங்கள்) (Remedies)

(அ) தன் முயற்சி நிவாரணம் (Self-redress) - அத்துமீறி நுழைந்தவர்களை அகற்றல், மீண்டும் புகுதல், அத்துமீறிய விலங்குகளை அடைத்து வைத்தல், தொல்லை அகற்றல் - (ஆ) நீதிமுறை நிவாரணம் (Judicial Remedies)-நட்டஈடு - பெயரளவு நட்டஈடு, அற்பமான நட்டஈடு, உண்மையான அல்லது கேட்டிற்குத் தக்க நட்டஈடு - பொது நட்டஈடு, தனித்த நட்டஈடு - அறிவுறுத்தும் நட்டஈடு, தண்டனையான நட்டஈடு - நீதிமன்ற ஆணைகள் (Injunctions) - தடையிடும் (Prohibitory) ஆணை, செய்யெனும் (Mandatory) ஆணை - வழக்கிடை (Interlocutory) ஆணை - நிரந்தர (Perpetual) ஆணை - (இ) குறித்த பொருளை மீண்டும் பெறுதல் (Specific Restitution).

## பகுதி 8

### தீங்கியலும் அறநெறியும்

தீங்கின் வகைகள் எண்ணற்றவை - 'தீங்கியல்' சட்ட விதிகளின் தன்மை - தீங்கியலும், அறநெறியும், ஒழுக்க முறையும் - தீங்கியலில் அடிப்படையாக அமைந்த அறநெறி.

---

## TABLE of CASES

# தீங்கியல் சட்டம்
# (Law of Torts)



## முதலாவது பிரிவு

மறந்தும் பிறன்கேடு சூழற்க, சூழின்
அறஞ்சூழும் சூழ்ந்தவன் கேடு. —குறள்.

### 1. நீதி முறை

*வாழ்வில் இன்பம் நிலைப்பது இன்றியமையாததாகும் - வாழ்வில் துன்பம் விளைவது இயல்பாகின்றது - ஒருவருக்கு மற்றொருவரால் துன்பம் ஏன் விளைகின்றது? - இசைந்த வாழ்வே இன்ப வாழ்வாகும் - 'முறை செய்தல்' என்றால் என்ன? - அரசு எவ்வாறு முறை செய்து மக்களைக் காக்கின்றது? - நீதி வழங்குதலின் நீர்மை.*

**வாழ்வில் இன்பம் நிலைப்பது இன்றியமையாததாகும்**

உலகில் வாழும் உயிர்களனைத்தும் இன்பத்தையே நாடுகின்றன. மக்கள் அவரவர்களின் தன்மைக்கும் தகுதிக்கும் ஏற்ற வகையில் வாழ்வில் இன்பம் பெற முயலுகின்றனர்.

கல்வியைப் பயிலுவதும் கலைகளில் முயலுவதும், பொருளைத் தேடுவதும் புகழை நாடுவதும், தமக்கு வரும் இன்பத்தை எதிர்நோக்கியேதான். ஓடி உழைப்பதில் இன்பம் பெறுவோர் பலர்; ஓய்ந்து இருப்பதில் இன்பங் காண்போர் சிலர். புறத்தை ஆய்ந்து புதுமைகள் காணும் விஞ்ஞானியும், அகத்தை அடக்கி அரியன உணரும் மெய்ஞ்ஞானியும் இன்பத்தை நாடியே இயங்குகின்றனர். இவ்வாறு, கல்வியும் கலையும், பொருளும் புகழும், உழைப்பும் ஓய்வும், விஞ்ஞானமும் மெய்ஞ்ஞானமும், வாழ்வில் இன்பம் எய்துதற்கே கருவிகளாய் அமைகின்றன.

தன் உள்ளம் இன்பத்தை நாடுவதால்தான், மனிதன் காட்சிகளை நுகர்கின்றான், கற்பனையில் திளைக்கின்றான். அவனது இன்ப உணர்வின் எழிலுருவங்களாகவே காவியமும் ஓவியமும், கற்கோவிலும் கவின் சிற்பமும் எழுகின்றன. இசையும் பண்ணும் அவன் இன்ப உணர்வின் எதிரொலியாக அமைவதால் பிறருக்கும்

இன்பமளிக்கின்றன. அவன் உள்ளத்து உவகை துள்ளிக் குதிப்பதையே அவன் ஆடும் நடனம் அறிவிக்கின்றது. இவ்வாறு, இனிய கலைகளெல்லாம் இன்பத்தில் எழுந்து, இன்பத்தை அளிக்கின்றன.

வாழ்வின் உயர் நலன்களும். சீரிய முயற்சிகளும் சிறந்து விளங்குவதற்கு இன்பமே அடிப்படையாக அமைகின்றது. மனிதன், இமயத்தின் உச்சியில் ஏறி நிற்கின்றான், அண்டங்களைத் தாண்ட அடிகோலுகின்றான், எல்லையிலாப் பரவெளியை எட்டிப் பார்க்கின்றான். இடர்கள் நிறைந்த இம் முயற்சிகளெல்லாம் புதுமை புகட்டும் இன்பத்தை எதிர்நோக்கிய இயக்கங்கள்தாமே! இந்த இயல்பான இன்ப நாட்டம் மனிதனுக்கு இல்லையெனில், வாழ்வு பயனற்றதாகிவிடும். எனவே, மனித வாழ்வில் இன்பம் நிலைப்பது இன்றியமையாததாகிறது.

### வாழ்வில் துன்பம் விளைவது இயல்பாகின்றது

இன்பம் விழைவது மக்களின் இயல்பாவதுபோல், துன்பம் விளைவது உலக வாழ்வின் இயல்பாகிறது. நோய், வறுமை, அழுக்காறு, அவா, உற்றார் மறைவு, மாற்றார் செயல் இவை போன்ற இன்னும் பல காரணங்களால் வாழ்வில் இன்பத்திற்கு இடையூறுகள் தோன்றுகின்றன; துன்பம் விளைகின்றது.

எடுத்த காரியம் கைகூடவில்லையென்றோ, எண்ணியவெல்லாம் எய்த முடியவில்லையென்றோ ஏங்கி நிற்போரின் மனக் கவலையைப் பிறர் மாற்றலரிது. அடுத்தவர்மேல் அழுக்காறு கொண்டு அதனால் ஒருவர் அடையும் துன்பத்தைப் பிறர் துடைத்தல் முடியாது. ஊழின் வலியாலும் உற்ற குறையாலும் விளையும் துன்பத்தைத் தடுக்க எவராலும் இயலாது. இந்த இயற்கை இன்னல்களைத் தவிர, மனிதனுக்குப் பிறரால் விளையும் துன்பங்கள் பல. ஒருவர் உடலுக்கும், பொருளுக்கும், உற்ற புகழுக்கும் பிறரால் கேடு விளைகிறது. அயலாரின் செயலால் விளையும் இது போன்ற தீமைகள் அகற்றப்பட வேண்டும். மாற்றார் இழைக்கும் தீமைகள் மாற்றப்படவில்லையெனில் நம் வாழ்வில் எவ்வித இன்பமும் இல்லாது போய்விடும்.

### ஒருவருக்கு மற்றொருவரால் துன்பம் ஏன் விளைகின்றது?

உடல் நலன், பொருள் நலன், புகழ் நலன் போன்ற வாழ்க்கை நலன்களே நம் இன்ப வாழ்விற்கு ஆதாரமாக இருக்கின்றன. இந்த நலன்களைப் பேணிப் போற்றுவது வாழ்விற்கு அவசியமாகிறது. நாம் ஒவ்வொருவரும் நம் நலன்களைப் பேணவும் பெருக்கவும் பாடுபடுகிறோம். இது நியாயமான செயலேயாகும்.

ஆனால், நம் நலனைப் பெருக்கும்பொழுது பிறர் நலன்களையும் நாம் பேணி நடத்தல் வேண்டும். நம் நலன்களுக்கெனப் பிறர் நலன்களைக் கெடுப்பது கூடாது. நாம் இன்பம் எய்தும் பொருட்டுப் பிறர் இன்பத்திற்கு இடையூறு இழைத்தல் முறை யாகாது. பிறருக்குத் தீமை விளையாத வகையிலேயே நாம் நமது நலன்களைப் பெருக்கிக் கொள்ளவேண்டும்.

நமக்கு எது துன்பந் தருகிறதோ அது பிறருக்கும் துன்பந் தருகிறது. தனக்கு இன்னாமை என்று அறிந்த அதே செயலை அறிவு படைத்த மனிதன் பிறருக்கு எவ்வாறு செய்கிறான் என்று ஆச்சரியப்படுகின்றார் அறநூலாசிரியர்.

"தன்னுயிர்க்கு இன்னாமை தானறிவான் என்கொலோ
மன்னுயிர்க்கு இன்னா செயல்."

"உடல் வலியுடையோனே உரிமையுடையோன்" என்ற அடிப்படையில் வலியார் மெலியாரை வாட்டுவது, ஒருவர் பொருளை மற்றொருவர் பறிப்பது என்று இருந்தால், அதைச் சமுதாய வாழ்வு என்று கொள்ள முடியாது. அது விலங்கின வாழ்வாக, அநாகரிகமான வாழ்வாகவே இருக்கும். ஒருவர் நலனை மற்றவர் பறிக்காமல்,ஒருவருக்கு மற்றவர் தீங்கிழைக்காமல், வாழும் வாழ்வே இசைந்த வாழ்வாகும்; இனிய வாழ்வாகும்.

## இசைந்த வாழ்வே இன்ப வாழ்வாகும்

ஒலிகள் ஒன்றி இசையும்பொழுது பிறப்பது இசை; இசையில் தோன்றுவது இன்பம். மக்கள் ஒருவருக்கொருவர் ஒன்றி நடந்து கொள்ளுவதே, இசைவுபட்ட வாழ்வாகும்; இன்பமளிக்கும் வாழ் வாகும். இதையே "ஒழுக்கம்" என்று நாம் கூறுகிறோம். இவ்வாறு இசைந்த, ஒழுக்கமான வாழ்வில்தான் இன்பம் நிலைக் கிறது; இதுவே சமுதாயத்தின் அடிப்படையாக அமைகிறது.

மக்களில் பெரும்பாலோர் இசைந்து வாழ்தலையே ஏற்று நடக்கின்றனர். ஆனால், ஒரு சிலர் அழுக்காறு, அவா, வெகுளி முதலிய தீய குணங்களால் உந்தப்பட்டுப் பிறர் நலன்களுக்குக் கேடு விளைக்கின்றனர். அயலார் பொருளை அநியாயமாகக் கவர் வது, அவர்கள் புகழுக்குப் புன்மை சேர்ப்பது, பிறரது உடலைத் தாக்கி ஊறுவிளைவிப்பது போன்ற தீமைகளை மனிதன் செய்து விடுகிறான். அச்சுறுத்தலும் அடித்துப் பறித்தலும், திருடுவதும் தீ வைப்பதும், கொள்ளையும் கொலையும் வாழ்வில் நிகழ்கின்றன. இவ்வாறு, பல வகைகளில் ஒருவரால் மற்றொருவருக்குத் தீமை விளைகிறது.

இது போன்ற மாற்றார் தீமைகளிலிருந்து நம்மைப் பாதுகாத்துக் கொள்வது எவ்வாறு?

நாகரிகம் அடையாத முன்னாள் வாழ்விலே தன்னுடைய சொந்த வலிமையினால் மனிதன் தன் நலன்களைப் பாதுகாத்து வந்தான். தன்னையும் தன் நலன்களையும் பேணுவதற்குத் தன் உடல் வலியையே அன்று நம்பியிருந்தான். வலிமை இல்லாதவன் வல்லவனை எதிர்த்து ஏதும் செய்வதற்கில்லை. எனவே, கோலெடுத்தவனின் கொள்கை நிலைப்பது, வேலெடுத்தவன் வெற்றி பெறுவது, என்ற அவல நிலை அன்று இருந்தது. அச்சுறுத்தலே அறமாக, வலிமையே நீதியாக இருந்த இருண்ட காலம் அது.

'முறை செய்தல்' என்றால் என்ன?

நாகரிகம் வளர்ந்து வரும் இன்றைய சமுதாயத்தில், மக்கள் ஒவ்வொருவரின் நலனையும் அரசு காத்து நிற்கிறது. தனி மனிதனின் பலத்திற்குப் பதிலாக, சமூகத்தின் கூட்டு வலிமை அரசின் மூலமாக ஒவ்வொருவரின் நலனையும் பாதுகாக்கின்றது. தனது சொந்த வலிமையை நம்பி வாழ்ந்த மனிதன், இப்பொழுது சமுதாயத்தின் கூட்டு வலிமையினால் பாதுகாக்கப்படுகிறான். வாழ்க்கைப் பண்பாடு வளர்ந்துள்ள சமூகத்தில் மக்களின் தனி வலிமை இயங்க ஆரம்பித்துவிடில், நாட்டில் குழப்பமும் அமைதியின்மையும் பரவி விடும். நிலையான, ஒழுங்கான ஆட்சிமுறை நடப்பது இயலாது. நாகரிகமான நாட்டு வாழ்வு, நிலைகெட்ட காட்டு வாழ்வாக மாறிவிடும். ஆகவே, ஒழுங்குபட்ட சமுதாயத்தில், மக்களின் நலன்களைப் பாதுகாக்கும் கடமையை அரசே ஏற்று நடத்துகிறது.

மக்கள் ஒவ்வொருவரின் நலனும் சேர்ந்தே சமுதாயத்தின் நலனாகத் திகழுகிறது. தனி ஒருவரின் நலனுக்குக் கேடு விளைவிப்பது சமுதாயத்தின் நலனுக்குத் தீமை செய்வதாகும். மக்கள் ஒவ்வொருவரின் தனிப்பட்ட நலனையும் இன்பத்தையும் பேணி, அதன்வழி சமுதாயத்தின் நலனைப் பாதுகாப்பதே ஒழுங்குபட்ட சமூக அமைப்பின் உயர்நோக்காகும். இந்த உயர்நோக்கையே "நீதி" அல்லது "முறை" (Justice) என்கிறோம்.

"அந்தணர் நூற்கும் அறத்திற்கும் ஆதியாய்" அரசின் செங்கோன்மை அமைகிறது. அரசின்கோல் நோக்கிக் குடிகள் வாழுவதால், "குடிபுறங்காத்து ஓம்பிக் குற்றம் கடிதல்," அரசின் தலையாய கடமையாகிறது. முறை செய்தலையும் அரசு முறையாகச் செய்யவேண்டும். அவ்வாறு செய்யவில்லையெனில், அரசு அருகி நசித்து விடும் என்கிறார் வள்ளுவர்:

"நாடொறும் நாடி முறைசெய்யா மன்னவன்
நாடொறும் நாடு கெடும்." குறள், 553

எனவே, முறைசெய்தல், அரசின் நலனுக்கும் மக்கள் நலனுக்கும் இன்றியமையாததாகும்.

### அரசு எவ்வாறு முறைசெய்து மக்களைக் காக்கின்றது ?

நமது வாழ்விற்கு நம் நலன்களே அடிப்படையானவை. நாம் உயிர் வாழ்வதற்கு இன்றியமையாதது உடல்நலன். எனவே, நம் உடலுக்கு ஊறு விளைவிப்பதை அரசு தடுக்கிறது. அரசால் பாதுகாக்கப்படும் இந்த நலனை உடலுரிமை (Right to person) என்கிறோம். நம் பொருளைப் பிறர் கவர்வதையும், அதற்குப் பிறர் கேடு விளைவிப்பதையும், அரசு தடை செய்கிறது. இவ்வாறு காப்பாற்றப்படும் நலன் பொருள் உரிமை (Right to property) எனப்படும். நம் புகழுக்குப் பிறரால் இழுக்கு விளையாமல் அரசு பாதுகாப்பதால், நமக்குப் புகழுரிமை (Right to reputation) உண்டு என்று கூறுகிறோம். எந்தெந்த நலன்களை அரசு பாதுகாக்கின்றதோ அந்த நலன்களே நம் உரிமைகள் (Rights) ஆகின்றன. இந்த உரிமைகளுக்குப் பிறர் ஊறு விளைவிப்பதை அரசு தடைசெய்கிறது.

இந்த உரிமைகளுக்குப் பிறர் கேடு விளைவித்தாலோ அல்லது இவை குறித்து ஒருவருக்கொருவர் மாறுபாடு தோன்றினாலோ, அரசால் நிறுவப்பட்ட நீதிமன்றங்களில் மக்கள் வழக்கிடுகின்றனர். அரசு, நீதி மன்றங்கள் வாயிலாக இவ்வழக்குகளைத் தீர்த்து நியாயம் வழங்குகிறது.

எனது நிலத்தை இன்னொருவர் கைப்பற்றிக் கொண்டால் அந்த ஆக்கிரமிப்பை நீதிமன்றத்தின் மூலம் நான் அகற்றுகிறேன். என்னிடம் கடன் பெற்றவர் அதைச் செலுத்தத் தவறினால் அதைத் திரும்பப் பெறுவதற்கு நீதிமன்றம் எனக்கு வகை செய்கிறது. எனது உடலைத் தாக்கிக் காயம் ஏற்படுத்தியவர் நீதி மன்றத்தில் தண்டனை பெறுகிறார். கொள்ளை, கொலை போன்ற கொடுங்குற்றங்கள் செய்தோருக்குக் கடுந் தண்டனை அளிக்கப்படுகிறது. இவ்வாறு, அரசு தனது வலிமை கொண்டு, மக்களின் உரிமைகளை நீதிமன்றங்கள் மூலம் பாதுகாத்து முறையான வாழ்வை நிலை நிறுத்துகிறது. இதையே, நீதி வழங்குதல்—முறை செய்தல்—(Administration of Justice) என்று கூறுகிறோம்.

### நீதி வழங்குதலின் நீர்மை

அரசு, நாட்டு மக்களனைவருக்கும் பொதுவானது. நீதி வழங்குவதில் மக்களிடையே அது வேற்றுமை பாராட்டுவதில்லை.

நீதிமன்ற நடுவர்கள் வழக்கில் சம்பந்தப்பட்டவர்களிடம் கண்ணோட்டம் காட்டாமல், நடுவு நிலைமையிலிருந்து அணுவளவேனும் அகலாமல், "அறநெறி பிழையா அன்புடை நெஞ்சொடு" அமைந்து ஒழுகுகின்றனர். வலியார் மெலியார், செல்வம் உள்ளவர் செல்வம் இல்லாதவர், ஆட்சி நடத்துபவர் ஆளப்படுபவர், எல்லோரையும் ஒரே நிலையில் வைத்து, நியாயம் வழங்குகின்றனர்.

முறை செய்தல், "சமன் செய்து சீர்தூக்குங் கோல் போல்" ஒருபாற் கோடாது செவ்வியதாய் இருப்பதால் அதைச் செங்கோல் என்று கூறுவர். அறத்தின் அடிப்படையில் செங்கோன்மை அமைவதால் "அறநெடு புணர்ந்த திறனறி செங்கோல்" (பொருநராற்றுப்படை 230) என அது போற்றப்படுகிறது. நீதிமன்றத்தினர் தம்முன் வந்தோரின் அச்சத்தையும், துன்பத்தையும், ஆர்வத்தையும் அகற்றி, சீற்றமோ உவகையோ கொள்ளாமல், துலாக் கோலையொத்த நடுவுநிலையுடன் நீதி கூறும் திறனுடையவர்களாக இருக்கவேண்டும் என்று, அறங்கூறவையத்தின் அமைப்பை, அன்றே நம் முன்னோர்கள் கண்டனர்.

"அச்சமு மவலமும் ஆர்வமும் நீக்கிச்
செற்றமும் உவகையும் செய்யாது காத்து
ஞெமன்கோ லன்ன செம்மைத் தாகிச்
சிறந்த கொள்கை யறங்கூ றவையம்."

—மதுரைக் காஞ்சி (489—492)

நீதிமன்றத் தீர்ப்புக்கள் தெய்வத் தன்மையுடையனவாகக் கருதப்படுகின்றன. ஆண்டவனை வழுத்தும் அடியார், "நாவில் நடுவுரையாய் நின்றாய் நீயே..." என்று துதிக்கின்றார். (நடுவுரை என்ற சொல் Judgment என்ற ஆங்கிலச் சொல்லின் பொருளை எவ்வளவு அழகாக எடுத்துக் காட்டுகிறது!) "நீதியை நிறைவை..." எனவும், "நீதியால் நினைப்புளானை, நினைப்பவர் மனத்துளானை..." எனவும் நாவுக்கரசர் நீதியையும் இறைவனையும் ஒன்றாக மதித்துப் பாடுகின்றார். இதிலிருந்து முறை செய்தலில் உள்ள இறைமை நன்கு புலனாகும்.

இத்துணைச் சிறப்பும் சீர்மையும் முறைசெய்தலுக்கு இருப்பதால்தான் "முறைசெய்து காப்பாற்றும்" அரசு "மக்கட்கு இறை" என்று போற்றப்படுகிறது.

மக்களிடை எழும் வழக்குகளைத் தீர்த்து அவர்கள் உரிமைகளைக் காத்து நீதியை நிலைநிறுத்தல் அரசின் தலையாய கடமையாக இன்று விளங்குகிறது.

---

## 2. சட்டம்

முறை செய்வதற்குக் கருவியாகச் சட்டம் அமைகிறது - சட்டத்தின் மூலங்கள் - சட்டத்தின் தன்மை என்ன? - அறநெறியும், அரசின் வலியும் சட்டத்தில் அடங்கியிருக்கின்றன - சமுதாயப் பண்பின் பயனே சட்டத்தின் பயனுமாகும் - சமுதாய வளர்ச்சிக்குச் சட்டம் உதவுகிறது.

### முறை செய்வதற்குக் கருவியாகச் சட்டம் அமைகிறது

நீதியை நிலைநாட்டி மக்களிடை முறை செய்தலுக்கு அரசின் கருவியாக அமைவது சட்டமேயாகும். மக்களின் உரிமைகள், அவை நிலை நாட்டப்படவேண்டிய முறை, பிறர் உரிமைகளுக்கு ஊறு செய்வோரைத் தண்டித்தல், இவைகளைக் குறித்து நீதிமன்றங்களால் கையாளப்படும் விதிமுறைகளையே சட்டம் (Law) என்ற சொல் குறிக்கிறது. ஒரு வழக்கில் தீர்ப்பளிக்குமுன் நீதிமன்றத்தினர் அந்த வழக்கிற்குரிய சட்ட விதிகளை ஆய்ந்து அந்த விதிகளையொட்டியே முடிவு கூறுகின்றனர். நீதிபதிகளுக்கு முறைசெய்வதில் முன்னின்று உதவுவன சட்ட விதிகள்தாம். சட்டத்தின் அடிப்படையிலேயே நியாயத் தீர்ப்புக்கள் வழங்கப்படுகின்றன. இதையே, சட்டத்தை ஒட்டிய நீதிமுறை (Justice according to Law) என்கிறோம். இவ்வாறு, முறைசெய்தலுக்கு உற்ற கருவியாகச் சட்டம் அமைகிறது. முறைசெய்தலைக் குறிக்கோளாகக் கொண்டே சட்டம் இயங்குகிறது.

### சட்டத்தின் மூலங்கள்

சட்டமன்றங்களால் இயற்றப்படுவது (Legislation) மட்டுமே சட்டம் என்று நாம் கொண்டால் அது சரியன்று. எண்ணற்ற வழக்குகளில் புதிது புதிதாகத் தோன்றும் இடர்ப்பாடுகளைத் தீர்ப்பதற்குச் சில வேளைகளில் இயற்றப்பட்ட சட்டவிதிகள் உதவாமற் போவதுண்டு. அந்நிலையில், நீதிபதியே தம்முடைய நியாய உணர்வையொட்டி, அந்த வழக்கைத் தீர்ப்பதற்கு ஒரு கொள்கையை வகுத்து, அக்கொள்கையின்படி தீர்ப்புக் கூறுகின்றார். இதைத் தீர்ப்பு முறைமை (Precedent) என்பார்கள். இந்த முறைமை பின் வரும் வழக்குகளைத் தீர்ப்பதற்கு வழிகாட்டியாய் நிற்கின்றது. எனவே, நீதிமன்றத்தினர் வகுக்கும் கொள்கையும் சட்ட விதிகள் ஆகின்றன. தொன்றுதொட்டு மக்களிடை நிலவி வரும் வழக்க நெறியும் (Custom) வழக்குகளைத் தீர்ப்பதற்கு உதவுகிறது. இயற்றப்பட்ட சட்டங்கள் (Enacted Laws), முன் தீர்ப்பு முறைமைகள் (Precedents), வழக்க நெறி (Custom) இவை

களை ஒட்டியே நியாயம் வழங்கப்படுவதால், இவை மூன்றும் சட்டத்தின் மூலங்கள் (Sources of Law) ஆகின்றன.

### சட்டத்தின் தன்மை என்ன?

ஒரு சமூகத்தினரின் வழக்க நெறியும், நீதி மன்றங்கள் நியாயக் கொள்கைகளை வகுப்பதும், சட்ட மன்றங்கள் சட்டங்களை இயற்றுவதும் எந்த அடிப்படையில் அமைகின்றன?

நீதியை நிலைநாட்டும் கருவிகளாகச் சட்ட விதிகள் எழுகின்றன என்று கண்டோம். அறம், நீதி என்ற இரு சொற்களும் ஒன்றையே குறிக்கின்றன. அறத்தின் வழி மக்களை ஒழுகச் செய்வதையே முறை அல்லது நீதி என்கிறோம். எனவே, முறை செய்வதற்கு முக்கிய கருவியாக இயங்கும் சட்டம் அறநெறியின் அடிப்படையிலேயே அமைய வேண்டும். அவ்வாறே சட்டமும் அமைந்திருக்கிறது.

சட்ட விதிகளை அரசு நடைமுறைப்படுத்துவதால், சட்டத்தின்படி மக்கள் நடக்க வேண்டும் என்று அரசு அமுல் நடத்துவதால், சட்டத்தை அரசின் ஆணையாக நாம் கொள்ளுகிறோம். அவ்வாறு நாம் கொண்டாலும், அந்த ஆணையில் அறம் பொதிந்திருப்பதை நாம் மறப்பதற்கில்லை. அறத்தின் அடிப்படையிலேயே அரசின் ஆணை எழுகின்றது.

அறம் அல்லது தருமம் என்பது மனிதனின் மனச் சான்றிலே நன்மை தீமை என்ற இயல்பான பாகுபாட்டின் பயனாய் எழும் உயர் உணர்வாகும். இந்த அறவுணர்வு மக்கள் அனைவருக்கும் இயல்பானது, பொதுவானது. நன்மை, தீமை என்ற பாகுபாட்டை உலகிலுள்ள எல்லா நாட்டு மக்களும் உணர்ந்திருக்கின்றனர். திருடுவது தீயது, ஏமாற்றுதல் இன்னாதது, கொலை புரிவது கொடியது என்பதைப் பல்வேறு நாட்டு மக்களும் ஒப்புக்கொள்ளுகின்றனர். உண்மையே பேசவேண்டும், ஒருவருக்கும் தீங்கு செய்தல் கூடாது என்பன போன்ற அற உணர்வுகள் மக்கள் மனதில் இயல்பாகவே எழுகின்றன. உலக மக்கள் நிறத்திலும், திறத்திலும், பல்வேறு வகைகளில் வேறுபட்டிருந்தாலும், இந்த அடிப்படையான அறவுணர்விலே மாறுபடுவதில்லை. இந்த இயல்பான அறவுணர்வையே ஒழுக்கநெறி (Moral Law) என்று அழைக்கிறோம்.

பெரும்பாலும் இந்த ஒழுக்க விதிகளே சட்டமாகத் திகழ்கின்றன. ஒழுக்கவியலில் எது நல்லதாகக் கருதப்படுகிறதோ, எது தீயதாக விலக்கப்படுகிறதோ அதுவே, கூடியவரை சட்டவியலிலும் நல்லதாகவும் தீயதாகவும் விதிக்கப்படுகிறது.

ஒருவரை மற்றவர் வஞ்சித்து ஏமாற்றுவது ஒழுக்கத்திற்கு ஒவ்வாதது என்ருல், அது சட்டப்படியும் குற்றம்தான். கற்பு காக்கப்படவேண்டியது தருமம் என்ருல், கற்பு அழிக்கப்படு வதைக் கொடுங் குற்றமெனச் சட்டமும் விதிக்கின்றது. எனினும், அறநெறிகள் அனைத்தும் சட்டவிதிகளாகிவிடுவதில்லை. அன் புடைமையும், அருளுடைமையும் அறநெறியின்பாற்படுவன. ஆனல் அவை சட்ட விதிகள் அல்ல. ஈகை உயர்ந்த அறக் கொள்கைதான். எனினும், சட்டத்தின்வழி, ஈத்துவக்கும் இன்பத்தை மக்கள் உணரும்படி செய்தல் இயலாது. எனவே, மக்களின் பொதுநலனுக்கு எந்தெந்த ஒழுக்க விதிகள் தேவைப்படுகின்றனவோ அவைகளே சட்ட விதிகளாக உருவெடுக்கின்றன.

அற விதிகளை அரசு அமுல் நடத்துவது இல்லை; ஆனல் சட்ட விதிகளின்படி, மக்களைக் கட்டாயமாக நடக்கச் செய்கிறது. சட்ட விதிகளுக்கு மாருக நடப்போரை அரசு தண்டிக்கிறது. இவ்வாறு அரசின் வலிமை சட்டத்தை அமுல் நடத்துவதற்குப் பயன்படுகிறது. இதை வைத்துக்கொண்டு அரசின் வலிமையே சட்டத்தின் ஆதாரம் என்று நாம் கொள்ளுவது தகாது.

### அறநெறியும் அரசின் வலியும் சட்டத்தில் அடங்கியிருக்கின்றன

சட்டத்தை அமுல் நடத்துவதற்கு அரசு காட்டும் வலிமை அறவலிமையாகும்; மறவலிமை அன்று. ஒரு கொள்ளைக்காரன் கத்தியைக் காட்டி அச்சுறுத்தி மற்ருெருவரைப் பணியுமாறு செய்யலாம். ஒரு போலீசு அதிகாரி தமது அதிகாரத்தினல் ஒருவரைச் சட்டத்திற்குப் பணிந்து நடக்குமாறு செய்யலாம். இந்த இரண்டு செயல்களிலும் வன்முறை பயன்படுத்தப்பட் டாலும், வன்முறையின் தன்மையில் வேறுபாடு இருக்கிறது. முதலாவது செயல் அநியாயமானது, அறத்திற்கு முரணனது; அடுத்தது நியாயத்தை அடிப்படையாகக் கொண்டது. சட்டத்தில் உள்ள அச்சுறுத்தல் அறத்தின்பாற்பட்டது.

அரசின் வலிமை அறத்திற்குத் துணையாக நிற்கிறது என்பதுதான் நாம் சட்டத்திற் காணும் உண்மை. அறநெறியும், அரசின் வலியும் சட்டத்தில் இணைந்து இருக்கின்றன. அறத்தின் மென்மை யும், அரச பலத்தின் வன்மையும் சட்டத்தில் ஒன்றி இயங்கு கின்றன. அன்னையின் அதட்டலிலே அன்பு உண்டு; மருந்தின் கசப்பிலே நோய்க்கு மாற்று உண்டு. அதுபோலவே, சட்டத்தின் அச்சுறுத்தலில் அறம் இருக்கிறது; ஒறுத்தலில் ஒண்மை இருக்கிறது.

திருடியவன் தனது திருட்டுச் செயலிலே பெருமை கொள் ளுவதில்லை. நம்பியவரை மோசம் செய்பவனின் உள்ளம்

அவனையே உறுத்துகிறது. "தன் நெஞ்சே தன்னைச் சுடும்" வகையில்தான் ஒருவன் பொய் புகலுகின்றான். இவ்வாறு அறத்திற்கு மாறாக நடப்பவனின் உள்ளமே அவனை வாட்டுவதால் தான், அறத்தை அண்டி நிற்கும் சட்டத்தை மீறுவதற்கும் மனிதன் அஞ்சுகிறான். எனவே, "சட்டத்திற்குப் பணிந்து ஒழுக வேண்டும்" என்ற எண்ணம் மக்களுக்கு இயல்பாகவே ஏற்படுகின்றது. இந்த எண்ணத்தை மக்களிடையே தோற்றுவிப்பது சட்டத்தின் தனிச் சிறப்பாகும். இந்த அடிப்படையில் சட்டத்திற்கு இலக்கணம் கூற முற்படுகிறார் குட்ஹார்ட் (Goodhart) என்ற பேராசிரியர். "ஒட்டி ஒழுகவேண்டும் என மக்களால் ஏற்கப்படும் வாழ்க்கை விதிகளே சட்ட விதிகள்" என்று அவர் கூறுகின்றார்.

ஆதலால், சட்டத்திற்கு இலக்கணம் கூறும்பொழுது அரசின் வலிமைக்கும், சட்டத்தின் தண்டனைத் திறத்திற்கும் முக்கியத்துவம் அளிப்பது முறையன்று. அவ்வாறு செய்வது, சட்டத்தில் அடங்கி நிற்கும் அறக்கொள்கையை மறந்து, அதை அமுல் நடத்தும் முறையை மட்டும் மிகைப்படுத்திக் கூறுவதாகும்.

### சமுதாயப் பண்பின் பயனே சட்டத்தின் பயனுமாகும்

மனிதன் வளர்வதுபோல் சமுதாயமும் வளர்கின்றது. சமுதாயம் ஏற்றுக்கொள்ளும் பல கொள்கைகள் நாளடைவில் மாறுகின்றன. பண்டு நிலவி வந்த "தீண்டாமை"யைத் தீயது என்று பண்பில் வளரும் இன்றைய சமுதாயம் கருதுகிறது. முன்னோரின் சொத்துரிமை ஆண்களுக்கு மட்டுமன்று, பெண்களுக்கும் உண்டு என்று சம உரிமைப் பண்பில் எழுந்த கருத்தை இன்றைய சமூகம் ஏற்றுப் போற்றுகிறது. இதுபோன்ற திருந்திய கருத்துக்கள் சட்டங்களாக உருவெடுக்கின்றன. இவ்வாறு, சமுதாயத்தின் பண்பையொட்டிச் சட்டமும் வளருகிறது. ஒரு நாட்டு மக்களின் ஒழுக்கமும் உயர் கொள்கைகளும், பண்பும் பயனும், அந்நாட்டில் நிலவும் சட்டங்களில் ஒளிர்கின்றன.

உயர் பண்பையொட்டியே சட்டம் வளரவேண்டும் என்ற கொள்கையை வலியுறுத்தும் வகையில், "பண்பின் பயனே சட்டத்தின் பயனுமாகும்," என்று கூறுகிறார் கோலெர் (Kohler) என்ற செர்மானியப் பேராசிரியர்.

### சமுதாய வளர்ச்சிக்குச் சட்டம் உதவுகிறது

புதிய நற்கொள்கைகளை மக்கள் ஏற்று நடக்காவிடில் சமுதாயம் முன்னேறுவதில்லை. அவ்வாறு, மக்களனைவரையும் நடக்கச் செய்வதற்குச் சட்டமே சிறந்த சாதனமாகும். தீமை பயக்கும் பிற்போக்குக் கொள்கைகளைப் போக்குவதற்கும், முற்

போக்குக் கொள்கைகளையொட்டி மக்களை ஒழுகும்படி செய்வதற்கும், அரசின் ஆணையாக இயங்கும் சட்டம் வழிசெய்கிறது. சமுதாயத்தின் சீர்திருத்தத்திற்கும் வளர்ச்சிக்கும் சட்டம் உற்ற கருவியாக உதவுகின்றது.

சமுதாயத்தை ஓர் ஆலமரம் என்ருல் சட்ட விதிகள் அதன் விழுதுகள் போன்றவை. சட்ட விழுதுகளின் ஆதரவால் சமுதாய ஆலமரம் பரந்து வளர்கின்றது. சமுதாயத்தின் முன்னேற்றக் கருத்துக்களுக்கேற்பச் சட்டம் வளர்ச்சியுறுகிறது; வளரும் சட்டத்தைக் கருவியாகக்கொண்டு சமுதாயம் மேலும் முன்னேறுகிறது. இவ்வாறு, சமுதாயத்தின் முன்னேற்றமும், சட்டத்தின் வளர்ச்சியும் ஒன்றையொன்று சார்ந்து இயங்குகின்றன.

"சட்டம்," நீதி வழங்குவதற்குக் கருவியாக உள்ளது, சமுதாயத்தின் அறநெறியில் எழுவது, அதன் பண்பில் வளர்வது, சமுதாயம் முன்னேற உதவுவது, அரசின் ஆணை என்ற பெயரால் அரசால் அமுல் நடத்தப்படுவது என்பவற்றை இது வரை கண்டோம்.

---

## 3. சட்டத்தின் வகைகளும், நீதி வழங்கும் முறைகளும்

*உரிமை இயல் சட்டம்* (Civil Law) - *உரிமை நிறுத்தல் முறை* (Civil Justice) - *குற்றவியல் சட்டம்* (Criminal Law) - *ஒறுத்தல் முறை* (Criminal Justice)

நம்முடைய வாழ்க்கை நலன்களில் (Interests) பலவற்றைச் சட்டம் காத்து நிற்கிறது. அவ்வாறு காக்கப்படும் நலன்களே சட்டப்படியான நம்முடைய உரிமைகள் (Legal Rights) ஆகின்றன. எனது நிலத்தை நான் வைத்து அனுபவிப்பது என் உரிமை. நான் கொடுத்த கடனைத் திரும்பப் பெறுவது எனக்குள்ள உரிமையாகும். என்னுடன் ஒப்பந்தம் செய்து கொண்டவரை அந்த ஒப்பந்தப்படி நடக்கச் செய்யும் உரிமை எனக்கு இருக்கிறது. இந்த உரிமைகளைப் பிறர் ஏற்று நடக்கவேண்டும். இவ்வாறு நமக்கு இருக்கும் பல்வேறு விதமான உரிமைகள், அந்த உரிமைகளை நிலைநிறுத்தும் வழிவகைகள், இவை பற்றிக் கூறும் சட்டங்களின் தொகுப்பை "உரிமை இயல் சட்டம்" (Civil Law) என்று கூறுவார்கள். சொத்துச் சட்டம் (Transfer of Property Act), சொத்துரிமைச் சட்டம் (Succession Act), ஒப்பந்தச் சட்டம் (Contract Act) என்பன சில முக்கியமான உரிமைச் சட்டங்களாகும்.

நமக்குள்ள உரிமைகளைப் பிறர் ஏற்று நடக்க வேண்டும். அவ்வாறு அவர்கள் ஏற்று நடக்கவில்லை எனில், நம் உரிமைகளை நிலை நிறுத்தி அமுல் செய்வதற்கென நீதிமன்றங்களில் வழக்கிடுகிறோம். நமக்குச் சொந்தமான நிலத்தின்மீது இன்னொருவர் சொத்துரிமை கொண்டாடுகிறார். அவர்மீது வழக்கிட்டு நம் உரிமையை நிலை நாட்டுகிறோம். நம்மிடம் வாங்கிய கடனைக் குறிப்பிட்ட காலத்திற்குள் திருப்பித் தராமல் இருப்பவர் மேல் வழக்கிட்டுக் கடனைத் திரும்பப் பெறுவதற்கான நம் உரிமையை நிலைநிறுத்திக் கடன் தொகையையும் வரப்பெறுகிறோம். நம்முடன் ஒப்பந்தம் செய்து கொண்டவர் அதன்படி நடக்கத் தவறினால் அவரை அவ்வாறு நடக்கும்படி நீதிமன்றம் கட்டளையிட்டு ஒப்பந்தத்தை நிறைவேற்றுகிறது.

இவ்வாறு, நீதி மன்றங்கள் நமக்குள்ள பல்வேறு உரிமைகளை நிலைநிறுத்தி, அமுல் நடத்தி, நியாயம் வழங்குவதை *உரிமை நிறுத்தல் முறை* (Administration of Civil Justice) என்பார்கள். உரிமை பற்றிய வழக்குகள் *உரிமை வழக்குகள்* (Civil Cases) எனப்படும்.

ஒருவர் உரிமையை மற்றவர் மதித்து நடக்காமல் இருப்பது ஒரு வகை; ஒருவர் உரிமைக்கு மற்றவர் தீமை விளைவிப்பது மற்றொரு வகை. ஒருவருக்குச் சேரவேண்டிய கடனைப் பிறர் திருப்பிக் கொடுக்காமல் இருப்பது முதல் வகையைச் சேர்ந்தது. இஃது உரிமையை ஏற்று நடக்காத செயல். ஒருவர் வசமுள்ள பணப் பையை அவர் சம்மதமின்றி எடுத்துச் செல்வது இரண்டாவது வகையான தீமையாகும். இது "திருடுதல்" என்ற குற்றமான செயலாகிவிடுகிறது. ஒருவருக்குச் சொந்தமான வீட்டின்மீது நியாயம் ஏதுமின்றி இன்னொருவர் உரிமை கொண்டாடுவது மற்றவரின் உரிமையை மறுக்கும் செயல். ஆனால், தீங்கான செயல் அன்று. அவ்வாறு உரிமை கொண்டாடுபவர் அந்த வீட்டிற்குள் நுழைந்து அதை இடித்து நாசப்படுத்துதல் தீமை விளைவிக்கும் குற்றமாகிறது.

அறத்தின் அடிப்படையில் இயங்கும் சட்டம் ஒருவரால் மற்றவருக்குத் தீமை விளைவதைத் தடைசெய்கிறது. தீமைகள் நிகழாதவாறு தடுக்கவேண்டும் என்ற நோக்கத்துடன், தீமை விளைவிக்கும் பல செயல்களைக் "குற்றங்கள்" (Crimes) எனக்கொண்டு, தீமை இழைத்தோர்களைத் தண்டிக்கின்றது. திருடுதல், கொள்ளை அடித்தல், கொலை புரிதல், வஞ்சித்து ஏமாற்றுதல், பிறர் உடலைத் தாக்கிக் காயம் விளைவித்தல் போன்ற தீய செயல்கள் செய்யும் குற்றவாளிகளை நீதி மன்றங்கள் மூலம் தண்டிக்கின்றது.

பொதுவாகத் தண்டிக்கத்தக்க குற்றங்களைத் தொகுத்துக் கூறும் சட்டங்களைக் "குற்றவியல் சட்டம்" (Criminal Law) என்று கூறுகிறோம். குற்றச் சட்டம் (Penal Code) என்பது குற்றவியலில் முக்கிய சட்டமாகும். இது தவிர, குற்றமெனக் கருதப்படும் பல்வேறு செயல்களைக் குறித்தும் பல சட்டங்கள் இருக்கின்றன.

குற்றம் செய்தவர்களை ஒறுத்து, அதன்மூலம் அவர்கள் உள்ளத்தைத் திருத்தி, மீண்டும் குற்றங்களைச் செய்யாமல் அவர்களைத் தடுக்கவேண்டும்; இதைக் காணும் பிறரும் குற்ற வழிகளில் இருந்து விலகவேண்டும் என்ற அறநோக்குடன், சட்டம், குற்றம் இழைத்தோர்களைத் தண்டிக்கின்றது. சமுதாயத்தின் அமைதிக்குப் பங்கம் விளைக்கும் செயல்களைத் தடுக்க வேண்டும் என்ற அக்கறையால் குற்றம் இழைத்தவர்களைத் தண்டிக்கின்றனர்.

குற்றமான செயல்களால் பாதிக்கப்பட்டவர்கள் தனிப்பட்ட மக்களாக இருந்தாலும், குற்றச் செயல்கள் சமூகத்திற்கு எதிரான செயல்களாகக் கருதப்படுகின்றன. ஆதலால், அரசாங்கமே வாதியாக இருந்து குற்றவாளிகளை முறைமன்றங்கள் முன் நிறுத்தித் தண்டனை பெறச் செய்கிறது.

இவ்வாறு குற்றம் இழைத்தவர்களை ஒறுத்து அதன்வழி நீதி வழங்கப்படுவதை "ஒறுத்தல் முறை" (Administration of Criminal Justice) என்று கூறுவார்கள். இந்த வழக்குகள் "குற்ற வழக்குகள்" (Criminal Cases) எனப்படும்.

உரிமை வழக்குகளில் (Civil Cases) வாதியின் உரிமையைப் பறிக்காமல் எதிர்வாதி தடுக்கப்படுகின்றார். குற்ற வழக்குகளில் (Criminal Cases) பிறர் உரிமையைப் பறித்த குற்றத்திற்காக எதிர்வாதி தண்டிக்கப்படுகின்றார். மக்களின் உரிமைகளைப் பாதுகாப்பதற்காகவே உரிமை நிறுத்தல் முறை, ஒறுத்தல் முறை என்ற இருவகை நீதிமுறைகளும் இயங்குகின்றன.

மக்களின் உரிமைகளைக் கூறி, அந்த உரிமைகளை நிலை நிறுத்தும் வகைகளைக் கூறுவது "உரிமை இயல் சட்டம்" (Civil Law). உரிமைக்கு ஊறு விளைக்கும் குற்றச் செயல்களைத் தொகுத்துக் கூறி அவைகளுக்கான தண்டனையைக் குறிப்பது "குற்றவியல் சட்டம்" (Criminal Law). இவ்வாறு சட்டத்தை, உரிமை இயல் சட்டம், குற்றவியல் சட்டம் என்று இரு பெரும் பிரிவுகளாகப் பிரித்துக் கூறுவார்கள்.

---

# 4. "தீங்கியல்" சட்டம்

*உரிமை இயல் சட்டத்தின் ஒருவகை தீங்கியல் சட்டம் — "உரிமைக்கு ஊறு விளைந்தால் அதற்கான உய்தி உண்டு", "தீங்கு செய்யப்பட்டால் அதற்குத் தீர்வு உண்டு", என்ற கொள்கையின் விளக்கம் - தீங்கின் வகைகளையும் அவை தீரும் திறங்களையும் பற்றிக் கூறுவது தீங்கியல் சட்டம் - நீதிமன்றங்களால் வகுக்கப்பட்ட கொள்கைகளின் கோவையாக அமைகிறது.*

உரிமை இயல் சட்டத்தின் உட்பிரிவுகளாகப் பல வகைச் சட்டங்கள் உண்டு. அவைகளில் ஒருவகை "தீங்கியல் சட்டம்" (Law of Torts) என்பதாகும்.

ஒருவர் மற்றொருவரைத் தாக்கிக் கொடுங்காயத்தை விளைவித்து விடுகின்றார். பிறருக்குக் கொடுங்காயத்தை விளைத்தது குற்றமான செயலாகும். எனவே குற்றவாளிக்குச் சிறைத் தண்டனை விதிக்கப்படுகிறது. ஒறுத்தல் முறையில் இவ்வாறு நீதி வழங்கப்பட்டு விடுகிறது. இத்துடன் சட்டத்தின் கடமை தீர்ந்து விட்டதா? குற்றம் செய்தவரைத் தண்டிக்க வேண்டியது இன்றியமையாததுதான். குற்றவாளிகளைப் பொறுத்தவரை நீதி செய்தாகிவிட்டது. ஆனால், அக்குற்றமான செயலால் பாதிக்கப்பட்டுக் கொடுங்காயத்தால் அவதியுற்றவரின் கதி என்ன ?

காயமடைந்தவர் காயத்தைக் குணப்படுத்தும் பொருட்டு வைத்திய சாலையில் சில மாதங்கள் இருக்க நேரிடுகிறது. அதற்கான பொருள் செலவும் ஆகிறது. மேலும், அன்றாட வேலையையும் அவர் செய்ய முடியாதிருப்பதால் அந்த வருமானத்தை இழக்கின்றார். இந்தப் பொருள் நட்டம் போக, கொடுங்காயத்தால் ஏற்படும் உடல் வாதனைக்கும் மன வேதனைக்கும் அவர் ஆளாகின்றார். தண்டனை பெற்றவர் இழைத்த தீங்கால் தோற்றப்பட்ட இத்தனை விளைவுகளுக்கும் யார் பொறுப்பு ?

குற்றவாளியைத் தண்டித்ததால் மட்டும் முறை செய்தல் முழுமை அடைந்துவிடவில்லை, நீதி வழங்கியது நிறைவு பெறவில்லை. குற்றத்தால் பிறருக்கு விளைந்த கேட்டிற்குக் குற்றவாளி பொறுப்பாக்கப்பட வேண்டும். தீங்கு இழைக்கப்பட்டவருக்கு ஏற்பட்ட நட்டத்திற்கு ஈடு செய்யும் பொறுப்புத் தீங்கு இழைத்தவரையே நியாயமாகச் சேருகின்றது. அந்தப் பொறுப்பிற்கும் அவரை ஆளாக்கி நட்டமடைந்தவருக்கு அதற்காக ஈடு கிடைக்கும்படி செய்தால்தான் சட்டத்தின் கடமை நிறைவு பெறுகின்றது. எனவே, தீங்கிழைத்தவர், அத்தீங்கால் பிறருக்கு விளைந்த நட்டத்திற்கு ஈடு செய்யும் பொறுப்பும் உடையவர் எனச் சட்டம்

விதிக்கின்றது. ஆதலால், காயமடைந்தவருக்கு விளைந்த நட்டத்தை ஈடு செய்யும் பொறுப்புக் காயம் விளைத்தவரைச் சேருகிறது.

இதுபோன்றே, திருடியவரைச் சிறையிலிடுவது மட்டும் போதாது. இழந்த பொருளையோ அல்லது அதன் மதிப்பையோ திருட்டுக் கொடுத்தவர் திரும்பப் பெறவேண்டும். இதற்கான பொறுப்பும் திருடியவருக்குச் சட்டபடி உண்டு. எனது நிலத்தை ஆக்கிரமித்துக் கொண்டிருந்த ஒருவரை அந்நிலத்திலிருந்து அகற்றும் அதிகாரத்தைச் சட்டம் எனக்கு அளித்திருப்பது போல், அந்த ஆக்கிரமிப்பால் எனக்கு விளைந்த நட்டத்தையும் ஆக்கிரமித்தவரிடமிருந்து பெறுவதற்குச் சட்டம் வகைசெய்கிறது. அவதூறு இழைக்கப்பட்டவர், அதனுல் விளைந்த மானநட்டத்திற்குச் சட்டப்படி ஈடுபெறும் உரிமையுள்ளவராகிருர்.

இவ்வாறு, ஒரு தீங்கினுல் பிறருக்கு விளைந்த நட்டத்திற்குத் தீங்கிழைத்தவர் பொறுப்பாகின்ருர். அந்த நட்டத்திற்கு ஈடு செய்யும் பொறுப்பைத் தீங்கிழைத்தவர் ஏற்றேயாகவேண்டும். இதுவே, அறத்தின் அடிப்படையில் இயங்கும் சட்டம் விதிக்கும் கொள்கையாகும்; இது நேர்மை நிறைந்த கொள்கையுமாகும்.

நமக்குச் சொந்தமான பொருளை நம் உடைமையில் வைத்து அனுபவித்துப் பலன்பெறும் உரிமை நமக்கு உண்டு. இதைச் சட்டம் அங்கீகரிக்கின்றது. இந்த உரிமையைப் பொருளுரிமை (Right to Property) என்கிருேம். நமது பொருளுக்குப் பிறரால் சேதம் விளைவிக்கப்பட்டால் நமது பொருளுரிமை பாதிக்கப்படுகிறது. சேதம் விளைவிப்பது நமக்குள்ள பொருளுரிமைக்கு ஊறு செய்வதாகும். எனவே தீங்கான செயலாகும். "உரிமைக்கு ஊறு விளைந்தால் அதற்கான உய்தி உண்டு" என்பது அடிப்படைவிதி. இதைஇலத்தீன் மொழியில் (ubi jus ibi remedium) என்பார்கள். (There is no right without remedy). இதையே "தீங்கு என்ருல் தீர்வு உண்டு" என்றும் கூறுவார்கள். எனவே, எனது பொருளுக்குச் சேதம் விளைவித்தவர், அதனுல் எனக்கு விளையும் நட்டத்திற்கு ஈடு செய்யும் பொறுப்புடையவர் ஆகின்ருர்.

ஒரு செயலைத் தீங்கு (wrong) என்று சட்டம் விதித்தால் அந்தத் தீங்கிற்கான தீர்வும் சட்டத்தில் இருக்கவேண்டும். அவ்வாறு சட்டப்படி தீர்வு இல்லாத ஒரு கேட்டைத் "தீங்கு" என்று சட்டம் விதிப்பது பொருளற்றதாகி விடும். அது போன்றே, ஒருவருடைய உரிமை மீறப்பட்டும், அதற்கான நிவாரணம் ஏதும் சட்டத்தில் இல்லை எனில் "உரிமை" என்ற சொல் பொருளில்லாததாகும். "உய்தி இல்லாத உரிமை மீறல் இருத்தல் முடியாது; தீர்வு

இல்லாத தீங்கு இருத்தல் கூடாது". இந்தக் கொள்கையில் அடிப்படையிலேயே செய்யப்பட்ட தீங்குகளுக்குத் தீர்வு வேண்டுமென்று சட்டம் விதிக்கின்றது.

ஒருவருக்கு மற்றொருவரால் விளையும் பலதிறப்பட்ட தீங்குகளையும் (Wrongs) அத்தீங்குகளால் தோன்றும் கேடுகள் அகற்றப்படும் வழிமுறைகளையும் தொகுத்துக் கூறுவதே "தீங்கியல் சட்டம்" (Law of Torts) என்பதாகும். தீங்கின் வகைகளையும் அவை தீரும் திறங்களையும் கூறுவது இச்சட்டம்.

நீதிபதிகள் தங்கள் தீர்ப்புக்களில் வகுக்கும் கொள்கைகளும் (Precedents) சட்ட விதிகள் ஆகின்றன என முன்னர்க் கண்டோம். இதை, "நீதிபதிகளால் வகுக்கப்படும் சட்டம்" (Judge-made Law) என்று கூறுவார்கள். "தீங்கியல் சட்டம்" நீதிமன்றங்களால் வகுக்கப்பட்ட கொள்கைகளின் கோவையேயாகும்.

மக்கள் தங்களுக்குப் பிறரால் தீங்கு விளைவிக்கப்பட்டது என்று தொடரப்பட்ட ஆயிரக்கணக்கான வழக்குகளில், தீர்ப்புக்கள் கூறும்பொழுது பல்வேறு தீங்குகளையும், அத் தீங்குகளால் விளையும் கேடுகளையும், அந்தக் கேடுகளை அகற்றும் வழிவகைகளையும் நுணுகி ஆராய்ந்து நீதிமன்றங்கள் முடிவு கண்டிருக்கின்றன. நீதிபதிகள் வகுத்த கொள்கைகள் தீர்ப்புக்களில் விளக்கப்பட்டிருக்கின்றன. இந்தக் கொள்கைகளின் தொகுப்பே தீங்கியல் சட்ட விதிகளாகும். எனவே, தீங்கியல் சட்டம் என்பது சட்ட மன்றத்தால் இயற்றப்பட்ட சட்டமாக (Enacted Law) இல்லை; அது நீதிக் கொள்கைகளின் — தீர்ப்பு முறைமைகளின் — தொகுப்பாகவே இருக்கிறது.

சட்டமன்றங்கள் இதற்கென ஒரு சட்டத்தை இயற்றாதது ஏன்? என்ற கேள்வி எழலாம்.

மனிதனுக்கு மனிதனால் விளையும் தீங்குகள் எண்ணற்ற வகைகளில் எழுகின்றன. விஞ்ஞான முன்னேற்றத்தால் மக்கள் வாழ்வு முறை பலவகைகளில் மாறுபடுகின்றது. மாறுபட்ட சூழ்நிலைகளில் புதிய புதிய விதமான தீங்குகள் செய்யப்படுகின்றன. அண்டையிலுள்ள கடைக்காரர் இரவும் பகலுமாக இசைத்தட்டை வைத்து ஒலிபெருக்கி மூலம் மிகுந்த இரைச்சலை ஏற்படுத்தி நம் வீட்டில் நாம் அமைதியாக இருப்பதற்கு இடைஞ்சல் விளைவிக்கலாம். இஃது இன்றைய சட்டப்படி தீங்கான செயலாகும். இது போன்ற தீங்கு நூறு ஆண்டுகளுக்கு முன் ஏற்பட முடியாது. ஏனெனில், ஒலிபெருக்கிக் கருவியே அன்று கண்டுபிடிக்கப்படவில்லை. விரைந்து செல்லும் விசை வண்டிகள் வந்த பின்னர் நெடுஞ்சாலையில் விபத்துக்கள் அதிகமாகின்றன. இதனால் விளையும் தீங்குகள் ஐம்பது ஆண்டுகளுக்குமுன் ஏற்படுவதற்கு ஏது

வில்லை. இவ்வாறு, வளரும் விஞ்ஞானத்தால் மாறிவரும் வாழ்க்கையில் புதிய புதிய வழிகளில் தீங்குகள் விளைக்கப்படுகின்றன. அவைகளுக்கேற்பத் தீங்கியல் சட்டமும் வளர்ந்து அமைய வேண்டியதாகின்றது. எனவே, தீங்கியல் சட்டம் வளர்ந்து வரும் ஒரு சட்டமாகும். ஆதலால், தீங்குகளையெல்லாம் வரையறுத்து, அதற்கான தீர்வுகளை வகைப்படுத்தி இயற்றப்பட்ட சட்டத்தில் அடக்கி அமைப்பது எளிதில் இயலாது; அவ்வாறு செய்தாலும் அது சட்ட வளர்ச்சிக்குத் தடையாகிவிடும்.

ஆங்கில நாட்டிலும் நம் நாட்டிலும் நீதி மன்றத்தினரால் வகுக்கப்பட்ட நீதிக் கொள்கைகளே "தீங்கியல் சட்டம்" என்ற பெயருடன் விளங்குகின்றன. அக்கொள்கைகளின் அடிப்படையிலேயே நாம் இச்சட்ட விதிகளை ஆராய இருக்கிறோம்.

## 5. "உரிமைத்தீங்கின்" (Tort) இலக்கணம்

Tort என்ற சொல்லின் உட்பொருள் - ஒரு செயல் எப்பொழுது "உரிமைத்தீங்கு" ஆகிறது - உரிமைக்கு ஊறு விளைவிப்பது, சட்டப்படியான கடமையில் தவறுவது, இதுவே உரிமைத் தீங்கு - அறுதியிட்ட நட்டஈடு - அறுதியிடப்படாத நட்ட ஈடு - உரிமைத் தீங்கிற்குரிய இலக்கணம் - உரிமைத் தீங்கிற்கும் (Tort), குற்றத்திற்கும் (Crime) உள்ள வேறுபாடுகள் - உரிமைத் தீங்கிற்கும், ஒப்பந்த முறிவுக்கும் (Breach of Contract) உள்ள வேறுபாடுகள். - "உரிமைத்தீங்கு" என்பதைத் "தீங்கு" என்றே குறிப்பிடலாம்.

தீங்கியல் சட்டம் (Law of Torts) என்பது உரிமைச் சட்டத்தின் ஒரு பிரிவு என்று கண்டோம். "Tort" என்ற சொல்லின் உட்பொருள் என்ன என்பதை நாம் தெரிந்து கொள்ளவேண்டும்.

Tort என்ற சொல் Tortum என்ற இலத்தீன் சொல்லிலிருந்து பிரெஞ்சு மொழிக்கு வந்து, அதன் பின் ஆங்கில மொழியில் கையாளப்படுகிறது. "நேர்மையற்ற செயல்" என்பதே அச்சொல்லின் இயல்பான பொருள். Wrong என்ற சொல்லும் Tort என்ற சொல்லும் பொதுவாகத் "தீங்கு" என்பதைக் குறித்து வழங்கப்பட்டு வந்தன. நாளடைவில், Wrong என்ற சொல் எல்லா வகைத் தீமைகளையும் குறித்து நிற்க, Tort என்பது சட்டப்படியான உரிமைக்கு விளையும் தீங்குகளை மட்டும் குறித்துப் பயன் படுத்தப்பட்டது. இப்பொழுது Tort என்ற சொல் சட்டக்கலைச் சொல்லாக மட்டுமே வழங்கப்படுகிறது. சட்டவியலில் அஃது ஒரு தனிக் கருத்தை உணர்த்தி நிற்கிறது.

பொதுவாக, ஒருவருக்கு விளையும் தீங்குகள் எல்லாமே Torts ஆவதில்லை. சாதாரணமாகத் தீங்குகளை, Wrongs என்று ஆங்கிலத்தில் கூறுவார்கள். நாம் இங்கு ஆராயும் தீங்கு, ஒருவரின் உரிமைக்கு விளையும் தீங்கு ஆதலால், இதை ஆங்கிலத்தில் Civil Wrong "உரிமைத் தீங்கு" என்று கூறுவார்கள். நாம் Tort என்ற சொல்லைத் தமிழில் "உரிமைத் தீங்கு" என்று குறிப்பது சாலப்பொருந்தும். பொருளை உணர்த்தும் சிறப்புடன் "உரிமைத் தீங்கு" என்ற தொடர் அமைகின்றது.

விக்மோர் (Wigmore) என்ற அமெரிக்க நாட்டுச் சட்ட வல்லுநர் இச் சட்டப் பிரிவிற்கு Tort என்ற பெயரையே நீக்கி விட்டுத் தாம் எழுதிய நூலிற்குப் "பொது உரிமைகள்" என்று தலைப்புக் கொடுத்திருக்கிறார்.

இனி, உரிமைத் தீங்கின் (Tort) முக்கிய கூறுகளைக் காண்போம்.

## ஒரு செயல் எப்பொழுது "உரிமைத் தீங்கு" ஆகிறது?

நம் நலன்களுக்கு (Interests) மாறுபட்ட செயல்கள் எல்லாம் உரிமைத் தீங்கான செயல்கள் ஆகிவிடுவதில்லை.

நான் செய்யும் வாணிபத்திற்குப் பணம் அவசரமாகத் தேவைப்படுகிறது. என்னிடம் அந்தப் பணம் இல்லை. எனவே, நண்பர் ஒருவரிடம் வேண்டிய தொகையைக் கடனாகக் கேட்கின்றேன். அவரிடம் பணம் நிறைய இருந்துங்கூட அவர் எனக்குக் கடன் கொடுக்க மறுத்து விட்டார். அவர் இவ்வாறு மறுத்த செயல் எனது நலனுக்கு மாறுபட்ட செயலாகும். இந்தக் கடன் தொகை கிடைக்காததால் என் வியாபாரத்தில் நான் நட்டமடைகிறேன். இதை வைத்து, நண்பர் கடன் கொடுக்க மறுத்தது 'உரிமைத் தீங்கான" செயல் என்று கூறுதல் பொருந்துமா? பொருந்தாது. ஏன்?

நண்பரிடமிருந்து கடன் பெறுவதற்கான உரிமை (Legal right) எனக்கு இல்லை. அம்மாதிரியே, எனக்குக் கடன் கொடுக்க வேண்டும் என்ற சட்டப்படியான கடமை (Legal duty), என் நண்பருக்கு இல்லை. எனவே, கடன் தர மறுத்த செயலை 'உரிமைத் தீங்கு" என்று கூற முடியாது.

நாம் ஒருவரிடமிருந்து கடன் பெறுவதற்குச் சட்டம் உதவி செய்வதில்லை. அதனால், கடன் பெறுவது நம் உரிமை ஆவதில்லை. நமக்கு இன்னொருவரிடமிருந்து கடன் வரவேண்டியிருக்கிறது என்றால் அதைத் திரும்பப் பெறுவதற்குச் சட்டம் உதவியாயிருக்கிறது. எனவே, கடனைத் திருப்பிப் பெறுதல் நம் உரிமையாகிறது. கடன் பெறுவதும் நமது நலனுக்குத்தான், கடனைத் திரும்பப் பெறுவதும் நமது நலனுக்குத்தான். முதல் நலனை நிலைநிறுத்துவதற்குச் சட்டம் உதவியளிப்பதில்லை. இரண்டாவது நலனை நிலைநிறுத்திப் பணம் வரப்பெறுவதற்குச் சட்டம் துணையாக நிற்கின்றது.

இவ்வாறு, மக்களுடைய நலன்கள் எல்லாம் சட்டத்தால் பாதுகாக்கப் படுவதில்லை. சில நலன்களை மட்டுமே சட்டம் நிலை நிறுத்துகிறது. எந்தெந்த நலன்கள் சட்டத்தால் பாதுகாக்கப் படுகின்றனவோ அவைகளே நம் உரிமைகள் (Legal rights) ஆகின்றன. இந்த உரிமைகளுக்கு ஊறு விளைக்கும் செயல்களே "உரிமைத் தீங்குகள்" எனப்படுகின்றன.

சில சூழ்நிலைகளில் சட்டப்படியான கடமைகள் எழுகின்றன. நெடுஞ்சாலையில் வேகமாக மோட்டாரை ஓட்டிச் செல்பவர் சாலையில் போவோருக்குக் கேடு விளைவிக்காது செல்லவேண்டும். பிறருக்குக் கேடு விளைவதைத் தவிர்க்கும் கவனத்துடன் அவர்

மோட்டாரைச் செலுத்தவேண்டும். இதை அவரது கடமையாகச் சட்டம் விதிக்கின்றது. அவர், கவனமின்மையால் இன்னொருவர் மீது மோதிக் காயத்தை விளைவித்தார் எனில், அது கடமை தவறிய செயலாகும். எனவே, அதுவும் "உரிமைத் தீங்கு" ஆகிறது. வைத்தியரின் கவனக்குறைவால் நோயாளியின் நோய் அதிகரித்தால் அதுவும் "உரிமைத் தீங்கான" செயலாகும்.

இவ்வாறு, பிறருக்குள்ள சட்டப்படியான உரிமைக்கு ஊறு விளைவிப்பது (Violation of legal right), தம்முடைய சட்டப்படியான கடமையில் தவறிப் (Breach of legal duty) பிறருக்குக் கேடு விளைப்பது, இச் செயல்களையே "உரிமைத் தீங்குகள்" என்று கூறுகிறோம்.

எனவே, ஒரு செயல் தீங்கானதா என முடிவு செய்யுமுன்னர், அஃது ஒருவருக்குள்ள உரிமையை மீறிய செயலா, அல்லது ஒருவருடைய கடமைத் தவறான செயலா என்று சட்டம் ஆராய்கின்றது.

உரிமை மீறிய செயல் அல்லது கடமையில் தவறியதால் கேடு விளைவிக்கும் செயல், இவைகளே "உரிமைத் தீங்குகள்" ஆகின்றன.

ஒருவருக்கு உரிமையும், கடமையும் தோன்றுவது சட்டத்தாலோ அல்லது ஒப்பந்தத்தாலோ இருக்கலாம்.

என்னிடம் கடன் வாங்கியவர் கடனைத் திருப்பிக் கொடுத்து விடுவதாக ஒப்புச் சீட்டு எழுதித் தருகின்றார். அந்த ஒப்புச் சீட்டில் உள்ள ஒப்பந்தத்தின் அடிப்படையில் அந்தக் கடனைத் திரும்பப் பெறும் உரிமை எனக்கு எழுகின்றது; அதேபோல் அதைத் திருப்பிச் செலுத்தவேண்டிய கடமை, கடன் பெற்றவருக்கு ஏற்படுகிறது. இந்த உரிமையும் கடமையும், செய்து கொள்ளப் பட்ட ஒப்பந்தத்திலிருந்து எழுந்தவை.

ஒப்பந்தம் ஏதுமின்றி, பொதுவாகச் சட்டத்தால் எழும் உரிமைகளும் கடமைகளும் உண்டு. எனது நிலத்தைப் பிறருடைய இடையூறு ஏதுமின்றி அனுபவிப்பதற்கான என் உரிமை சட்டத்தால் அளிக்கப்படுவதாகும். என் உடைமையை மதித்து நடந்து, பிறர் என் நிலத்தில் அத்துமீறி நுழைதல் கூடாது என்று பிறருக்குள்ள கடமையும் சட்டம் பொதுவாக விதிக்கும் கடமையாகும். எனது உடலைப் பிறர் தாக்கக் கூடாது என்று நான் ஒவ்வொருவரிடமும் ஒப்பந்தம் செய்து கொள்ளவில்லை. எனினும், என் உடலைத் தாக்குபவர் எனது உடலுரிமைக்கு ஊறு விளைத்தவர் ஆகிறார். ஏனெனில் எனது உடலுரிமை சட்டத்தால் எழுவது. இவ்வாறு, சொத்துரிமை, புகழுரிமை, உடலுரிமை போன்ற உரிமைகள் சட்டத்தால் ஏற்படும், ஏற்கப்படும் உரிமைகள். இவை

களுக்கு ஊறு செய்தல் கூடாது என்ற கடமையும் சட்டத்தால் விதிக்கப்படுவதாகும்.

சட்ட உரிமைகளை மீறும் செயலே "உரிமைத் தீங்கு" எனப் படுகிறது ; ஒப்பந்த உரிமைகளை மீறும் செயல் "ஒப்பந்த முறிவு" ஆகும்.

எனவே, தீங்கியல் சட்டத்தில் பேசப்படும் உரிமைகள் கடமைகள் எல்லாம் சட்டத்தால் எழுபவை; மக்களுக்குள் ஏற்படும் ஒப்பந்தங்களால் தோற்றுவிக்கப்படுபவை அல்ல.

சட்டத்தால் எழும் உரிமைகளுக்கு ஊறு செய்யப்படும்பொழுதுதான் உரிமைத் தீங்கு விளைகிறது.

இருவர் ஒப்பந்தம் செய்து கொள்ளும்பொழுது, அந்த ஒப்பந்தத்தால் எழும் ஒருவருக்குள்ள உரிமை மீறப்பட்டால், அதற்காக, அதை மீறியவர், இன்ன தொகையை நட்ட ஈடாகக் கொடுக்கவேண்டும் என்று அந்த ஒப்பந்தத்தில் பெரும்பாலும் குறிப்பிடுவது உண்டு. ஒப்பந்த மீறலால் ஒருவருக்கு எவ்வளவு நட்டம் ஏற்பட்டதோ, அந்த அளவிற்கே நட்ட ஈடு அளிக்கப் படுகிறது. ஒப்பந்தத்தின் அடிப்படையில், விளைந்த பொருள் நட்டத்தின் அளவிற்கேற்ப அறுதியிட்டுக் கோரப்படும் நட்ட ஈட்டை, அறுதியிட்ட நட்ட ஈடு (Liquidated damages) என்று கூறு வார்கள்.

தீங்கியல் சட்டத்தின் கீழ் நட்ட ஈடு கோருபவர், தமக்கு விளைந்த கேட்டிற்குத் தகுந்தபடியே நட்ட ஈடு பெறுகின்றார். ஆனால், நட்ட ஈட்டின் அளவை நீதிமன்றமே உறுதி செய்கிறது. விளைந்த தீங்கால் சிறு காயம் அடைந்தவர் பெறும் நட்ட ஈடு சிறிய தொகையாகவே இருக்கும் ; கொடுங்காயம் அடைந்து அதிக அல்லலுக்கு ஆளானவர் பெறும் நட்ட ஈடு பெரிய தொகை யாக இருக்கலாம். சில வேளைகளில், தீங்கால் விளைந்த மன வேதனைக்கும், தன்மதிப்பிழப்பிற்கும் என்று நட்ட ஈடு அளிக்கப் படுகிறது. பொருள் நட்டமே விளைவிக்காத உரிமைத் தீங்கிற்கும் நட்ட ஈடு உண்டு. தீங்கின் வகை, விளைந்த கேட்டின் தன்மை, இதர சூழ்நிலைகள் எல்லாவற்றையும் ஆராய்ந்தே நீதிமன்றம் தீங்கீட்டுத் தொகையின் அளவைத் தன் நியாயத் திறனால் அறுதி யிடுகிறது. இந்தத் தொகை சம்பந்தப்பட்டவர்களிடையுள்ள ஒப்பந்தத்தாலோ, அல்லது உண்மையில் விளைந்த பொருள் நட்டத்தின் அளவாலோ அறுதியிடப்படுவதில்லை. ஆகவே, தீங்கியல் சட்டத்தின்படி நீதிமன்றம் அளிக்கும் தீங்கீடு அறுதியிடப்படாத நட்ட ஈடு (Unliquidated damages) என்று கூறப்படுகிறது.

எனவே, தீங்கியல் சட்டத்தில் கூறப்படும் உரிமைகளும் கடமைகளும் சட்டத்தால் எழுபவை என்பதும், தீங்கிழைக்கப் பட்டவர் பெறும் இழப்பீடு அறுதியிடப்படாதது என்பதும் புலனுகும்.

தீங்கிழைத்தவர் தமது சொந்தப் பொறுப்பிலேயே நட்ட ஈடு கொடுக்க வேண்டும் என்பது சட்டமன்று. சில சூழ்நிலைகளில் பணியாட்களின் தீங்குச் செயல்களுக்கு ஈடு செய்யும் பொறுப்பு அவர்களுடைய தலைவர்களைச் சேருகின்றது. எனது மோட்டார் ஓட்டியின் கவனமற்ற செயல்களுக்கு ஈடு செய்யும் பொறுப்பு என்னையே சாருகின்றது. எனவே, நட்ட ஈடு கொடுக்கும் பொறுப்புடையவர் தீங்கிழைத்தவராகவோ அல்லது அவருடன் உள்ள தொடர்பால் பொறுப்புள்ளவராகவோ இருக்கலாம்.

"உரிமைத் தீங்கின்" உள்ளடங்கிய கூறுகளை இதுவரை ஆராய்ந்தோம். இந்தக் கூறுகளைத் தொகுத்து உரிமைத் தீங்கிற்கு இலக்கணம் காணலாம்.

## உரிமைத் தீங்கிற்குரிய இலக்கணம் (Definition of Tort)

(i) சட்டப்படியான பிறரது உரிமைக்கு ஒருவர் ஊறு செய்தல், அல்லது தம் கடமையில் தவறுதல், இதனுல் விளைவது "உரிமைத் தீங்கு" எனப்படுகிறது :

(ii) விளைந்த உரிமைத் தீங்கிற்கு இழப்பீடு உண்டு :

(iii) இழப்பீடாக, தீங்கிழைத்தவரிடமிருந்தோ அல்லது அவரைச் சார்ந்தவரிடமிருந்தோ அறுதியிடப்படாத நட்டஈடு கோரித் தீங்கிழைக்கப்பட்டவர் வழக்கிட்டு, அதைப் பெறலாம்.

இதுவே, "உரிமைத் தீங்கின்" முக்கிய கூறுகளைக் காட்டும் இலக்கணம்.

பொதுவாக, "உரிமைத் தீங்கு" என்பதற்குத் தகுந்த முறையில் இலக்கணம் வகுப்பது எளிதில் இயலாதது என்பது சட்ட வல்லுநர்களின் ஒன்றுபட்ட கருத்தாகும்.

டாக்டர் வின்பீல்டு (Dr. Winfield) என்ற புகழ்பெற்ற சட்ட அறிஞர் தம் நூலில் கூறியுள்ள இலக்கணத்தைப் பலரும் ஏற்றுப் போற்றுவதுண்டு. அவர் "உரிமைத் தீங்கு" என்பதை வரையறுத்துக் கூறவில்லை. "உரிமைத் தீங்கிற்கான பொறுப்பு" (Tortious Liability) என்ன என்பதை விளக்கியிருக்கிருர் :

"(ஒருவருக்குப்)பிறர் பொருட் டுள்ளதெனச் சட்டம் விதிக்கும் கடமையில் (அவர்) தவறியதால், அதற்குக் கழுவாயாக அறுதியிடப்படாத இழப்பீட்டைச் செலுத்த வேண்டிய பொறுப்பே உரி

மைத் தீங்கிற்கான பொறுப்பு'' என்பது அவர் கூற்று. இதிலும் சில குறைகள் உண்டு. உதாரணமாக, பணியாளின் செயலுக்குப் பணித்தவர் பொறுப்பாவது குறிக்கப்படவில்லை.

உரிமைத் தீங்கின் இலக்கணத்தை ஒரே வாக்கியத்தில் அடக்கியமைக்க முற்படுவதை விட, அதன் கூறுகளைத் தொகுத்து அறிந்து கொள்ளுவதே பயனுள்ள முறையாகும்.

''உரிமைத் தீங்கு'' ஒருவரின் சட்டப்படியான உரிமைக்கு ஊறு செய்வதாகும் என்பது; அதற்குக் கழுவாய் கட்டாயம் உண்டு என்பது; அறுதியிடப்படாத இழப்பீடு அதற்குக் கழுவாயாகும் என்பது; தீங்கிழைத்தவர் அல்லது அவரைச் சார்ந்தவர் இழப்பீட்டைச் செலுத்தப் பொறுப்பானவர் என்பது ஆகிய இந்த நான்கு முக்கிய கூறுகளையும் மனதிற் கொண்டால் ''உரிமைத் தீங்கின்'' இலக்கணத்தை உணர்ந்தவராவோம்.

உரிமைத் தீங்கு (Tort), குற்றம் (Crime), ஒப்பந்த முறிவு (Breach of Contract) இவைகளுக்குள்ள வேறுபாடுகளைத் தெளிவாகக் கூறினல், உரிமைத் தீங்கின் தனித் தன்மை எளிதில் புலனுகும்.

### உரிமைத் தீங்கிற்கும் (Tort), குற்றத்திற்கும் (Crime) உள்ள வேறுபாடுகள்

தண்டிக்கத்தக்க செயலைக் குற்றம் என்று கூறுகிறேம். ஒருவருடைய உரிமைக்கு ஊறு விளைந்தால் அஃது உரிமைத் தீங்காகவோ, குற்றமாகவோ ஆகிறது. இருவகைச் செயல்களிலும் உரிமைக்கு விளையும் ஊறு பொதுவானதேயாகும். இருப்பினும், இவைகளுக்குச் சட்டம் அளிக்கும் நிவாரணத்தில் வேறுபாடு உண்டு.

தீங்கிழைத்தவர்மீது தொடரப்படும் வழக்கு விளைந்த கேட்டிற்கான நட்ட ஈடு பெறுவதற்கேயாகும். ஆனல், குற்ற வழக்கில் குற்றவாளி தண்டிக்கப்படுகிருர். எனவே, உரிமைத் தீங்கினல் எழும் வழக்கின் நோக்கம் வேறு, குற்ற வழக்கின் நோக்கம் வேறு.

தனி நபரின் உரிமையைப் பாதிக்கும் செயலாகவே உரிமைத் தீங்கு கருதப்படுகிறது; ஆதலால் நட்ட ஈடு கோரி அதைப் பெறுவது தீங்கிழைக்கப்பட்டவரின் அலுவலாக அமைகிறது. குற்றமான செயல் சமூகத்திற்கு எதிரானது எனக் கருதப்படுவதால், பெரும்பாலும் அரசாங்கமே குற்றவாளிகளுக்கு எதிராக வழக்கிட்டு அவர்களைத் தண்டனை பெறச் செய்கிறது.

உரிமை முறை மன்றங்களே (Civil Courts) நட்ட ஈடு கோரும் வழக்குகளைத் தீர்க்கின்றன. குற்ற முறை மன்றங்கள் (Criminal Courts) குற்ற வழக்குகளை விசாரிக்கின்றன.

திருடுதல் (Theft), ஏமாற்றுதல் (Cheating), அவதூறு (Defamation) போன்ற செயல்கள் உரிமைத் தீங்குகளாக இருப்ப தோடு, குற்றங்களாகவும் இருக்கின்றன. குற்றவாளி தண்டிக்கப் பட்டாலும், குற்றத்தால் விளைந்த இழப்பிற்கு ஈடு செய்யும் பொறுப்பையும் உடையவராகின்றார்.

சில வேளைகளில் ஒரு செயல் குற்றமாக மட்டும் இருப்ப துண்டு. பொதுமக்களுக்கான நெடுஞ்சாலையைத் தடுத்துத் தொல்லை (Public Nuisance) விளைவிக்கும் செயல் குற்றமானது; ஆனால், அஃது உரிமைத் தீங்காவது இல்லை. அந்தத் தொல்லை யால் தனிப்பட்ட ஒருவர், பொதுமக்களுக்கில்லாத ஒரு தனி வகையான நட்டம் அடைந்தால் மட்டுமே, நட்ட ஈடு கோரி வழக் கிடலாம். "கள்ள நாணயம் அடித்தல்" போன்ற குற்றங்கள் உரிமைத் தீங்குகள் அல்ல.

இம்மாதிரியே, சில உரிமைத் தீங்குகள் குற்றங்களாவதில்லை. ஒருவர் நம் நிலத்தில் அத்துமீறி நுழைந்தால் அஃது "அத்து மீறல்" (Trespass) என்ற தீங்காகும். ஆனால், அவ்வாறு நுழைந் தது தீய எண்ணங்கொண்டு சட்ட விரோதமான செயல்களைச் செய்யும் நோக்கத்துடன் நுழைந்தால்தான் அது குற்றமாகிறது. வசதியுரிமைக்கு (Easements) எதிரான பல தீங்குகள் குற்றங்கள் ஆவதில்லை.

இவ்வாறு, உரிமைத் தீங்குகளும், குற்றங்களும் வேறுபட் டிருக்கின்றன.

### உரிமைத் தீங்கிற்கும் (Tort), ஒப்பந்த முறிவுக்கும் (Breach of Contract) உள்ள வேறுபாடுகள்

ஒருவருடன் செய்து கொண்ட ஒப்பந்தத்தை (Contract) மீறி நடந்தவர் அந்த ஒப்பந்த மீறலால் மற்றவருக்கு விளைந்த நட்டத் திற்கு ஈடு செய்யும் பொறுப்புடையவர். ஆனால், தீங்கிழைத்தவர் கொடுக்க வேண்டிய நட்ட ஈட்டின் தன்மைக்கும், ஒப்பந்த மீறிய வர் அளிக்க வேண்டிய நட்ட ஈட்டின் தன்மைக்கும் வேறுபாடு உண்டு.

உண்மையில் விளைந்த பொருள் நட்டத்தின் அளவிற் கேற்ப அறுதியிடப்படுவதாகும் (Liquidated damages) ஒப்பந்த முறிவிற் கான இழப்பீடு. உரிமைத் தீங்கிற்கான இழப்பீடு தீங்கால் விளைந்த நட்டத்தைத் தவிர இதர சூழ்நிலைகளையும் ஆய்ந்தபின்,

நீதிமன்றத்தால் உறுதி செய்யப்படுவது ; விளைந்த பொருள் நட்டத்தை யொட்டிமட்டும் அறுதி செய்யப்படுவதில்லை. எனவே, அஃது அறுதியிடப்படாத இழப்பீடு (Unliquidated damages ஆகிறது.

உரிமைத் தீங்கால் தோன்றும் வழக்கில், தீங்கிழைக்கப்பட்ட வருக்குப் பொருள் நட்டம் ஏதும் இல்லையெனினுங்கூட, செய்யப் பட்ட தீங்கிற்குத் தீங்குத் தீர்வையாக, இழப்பீடு அளிக்கப்படு கிறது. ஒப்பந்த முறிவு வழக்குகளில் உண்மையில் ஏற்பட்ட பொருள் நட்டத்தைச் சரி செய்வதற்கே நட்ட ஈடு தரப்படுகிறது திருமண ஒப்பந்த முறிவு, தகுந்த காரணமின்றிக் காசோலையை (cheque) மதிக்காமல் இருத்தல், இந்த இரண்டு வகை ஒப்பந்த முறிவுகளுக்குமட்டும், வாதி அடைந்த மன வேதனை, தன்மதிப் பிழப்பு, இவற்றையும் கவனித்து இழப்பீடு அளிக்கப்படுகிறது.

சில வேளைகளில், ஒரே செயல் ஒப்பந்த முறிவாகவும், உரிமைத் தீங்காகவும் இருக்கலாம்.

இரயில்வேக் கம்பெனியாரின் கவனமின்மையான செயலால், பயணச் சீட்டுப் பெற்றுப் பிரயாணம் செய்யும் ஒருவருக்குக் காயம் ஏற்பட்டால், அதற்குக் கொடுக்கப்பட வேண்டிய நட்ட ஈடு, ஒப்பந்தப்படியும் உண்டு, உரிமைத் தீங்கின் அடிப்படையி லும் உண்டு.

தீங்கியல் சட்டத்தில் சம்பந்தப்பட்ட உரிமைகளும் கடமை களும், சட்டத்தால் தோற்றுவிக்கப்பட்டுச் சட்டத்தால் ஏற்கப் படுபவை. ஒப்பந்தச் சட்டத்தில் உள்ள உரிமைகளும் கடமை களும், ஒப்பந்தத்தால் தோற்றுவிக்கப்பட்டுச் சட்டத்தால் ஏற்கப் படுவன. ஒப்பந்தத்தால் விளையும் உரிமை, அந்த ஒப்பந்தம் செய்து கொண்டவர்களுக்குள் மட்டுமே அமுல் நடத்தத்தக்கது. சட்டத்தால் தோன்றும் உரிமைகள் எல்லோருக்கும் பொது வானவை.

இவ்வாறு, உரிமைத் தீங்கும், ஒப்பந்த முறிவும் வேறு பாடுடையவை.

### "உரிமைத் தீங்கு" என்பதைத் "தீங்கு" என்றே குறிப்பிடலாம்

பிறர் உரிமைக்கு ஊறுசெய்தல் தீங்கு ; தம் கடமையில் தவறு வதால் கேடு விளைவித்தல் தீங்கு. தீங்கிழைத்தவர் தீங்கிற்கான இழப்பீட்டை அளித்தல் தீங்கு தீரும் முறையாகும். இவ்விதத் தீங்குகளே, "உரிமைத் தீங்குகள்" ஆகின்றன.

ஒழுக்க நூல்கள் தீமை என விலக்குபவை எல்லாம் சட்டப் படி தீங்குகள் ஆவதில்லை. சட்ட உரிமைகளுக்கு விளையும் தீங்கு

களே சட்டப்படி 'தீங்குகள்' ஆகின்றன. "உரிமைத் தீங்குக"ளே சட்டத் தீங்குகள். எனவே, சட்ட நூலில் 'தீங்கு' என்று கூறினல் அது சட்டப்படியான தீங்கையே,-"உரிமைத் தீங்கை"யே-குறிப் பிடுகின்றது.

ஆதலால், இனி, 'உரிமைத் தீங்கு' என்று ஒவ்வோர் இடத் திலும் குறிப்பிடாமல் 'தீங்கு' என்றே கூறுதல் பொருந்தும். ஒரு செயலை "உரிமைத் தீங்கான செயல்" என்று கூறுவதை விடத் 'தீங்கான செயல்' என்று குறிப்பிடுவது மொழிநயத்திற்கும் இயைந்ததாகும். எனவேதான், உரிமைத் தீங்குகள் பற்றிய சட்டத்தைத் "தீங்கியல் சட்டம்" (Law of Torts) என்று அழைக்கி ேரும்.

இந்நூலில் 'தீங்கு' என்ற சொல் "உரிமைத் தீங்கை"க் குறித்தே வழங்கப்படுகிறது என்பதை நாம் நினைவிற் கொள்ள வேண்டும்.

---

## 6. தீங்கியல் சட்டத்தின் அடிப்படைக் கொள்கைகள்

*உரிமை மீறப்பட்டால் சட்டப்படியான இழப்பும் அதில் அடங்கி இருக்கிறது - நட்டமில்லாத் தீங்கு (Injuria sine damno), தீங்கினல் விளையா நட்டம் (Damnum sine injuria)-தீங்கெண்ணம் (Malice) என்பது என்ன? - தீய நோக்கமும், தீங்குச் செயலும்- இழப்பிற்கு ஈடு செய்வதே சட்டத்தின் குறிக்கோள்*

ஒருவரால் பிறருக்கு விளைந்த தீங்கிற்குத் தீங்கிழைத்தவர் இழப்பிடு கொடுக்கவேண்டுமெனச் சட்டம் விதிக்கின்றது என்பதைக் கண்டோம். ஒருவரது உரிமைக்கு ஊறு செய்யப்பட்டால் அதனுல் "இழப்பு" (நட்டம்) (damage) விளைவதாகச் சட்டம் கொள்கிறது. சட்டப்படியான இழப்பு (Legal damage) என்ருல், பண நட்டமோ அல்லது பொருள் சேதமோ விளைந்திருக்க வேண்டுமென்ற கட்டாயம் இல்லை. உரிமைக்கு ஊறு செய்யப்பட்டால் சட்டப்படியான இழப்பும் விளைகிறது என்பது சட்டத்தின் கொள்கை. இந்த இழப்பிற்கு ஈடு செய்யும் பொறுப்புத் தீங்கிழைத்தவரைச் சேருகின்றது.

### உரிமை மீறப்பட்டால் சட்டப்படியான இழப்பும் அதில் அடங்கியிருக்கிறது

ஒருவர் உடலைத் தாக்கிக் காயம் விளைக்கும் செயலைத் தீங்கு என்று கூறுகிருேம். ஒருவர் கையிலுள்ள பொருளை வன்முறையில் பறித்துக்கொள்வதும் தீங்கேயாகும். தாக்கப்பட்டவருக்கு உடலில் காயம் இருக்கிறது. அதனுல் அவர் வாதனைப் படுகிருர், பொருளைப் பறிகொடுத்தவர் பொருளை இழந்து நட்டப்படுகிருர். எனவே, இத்தீங்குகளால் விளைந்த கேடு எளிதில் நன்கு புலனுகிறது; அதற்கான நட்ட ஈடு அளிக்கப்படுகிறது.

ஒருவர் நிலத்தில் மற்ருெருவர் அத்துமீறி நுழைந்து அதன் மீது நடந்து செல்கிருர். அத்துமீறி நுழைதல் (Trespass) தீங்கான செயலாகும். ஆனுல் நிலச் சொந்தக்காரருக்கு எவ்விதப் பொருள் நட்டமும் அத்துமீறி நடந்து சென்ற செயலால் விளையவில்லை. நிலத்தின்மீது ஒரு முறை நடந்ததால் எந்த நட்டமும் ஏற்படுவதில்லை. இப்பொழுது சட்டம் நிவாரணம் அளிக்கிறதா என்பது வினு.

எவரும் தம் அனுமதியின்றி நிலத்தில் நுழையாமல் தடுக்கும் உரிமை நிலத்தை உடையவருக்குச் சட்டப்படி உண்டு. எனவே, அவரது அனுமதியின்றி அவர் நிலத்தில் அத்துமீறி நடந்து சென்ற செயல் அவருடைய சொத்துரிமைக்கு ஊறு விளைக்கும்

செயலாகிறது. உரிமைக்கு ஊறு செய்யப்பட்டாலும், பண நட்டமோ, பொருள் சேதமோ விளையவில்லை என்ற காரணத்தால் நிலத்தை உடையவருக்குக் நிவாரணம் இல்லை என்று கூறுவது பொருந்துமா?

"உரிமைக்கு ஊறு விளைந்தால் அதற்கான உய்தி உண்டு" என்ற கொள்கையை மேலே கண்டோம். அத்துமீறி நடந்த செயலால் நிலத்தை உடையவரின் உரிமைக்கு ஊறு விளைந்தது என்பதில் ஐயமில்லை. எனில், அதற்கு உய்தி வேண்டுமே? எனவே, அத்துமீறிய (Trespass) தீங்கைச் செய்தவர் அதற்கான இழப்பீட்டை (damage)க் கொடுக்கவேண்டுமென்று சட்டம் விதிக்கிறது. பண நட்டமோ, பொருள் சேதமோ ஏற்படாததால் நட்ட ஈட்டுத் தொகை பெயரளவில் (nominal) மட்டுமே அளிக்கப் படலாம். எனினும், தீங்கீடாகச் சிறிய தொகையையாவது தீங் கிழைத்தவர் நிலத்தை உடையவருக்குக் கட்டாயம் கொடுத்தே யாக வேண்டும்.

சட்டத்தின் கொள்கை என்ன? ஒருவரின் உரிமைக்கு ஊறு (violation of a right) செய்யப்பட்டால், அதில் சட்டப்படியான இழப்பும் (legal damage) அடங்கியிருக்கிறது. இந்த இழப்பு, பண நட்டமாகவோ பொருள் சேதமாகவோ இருக்கவேண்டும் என்பதில்லை. இந்த இழப்பிற்கு ஈடு செய்யும் பொறுப்பு உரிமைக்கு ஊறு விளைவித்தவருக்கு உண்டு.

Ashby V. White [(1702)—2 L D. Raym. 938] என்ற பெயர் பெற்ற வழக்கில் ஹோல்ட்(Holt C. J.) என்ற உயர்நீதிபதி மேலே கூறப்பட்ட கொள்கையை வலியுறுத்திப் பின்வருமாறு விளக்கி யிருக்கிறார்:

"ஒருவருக்கு உரிமை இருக்கிறது என்றால் உரிமையைக் காப்பாற்றுவதற்கும் நிலைநிறுத்துவதற்கும் ஏற்ற வகை வேண் டும். அந்த உரிமைக்கு ஊறு விளைந்தும் அதற்கான நிவாரணம் இல்லை யெனில், உரிமை இல்லை என்பதே பொருள். நிலை நிறுத்துவதற்கு வழியில்லாத உரிமை உண்டு என்று கருதுவது பயனற்ற கொள்கையாகும்.

"ஒருவருடைய உரிமைக்கு ஊறு விளைந்ததால் அவருக்கு ஒரு காசுகூட உண்மையில் நட்டம் ஏற்படாமல் இருக்கலாம். எனினும் சட்டப்படியான இழப்பு (Legal damage) அவருக்கு நேரிட்டதாகவே சட்டம் கருதுகிறது. ஒருவரைப்பற்றி மற்றொருவர் அவதூறாகப் பேசியதன் விளைவாக, முன்னவருக்குச் செல்லாக் காசுகூட நட்ட மில்லை யெனினும், இழித்துப் பேசியவர் இழப்பீடு கொடுக்க வேண்டியவர்தாம். ஒருவர் மற்றொருவரை அறைந்தார் எனில் அறைபட்டவருக்குச் சிறிதளவு களிம்புகூடச் செலவில்லையெனி

னும் அவரது உடலுரிமைக்கு ஊறு செய்யப்பட்டதால் அவர் நட்ட ஈடு பெறுகின்ருர்...........''

இந்த வழக்கில், ஒரு தேர்தல் அதிகாரி தீய எண்ணத்துடன் ஒரு வாக்காளரின் வாக்கைப் பதிவு செய்ய மறுத்துவிட்டார். அதிகாரியின் இச்செயல் வாக்காளரின் வாக்களிக்கும் உரிமைக்கு முரணுன செயலானதால் அதிகாரிமீது வழக்கிடப்பட்டது. வாக்காளர் யாருக்குத் தமது வாக்கை அளிக்க வேண்டும் எனக் கருதியிருந்தாரோ அவரே தேர்தலில் வெற்றி பெற்றிருந்தார். எனவே, அதிகாரியின் தீங்கான செயலால் வாக்காளருக்கு நட்டம் ஏதும் ஏற்படவில்லை என்று எதிர்வாதம் செய்யப்பட்டது. அதிகாரி செய்தது வாக்காளரது உரிமைக்கு ஊறு விளைவிக்கும் செயல். எனவே தீங்கான செயல். அதனல் நட்டம் விளைந்தாலும், விளையாவிட்டாலும் அவர் வாக்காளருக்கு நட்ட ஈடு கொடுக்க வேண்டியதுதான் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

இந்தத் தீர்ப்புக்குப் பின், "உரிமைக்கு ஊறு விளைந்தால் அதற்கு மாற்று உண்டு" என்ற கொள்கை ஆங்கிலச் சட்ட இயலில் நிலைத்த இடம் பெற்றது. "தீர்வு இல்லாத தீங்கு இல்லை" என்ற அடிப்படையிலேயே சட்டம் இன்றும் இயங்குகிறது.

இந்தக் கொள்கையைப் பின்பற்றிச் சென்னை உயர்நீதிமன்றம் அண்மையில் ஒரு தீர்ப்புக் கூறியது.

வாதிக்குச் சொந்தமான லாரிக்கு வரிகட்டவேண்டும் என்று கூறும் அறிக்கை சாலைப்போக்கு வரத்து அதிகாரியால் விடப்பட்டிருந்தது. அந்த அறிக்கைப்படி, அறிக்கையை வாதி பெற்ற தேதியிலிருந்து பதினைந்து நாட்களுக்குள் வரி கட்டப்படவேண்டும். அந்தக் கெடு முடிவதற்குள்ளாகவே, மதுரை மாவட்டம் நத்தம் போலீசு அதிகாரி வரியைக் கட்டவில்லை என்பதற்காக அந்தலாரியைப் பிடித்துக்கொண்டு போய்ப் போலீசு நிலையத்தில் மூன்று நாட்கள் நிறுத்தி வைத்துவிட்டார். வரியைக் கட்டிய பின்னரே லாரி விடப்பட்டது. வரி கட்டுவதற்கான கெடு முடிவதற்கு முன்னமேயே லாரியை எடுத்துச் சென்றது முறையற்ற, தீங்கான செயல் என்று கூறி லாரியின் சொந்தக்காரர் பீர்முகமது என்பவர் போலீசு அதிகாரியான பெருமாள் செட்டியார்மீது வழக்குத் தொடர்ந்து அதற்கான நட்ட ஈடு கோரினர். லாரி ஓடாமல் நிறுத்தப்பட்டதால் தமக்குப் பொருள் நட்டம் விளைந்தது என்பதை மெய்ப்பிக்க வாதி எந்தச் சாட்சியமும் விடவில்லை.

இரண்டு உயர்நீதி மன்ற நீதிபதிகள் அப்பீலில் இந்த வழக்கை ஆய்ந்து போலீசு அதிகாரி லாரியை எடுத்துச் சென்றது வாதியின் பொருளுரிமையைப் பாதிக்கும் செயல் என்று

கண்டனர். இதனுல் வாதிக்குப் பொருள் நட்டம் ஏதும் விளேய வில்லே எனினும், வாதியின் பொருளுரிமைக்கு ஊறு விளேவிக்கப் பட்டதால் அதற்கான உய்தி இருக்கவேண்டும் என்ற அடிப்படை விதியை எடுத்துக்காட்டிப் பெயரளவு நட்ட ஈடாக (Nominal damages) ஒரு ரூபாயைப் போலீசு அதிகாரி வாதிக்குக் கொடுக்க வேண்டும் என்று தீர்ப்புக் கூறினர்.

இந்த வழக்கின் பெயர் Perumal Chettiar Vs. Peer Mohamad (I. L. R. 1962 Madras 195 ) என்பது. பொருள் நட்டம் விளேந் தாலும் விளேயாவிட்டாலும் தீங்கான செயலுக்கு இழப்பீடு அளிக் கப்பட வேண்டும் என்ற விதியை எடுத்துக் காட்டுவதாகும் இந்தத் தீர்ப்பு.

பொருள்சேதம், பண இழப்பு போன்ற நட்டம் விளேவிக்காத தீங்குச் செயல்களே, "நட்டமில்லாத் தீங்கு" (Injuria sine damno) என்று கூறுகிருேம். நட்டமற்ற தீங்கிற்கும் நட்டஈடு உண்டு.

"நட்டமில்லாத் தீங்கு" விளேவதுபோல் "தீங்கில்லா நட்ட மும்" (Damnum sine injuria) உண்டு.

எனக்குப் போட்டியாக என் பகைவர் வாணிபத்தை நடத்து கிருர். அதனுல் என் வாணிபத்தில் நான் நட்டமடையலாம். ஆனுல், எனக்கு நட்டம் விளேவித்ததைத் தீங்கு என்று சொல் லுவது தகாது.

வாணிபம் நடத்துவதற்கு எனக்கு உரிமை இருப்பதுபோல், என் பகைவருக்கும் உரிமை இருக்கிறது. அவர் வாணிபம் நடத்தியது சட்டப்படியான செயலேயாகும்; தீங்கான செயல் அன்று. வியாபாரப் போட்டியால் எனக்கு ஏற்பட்ட நட்டம், தீங்கான செயலால் விளேந்த நட்டமன்று. எனவே அதைத் "தீங்கில்லா நட்டம்" என்று குறிப்பிடுகிருேம். தீங்கில் விளேயாத நட்டத்திற்குச் சட்டம் நிவாரணம் ஏதும் அளிப்பது இல்லே. விளேந்த நட்டத்திற்கு ஈடு அளிக்கப்படுவது இல்லே.

இந்தவிதி 15ஆம் நூற்றுண்டில் Gloucester Grammar School என்ற வழக்கில் தெளிவாகக் கூறப்பட்டது. போட்டியாக மற்ருெரு பள்ளிக்கூடம் நடத்தப்பட்டதால் தாம் நடத்தும் பள்ளியிற் சேரும் மாணவர்களின் எண்ணிக்கை குறைந்து, அதனுல் தமக்கு வரு மானம் அருகி நட்டம் விளேந்ததாகக் கூறி வாதி வழக்கிட்டார். போட்டியாகப் பள்ளி நடத்துவது எவருடைய உரிமைக்கும் ஊறு விளேவிக்காத, தீங்கற்ற செயல் என்றும், எனவே, வாதிக்கு விளேந்த நட்டம் "தீங்கினுல் விளேயா. நட்டம்" என்றும், அதனுல் வாதிக்கு நட்டஈடு கிடைக்கத்தக்கதில்லே என்றும், தீர்ப்பு அளிக்கப்பட்டது.

மற்ருெரு வழக்கு : வாதி தம் நிலத்திலுள்ள நீரோட்டத்தைப் பயன்படுத்தி ஓர் ஆலையை ஓட்டிவந்தார். அண்டை நிலத்துக் காரரான எதிர்வாதி தம் நிலத்தில் பெரிய கிணறு தோண்டவே, அடி நிலத்திலுள்ள கசிவுநீர் கிணற்றில் வடிந்ததால் வாதி நிலத்தில் ஓடிய நீரோட்டம் நின்றுவிட்டது. வாதியால் ஆலையை ஓட்ட முடியவில்லை. வாதி தொடர்ந்த வழக்கில் வாதிக்கு விளைந்த நட்டம் தீங்கில் விளையாத நட்டம் என்றும், எனவே, நட்டஈடு கிடையாது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. எதிர்வாதி தம் நிலத்தில் கிணறு தோண்டியது வாதியின் உரிமையை எவ்விதத்திலும் மீருத செயல். ஆதலால் வாதிக்கு ஏற்பட்ட நட்டம் "தீங்கில்லா நட்டம்" என்பது தீர்ப்பு. [Chasemore V. Richards (1859) 7. H. L. C. 349.]

எனவே, ஒருவரால் மற்ருெருவருக்கு நட்டம் அல்லது கேடு விளைந்தது என்பதை மட்டும் வைத்துச் சட்டம் நிவாரணம் அளிப்பது இல்லை. விளைந்த கேடு தீங்கான செயலின் பயனுய் விளைந்ததா என்பதைச் சட்டம் கவனிக்கிறது.

செய்யப்படும் தீங்குகளுக்கெல்லாம் நிவாரணம் உண்டு; ஆனுல் விளையும் கேடுகளுக்கெல்லாம் நிவாரணம் இல்லை. தீங்கால் விளைந்த கேட்டிற்கே நட்டஈடு அளிக்கப்படுகிறது.

## தீங்கெண்ணம் (Malice) என்பது என்ன ?

பொதுவாகக் குற்றம் செய்த ஒருவரைத் தண்டிப்பதற்கு முன் அவர் அந்தக் குற்றத்தைவேண்டுமென்றே, கருதியே, செய்தாரா என்பதைச் சட்டம் ஆராய்கின்றது. குற்றமான எண்ணத்துடன் செய்யப்படும் செயல்களுக்கே குற்றவாளி பொறுப்பாகின்ருர்.

ஒரு திருமண விட்டிலிருந்து வெளியே வரும்போது அங்கிருந்த மற்ருெருவரது குடையை என் குடை எனத் தவருக எண்ணி எடுத்துச் செல்கிறேன். இப்போது என்மீது திருட்டுக் குற்றம் சாட்டப்படுவதில்லை. ஏனெனில், நான் திருடவேண்டும் என்ற எண்ணத்துடன் குடையை எடுக்கவில்லை. என் குடை என்ற தவருன எண்ணத்தால்தான் அதை எடுத்தேன். திருடவேண்டும் என்ற குற்ற எண்ணம் என் மனதில் இன்றி அந்தக் குடையை எடுத்ததால் அது திருட்டுக் குற்றம் ஆவதில்லை. ஒரு பொருள் மற்றவருடையதாக இருந்தாலும் அதை எடுத்துக் கொள்ளவேண்டும் என்ற குற்ற எண்ணம் எனக்கு இருந்தால்தான், நான் செய்த செயல் திருட்டுக் குற்றமாகும். இந்தக் குற்ற எண்ணத்தை ஆங்கிலத்தில் Guilty mind என்பார்கள். இலத்தீன் மொழியில் இது Mens rea எனப்படும்.

இதுபோன்றே, தீங்கெண்ணத்துடன் செய்யப்படும் செயல்கள்தாம் "தீங்குகள்" ஆகின்றனவா? என்ற வினு எழுகின்றது.

தீங்கெண்ணத்தை ஆங்கிலத்தில் Malice என்பார்கள்.

"தீங்கெண்ணம்" என்ருல் "வன்மம்", "பகைமை" என்று பொதுவாகப் பொருள் கொள்ளுகிருேம். சட்டத்தில் இச்சொல் குறிக்கும் பொருள் வேறு :

(1) நியாயமான காரணமின்றி வேண்டுமென்றே தீங்கிழைத்தல்.

(2) நேர்மையற்ற நோக்கத்துடன் (Improper motive) ஒரு செயலேச் செய்தல்.

இந்த இரண்டு பொருள்களிலும் "தீங்கெண்ணம்" (Malice) என்ற சொல் சட்டத்தில் பயன்படுகிறது.

நியாயமான காரணமின்றி வேண்டுமென்று தீங்கிழைத்தலேச் சட்டம் தடை செய்கிறது. இதில் ஐயப்பாடு இல்லே.

இரண்டாவதாகக் கூறப்படும் நேர்மையற்ற நோக்கம் (Improper motive) ஒரு செயலின் தீங்குத் தன்மையை உறுதி செய்வதற்கு எவ்வாறு பயன்படுகிறது என்பதை நாம் காணவேண்டும்.

## தீய நோக்கமும், தீங்குச் செயலும்

எது கைகூட வேண்டுமென்று எதிர்பார்த்து, அல்லது எதைக் குறிக்கோளாகக் கொண்டு ஒரு செயலேச் செய்கிருேமோ, அது அச் செயலுக்கான நோக்கமாகும். ஒரு செயலுக்கான தூண்டுகோலாக "நோக்கம்" அமைகிறது. செயலின் காரணத்தைக் காட்டுவது நோக்கம்.

சட்ட முரணுன செயல் நல்ல நோக்கத்துடன் செய்யப்பட்டாலும், அதைச் சட்டம் அனுமதிப்பதில்லே. சட்டப்படியான ஒரு செயல் தீயநோக்குடன் செய்யப்படுகிறது என்பதால் அது சட்ட முரணுன செயல் ஆகிவிடுவதில்லே. செயலின் தன்மையை மட்டுமே சட்டம் ஆராய்கின்றது. அச்செயல் ஏன் செய்யப்பட்டது என்பது பற்றிச் சட்டத்திற்கு அக்கறையில்லே. இதுவே பொது விதி.

சட்டத்தின் கொள்கை இவ்வாறு இல்லாவிடில் விரும்பத்தகாத வகையில் விளேவுகள் நேரிடலாம். விளேக்கப்படும் தீங்குகளுக்கெல்லாம் விநோதமான சமாதானங்கள் கூறப்படலாம். 'எனது பசியைத் தீர்த்துக்கொள்வதற்கே அடுத்தவர் பணத்தை எடுத்தேன்" என்று கூற முற்படுவார் ஒருவர். "கோவில் கட்டுவதற்கென்ற நல்ல நோக்கத்துடன் கொள்ளேயடித்தேன்"

என்பார் மற்ருெருவர். எனவே ஒரு செயல் நல்லதா, தீயதா என்று உறுதி செய்யப்படுவது அதன் தன்மையை வைத்துத்தான்; அதைச் செய்பவரின் நோக்கத்தை வைத்தன்று.

ஒருவர் தமது நிலத்தை அண்டை நிலக்காரருக்கு விற்க முயன்ருர். ஆனல் அடுத்த நிலக்காரர் இவர் கூறும் விலை கொடுத்து அதை வாங்க இசையவில்லை. அடுத்த நிலத்தில் பெரிய கிணறு ஒன்று இருந்தது. அந்தக் கிணற்றை வற்றும்படி செய்தால் தம் நிலத்தை அடுத்தவர் வாங்கும் அவசியம் ஏற்படும் என்ற எண்ணத்தால் தம்முடைய நிலத்தில் பல பள்ளங்களைத் தோண்டி அடிநிலக் கசிவுநீரை இப் பள்ளங்களில் வடிய வைத்தார். இதனல் அடுத்த நிலக் கிணற்று நீர் வற்றியது. அடுத்த நிலக்காரருக்கு நட்டம் விளைந்தது. ஆனல் அடுத்த நிலக்காரர் இட்ட வழக்கில் அவர் வெற்றிபெறவில்லை.

அடிநிலக் கசிவுநீரைப் பொறுத்து எவரும் உரிமை கொண்டாட முடியாது. எதிர்வாதி தம்முடைய நிலத்தில் பள்ளங்கள் தோண்டுவதற்கு உரிமையுடையவர். இந்தப் பள்ளங்களில் அடிநிலக் கசிவுநீர் வடிந்ததால் வாதியின் கிணற்றிலுள்ள நீர் வற்றியது என்பது உண்மைதான். இருப்பினும், எதிர்வாதி அவர் நிலத்தில் பள்ளங்களைத் தோண்டிய செயல் அவர் உரிமைக்கு உட்பட்ட செயல். அதைத் தடுப்பதற்கு வாதிக்கு அதிகாரம் இல்லை. உரிமைக்கு உட்பட்ட செயல், தீய நோக்குடன் செய்யப்பட்டது என்பதற்காக, அதைத் தீங்கான செயல் என்று சட்டம் கொள்ள முடியாது. இதனல், வாதிக்கு விளைந்த நட்டம் தீங்கில்லா நட்டமேயாகும் என்ற தீர்ப்பின் அடிப்படையில் வாதியின் வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. [Bradford Corporation V. Pickles. (1895) A. C. 587.]

இந்த வழக்கில் தீர்ப்பளித்த Lord Macnaghten என்ற நீதிபதி இவ்வாறு கொள்கையை விளக்கியுள்ளார்:—

"சட்டம் கவனிப்பது செயலைத்தான். செயலுக்கான நோக்கத்தை அன்று. தீங்கற்ற ஒரு செயல், கண்டிக்கத்தக்க நோக்கத்துடன் செய்யப்பட்டது என்பதால், தீங்காக மாறிவிடுவதில்லை. செயலுக்கான நோக்கம் அதன் தன்மையைப் பாதிப்பது இல்லை."

சில வகைத் தீங்குகளுக்கு மட்டும் நோக்கத்தைச் சட்டம் கவனிக்கிறது.

குற்றம் செய்தவர் தண்டனை பெறவேண்டும் என்ற நோக்கத்துடன் அவர்மீது குற்ற வழக்கிடுதல் நேர் நோக்குடன் செய்யும் செயலாகும். ஆனல், அவர்மீது வழக்கிட்டு அவரிடமிருந்து பொருள் பறிக்க வேண்டும் என்ற நோக்கோடு குற்ற வழக்கிடல்,

தீநோக்குடன் குற்ற வழக்கிடுதல் (Malicious prosecution) என்ற தீங்காகிறது. சட்டம் ஒப்பாத நோக்கம் தீ நோக்கமாகிறது. தொல்லை விளைத்தல் (Nuisance) சதி செய்தல் (Conspiracy) முதலிய சிலவகைத் தீங்குகளை ஆராயும்போது அச் செயல்கள் தீ நோக்குடன் செய்யப்பட்டனவா என்பதைச் சில வேளைகளில் நாம் பார்க்கிறோம்.

ஆனால், பொதுவாகச் செய்யப்பட்ட செயல் தீங்கானதா என்பதைத்தான் சட்டம் கவனிக்கிறதே தவிர, அஃது ஏன் செய்யப்பட்டது என்பதைக் கவனிப்பது இல்லை.

## தீங்கிழைத்தவரைத் தண்டிப்பதன்று தீங்கியல் சட்டம்; இழப்பிற்கு ஈடு செய்வதே சட்டத்தின் குறிக்கோள்

தீங்கியல் சட்டத்தின் குறிக்கோள் தீங்கிழைக்கப்பட்டவருக்கு ஈடு செய்ய வேண்டும் என்பதேயாகும். தீங்கிழைத்தவரைத் தண்டிக்க வேண்டும் என்பதன்று.

குற்றவியல் சட்டத்தில் குற்றவாளிகள் தண்டிக்கப்படுகின்றனர். அவர்கள் செய்த குற்றத்திற்குத் தக்கபடி தண்டனையும் மாறுபடுகிறது. கையால் அடித்தவருக்கு அபராதம், கத்தியால் குத்தியவருக்குக் கடுஞ்சிறைத் தண்டனை என்று குற்றத்தின் தன்மைக்கேற்பத் தண்டனை அமைகின்றது. ஆனால் தீங்கியல் சட்டத்தில் செய்யப்பட்ட தீங்கைவிட விளைந்த நட்டமே முக்கியமாகக் கவனிக்கப்படுகிறது.

தாம் ஓட்டிச் செல்லும் காரை இன்னொருவர் மீது கவனமின்மையால் மோதிக் காயம் விளைவிக்கிறார் ஒருவர். காயம் அடைந்தவர் இரண்டு வாரங்கள் வைத்தியசாலையில் தங்கித் தமது காயத்தைக் குணப்படுத்துகிறார் என வைப்போம். அவர் சாதாரணத் தொழிலாளியாக இருந்தால் அவருக்கு விளையும் சம்பள நட்டம் குறைவாகவே இருக்கும்; அவர் உயர்ந்த வருமானமுள்ளவராக இருந்தால் அவருக்கு விளையும் ஊதிய நட்டம் அதிகமாக இருக்கும். காரை ஓட்டியவர் கொடுக்கவேண்டிய நட்ட ஈட்டுத் தொகை காயம் அடைந்தவருக்கு விளைந்த உண்மையான நட்டத்தைப் பொறுத்ததாகும். எனவே, காயமடைந்தவர் சிறு தொழிலாளியாக இருந்தால் குறைந்த நட்டஈடும், உயர்ந்த ஊதியம் பெறுபவராக இருந்தால் அதிகமான நட்டஈடும் கொடுக்க வேண்டியதாக இருக்கிறது. கவனமின்மையான செயல் ஒன்றுதான். இருப்பினும், அந்தத் தீங்கால் விளைந்த நட்டத்தின் அளவைப் பொறுத்தே நட்ட ஈட்டின் அளவும் அறுதியிடப்படுகிறது. இதில் இருந்து தெரிவது என்ன?

நட்ட ஈட்டின் அளவு தீங்கின் தன்மைக்கேற்ப அமைவ தில்லை; விளைந்த நட்டத்திற்கேற்ப அஃது அளவிடப்படுகிறது. கண்ணிமைப்பொழுது கவனமின்மையாக இருந்த ஒருவர், அதனுல் விளையும் நட்டத்திற்கு ஆயிரக்கணக்கில் ஈடு கொடுக்க வேண்டியிருக்கலாம். கவனமின்மை கண்ணிமைப் பொழுது தானே நேர்ந்தது, இதற்கு இவ்வளவு பெரிய நட்ட ஈட்டுத் தொகையா என்று நாம் கருதலாம். ஆனுல் சட்டத்தின் குறிக்கோள் விளைந்த நட்டத்திற்கு ஈடு செய்யவேண்டும் என்பதே யாகும்.

இன்னெருவர்மீது மோதிய காரை ஓட்டியவர் வேலையாளாக இருக்கலாம். ஊதியத்திற்கு வேலை பார்க்கும் அவரால் உயர்ந்த நட்ட ஈட்டுத் தொகையை எவ்வாறு கொடுக்க முடியும்? எனவே சட்டம் அவரின் தலைவரை (எசமானரை). அதற்குப் பொறுப்பாக்கு கிறது. தலைவர் எவ்விதத் தீங்கும் செய்யவில்லை. தாம் செய்ய வேண்டிய வேலையைத் தம் பணியாள் மூலமாகச் செய்கிருர். அதனுல் பணியாள் செய்த தீங்கிற்குத் தலைவரே பொறுப்பாகிருர். இவ்வாறு தலைவருக்கும் பணியாளுக்கும் உள்ள தொடர்பால் விளையும் பொறுப்பை, பகரப் பொறுப்பு (Vicarious Liability) என்று கூறுகிறேம்.

தீங்கிழைக்காத தலைவர்மீது சட்டம் ஏன் நட்ட ஈட்டைக் கொடுக்க வேண்டும் என்ற பொறுப்பைச் சுமத்துகிறது? எப்படி யும் இழைக்கப்பட்ட தீங்கிற்கு ஈடு வேண்டும் என்பதற்காகத் தான்.

ஒருவர் இழைத்த தீங்கால் கேடு விளைந்து விட்டது. விளைந்த கேட்டை மாற்றுவது இயலாது. இனி, அந்தக் கேட் டிற்கு ஈடு செய்யும் பொறுப்பை யார் ஏற்றுக்கொள்வது என்ப தையே சட்டம் உறுதி செய்கிறது. தீங்கிழைத்தவர் அல்லது அவரைச் சார்ந்தவர் தான் அதை ஏற்றுக் கொள்ளவேண்டு மென்று நம் நேர்மையுணர்வு உணர்த்துகிறது. அதையே சட்ட மும் விதிக்கிறது.

இவ்வாறு, விளைந்த தீங்கிலிருந்து விடுதி வேண்டும், இழைக்கப்பட்ட கேட்டிற்கு ஈடு வேண்டும் என்பதே தீங்கியல் சட்டத்தின் குறிக்கோளாக அமைகிறது.

---

# 7. "தீங்கியல்" சட்டமும் அன்றைய அறமுறையும்

"இழைத்த தீங்கிற்கும் ஈடு செய்ய வேண்டும்" என்ற கொள்கை நம் நாட்டில் பண்டைக்காலந்தொட்டு நடைமுறையில் உள்ளதாகும்.

ஆதிகால நீதி நூலான கௌடில்யர் இயற்றிய அர்த்தசாத்திரத்தின் "அறநிலையாட்சி" என்ற பகுதியில் தீங்கிழைத்தோரை ஒறுத்தலும், தீங்கிழைக்கப்பட்டோருக்கு ஈடு செய்தலும் கூறப்படுகின்றன. அவைகளில் சில:

1. திருடியவன் பொருளின் விலையையும், திருட்டுக் குற்றத்திற்குரிய தண்டத்தையும் இறுக்கக் கடவன்.

2. கள்வரால் கவரப்பட்ட பொருள் அறியப்படாமல் இருந்தாலும், திருப்பிக் கொண்டுவருதற்கு இயலாமல் இருந்தாலும் அரசன் தன் பொருளில் இருந்து களவு கொடுத்தவருக்கு ஈடு செய்ய வேண்டும்.

3. கால், கழுத்து இவைகளை முறித்தல் போன்ற குற்றம் செய்தவர்கள் தண்டப்பணம் கொடுப்பதுடன், உடலுக்கு விளைந்த ஊறுபாட்டை மருந்து முதலியவற்றால் தீர்த்துச் செம்மைப்படுத்தும் செலவையும் செலுத்தல் வேண்டும்.

4. ஒப்படைக்கப்பட்ட பொருளைப் பெற்றவர்கள், அப்பொருளை இழந்து உடையவருக்குத் திருப்பிக் கொடுக்க இயல வில்லையெனில், அதற்கான ஈடு செய்தல் வேண்டும்.

5. தம்முடைய கால்நடைகளைப் பிறர் பயிரை மேயும்படி விட்டவர், கேடடைந்த பயிரினால் விளையும் பயனைக் கணக்கிட்டு இரு மடங்கு கொடுக்கவேண்டும்.

இவ்வாறு இன்றைய தீங்கியல் சட்டக் கொள்கைகள் அன்றைய அறமுறையிலும் இடம் பெற்றிருந்தன.

முறை செய்வதிலும் மிக்க விழிப்புடைமை வேண்டும். கவனக் குறைவால் ஈடு செய்ய முடியாத தவறு அதில் நேர்ந்து விட்டால், அதைப் பெருந்திங்காகவே நம் முன்னோர்கள் கொண்டனர்.

அறமுறை தவறி, அநீதியை இழைத்த அரசனுக்கு அறங் கூற்றமானதையே சிலம்பின் கதை செப்புகின்றது. "கொலைக் களப்பட்ட கோவலன் மனைவி கண்ணகி" சொற்கேட்டதும், "கணவனை இழந்தோர்க்குக் காட்டுவதில்லென்று", "கோப்பெருந் தேவி குலைந்தனள் நடுங்கி". வேறு வகையில் அநீதி விளைந்தால் அதற்கான மாற்றுகள் காணலாம்; ஈடு செய்யலாம். இழந்த கணவனுக்கு ஈடாக எதைக் காட்டமுடியும்? "காட்டுவது இல்" என்று குறிப்பது ஈடு செய்வதற்கு இயலாத இழப்பு என்பதை

எடுத்துக் கூறுவதாகும். "இறைமுறை பிழைத்ததற்கு" ஈடு செய்ய இயலாத நிலையில், தன் உயிரையே கொடுத்துத் தளர்ந்த செங்கோலின் தகைமையைக் காத்தான், அரசன் நெடுஞ்செழியன்.

பிறருக்கு விளைக்கும் தீங்கின் பயன் தீங்கு விளைத்தவரையே சேரும்படி செய்யும் இன்றைய சட்டத்தின் கொள்கையை,

> "நோயெல்லாம் நோய்செய்தார் மேலவாம் நோய்செய்யார்
> நோயின்மை வேண்டு பவர்"

என்ற அறநூலின் குறளிலே காண்கிறோம்.

இவ்வாறு, ஆங்கில நாட்டுத் தீர்ப்புக்களைப் பின் பற்றி, "தீங்கியல் சட்டம்" நம் நாட்டில் இயங்கினாலும்; நம் நாட்டின் பண்பையும் பண்டைய அறத்தையும் அண்டியதாகவே அஃது அமைகின்றது.

கல்வியுடையோர்கள் கடமைகளை உணர்வார்கள். தம் கடமைகளைத் தெரிந்தோர் பிறர் கடமைகளையும் தெளிந்தறிவார்கள். கல்விச் செல்வம் நன்கு பரவி நிற்கும் மேலை நாடுகளில், "தீங்கியல்" சட்ட வழக்குகள் பெருகி வளர்கின்றன. வாழைப்பழத் தோலை மிதித்ததால் வழுக்கி விழுந்தவர் வாளாவிருப்பதில்லை. பழத்தோலைப் பாதையில் போட்டவர் மீது வழக்கிடுவார், நட்ட ஈடும் பெறுவார். சாலை நடுவிலுள்ள பள்ளத்தில் விழுந்து படு காயமடைந்தவர், தோண்டிய பள்ளத்தைத் தூர்த்திடாமல் விட்ட தலநிர்வாகத்திடமிருந்து தக்க ஈடு பெறுவார். அவதூறு இழைத்தவர் மீது அயராது வழக்கிட்டு அதற்கான இழப்பீட்டை அவசியம் பெற்றிடுவார்.

நம் நாட்டில் போதிய அளவு கல்வி பரவாததால், கடமைகள் தெரியவில்லை, உரிமைகள் உணரப்படவில்லை. எனவே, தீங்கியல் வழக்குகள் அதிகமாக எழுவதில்லை. பொது வாழ்வும், தனி வாழ்வும் பொறுப்புடன் நடைபெறுவதற்கு மக்கள் அனைவரும் விழிப்புடன் இருத்தல் வேண்டும். விழிப்பின்மையின் காரணத்தால் உரிமைக்கு ஊறு பெறுவோர் ஒய்ந்து இருக்கின்றனர்; கடமையில் தவறுவோர் கவலைப்படுவதில்லை. இஃது இன்ப வாழ்விற்கு ஏற்ற நிலையன்று. சட்டம், அளிக்கும் உரிமைகளும், விதிக்கும் கடமைகளுமே நம் வாழ்வின் நலன்களைக் காத்து நிற்கின்றன; இன்ப வாழ்விற்கு அரணாக அமைகின்றன. ஆதலால், உரிமைகள் மதிக்கப்பட வேண்டும், கடமைகள் காக்கப்பட வேண்டும். இதற்கான விழிப்புடைமை நம்மிடையே வேண்டும்.

எனவே, தீங்கின் வகைகளையும் அவை தீரும் திறங்களையும் அறிந்து கொள்வது நமக்குரிய வாழ்விற்கு உறுதுணையாகும்.

---

# இரண்டாவது பிரிவு

## பகுதி 1

## உடலுரிமைக்கு விளையும் தீங்குகள்
## (Wrongs to the Person)

### (அ) தீங்கின் வகைகள்

*உடலைத் தாக்குதல் (Battery) - உடலைத் தாக்க முனைதல் (Assault) - உடலுக்கு ஊறுசெய்தல் (Causing Hurt) - முறையின்றிச் சிறைப்படுத்தல் (False Imprisonment).*

மனிதர்களுக்குள்ள உரிமைகளை உடலுரிமை, பொருளுரிமை, புகழுரிமை எனப் பகுத்துக் கூறலாம். இவற்றில், உடலுரிமை பற்றியும், அதற்கு விளையும் தீங்குகள் பற்றியும் இந்தப் பகுதியிற் காண்போம்.

உடலுரிமை என்றால் என்ன? உடல் நலமின்றி ஒருவருக்கு வாழ்வு இல்லை. உடலை வளர்த்தே உயிரை வளர்க்க வேண்டியிருக்கிறது, உடலுக்கு ஊறு விளைந்தால் உயிர் வாழ்வது பாதிக்கப்படுகிறது. உடலுக்கு ஊறு விளைவிப்பதன் வாயிலாகவே கொடுங்காயங்களும், உறுப்புச் சேதமும், உயிர்ச் சேதமும் விளைகின்றன. எனவே, ஒவ்வொருவருடைய உடலையுங் காப்பதில் சட்டம் தீவிர அக்கறை செலுத்துகிறது. ஒருவருடைய உரிமைகளில் எல்லாம் மிக முக்கியமான உரிமை உடலைக் காத்துக்கொள்ளும் உரிமை எனச் சட்டம் கொள்ளுகிறது. உயிர் வாழ்வதற்கு இவ்வுரிமை இன்றியமையாததாதலின், இது வாழ்வுரிமையாக மதிக்கப்படுகிறது.

நம் உடலுக்குப் பிறரால் தீங்கு விளையாதபடி பாதுகாத்துக் கொள்ளும் உரிமையை உடலுரிமை (Right to the person) என்று கூறுகிறோம்.

சினமென்னும் இருளால் அறிவொளி மங்கிப்போய் மனிதத் தன்மையை மறந்த நிலையிலேயே மாற்றாரது உடலை ஒருவர் தாக்குகின்றார். "சினங்காத்தல்" எளிதன்று. ஒரு செயலைத் தூண்டும் சக்தி வலியுடையதாக இருந்தால் அச்செயலைத் தடுக்கும் சக்தி அதைவிட வலியுடையதாக இருக்கவேண்டும். எனவே, வெகுளியால் விளையும் தீமைகளைத் தடுப்பதற்குத் தண்டனை என்ற ஆயுதத்தைச் சட்டம் கையாளுகிறது. பிறர் உடலைத் தாக்கிக் கொடுந்துன்பம் விளைவிப்போரைக் கடுஞ்சிறையில் இடுகின்றது சட்டம்.

உடலூறு செய்தவரைச் சிறையில் இடுவதால் குற்றவாளி திருந்தலாம். ஆனல் அக்குற்றத்தால் உற்ற தீங்கையடைந்தோர்க்கு உய்தி என்ன? உடலுக்கு ஊறு பெற்றவர் நோயின் கொடுமையால் வேதனையுறுகிருர்; அன்ருடச் சாதனைக்குச் சக்தியின்றி ஊதியம் இழக்கின்ருர்; கை, கால், கண் போன்ற முக்கிய உறுப்புக்களை இழந்தவர்களோவெனில் பின்வாழ்விற்குப் பயனற்றுப் பரிதவித்து நிற்கிருர்கள். ஒருவரை ஓர் அறைக்குள் பூட்டி வைத்தால் அவர் தன்னுரிமை இழந்து விடுகிருர். இப்படிச் சிறைப் படுத்தலும் உடலுரிமைக்கு எதிரான தீங்கேயாகும். இவ்வாறு, உடலுரிமையைப் பாதிக்கும் தீங்குகளால் கேடுகள் பல விளைகின்றன. எனவே, உடலுரிமைத் தீங்குகளை இழைத்தவர் தண்டனை பெறுவதோடன்றி, அதனுல் கேடு அடைந்தவர்க்கு நட்ட ஈடும் அளிக்கவேண்டும் எனச் சட்டம் விதிக்கிறது. உடலுரிமைக்கு எதிரான தீங்கு தண்டிக்கத்தக்க குற்றமாவதுடன் (Crime) ஈடு பெறத்தக்க தீங்கும் (Tort) ஆகிறது.

உடலுரிமைக்கு விளையும் தீங்குகளை நான்கு வகைகளாகப் பிரிக்கலாம்:

(1) உடலைத் தாக்குதல் (Battery or Using criminal force)
(2) உடலைத் தாக்க முனைதல் (Assault)
(3) உடலுக்கு ஊறு செய்தல் (Causing hurt)
(4) முறையின்றிச் சிறைப்படுத்தல் (Wrongful confinement or False imprisonment)

## (1) உடலைத் தாக்குதல் (Battery or Using criminal force)

நியாயம் ஏதுமின்றி ஒருவர் உடம்புமீது மற்ருெருவர் பலாத்காரத்தைப் பயன்படுத்தித் தாக்குவதை "உடலைத் தாக்குதல்" என்கிருேம். அந்தப் பலாத்காரத்தால் உடம்பில் காயம் விளைய வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒரு சிறிதும் காயம் ஏற்படாதவாறும் பலாத்காரம் இருக்கலாம். ஒருவரின் சம்மதமின்றி அவரைக் கோபத்துடன் தொடுவதுகூட உடலைத் தாக்கும் செயல் எனவே சட்டம் கொள்ளுகிறது.

நாற்காலியில் உட்காரப் போகும் ஒருவருக்குத் தெரியாமல் நாற்காலியை நகர்த்தி அவரைத் தரையில் விழ வைப்பது, ஒருவர் மீது நீரை ஊற்றுவது, உமிழ்வது, வேறு பொருள்களை வீசுவது, ஒருவரின் உடல் நலம் பாதிக்கப்படும் விதத்தில் வெப்பக் காற்றையோ, அதிகமான ஒலியையோ, ஒளிக்கதிர்களையோ அவர்மீது பாய்ச்சுவது, ஒருவர் ஏறிச் செல்லும் குதிரையைச் சாட்டையால் விரட்டிக் குதிரை மீதிருந்தவரைக் கீழே விழச் செய்

வது இவையெல்லாம் உடலைத் தாக்கும் செயல்களாகும். ஒருவர் கையில் இருக்கும் அல்லது அவர் அணிந்திருக்கும் பொருள் களைப் பலாத்காரமாகப் பறிப்பதும் அத்தகைய செயலே.

இந்தியக் குற்றச் சட்டம் 350ஆவது பிரிவுப்படி "உடலைத் தாக்குதல்" குற்றமாகும்.

## (2) உடலைத் தாக்க முனைதல் (Assault)

ஒருவரின் உடலைத் தாக்க முயற்சி செய்து அல்லது தாக்கப் போவதாகப் பயமுறுத்தி, அவரது மனத்தில் அச்சத்தை ஏற் படுத்துவதையே "உடலைத் தாக்க முனைதல்" என்று கூறுகி ரேம். தாம் உடனடியாகத் தாக்கப்படலாம் என்ற அச்சம் ஒரு வருக்கு ஏற்படுமாறு அமையும் செயல் "தாக்க முனைதல்" எனப் படுகிறது. இதை ஆங்கிலத்தில் assault என்பார்கள்.

"உன்னை அடித்து விடுவேன்" என்று கூறி ஒருவர் மற்றொரு வரைப் பயமுறுத்தலாம். ஆனால் அது "தாக்க முனைதல்" ஆகாது. அடிப்பதற்கென்று கையையோ, கழியையோ ஓங்கியவாறு நெருங் கிப் போய் விட்டால் அது "தாக்க முனைதல்" ஆகி விடும். அச் சுறுத்தும் சொற்கள் மட்டுமின்றி அச்சுறுத்தும் செயலும் இருக்க வேண்டும்.

அச்சுறுத்தும் செயல்கள் அனைத்தும் தீங்காவதில்லை. உடனே, பலாத்காரம் விளையலாம் என்ற அச்சத்தைப் பிறர் மனதில் ஏற்படுத்தும் தன்மையுடையதாக அந்தச் செயல் இருக்க வேண்டும். அரை பர்லாங்கு தூரத்தில் நிற்கும் ஒருவரை மற் ரெருவர் தமது கையை ஓங்கிக் கொண்டு "அடித்து விடுவேன்" என்று கூறிப் பயமுறுத்தலாம். இதைக் கண்டு தூரத்தில் நிற்ப வர் அச்சப்படுவதில்லை. எனவே, இது தீங்கு இல்லை. ஆனால், அச்சுறுத்தப்படுபவரின் அருகில் நெருங்கி வந்து கையை ஓங்கிக் கொண்டு பயமுறுத்தினுல் அது "தாக்க முனைதல்" ஆகிவிடும்.

சில வேளைகளில் ஒரு செயல் அச்சுறுத்தும் விதத்தில் இருக்க லாம். ஆனால், அப்பொழுது கூறப்படும் சொற்கள் அச்சத்தை அகற்றுவனவாக இருப்பதுண்டு. ஒருவர் தமது உடைவாளின் மீது கையை வைத்துக் கொண்டு, "இது நீதிமன்றமாக இல்லா திருந்தால் என் கருத்தைக் காட்டியிருப்பேன்" என்று மற்றொரு வரை அச்சுறுத்தினர். வாளில் கை வைத்த செயல் அச்சுறுத்து வதாக இருந்தாலும், கூறிய வார்த்தைகள் நீதிமன்றமாக இருப்ப தால் வாளை எடுக்கப் போவதில்லை என்பதைக் குறிப்பதால் இது "உடலைத் தாக்க முனைதல்" ஆகாது எனத் தீர்ப்புக் கூறப்பட்டது. [Tuberville v. Savage (I688) 1. Mod. 3]

சுடப்போவதாகக் கூறிக் கொண்டு வாதியை நோக்கி எதிர் வாதி ஒரு துப்பாக்கியை நீட்டிக் குறி பார்த்தார். உண்மையில் அத்துப்பாக்கியில் குண்டுகள் இல்லை. இஃது எதிர் வாதிக்கு மட்டுமே தெரியும். வாதியோ தாம் சுடப்படப் போவதாக நினைத்து அச்சமுற்றார். எதிர்வாதியின் செயல் "உடலைத் தாக்க முனைதல்" தான் எனத் தீர்ப்பளிக்கப் பட்டது. (R. V. St. George 1840 -- 9 C & P. 483). அச்சுறுத்தப்பட்டவர் மனதில் அச்சம் விளைந்ததா என்பதே முக்கியமானதாகும்.

உடலைத் தாக்க முனைதல் இந்தியக் குற்றச் சட்டத்தின் 351-வது பிரிவுப்படி குற்றமாகும்.

ஒரு செயல் முற்றுப் பெற்ற பின் தீங்காகிறது எனில் அச் செயலுக்கான முயற்சியும் தீங்கான செயலேயாகும். உடல் தாக்கப் பட்டவர் மனவேதனை அடைவது போலவே, உடல் தாக்கப்பட லாம் என்று அச்சுறுத்தப்படுவோரும் மனவேதனை யடைகின்றார். அடிபட்டவருக்கு மதிப்புக் குறைவு ஏற்படுவதுபோல், அச்சுறுத் தப்பட்டவருக்கும் மதிப்புக் குறைவு நேருகிறது.

எனவே, தாக்க முனைதலையும் குற்றம் எனவும், தீங்கு எனவும் சட்டம் விதிக்கிறது.

## (3) உடலுக்கு ஊறு செய்தல் (Causing hurt)

உடலுக்குக் காயம் ஏற்படுத்துவதை உடலுக்கு ஊறு செய்தல் என்கிறோம். உடலைத் தாக்குதல் என்ற தீங்கில் இது அடங்கினாலும், உடலுக்குக் காயம் ஏதும் விளையாத நிலையில்கூட "தாக்குதல்" என்ற தீங்கு ஏற்படலாம். ஆனால் காயம் விளைவிக்கும் தாக்குதலைத்தான் "உடலூறு செய்தல்" என்று தனித்துக் கூறுகிறோம்.

ஒருவர் மற்றொருவருக்கு நஞ்சிட்டு உடலூறு விளைவிக்கலாம். இதில் பலாத்காரத்தாக்குதல் ஏதும் இல்லையெனினும், "உடலூறு செய்தல்"என்ற தீங்காகிறது. பொதுவாக, ஒருவரை மற்றொருவர் கையாலோ, கழியாலோ மற்ற ஆயுதங்களாலோ தாக்கும்பொழுது தாக்கப்பட்டவருக்குக் காயம் அல்லது உறுப்புக்கள் சேதம் ஏற்படுகிறது. இவ்வாறு விளைந்த காயத்திற்கும், சேதத்திற்கும் தாக்கியவர் பொறுப்பாகிறார்.

### அதிர்ச்சியினால் விளையும் கேடுகள் (Causing nervous shock)

நேரடியாகத் தாக்கப்பட்டால்தான் உடலுக்கு ஊறு விளைகிறது என்பதன்று. காணும் நிகழ்ச்சிகளாலும் கேட்ட செய்திகளாலும் அதிர்ச்சியடைந்த ஒருவருடைய உடல்நிலை பாதிக்கப்

படுகிறது. எனவே, பிறருக்கு அதிர்ச்சி யளிக்கத்தக்க செயலைச் செய்பவர், அந்த அதிர்ச்சியால் விளைந்த தீங்கிற்குப் பொறுப்பாகின்றார்.

ஒரு பெண்ணிடம் அவருடைய கணவர் பெரிய விபத்தில் காயமடைந்து கிடக்கின்றார் என்று எதிர்வாதி பொய்யாகக் கூறினர். அதை உண்மையென நம்பிய பெண் மனஅதிர்ச்சியுற்று அதனால் நோயுற்றாள். இந்த அதிர்ச்சியினால் விளைந்த கேட்டிற்கு எதிர்வாதி நட்ட ஈடு அளிக்க வேண்டும் எனத் தீர்ப்பு அளிக்கப் பட்டது. [Wilkinson V. Downton (1897) 2. Q. B. 57]. உண்மையாகவே, அந்தப் பெண்ணின் கணவர் விபத்தில் சிக்கியிருந்தால் எதிர்வாதி தீங்கிழைத்தவராக மாட்டார்.

மனைவியின் கண் முன்னால் கணவன் கொலை செய்யப்பட்டார் எனில் இதைக் கண்ட மனைவிக்கு அதிர்ச்சி ஏற்படுவது இயல்பே யாகும். அந்த அதிர்ச்சியால் விளையும் கேடுகளுக்கும் கணவனைக் கொன்றவர் பொறுப்பாகின்றார்.

குதிரைகள் பூட்டப்பட்ட வண்டி எதிர்வாதியின் கவனக் குறைவினால் ஒரு பொது விடுதிக்குள் நுழைந்துவிட்டது. அந்த விடுதிக்குள் இருந்த வாதி, தம்மீது வண்டி மோதி விடுமோ என்ற அச்சத்தால் அதிர்ச்சியுற்று நோய்வாய்ப்பட்டார். இதற்கு எதிர்வாதியே பொறுப்பு என்று தீர்மானிக்கப்பட்டது. [Dulieu V. White & sons - (1901) 2 K. B. 669].

எனவே, வாதியின் உடலுக்கு விளையும் ஊறு, எதிர்வாதியின் நேரடித் தாக்குதலால்தான் தோன்ற வேண்டும் என்ற அவசியம் இல்லை; எதிர்வாதியின் முறையற்ற வேறு செயலால் அதிர்ச்சி யுற்றாலும் வாதிக்கு உடலூறு விளையலாம். அதற்கான பொறுப்பும் எதிர்வாதியையே சேரும்.

## (4) முறையின்றிச் சிறைப்படுத்தல் (False imprisonment or Wrongful confinement)

“சிறைப்படுத்துதல்” என்றால் ஒருவரைச் சிறையில் அடைக்க வேண்டும் என்பதன்று. ஒருவர் இருக்குமிடத்தை விட்டு அகல விடாமல் தடுப்பது, கைது செய்வது, சிறையிலடைப்பது, இச் செயல்களில் எதையும் நியாயமான காரணமின்றிச் செய்தால் அது ‘‘முறையின்றிச் சிறைப்படுத்தல்’’ என்ற தீங்காகும்,

ஒவ்வொரு மனிதனுக்கும் தம் விருப்பம்போல் எங்கும் செல்லுவதற்குச் சுதந்திரம் இருக்கிறது. இந்தச் சுதந்திரத்தைப் பாதிக்கும் செயல் தீங்கான செயலாகும்.

இஃது இந்தியக் குற்றச் சட்டம் 340 ஆவது பிரிவுப்படி தண்டிக்கத்தக்க குற்றமுமாகும்.

ஒரு பாதையில் போகும் ஒருவரை மேலும் முன்செல்லாத வாறு தடுத்து நிறுத்துவது "சிறைப்படுத்தல்" ஆகாது. ஏனெனில் அவர் அந்தப் பாதையில் வந்த வழியே திரும்பிச் செல்ல முடியும்.

ஒருவர் தம் விருப்பப்படி எங்கும் செல்லலாம் என்ற தன்னுரிமையை இழந்து இன்னொருவரின் ஆதிக்கத்தில் கொண்டு வரப் பட்டால்தான் "சிறைப்படுத்தல்" என்ற தீங்கு விளைகிறது.

ஒருவரை அச்சுறுத்தி ஒரு குறிப்பிட்ட இடத்தை விட்டு அகலவொட்டாமல் வைத்திருப்பது, அறையில் பூட்டி வைப்பது, பலாத்காரத்தைப் பயன்படுத்தி ஒருவரை அவருடைய விருப்பத் திற்கு மாருக அழைத்துச் செல்லுவது, இவையெல்லாம் "சிறைப் படுத்தும்" செயல்கள். வீட்டில் இருக்கும் ஒருவரை வீட்டை விட்டு வெளியே போகாதவாறு காவலில் வைக்கப்பட்டால் அதுவும் சிறைப்படுத்தலேயாகும்.

ஒரு குற்றவாளியின் தண்டனைக்காலக் கெடு முடிந்த பின்னும் அவர் சிறையிலடைக்கப்பட்டிருந்தால் சிறை அதிகாரி "முறை யின்றிச் சிறைப்படுத்திய" குற்றத்திற்கு ஆளாகின்ருர்.

சிறையிட்டவர் எதிர்வாதியாக அல்லது அவருடைய வேலை யாளாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அதற்கான பொறுப்பு அவரைச் சேரும்.

ஒருவர் மற்றவர்மீது பொய்யாகக் குற்றம் சாட்டி நீதிமன்றத் தில் வழக்கிடுவதால், நீதிமன்ற நடுவர் குற்றம் சாட்டப்பட்ட வரைக் கைது செய்ய உத்திரவிட்டுச் சிறையிலும் வைக்கலாம். இப்பொழுது, வழக்கிட்டவர் "தீநோக்குடன் குற்ற வழக்கிடல்" (Malicious prosecution) என்ற தீங்கு செய்தவராகின்ருர். 'முறை யின்றிச் சிறையிடுதல் என்ற தீங்கிற்கு அவர் ஆளாவதில்லை. நீதிமன்றத்தினர் செய்யும் காரியங்களுக்கு வழக்குத் தொடுத்த வரைச் சட்டம் பொறுப்பாக்குவதில்லை.

தம் விருப்பப்படி எங்கும் செல்லும் சுதந்திரம் மிக முக்கிய மானதாகும். இதை ஓர் அடிப்படை உரிமையாக (Fundamental right) அரசமைப்புச் சட்டம் கூறுகிறது. நீதிபதியின் உத்திர வின்றி ஒருவரைப் போலீசார் 24 மணி நேரத்திற்கு மேல் காவ லில் வைப்பது கூடாது என்று சட்டம் விதிக்கிறது. அமைதி காக்கும் அரசாங்கத்தினரும் இந்த விதிக்குக் கட்டுப்பட்டே நடக்க வேண்டும்.

## (ஆ) உடலுரிமையைப் பாதிக்கும் செயல்கள் தீங்கு ஆகாத தறுவாய்கள்

*தற்காத்தல் - பொருளைக் காப்பாற்றுதல் - அமைதி நிலைநாட்ட அதிகாரம் செலுத்துதல் - பிள்ளைகளைத் திருத்துதல் - இசைவு பெற்ற செயல்.*

கீழ்க் கண்ட தறுவாய்களில் உடலுரிமைக்குத் தீங்கு விளைவிப்பதைச் சட்டம் ஒப்புகிறது.

(1) தற்காத்தல் (Self-defence)

(2) பொருளைக் காப்பாற்றுதல் (Protection of property)

(3) அமைதி நிலைநாட்ட அதிகாரம் செலுத்தல் (Acting in support of Law)

(4) பெற்றோர், ஆசிரியர் முதலியோர் பிள்ளைகளை அடித்துத் திருத்தல் (Parental or other authority)

(5) இசைவு பெற்ற செயல் (Consent)

### (1) தற்காத்தல்

நம்மையும், பிறரையும் காத்துக் கொள்ளுவதற்கு வேண்டிய பலாத்காரத்தை நாம் கைக்கொள்ளுவதற்குச் சட்டம் இடமளிக்கிறது. ஆனால் அவசியம் இல்லாதிருக்கும்பொழுதோ, அளவிற்கு மீறியோ நாம் அதைப் பயன்படுத்துவது கூடாது.

நம்மை ஒருவர் கழியினால் அடிப்பதற்கு வருகின்றார் என்றால் அதிலிருந்து நம்மைக் காப்பாற்றிக் கொள்வதற்கென அடிக்க முயலுபவர்மீது வல்லந்தத்தைப் பயன்படுத்தி அவரை அச்செயலினின்று தடுக்கலாம். ஒரு பெண்ணிடமிருந்து தங்கச் சங்கிலியை ஒரு முரடன் வல்லந்தமாகக் கவர முயன்றான் எனில் நாம் பார்த்துக் கொண்டு நிற்கப் போவதில்லை. அந்த முரடனைத் தடுக்கிறோம். பலாத்காரத்தைப் பயன்படுத்தியே அவனைத் தடுக்க முடிகிறது. இதைச் சட்டம் ஆமோதிக்கிறது. "தற்காத்தல்" என்றால் நம்மைக் காத்துக்கொள்ளுதல் மட்டுமன்று; பிறரைக் காப்பதும் அதில் அடங்கும்.

அளவுக்கு மீறிய பலாத்காரத்தை நாம் பயன்படுத்தல் தகாது. நம்மைக் கையால் அடிக்க ஒருவர் முயன்றார் எனில் உடனே நம் கைத்துப்பாக்கியால் அவரைச் சுட்டு விழ்த்துவது தகாத செயல். அவர் நம்மைச் சுட வந்தால் நம் உயிரைக் காப்பாற்றிக் கொள்ள அவர்மீது சுடலாம். எனவே, அகற்றப்பட வேண்டிய தீங்கிற்குத் தக்கபடி நாம் கையாளும் பலாத்காரத்தின் அளவு இருக்கவேண்டும்.

இந்த முறையில், தற்காப்புக்கென ஒருவர் மேற்கொள்ளும் உடலுரிமையைப் பாதிக்கும் செயல்களைச் சட்டம் தீங்கெனக் கொள்வதில்லை.

### (2) பொருளைக் காப்பாற்றுதல்

நம் பொருள்களைப் பாதுகாப்பதற்கும் சில வேளைகளில் பலாத்காரத்தைப் பயன்படுத்துவது அவசியமாகிறது.

நம் கையிலிருக்கும் பொருளை ஒருவன் பறித்துக்கொண்டு ஓடினால் அவனை விரட்டிச் சென்று நம் பொருளைப் பலாத்காரமாகவேனும் அவனிடம் இருந்து எடுத்துக் கொள்ளலாம். ஆனால் பொருளை மீட்டபின்னும் அவனை அடிப்பது கூடாது. நம் விட்டிற்குள் அல்லது நிலத்திற்குள் அத்துமீறி நுழைபவரை அகற்றுவதற்கும் வல்லந்தம் அவசியமானால் அதையும் சட்டம் அனுமதிக்கிறது.

### (3) அமைதி நிலைநாட்ட அதிகாரம் செலுத்துதல்

ஒழுங்கும் அமைதியும் வாழ்வில் நிலைக்கச் செய்வது அரசின் கடமையாகிறது. இதைக் குலைக்கும் செயல்களைத் தடுப்பதற்கு அரசின் அலுவலர், முக்கியமாகப் போலீசார், அவசியமான பொழுது மற வலியைக் காட்டியே பணி புரிகின்றனர். சட்டத்தை அமுல் நடத்தும் ஆற்றல் அரசின் மற வலியைப் பொறுத்தே இருக்கிறது. எனவே, சட்டத்தை நடை முறைப்படுத்தும் வகையில் பலாத்காரம் பயன்படலாம்.

குற்றவியல் நடைமுறைச் சட்டத்தின் (Criminal Procedure Code) படி, பெருங்குற்றம் இழைப்போர்களைப் போலீசார் மட்டுமின்றிப் பொதுமக்கள் எவரும் கைது செய்யலாம்.

பெருங்குற்றங்களும், அமைதிக்குக் குலைவும் நிகழாவண்ணம் காப்பதற்கென, மக்களும் அரசினரும் பலாத்காரம் பயிலுவதைச் சட்டம் அனுமதிக்கிறது.

### (4) பெற்றோரும், ஆசிரியரும் பிள்ளைகளைத் திருத்தல்

பிள்ளைகளை நல்வழி நிறுத்துதல் பெற்றோர் கடன். அவர்களைக் கண்டித்துத் திருத்துவதற்கு ஓரளவு அதட்டலும், அடித்தலும் அவசியமாகலாம்.

பள்ளியில் படிக்கும் சிறுவர்களைத் திருத்தும் கடமை ஆசிரியருக்கு உண்டு. ஆசிரியரின் பிரம்பே அநேக மாணவர்களின் நல்வழிக்கு உதவியாக நிற்கிறது. எனவே, பிள்ளைகளைத்

திருத்தப் பெற்றோரும் மாணவர்களைத் திருத்த ஆசிரியர்களும் தக்க அளவில் தண்டனை முறையைக் கையாளலாம். பள்ளிக்கு வெளியில் ஒழுக்கத்திற்கு மாறாக நடக்கும் மாணவனையும் ஆசிரியர் அடித்துத் திருத்தலாம்.

பள்ளி விதிகளுக்கு மாறாகத் தெருவில் புகை பிடித்த மாணவனை ஆசிரியர் அடித்தார். அவ்வாறு அடித்துத் திருத்தியது நியாயமேயாகும் என்று தீர்ப்புக் கூறப்பட்டது. [R. V. Newport (1929) 2. K. B. 416]

## (5) இசைவு பெற்ற செயல்

ஒருவர் இசைந்து ஏற்றுக்கொண்டதைச் சட்டம் தீங்கு எனக் கொள்ளுவதில்லை. இருவர் குத்துச் சண்டை விளையாட்டில் ஈடுபடுகின்றனர். அந்த விளையாட்டில் படும் குத்தினால் ஒருவருக்குக் கேடு விளையலாம். கேடு அடைந்தவர் நட்ட ஈடு பெற முடியாது.

## (இ) நட்ட ஈட்டின் அளவு

### பொது நட்டஈடு - தனி நட்டஈடு.

உடலுரிமைக்கு விளைந்த தீங்கினால் ஏற்படும் கேட்டின் அளவை அறுதியிட்டு அதற்குத் தக்க நட்டஈடு அளிப்பது மிகவும் சிக்கலான காரியம். "கையிழந்த ஒருவருக்கு இவ்வளவு தொகை நட்ட ஈடு கொடுக்கவேண்டும்; கால் இழந்தவருக்கு இன்ன தொகை கிடைக்கவேண்டும்" என்று ஒரே சீரான விதிகளைச் சட்டம் இயற்ற முடியாது. காயத்தால் ஏற்படும் துன்பத்தை, அதனால் விளையும் மன வேதனையை எந்த முறையில் அளந்து நிர்ணயிக்க முடியும்? நீதிபதியின் அறிவுக் கூர்மையினாலேயே மாறுபட்ட வழக்குகளின் வேறுபட்ட சூழ்நிலைகளை ஆராய்ந்து தக்க முறையில் நட்டஈடு அளிக்கப்பட வேண்டியிருக்கிறது.

எனினும், நீதிமன்றங்கள் பின்பற்றும் பொது விதிகளை நாம் காணலாம்,

பொது நட்டஈடு (General damages), தனி நட்டஈடு (Special damages) என்று இருவகையாக நட்டஈட்டைப் பகுப்பது உண்டு.

உடலூறு அடைந்த எல்லோருக்கும் பொது முறையில் அளிக்கப்படுவது பொது நட்ட ஈடு; அவர்களில் ஒரு சிலருக்கு மட்டும் பொருந்தும் தனிப்பட்ட காரணங்களுக்காகக் கொடுக்கப் படுவதைத் தனி நட்ட ஈடு என்கிறோம்.

## பொது நட்ட ஈடு (General Damages)

உடலுரிமை பாதிக்கப்பட்டவர்க்கு உடம்பில் காயம் ஏற்படலாம். இதனுல் உடலுக்குத் துன்பமும் உள்ளத்திற்குத் துயரமும் விளைகின்றன. கத்தியால் குத்தப்பட்டுப் படுகாயம் அடைந்து உடல் வாதனையடையும் ஒருவர் தமக்கு மரணம் விளைந்து விடுமோ என அஞ்சி மனவேதனைப்படுகிருர். எனவே, காயத்தினுல் ஏற்படும் உடல்வாதனையையும் (Bodily pain) அதனுல் விளையும் மனவேதனையையும் (Mental agony) கருத்திற் கொண்டு நட்டஈடு தரப்படுகிறது.

வாலிபர் ஒருவர் மற்றவருடைய செயலால் நொண்டியாகி விடுகிருர் எனில், அவரால் விளையாடவோ, விருப்பப்படி நடந்து செல்லவோ முடிவதில்லை. பிறரிழைத்த தீங்கினுல் கண்களை இழந்த ஒருவரது நிலையை என்னென்பது! பார்க்கவோ, படிக்கவோ அவரால் இயலாது. பிறர் தீங்கிற்காளானேர் இவ்வாறு வாழ்வின் நலன்களை இழக்கின்றனர். எனவே, இழக்கும் வாழ்க்கை நலன்களையும் (Loss of amenities of life) கணக்கிற் கொண்டு நட்டஈடு கணிக்கப்படுகிறது.

சில வேளைகளில் உடலுக்கு விளைந்த கேட்டினுல் ஒருவர் ஆயுட்காலம் குறையலாம். ஐம்பது வயதுடைய ஆரோக்கியமான ஒருவருக்கு உடல் ஊறு உண்டாக்கப்படுகிறது. எழுபது அல்லது எண்பது வயது வரை உயிருடன் இருப்பார் என எதிர்பார்க்கப்பட்ட அவர், ஏற்பட்டநோயின் காரணமாக ஐம்பத்திரண்டாவது வயதிலே மரணம் அடையக் கூடும் என வைத்தியர்கள் கண்டறியலாம். இவ்வாறு அவருக்கு விளைவிக்கப்பட்ட தீங்கின் பயனுக அவரது ஆயுட்காலம் அருகுகிறது. வாழ்நாட்கள் சுருங்குவதால் பொருள் ஈட்டும் வாய்ப்பும் மற்றும் பல நலன்களும் மறைகின்றன. எனவே, தீங்கால் விளைந்த ஆயுட்காலச் சுருக்கத்தையும் (Shortened Expectation of Life) கவனத்திற் கொண்டு நட்டஈடு நிர்ணயிக்கப்படுகிறது.

திடகாத்திரமான 69 வயதுள்ள வாதி எதிர்வாதியின் மோட்டாரால் மோதப்பட்டார். மோதலின் விளைவாகக் காயமுற்றதால், வாதி இன்னும் ஓர் ஆண்டிற்குமேல் உயிர்வாழ முடியாது என வைத்தியர்கள் கண்டனர். இயல்பாக எதிர்பார்க்கப்பட்ட அவர் ஆயுட்காலம் அருகியதால் அதையும் கணக்கில் எடுத்து நட்டஈடு அளிக்க வேண்டும் எனத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. [Flint v. Lovell (1935) 1. K. B. 354]

உயிர்வாழ்வது ஒருவரின்ஒப்பற்ற உரிமை. அந்த உரிமைக்கு ஊறு விளையும் வகையில் வாழுங்காலம் குறைந்தால், அதுவும்

ஈடுபெறத்தக்கதாகும். உடம்பில் ஏற்பட்ட காயத்தினுல் விளையும் வேதனையும், துயரமும் ஒரு வகையான கேடு. வாழ்நாட்கள் குறைவது வேறுவகையான கேடு. இரண்டுவகைக் கேடுகளையும் கருத்திற்கொண்டு நட்டஈடு கணிக்கப்பட வேண்டும். இந்தக் கொள்கை (Rose V. Ford-(1937) A. C. 826-என்ற வழக்கில் தெளிவாகக் கூறப்பட்டது. Benham V. Gambling-(1941) A. C. 168-என்ற வழக்கில் இந்தக் கொள்கை இன்னும் விரிக்கப்பட்டது.

வாழ்நாட் சுருக்கத்திற்கான நட்ட ஈட்டைப் புள்ளி விவரங்களின் அடிப்படையில் மதிப்பிட முடியாது. எதிர்நோக்கிய இன்ப வாழ்வு தடைப்பட்டது என்பதைக் கருத்திற் கொள்ளவேண்டும். இன்ப வாழ்வு என்பது செல்வமும் சீரும், வளமும் வாய்ப்பும் உடையவர்களுக்கு மட்டுமே என்பதன்று. எல்லோரும் இன்ப வாழ்விற்கு உரியவர்கள் என்பதே முறையான அடிப்படை. இந்த முறையில் "அருகிய ஆயுட்காலம்" என்ற வகையில் கணிக்க வேண்டிய நட்ட ஈட்டின் மதிப்பீடு முறையை நீதிபதிகள் விளக்கிக் கூறியிருக்கின்றனர்.

இவ்வாறு, உடல்வாதனை, மனவேதனை, வாழ்க்கை நல இழப்பு, அருகிய ஆயுட்காலம், இவையனைத்தும் பொது நட்ட ஈட்டுக் கணிப்பிற்கு ஆதாரமாகின்றன.

### தனி நட்டஈடு (Special Damages)

தீங்கால் விளைந்த வைத்தியச் செலவு: ஒருவருக்கு ஏற்பட்ட காயத்தைக் குணப்படுத்துவதற்கு வைத்தியச் செலவு, அதற்கான இதர செலவுகள் இவற்றிற்கும் நட்ட ஈட்டுத் தொகை உண்டு.

வருவாய் நட்டம்: தீங்கு விளைத்த உடல் நோயால் ஒருவர் அன்றாட வேலைக்குச் செல்ல முடியாமல் வார அல்லது மாதக் கணக்கில் படுக்கையில் இருக்க நேரிடலாம். அதனுல் வருவாய் குறைகின்றது. இதற்கும் நட்டஈடு கொடுக்கப்படும். இந்தத் தலைப்பில் சாதாரணத் தொழிலாளிக்குக் கிடைப்பதைவிடக் கைதேர்ந்த வைத்தியர், வழக்கறிஞர் முதலியவர்களுக்கு அதிகமான நட்டஈடு வழங்கப்படும். அவரவர்களின் சராசரி வருமானத்தை அடிப்படையாகக் கொண்டு நட்ட ஈட்டுத் தொகை கணக்கிடப்படுகிறது.

வேலை செய்ய ஏலா நிலையில் இருந்த காலத்தில் வரத்தக்க வருமானத்தைக் கணக்கிடுகையில் அதற்குக் கொடுக்கப்பட வேண்டிய வருமானவரித் தொகை உத்தேச வருமானத்திலிருந்து கழிக்கப்படுகிறது. மீதித் தொகையே நட்ட ஈடாக அளிக்கப்படும். British Transport Commission V. Gourley

1956 A. C. 185.—என்ற வழக்கில் வருவாய் நட்டத்தை 37,720 பவுன்கள் என்று மதிப்பிட்டார்கள். இந்தத் தொகை வருமானம் வந்தால் கொடுக்கப்பட்டிருக்க வேண்டிய வருமானவரித் தொகை எவ்வளவு என்று கணக்கிட்டு அந்த வரித் தொகையை, மதிப்பிட்ட வருமானத் தொகையிலிருந்து கழித்து, மீதியான 6,695 பவுன்களே வருமான நட்ட ஈடாக அளிக்கப்பட்டது.

வைத்தியச் செலவு, வருமான நட்டம், இவை உடலுக்கு விளைந்த காயத்திற்கும், காயமடைந்தவரின் தகுதிக்கும் தக்க வாறு மாறுவதால், இந்தத் தலைப்புக்களில் நட்டஈடாகக் கோரப் படுகிற தொகையின் அளவு நியாயமானது என்பதை வாதியே மெய்ப்பிக்க வேண்டியவர் ஆகின்றார்.

மதிப்பிழப்பிற்கும் மனவேதனைக்கும் நட்டஈடு உண்டு: உடலுரிமைக்கு எதிரான தீங்குகளால் காயம் அல்லது நோய் உண்டாயிருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. ஒருவரை அடிப்பதற்கு மற்றவர் கை ஓங்கினால் அஃது "உடலைத் தாக்க முனைதல்" (Assault) என்ற தீங்காகிறது. அடி விழுந்திருக்க வேண்டியது இல்லை. இவ்வாறு எதிர்வாதி கையை ஓங்கியதால் மட்டுமே வாதியின் உடலில் காயம் ஏதும் ஏற்படுவதில்லை. ஆனால் வாதி யின் தன்மதிப்பிற்கு இழுக்கும், மனவேதனையும் விளைகின்றன. எனவே, இதற்கென நட்டஈடு அளிக்கப்படுகிறது. வேண்டு மென்றே ஒருவரது மதிப்பிற்கு இழுக்கு நேரத்தக்க வகையில் தீங்குகள் புரிவோருக்கு எதிராக அதிகப்படியான நட்டஈட்டுத் தொகை விதிக்கப்படுவது வழக்கம்.

## (ஈ) தீங்கினால் மரணம் விளைதல்

*மரண விபத்துச் சட்டம் (Fatal Accidents Act) - நட்ட ஈட்டை நிர்ணயித்தல்.*

ஒருவரது தீங்கான செயலால் மற்றொருவருக்கு மரணம் விளைந்தது எனில், இதற்குச் சட்டம் அளிக்கும் நிவாரணம் என்ன ?

"ஆளைப் பொறுத்த வழக்கு ஆளுடனே மடிந்து விடுகிறது"

ஒருவர் இன்னொருவரை அடித்ததற்காக, அடித்தவர்மீது நட்டஈடு கோரி வழக்குத் தொடரலாம். வழக்கு இடப்படுவதற்கு முன்பே அடித்தவர் இறந்துவிட்டார் எனில் அந்த வழக்கைத் தொடருவதற்கில்லை. அடித்தவருடைய வாரிசுகளுக் கெதிராக அந்த வழக்கை நடத்தமுடியாது. சொத்துரிமை அல்லது ஒப்பந்த முறிவு சம்பந்தமான வழக்காக இருந்தால், எதிர்வாதி இறந்த பின்னும் அவர் வாரிசுகளுக்கு எதிராக வழக்கைத் தொடரலாம்.

நட்டஈடு கோரும் வழக்கு ஒரு நபரின் செயலால், அவரது நடத்தையால் ஏற்படும் வழக்கு. அது சொத்தைப் பொறுத்த வழக்கன்று; ஆளைப் பொறுத்த வழக்கு. "ஆளைப் பொறுத்த வழக்கு ஆளுடனேயே மடிந்து விடுகிறது" (Actio personalis moritur cum persona) என்பது இலத்தீன் மொழியிலுள்ள சட்ட விதி. தீங்கு இழைத்தவர் இறந்தபின் வழக்குத் தொடரமுடியாதது போன்றே, தீங்கு இழைக்கப்பட்டவர் இறந்தபின்னும் வழக்குத் தொடர முடியாது என்றநிலை இருந்தது.

மேலும் மரணம் விளைத்தலைச் சாதாரணமாக நட்டஈடு அளிக்கத்தக்க தீங்கெனச் சட்டம் கொள்வதில்லை. மரணம் விளைவித்தல் கொடுங்குற்றம். குற்ற வழக்கில் குற்றவாளி தண்டிக்கப்படுகின்றார். உரிமை நீதிமன்றத்தில் மரணம் விளைவித்த செயலின் அடிப்படையில் வழக்கிட முடியாது. எனவே, விளைந்த மரணத்தை வழக்கிற்கு மூலமாக வைத்து நட்டஈடு கோர முடியாது. இந்த விதி [Baker V. Bolton (1808) 1. Comp. 493] என்ற வழக்கில் லார்டு எல்லன்ப்ரோ என்ற நீதிபதியால் விளக்கப்பட்டது. எதிர்வாதியின் கவனமின்மையால், வண்டியில் பிரயாணம் செய்து கொண்டிருந்த ஒரு பெண் காயமுற்று, அதற்கு ஒரு மாதத்திற்குப்பிறகு மரணமடைந்தாள். இறந்த பெண்ணின் கணவன் தாம் மனைவியை இழந்ததற்காக நட்டஈடு கோரி வழக்கிட்டார். வழக்கு செல்லத்தக்கதன்று எனத் தீர்மானிக்கப்பட்டது.

இந்தக் கொள்கையால் விளையும் நிலை என்ன?

பிறருக்கு மரணம் நேராத வகையில் சாதாரணமான காயத்தை விளைவித்தவர், காயப்பட்டவருக்கு நட்ட ஈடு கொடுக்க வேண்டியவர் ஆகிறார். ஆனால் மரணத்தை விளைவித்தவர் எத்தகைய நட்ட ஈடும் கொடுக்க வேண்டியதில்லை. இது முரண்பாடான நிலை என்பதில் ஐயம் இல்லை. இரயில் பிரயாணமும், சாலைகளில் வேகமாகப் போகும் மோட்டார் வண்டிகளும் அதிகரித்த பின்னர் மரணம் விளைவிக்கும் விபத்துக்களும் பெருகின. விபத்துக்களில் மரணம் அடைந்தவர்களைச் சார்ந்திருந்தோருக்கு எவ்வித நட்ட ஈடும் அளிக்க முடியாத நிலை ஏற்பட்டது. இந்த நிலை 19ஆம் நூற்றாண்டின் மத்தியில்தான் ஆங்கில நாட்டில் அகற்றப்பட்டது.

### மரணவிபத்துக்கள் சட்டம்

மரண விபத்துக்கள் சட்டம் The Fatal Accidents Act என்ற ஒரு சட்டத்தை 1846ஆம் ஆண்டில் இயற்றி மரணம் எய்தியவரின் உறவினர்கள் மரணத்தை விளைவித்தவரிடமிருந்து நட்ட ஈடு பெறுவதற்கு வகை செய்யப்பட்டது.

1855ஆம் ஆண்டில் இந்தியாவிலும் மரண விபத்துக்கள் சட்டம் (Fatal Accidents Act) இயற்றப்பட்டது. இந்தச் சட்டத்தின்படி இறந்தவரைச் சார்ந்து வாழ்ந்த-இறந்தவரின் ஆதரவில் வாழ்ந்துவந்த-அவருடைய மனைவி அல்லது கணவன், பெற்றோர், குழந்தைகள் இன்னும் குறிப்பிட்ட உறவினர்கள் மரணத்தை வேண்டுமென்றே அல்லது கவனக் குறைவாலோ விளைவித்தவரிடமிருந்து நட்ட ஈடு கோரலாம்.

காயமடைந்தவர் பெறும் நிவாரணமும், இறந்தவர் உறவினர் பெறும் நிவாரணமும் வேறுபட்டவை.

மரண விபத்துச் சட்டம் இறந்தவரின் உறவினர்களுக்கு அளிக்கும் நிவாரணம், இறந்தவர் உயிரோடிருந்தால் அவர் பெறத்தக்க நட்ட ஈட்டினின்று வேறுபட்டது. காயமுற்று உயிரோடு இருப்பவர் பெறுவது தமக்குக் காயத்தால் விளைந்த கேட்டிற்காக; இறந்தவரின் உறவினர் பெறுவது இறந்தவரின் மறைவால் தமக்கு ஏற்படும் பொருள் நட்டத்திற்காக. காயமுற்றவர் தமக்கு விளைந்த மனவேதனைக்கும் நட்ட ஈடு பெறுகிறார். இறந்தவர்களின் உறவினர்கள் பெறும் நட்டஈடு அவர்களுடைய மன வேதனையின் பொருட்டாக அன்று. எனவே, இறந்தவர் உயிரோடிருந்தால் அவருக்குக் கிடைக்கத்தக்க நட்ட ஈடுதான் அவருடைய உறவினர்களுக்கு மேற்கூறிய சட்டத்தால் கிடைக்கிறது என்பது சரியன்று.

மரண விபத்துச் சட்டம் இறந்தவரின் உறவினர்களுக்கு அளிக்கும் நட்டஈடு புது வகையான நிவாரணமாகும்; அது காயமடைந்தோர் பெறும் நிவாரணத்தின் தொடர்ச்சி அன்று.

காயம்பட்டோர் பெறும் நட்டஈடும், இறந்தவரின் உறவினர் பெறும் நட்டஈடும், கொள்கையிலும், அளவிலும், தன்மையிலும், அடிப்படையாக வேறுபட்டவை.

இறந்தவரின் செயலால் உறவினர்களுக்குக் கிடைக்கும் நட்ட ஈடு பாதிக்கப்படலாம். காயமுற்றவர் தாம் இறப்பதற்குமுன் விளைந்த தீங்கிற்கான நட்ட ஈட்டைப் பெற்றுக்கொண்டு விட்டார் எனில், அவர் இறந்தபின் உறவினர்கள் வழக்காட முடியாது. [Grein V. Imperial Airways (1937) 1. K. B. 50] தமக்கு விளைந்த தீங்கை ஒருவர் இசைந்து ஏற்றிருக்கலாம். அத்தீங்கினுல் அவர் இறந்துவிடில், அவருடைய உறவினர்கள் எவ்வித நட்டஈடும் பெறமுடியாது. எனவே, இறந்தவர் உயிரோடு இருந்தால் நட்ட ஈட்டிற்கு வழக்கிட முடியும் என்ற நிலையில்தான் அவருடைய உறவினர்கள் நட்டஈடு கோர முடியும்.

நட்ட ஈட்டை நிர்ணயித்தல்

இறந்தவர் உயிருடன் இருந்திருந்தால் தமக்குக் கிடைத்திருக்கும் வருமானம் இவ்வளவு என்பதை வழக்கிடும் உறவினர் மெய்ப்பிக்க வேண்டும். இந்த வருமான நட்டத்தை அடிப்படையாக வைத்தே நட்ட ஈட்டுத் தொகை கணக்கிடப்படுகிறது.

இறந்தவர் மாதம் ஐந்நூறு ரூபாய் சம்பாதிக்கும் ஓர் உத்தியோகத்தில் இருந்தார் என வைப்போம். அவர் இறந்தபொழுது வயது 30 என்றும், அவருக்கு ஒரு மனைவியும், குழந்தையும் இருக்கிறார்கள் எனவும் கொள்வோம். இறந்தவரின் மறைவால், அவர் மனைவியும், குழந்தையும் இறந்தவரால் கிடைத்த வருமானத்தை இழந்து நிற்கின்றனர். குடும்பச் செலவிற்கு அவர் வருமானத்திலிருந்து எவ்வளவு கிடைத்திருக்கும்? எத்தனை ஆண்டுகள் அவர் வேலை பார்த்திருப்பார்? அதற்குள் அவருக்கு ஊதிய உயர்வு எவ்வளவு ஏற்பட்டிருக்கும்? இது போன்ற பல்வேறு கூறுகளையும் ஆராய்ந்து பார்த்தே இறந்தவரின் விதவைக்கும், குழந்தைக்கும் கிடைக்கத்தக்க நட்டஈட்டுத் தொகையின் அளவு கணிக்கப்படுகிறது. கணவனை இழந்ததால் விதவைக்கு ஏற்படும் துயரத்தையோ, மன வேதனையையோ கணக்கில் எடுப்பதில்லை. ஏற்பட்ட துக்கத்திற்கு ஆறுதலளிப்பாக (Solatium) எதுவும் கொடுப்பதில்லை. [Royal Trust Co. V. C. P. R. Co. (1922) 38 T. L. R. 899]

இம்மாதிரியே, படித்துக் கொண்டிருந்த மகனை இழந்து நிற்கும் பெற்றோர்களும் மகனுக்கு மரணத்தை விளைவித்தவரிடமிருந்து நட்டஈடு பெறுவதற்குச் சட்டம் வழி செய்கின்றது. ஆரம்பப் பள்ளியில் வாசித்துக்கொண்டிருந்த பையனின் பெற்றோர், பையன் உயிருடன் இருந்திருந்தால் கைதேர்ந்த டாக்டராகி மாதம் இரண்டாயிரம் அல்லது மூவாயிரம் ரூபாய் சம்பாதித்திருப்பான் என்றும், எனவே, அந்த அடிப்படையில் நட்ட ஈடு வேண்டும் என்று கோர முடியாது. வைத்தியக் கல்லூரியில் கடைசி ஆண்டில் படித்துக்கொண்டிருந்த மாணவனின் பெற்றோர் அவ்வாறு நட்டஈடு கேட்கலாம். இறந்தவர் பற்றி எதிர் பார்த்து எண்ணியிருந்ததெல்லாம் கைகூடியிருக்கும் என்ற அடிப்படையில் நட்டஈடு கணக்கிடப்படுவதில்லை. [Barnett V. Cohen (1921) 2. K. B. 461] நடக்கத்தக்கது எது என ஆராய்ந்து கிடைக்கத்தக்க வருமானம் எவ்வளவு என்பதை மதிப்பிடவேண்டும். இதை நீதிமன்ற நடுவர் அந்தந்த வழக்குகளின் தனிப்பட்ட சூழ்நிலைகளை ஆய்ந்து முடிவு செய்கின்றார்.

ஐந்து வயதுப் பையனின் பெற்றோர்களைவிட, சம்பாதித்துக் கொண்டிருந்த வாலிபனின் பெற்றோர்கள் அதிக நட்ட ஈட்டுத்

தொகை பெறுவார்கள். உயர்ந்த கல்வியும் நிறைந்த ஊதியமும் உடைய ஒருவருக்குத் தீங்கு இழைக்கப்பட்டு அவர் இறந்தால் அவருடைய உறவினர் பெரிய தொகையை நட்ட ஈடாகப் பெற லாம். ஆனால் கூலி வேலை பார்த்துவந்த ஒருவருடைய உறவினர் பெறும் தொகை சிறிதளவாகவே இருக்கும். இளம் பிள்ளை இறந் தால், அதன் எதிர்கால வருமானம் குறைவாகவே மதிப்பிடப் படுகிறது.

மனைவியை இழந்த கணவன், மனைவி செய்து கொண்டிருந்த வீட்டு வேலைகளை மதிப்பிட்டு அதற்கான நட்டஈடு பெறலாம். [Berry V. Humm & Co. (1915) 1, K. B. 627]

மரணம் அடைந்திருந்த உறவினர்களுக்குத் தனிப்பட்ட முறையில் சொத்துக்கள் இருக்கலாம். அதைச் சட்டம் கவனிப்பது இல்லை. அவர்களுக்கு இறந்தவரிடமிருந்து வரும் வருமானம் குறைந்ததா என்பதே முக்கியமானதாகும்.

மரணம் அடைந்தவரின் சொத்துக்களை வாரிசு முறையில் உறவினர்கள் பெற்றால் அச்சொத்தின் மதிப்பிற்குத் தக்கபடி நட்டஈட்டுத் தொகை குறைக்கப்படுகிறது. [Pym V. Great Northern Railway (1863) 4 B & S 396] கணவனை இழந்த மனைவி இலட்ச ரூபாய் மதிப்புள்ள கணவனின் சொத்தை வாரிசாகப் பெறலாம். அச்சொத்தின் வருமானம் கணவனின் சம்பாத்தியத் தால் வரும் வருமானத்திற்கும் அதிகமாக இருந்தால் அந்த வித வைக்கு நட்ட ஈடு அளிக்கப்படுவது இல்லை. இறந்தவர் எவ்வித வேலையும் செய்யாமல், சம்பாத்தியமும் இல்லாமல் இருந்தால் அவருடைய உறவினர் நட்டஈடு பெறமுடியாது. இறந்தவருக்குச் சொத்து அல்லது வருமானம் இருந்தாலும் இல்லாவிட்டாலும் தீங்கு இழைத்து மரணம் விளைவித்தவர் நட்டஈடு கொடுக்க வேண்டியதுதானே என நாம் கருதலாம். உண்மையில் ஏற்படும் நட்டத்திற்கே ஈடு கொடுக்கப்படுகிறது. சொத்தைப் பெற்று அதன்மூலம் வருமானம் பெறுவோருக்கு உண்மையில் நட்டம் ஏதும் இல்லை. அவ்வாறே, சம்பாத்தியம் ஏதும் இல்லாதவர் இறந்ததால் பொருள் நட்டம் அடைபவர் எவருமில்லை. எனவே, நட்டஈடு அளிப்பதற்குச் சட்டம் அனுமதிப்பதில்லை. நட்டஈடு அளிக்கப்படுவது தீங்கிழைத்தோரைத் தண்டிக்கும் நோக்கத்துடன் அன்று; விளைந்த தீங்கால் ஒருவருக்கு நடப் பில் ஏற்படும் உண்மையான நட்டத்தை ஈடு செய்வதற்கே என்பதை நாம் நினைவிற் கொள்ளவேண்டும்.

இந்த முறையில், உடலுரிமைக்குத் தீங்கு இழைப்போரிட மிருந்து நட்டஈடு பெறுவதற்குச் சட்டம் வகை செய்கிறது.

---

# பகுதி 2

## பொருளைப் பொறுத்த தீங்குகள்
## (Wrongs to Property)

### நிலைச் சொத்தில் அத்துமீறுதல்

உடைமைக்கு ஊறு செய்வதே தீங்காகிறது - நிலச் சொத்தில் அத்துமீறுதல் (Trespass to Land) - அதன் வகைகள் - அத்து மீறிப் புகுதல் - அத்துமீறி இடுதல் - அத்து மீறலுக்கும் தொல்லை விளைவித்தலுக்கும் உள்ள வேறுபாடு - கால்நடைகளைப் புக விடுதல் (Cattle Trespass) - அத்துமீறி இருத்தல் - நிலப் பரப்பிற்கு மேலும் கீழும் உள்ள உரிமை - தொடர்ந்து நிகழும் அத்து மீறுகை (Continuing Trespass) - நேரடி உடைமை உள்ளவரே வழக்குத் தொடர முடியும் - சொத்தின் சொந்தக்காரர் எப் பொழுது வழக்கிடலாம் - நேரடி உடைமைக்காரரும், சொத்தின் சொந்தக்காரரும் - ஆக்கிரமிப்பை அகற்றுவது யார்? - அத்து மீறுதல் எப்பொழுது தீங்காவதில்லை? - அத்துமீறலை நாமே அகற்றும் வழிகள் - நீதிமன்றத்தின் மூலம் நிவாரணங்கள் - ஆக்கிரமித்தவரை வெளியேற்றுதல், நட்டஈடு பெறுதல், நடைக்கட்டளை பெறுதல்.

உலக வாழ்விற்குப் பொருள் இன்றியமையாததாய் விளங்குகிறது. வாழ்வில் இயற்றவேண்டிய அறத்திற்கும், பெறத்தக்க இன்பத்திற்கும் பொருளே ஆதாரமாகும். "அறன் ஈனும் இன்பமும் ஈனும் திறனறிந்து, தீதின்றி வந்த பொருள்" என்பது பொய்யாமொழி. எனவே, மக்கள் ஒவ்வொருவரும் தாம் ஈட்டிய பொருள்களை அனுபவித்துப் பயன்பெறுவது அவர்களின் அடிப்படை உரிமையாகும். இதற்குச் சட்டம் துணையாக நிற்கிறது.

பொருள்களை இருவகையாகப் பிரிப்பதுண்டு: நிலம், வீடு போன்று நிலையாக, இடம் பெயராமல் இருக்கும் பொருள்களைத் தாவரப்பொருள்கள் (நிலைபொருள்கள் - Immovables) என்றும், தானியம், பணம், நகை, கால்நடை போன்றவைகளைச் சங்கமப் பொருள்கள் (அசை பொருள்கள் - Movables) என்றும் கூறுவார்கள்.

ஒருவருக்குச் சொந்தமான பொருளை அவருடைய சொத்து (Property) என்கிறோம். எவருக்கு ஒரு பொருளின்மீது சொந்தம், அஃதாவது முழு உரிமை இருக்கிறதோ, அவருக்கு அந்தப் பொருள்மீது சொத்துரிமை (Ownership) இருக்கிறது என்று கூறப்படுகிறது. சொத்துரிமைபற்றி இரு நபர்களுக்குள் மாறுபாடு ஏற்படலாம். ஒரு பொருள் தமக்கே சொந்தமானது என்று ஒருவரும், அதை மறுத்து, அது தமக்குத்தான் உரிமையானது என்று

மற்றவரும் பாத்தியதை கொண்டாடலாம். இந்தப் பிணக்கை உரிமை நீதிமன்றங்களில் (Civil Courts) வழக்கிட்டுத் தீர்த்துக் கொள்ளுகின்றனர். உரிமை இயல் சட்டத்தின்படி (Civil Law) அவர்களில் எவருக்குச் சொத்துரிமை இருக்கிறது என்பது தீர் மானிக்கப்படுகிறது.

தீங்கியல் சட்டத்தைப் (Law of Torts) பொறுத்தவரை சொத் துரிமை எவருக்கு இருக்கிறது என்பதுபற்றி அக்கறை இல்லை. பின், தீங்கியல் சட்டம் எந்த வகையில் செயல்படுகிறது?

ஒருவருக்குத் தீங்கு விளையாமல் பாதுகாப்பதே தீங்கியல் சட்டத்தின் கடனாகும். எனவே, ஒருவருடைய பொருளைப் பொறுத்துத் தீங்கு விளைகிறதா என்பதையே இச்சட்டம் கவனிக் கிறது.

உடைமைக்கு ஊறு செய்தலே தீங்காகிறது

ஒரு பொருளின் பயன் அதை நாம் அனுபவிப்பதில்தான் இருக்கிறது. அவ்வாறு அனுபவிப்பதற்கு அதன் உடைமை (Possession) நம்மிடம் இருக்கவேண்டும். வீட்டில் குடியிருந்து அதை நாம் அனுபவிக்கிறோம். நிலத்தை நம் ஆளுகையில் வைத் துப் பயிரிடுவதால் அதன் பலன் நமக்குக் கிடைக்கிறது. நகையை நாம் அணிந்து அதை உபயோகிக்கிறோம். இவ்வாறு ஒரு சொத்தை நம் உடைமையில் வைத்திருப்பதன் வாயிலாகவே அதன் பயனை நாம் துய்க் கின்றோம்.

நம் சொத்து நமது உடைமையிலிருந்து அகற்றப்பட்டு விட்டால் அதன் பயன் நமக்குக் கிட்டுவதில்லை. ஒரு சொத்தின் மீது நமக்குள்ள உடைமை பாதிக்கப்பட்டால் அச்சொத்திலிருந்து நாம் பெறும் நலனுக்கும் கேடு விளைகிறது. நம் உடைமையி லிருந்த வீட்டை இன்னொருவர் ஆக்கிரமித்துக்கொண்டாலோ, நம் உடைமையிலுள்ள நகையை மற்றவர் பறித்துக்கொண் டாலோ, அவைகளால் நாம் அடையும் நலனை இழக்கிறோம். இதனால் நம் நலனுக்குத் தீமை விளைகிறது. இவ்வாறு ஒருவரு டைய சொத்தின் உடைமைக்கு ஊறு விளைவிப்பதன் வாயிலாகவே சொத்தைப் பொறுத்த தீங்கு அவருக்கு விளைகிறது என்பது தெளிவாகும்.

எனவே, ஒருவருடைய சொத்திற்குச் செய்யப்படும் தீங்கு என்றால், அவருக்குள்ள சொத்தின் உடைமைக்கு ஊறு விளைவிப் பதேயாகும். ஒருவரிடம் உள்ள சொத்தின் உடைமைக்கு ஊறு செய்வதையே, அச்சொத்தைப் பொறுத்த தீங்கு எனச் சட்டம் கொள்ளுகிறது.

ஒரு சொத்தின் உடைமையை எவர் வைத்திருந்தாலும், அந்த உடைமை சட்டமுறைப்படியல்லாமல், வேறு வகையில் பறிக்கப்

படக்கூடாது என்பது அடிப்படை விதி. இந்த விதியின்படி ஒரு பொருளின் உடைமை யாரிடம் இருந்தாலும், அந்த உடைமையைச் சட்டம் பாதுகாத்து நிற்கிறது. அந்த உடைமைக்குக் கேடு விளைவித்தலைத் தீங்கெனக் கொண்டு அதைத் தடைசெய்கிறது.

பொருளைப் பொறுத்த தீங்கு என்ருல், ஒருவருக்கு அப்பொருளின் மீதுள்ள உடைமைக்கு விளையும் தீங்கையே சட்டம் குறிக்கிறது என்பதை நாம் நினைவிற்கொள்ள வேண்டும்.

இனித் தாவர சொத்துக்களைப் பொறுத்து விளையும் தீங்குகளைப் பற்றிக் கவனிப்போம்.

## (அ) நிலச் சொத்தில் அத்துமீறுதல்
## (Trespass to Land - Wrongs to Immovable property)

தாவர சொத்தில் ஒருவருக்குள்ள உடைமையைப் பாதிக்கும் செயல் "அத்துமீறுதல்" (Trespass) என்ற தீங்காகிறது.

உடைமை எவ்று எதைக் கூறுகிரேம்?

தாவர சொத்துக்களைக் குறித்துக் கூறப்படும் உடைமை என்ற சொல்லின் பொருள் என்ன?

வேறு எவருடைய குறுக்கீடும் இல்லாமல் ஒரு சொத்தை ஒருவர் தனித்து நேரடியாக அனுபவித்து வந்தால் அச்சொத்து அவருடைய உடைமையில் இருக்கிறது என்கிரேம்.

ஒருசொத்தின் சொந்தக்காரரிடமே அதன் உடைமை இருக்க வேண்டுமென்ற நியதி இல்லை. ஒருவர் தம்முடைய வீட்டை வாடகைக்கு விட்டிருக்கிருர். இப்போது வீட்டில் குடியிருப்பவரிடமே வீட்டின் நேரடி உடைமை (Immediate possession) இருக்கிறது. ஒருவர் தமது நிலத்தைக் குத்தகைக்கு விட்டிருந்தால், நிலத்தை உழுதுபயிரிடும் குத்தகைக்காரரிடமே நிலத்தின் நேரடி உடைமை இருக்கிறது வீட்டின் சொந்தக்காரருக்கு இருக்கும் உடைமை "நேரடியற்ற உடைமை" (Mediate possession) எனப்படும்.

சட்டத்தால் பாதுகாக்கப்படும் உடைமை, குடியிருப்பவருக்கும், குத்தகைக்காரருக்கும் உள்ளதுபோன்ற நேரடி உடைமைதான். சில வேளைகளில், ஒரு சொத்தின் நேரடி உடைமையில் இருப்பவருக்கு எவ்வித உரிமையும் இல்லாமலிருக்கலாம். உரிமை ஏதுமின்றி ஒரு நிலத்தை ஒருவர் ஆக்கிரமித்துக் கொண்டிருக்கலாம். இந்தவித உடைமைக்கும் பிறரால் கேடு விளையாதபடி சட்டம் பாதுகாக்கிறது.

நேரடி உடைமையைப் பாதிக்கும் செயல்களைத்தான் "அத்துமீறுதல்" என்கிரேம்.

தங்கும் விடுதி ஒன்றில் தற்காலிகமாக ஓர் அறையை வாடகைக்கு எடுத்துக்கொண்டு அதில் தங்கியிருப்பவருக்கு அந்த அறையைப் பொறுத்து நேரடி உடைமை இருக்கிறது என்று சொல்லுவதில்லை. அந்த அறையில் தங்குவதற்கு அனுமதிபெற்றவராகவே (Licensee) அவர் கருதப்படுகிறார். எனவே அவர் அனுபோகத்திற்கு இன்னொருவரால் கேடு விளைந்தால் அது "அத்துமீறும்" தீங்கு ஆவதில்லை.

நிலச்சொத்தின் உடைமைக்குக் கேடு விளைவிக்கும் அத்துமீறும் செயல்களை மூன்று வகைகளாகப் பிரிக்கலாம். அவை யாவன:

(1) அத்துமீறிப் புகுதல்
(2) அத்துமீறி இடுதல்
(3) அத்துமீறி இருத்தல்.

## (1) அத்துமீறிப் புகுதல் (Trespass by wrongful entry)

வாதி வசம் இருக்கும் நிலச்சொத்தில் ("நிலச்சொத்து" என்பதில் வீடு, தோட்டம் முதலிய பிற தாவர சொத்துக்களும் அடங்கும்) எதிர்வாதி அத்துமீறிப் புகுந்து, உடைமையைக் கைப்பற்றி ஆக்கிரமித்துக் கொள்வதுதான் பெரும்பான்மையாக நடப்பது. இது "அத்துமீறிப் புகுதல்" எனப்படும். "புகுதல்" என்றால் நிலத்திற்குள் வெகுதூரம் நுழைய வேண்டும் என்பதன்று. ஒரு வீட்டின் சன்னல் வழியாகக் கையை விடுதலும் புகுதலேயாகும். ஒரு சொத்தின் எல்லையைத் தாண்டினால்தான் "புகுதல்" நேர்கின்றது என்று நினைப்பது சரியன்று. ஒருவர் வீட்டின் சுவரை மற்றொருவர் கையாலோ, கழியாலோ தொட்டால்கூட அஃது அத்துமீறிய செயல்தான். தன் நிலத்திலுள்ள பயிரை அறுவடை செய்யும்பொழுது தவறுதலாக அரிவாள் பக்கத்து நிலத்திலுள்ள பயிரில் பட்டு அறுத்து விட்டாலும் அஃது அத்துமீறும் செயலாகும்.

ஒருவர் தம்முடைய நிலந்தான் என்று தவறாக எண்ணிக் கொண்டு இன்னொருவரது நிலத்தில் நுழைந்தாரென்றாலும் அஃது அத்துமீறிப் புகுந்ததேயாகும். நம் கட்டிடத்தைப் பழுது பார்ப்பதற்கென்று இன்னொருவர் நிலத்தில் நாம் புக முடியாது; அவ்வாறு புகுதலும் அத்துமீறுவதாகும். [Hewlitt V. Bickerton (1947) C. L. C. 10504.]

எவ்வளவு அற்பமான அளவில் முறைதவறிப் புகுதல் இருந்த போதிலும் அதை அத்துமீறிய செயலாகவே சட்டம் கொள்கிறது.

ஒரு குறிப்பிட்ட காரியத்திற்கு மட்டும் ஒருவர் நிலத்தில் இன்னொருவர் நுழைவதற்கு அனுமதி இருக்கலாம். அந்தக் காரியமல்லாத வேறு நோக்கத்துடன் அங்கு நுழைவது அத்து மீறுவதாகும். பொது வீதியில் நடந்து செல்லும் உரிமை எல்லோருக்கும் உண்டு. ஆனால் பொதுப்பாதையில் படுத்திருப் பது அத்துமீறிய செயல். பொதுச்சாலையில் கால்நடைகளை மேய்த்தல், பொதுப்பாதையில் நின்று கொண்டு பாதையை அடுத்து இருக்கும் வீட்டிற்குள் நடக்கும் காரியங்களை வேண்டும் என்றே தொடர்ந்து பார்த்துக் கொண்டு நிற்றல், இவையும் முறையற்ற செயல்களாகின்றன.

### (2) அத்துமீறி இடுதல் (Trespass by introducing things on land)

பிறரது வீட்டுச் சுவரில் ஆணி அடிப்பது, அச் சுவரின்மீது வேறு பொருள்களைச் சார்த்தி வைப்பது, ஒருவர் கட்டிடத்தின் கொடுங்கை அல்லது சுவரின் விளிம்பு அடுத்தவர் நிலத்தில் எல்லை தாண்டி நீட்டிக் கொண்டிருப்பது, இவை போன்ற செயல்கள் அத்துமீறி இடும் செயலாகும். ஒருவர் நிலத்திற்குள் கால்நடைகளை ஒட்டிவிடுதலும் இத்தன்மையதே. இன்னொருவர் நிலத்தின்மீது குப்பையைக் கொட்டுவது, கற்களைக் குவித்து வைப்பது போன்ற செயல்களும் தீங்கானவை.

### அத்துமீறலுக்கும் தொல்லை விளைவித்தலுக்கு (Nuisance) முள்ள வேறுபாடு

கேடு விளைவிக்கும் பொருள்கள் நேரடியாகப் புகுத்தப் பட்டால் அஃது அத்துமீறுதல் என்ற தீங்கு; நேரடியாக இன்றி வேறு செயலின் விளைவாகப் புகுந்தால் அது தொல்லை (Nuisance) என்ற தீங்காகும். அண்டை நிலத்தில் கற்களைக் குவித்து வைப்பது அத்துமீறுதல்; ஒரு வீட்டின் கழிவு நீர் அடுத்த நிலத் தில் புகும்படி விடுவது தொல்லை விளைவித்தல் ஆகும். வாதியின் நிலத்தில் எதிர்வாதி ஒரு மரத்தை நட்டால் அஃது அத்துமீறும் செயல்; எதிர்வாதி தம் நிலத்திலுள்ள மரத்தின் கிளைகளை வாதி நிலத்தின் எல்லையைக் கடந்து வளரவிட்டால் அது தொல்லை விளைவிக்கும் செயல்.

### கால்நடைகளைப் புகவிடுதல் (Cattle Trespass)

ஒருவருடைய ஆடு, மாடு போன்ற கால்நடைகள் இன்னொரு வரது நிலத்திற்குள் புகுந்து சேதம் விளைவிப்பது சாதாரணமாக

நடைபெறுவதாகும். இதைத் தடுப்பதற்கென்று நம் நாட்டில் 1871 ஆம் ஆண்டில் "கால்நடை அத்துமீறுதல் சட்டம்" (Cattle Trespass Act) என்று இயற்றப்பட்டிருக்கிறது. "கால் நடை" என்பதில் ஆடு, மாடு, யானை, குதிரை, பன்றி, கழுதை, ஒட்டகம் முதலிய விலங்குகளும் அடங்கும். அத்துமீறி நுழைந்த கால்நடைகளைக் கிராமப் பட்டியில் (Village Cattle Pound) அடைத்து விடலாம். பயிருக்கு அந்தக் கால்நடைகளால் சேதம் விளைந்தால் அதற்கான நட்டஈட்டைக் கால்நடைகளின் சொந்தக் காரர்களிடமிருந்து பெறும் உரிமை நிலத்தை உடையவர்க்கு உண்டு.

எதிர்வாதிக்குச் சொந்தமான நோய் கொண்ட ஆடு வாதியின் நிலத்திற்குள் புகுந்து, அங்கிருந்த வாதியின் ஆடுகளுக்கும் நோயைப் பரப்பியது. இந்த நட்டத்திற்கு எதிர்வாதி பொறுப் பாக்கப்பட்டார்.

எனவே கால்நடைகளை வளர்ப்பவர்கள் அவை பிறர் சொத்தில் புகுந்து கேடு விளைவிக்காதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்.

நாய், பூனை போன்ற பிராணிகள் அத்துமீறிப் புகுந்தன வெனில் அவற்றை வளர்ப்பவர்கள் பொறுப்பாவதில்லை. ஏனெனில் இப்பிராணிகள் பொதுவாகக் கட்டிப் போட்டு வைக்கத் தக்கவையல்ல. எதிர்வாதியின் பூனை வாதியின் வீட்டிற்குள் நுழைந்து கோழி, புறு முதலிய பறவைகளைத் தின்று விட்டது. அதற்கு எதிர்வாதி பொறுப்பல்லர் என்பது தீர்ப்பு. [Buckle V Holmes. (1926) 2. K. B. 125].

### (3) அத்துமீறி இருத்தல் (Trespass by remaining on land)

ஒருவர் ஒரு கட்டிடத்திற்குள் நியாயமான முறையில் நுழைந்திருக்கலாம். ஆனால் எந்தக் காரியத்திற்கென நுழையும் உரிமை வழங்கப்பட்டதோ அந்தக் காரியத்திற்கு மாறாக அவர் அச் சொத்தில் இருப்பதைச் சட்டம் அனுமதிப்பதில்லை.

ஒரு குறிப்பிட்ட அலுவலுக்கென அனுமதி பெற்று ஒரு கட்டிடத்திற்குள் புகுந்தவர், அந்த அலுவல் முடிந்த பிறகும் அந்த இடத்தை விட்டு வெளியேறாமல் இருந்தால் அஃது "அத்து மீறி இருத்தல்" ஆகும். படக்காட்சி நடக்கும் கொட்டகைக்குள் 'அனுமதிச் சீட்டு' வாங்கிச் சென்றவர் காட்சி முடிந்த பிறகும் வெளியே வர மறுத்துக் கொட்டகைக்குள்ளேயே தங்குவது இதன்பாற் பட்டது.

## (ஆ) நிலப்பரப்பிற்கு மேலும் கீழுமுள்ள உரிமை

பத்து ஏக்கர் நிலம் ஒருவர் உடைமையில் இருக்கிறது எனில், அந்த நிலவரம்பின்மேற் பரப்பிற்கு நேர் கீழேயுள்ள பூமியின் அடித்தளமும், நேர் மேலேயுள்ள ஆகாய வெளியும் அவருடைய உடைமையில் இருப்பதாகவே சட்டம் கருதுகிறது. ஒரு நிலத்தின் சொந்தக்காரர் அந்த நிலத்தின் நேர் மேலுள்ள ஆகாய வெளிக்கும், நேர் கீழுள்ள அடித்தளத்திற்கும் உரிமை பெற்றவர் ஆகின்றார்.

எனவே, ஒருவர் நிலத்திற்கு எவ்வளவு ஆழத்திலும் அந்த நிலத்தின் எல்லையைத் தாண்டுதல் அத்துமீறுதல் ஆகும். நிலக்கரிச் சுரங்கம் வைத்திருப்பவர் அண்டைநிலத்தின் அடியிலிருந்து நிலக்கரி எடுத்தால் அஃது அத்துமீறும் செயலேயாகும்.

அது போன்றே, தனது நிலத்திற்கு நேர் மேலாக உள்ள வெளியில் பிறர் புகுவதைத் தடுக்கும் உரிமை ஒருவருக்கு உண்டு. ஒருவரது நிலத்திற்கு மேலே அண்டை நிலத்திலுள்ள மரக்கிளைகள் நீட்டிக்கொண்டிருந்தால் அக்கிளைகளை அவர் அகற்றலாம். நீட்டிக்கொண்டிருக்கும் கிளைகளால் இடைஞ்சல் ஏற்பட்டிருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. அண்டை வீட்டின் கொடுங்கை நம் நிலத்திற்குமேல் எல்லையைத் தாண்டி நீட்டிக் கொண்டிருந்தால் அதை நாம் தடுக்கலாம்.

ஒருவர் நிலப்பகுதிக்கு நேர் மேலேயுள்ள ஆகாய வெளியில் அனுமதியின்றிப் பிறர் புகுதல் அத்துமீறுதல் ஆகும். [Kelsen V. Imperial Tobacco Co. Ltd. (1957) 2 Q. B. 334] எனவே, ஆகாய விமானங்கள் பறந்து செல்லுவதைக் கீழ்நிலத்துக்காரர்கள் தடை செய்யாமல் இருக்கவேண்டும் என்பதற்காக நம் நாட்டில் 1934 ஆம் ஆண்டு இந்திய ஆகாய விமானச் சட்டம் (Indian Aircraft Act 1934) இயற்றப்பட்டிருக்கிறது. அந்தச் சட்டத்தின்படி, காற்று, தட்ப வெப்ப நிலை இன்னும் மற்றச் சூழ்நிலைகளுக்கேற்பப் போதுமான உயரத்தில் விமானங்கள் பறப்பதைக் கீழ் நிலத்துக்காரர்கள் தடைசெய்ய முடியாது.

## (இ) தொடர்ந்து நிகழும் அத்துமீறுகை (Continuing trespass)

ஒருவருடைய நிலத்தினுள் அத்துமீறி இருத்தலும், அத்துமீறி ஒரு பொருளை வைத்தலும் "தொடர்நிகழ் தீங்குகள்" (Continuing wrongs) என அழைக்கப்படுகின்றன. இந்த வகையான அத்துமீறுகை அகற்றப்படும் வரை, வாதி அதற்கான நடவடிக்கைகளை

எடுத்துக் கொண்டே இருக்கலாம். ஒருவர் நிலத்தை மற்றொருவர் ஆக்கிரமித்துக் கொண்டார் எனில், அந்த ஆக்கிரமிப்பு அகலும் வரை, அத்துமீறுகை நிகழ்ந்து கொண்டே இருப்பதாகச் சட்டம் கொள்கிறது. முறைமீறி நுழைந்த அன்றோடு அத்துமீறுகை என்ற தீங்கு நடந்து முடிந்துவிட்டது எனக் கொள்வது சரியன்று. ஆக்கிரமிப்பு நீடிக்கும் ஒவ்வொரு நாளும் அத்து மீறுகை தொடர்ந்து செய்யப்பட்டுக் கொண்டே இருக்கிறது என்பதே சட்டத்தின் கொள்கை. எனவே, அதை அகற்றுவதற்கென ஒவ்வொரு நாளும் புதிய புதிய நடவடிக்கைகளை வாதி எடுக்கலாம். ஒவ்வொரு நாளும் வாதிக்கு விளையும் நட்டத்திற்கு ஈடு செய்யும் பொறுப்பு எதிர்வாதிக்கு உண்டு.

### (ஈ) நேரடி உடைமை உள்ளவரே வழக்குத் தொடர முடியும்

'அத்துமீறுதல்' என்பது உடைமைக்கு ஊறு விளைவிக்கும் தீங்கு எனக் கண்டோம். ஒரு நிலத்தைத் தமது தனித்த அனுபோகத்தில் வைத்துக்கொள்ளும் உரிமையுள்ளவர், அவ்வாறு அனுபவிக்க முடியாதபடி அவர் உடைமைக்குக் கேடு விளைவிப்பதே அத்துமீறுதல் என்ற தீங்கின் சாரமாகும். எனவே, இந்தத் தீங்கிழைப்பவர்மீது வழக்குத் தொடரும் அதிகாரம் சொத்தைத் தன் நேரடி உடைமையில் (Direct possession) உள்ளவருக்கே உண்டு.

ஒரு நிலத்தின் சொந்தக்காரர் ஒருவராகவும், உடைமையை வைத்திருப்பவர் மற்றொருவராகவும் இருக்கலாம். தமது நிலத்தை ஒருவர் குத்தகைக்கு விட்டிருக்கிறார். இப்பொழுது குத்தகைக்காரரே நிலத்தின் நேரடி உடைமையில் இருப்பவர். அந்த நிலத்தில் அத்துமீறி நுழைபவர்மீது குத்தகைக்காரர்தாம் வழக்குத் தொடர முடியும். நிலத்தின் சொந்தக்காரருக்கு அப்போதைக்கு நேரடியான உடைமைப் பாத்தியம் இல்லையாதலால் வழக்கிடும் அதிகாரம் அவருக்கு இல்லை.

### (உ) சொத்தின் சொந்தக்காரர் எப்பொழுது வழக்கிடலாம்

வாடகைக்காரரின் அல்லது குத்தகைக்காரரின் நேரடி உடைமையில் இருக்கும் ஒரு சொத்தில் மூன்றாமவர் அத்துமீறி நுழைந்து சொத்தின்மீது உரிமை கொண்டாடினாலோ, அல்லது சொத்திற்குச் சேதம் விளைவித்தாலோ, சொத்தின் சொந்தக்காரர் வழக்குத் தொடரலாம்.

## (ஊ) நேரடி உடைமைக்காரரும் சொத்தின் சொந்தக்காரரும்

ஒருவருடைய நேரடி உடைமை (Direct Possession) யைப் பாதுகாப்பதில் சட்டம் முனைந்து நிற்கிறது. ஒரு சொத்தின் சொந்தக்காரர்கூட அச் சொத்தின் நேரடி உடைமைப் பாத்தியம் பெற்றவரின் உரிமைக்கு ஊறு விளைவித்தல் தகாது. ஒருவர் தமது வீட்டை வாடகைக்கு விட்டிருக்கிருர். வீட்டின் இருப்பாட்சி (Occupation) உள்ளோரிடமே வீட்டின் நேரடி உடைமை இருக்கிறது. குடியிருப்பவரின் அனுமதியின்றி வீட்டிற்குள் புகுவதற்கு வீட்டின் சொந்தக்காரருக்கும் உரிமை இல்லை. அவ்வாறு நுழைந்தால் அஃது அத்துமீறிய செயலாகும்.

''ஒருவர் இருக்கும் வீடு அவர் ஒய்வுபெறும் இடமாக இருப்பதன்றி, தம்மைத் தீங்கிலிருந்து பாதுகாத்துக் கொள்ளும் கோட்டையாகவும் அரணுகவும் அமைகிறது'' என்று பழைய ஆங்கில வழக்கு ஒன்றில் ஒரு வீட்டிற்குச் சட்டம் அளிக்கும் பாதுகாப்பின் தன்மை விளக்கப்பட்டிருக்கிறது.

வீட்டில் குடியிருப்பவர் காலிசெய்ய மறுத்தால் நீதிமன்றத்தின் மூலமாகத்தான் வீட்டின் சொந்தக்காரர் வீட்டின் நேரடி உடைமையைப் பெற முடியும். அவராகவே அந்த உடைமையைக் கைப்பற்றிக்கொள்ள முடியாது. சொத்துரிமை வேறு; சுவாதீன உரிமை வேறு. சொத்துரிமையை உடைய சொந்தக்காரருக்குச் சுவாதீனம் பெறும் பாத்தியம் உண்டு. இருப்பினும் குடியிருப்பவரின் சம்மதத்தின் பேரிலேயே சுவாதீனத்தைப் பெற முடியும்; அல்லது நீதிமன்றத்தின்வழிப் பெறலாம். வீட்டின் சொந்தக்காரர் என்ற உரிமையை வைத்து அவர் வன்முறையினுல் வீட்டின் நேரடி உடைமையைக் கைப்பற்றுவதைச் சட்டம் தடுக்கிறது. அவ்வாறு கைப்பற்றுவது அத்துமீறும் தீங்காகும். இம்மாதிரியே குத்தகைக்காரரின் சம்மதமின்றி நிலத்தின் சொந்தக்காரர் நிலத்தை வல்லந்தமாகக் கைப்பற்றிக் கொள்ள முடியாது.

எனவே, அத்துமீறுதல் என்பது உடைமைக்கு எதிரான தீங்கேயன்றிச் சொத்துரிமைக்கு எதிரானதன்று என்பது தெளிவாகும். சொத்துரிமையுள்ளவர் கூட அச் சொத்தின்மீது பிறருக்குள்ள நேரடி உடைமையை மதித்து நடக்கவேண்டும் என்பதும் புலனுகும்.

## (எ) ஆக்கிரமிப்பை அகற்றுவது யார்?

ஒரு நிலத்தின்மீது எவ்வித உரிமையுமின்றி ஒருவர் அதை ஆக்கிரமித்து வைத்துக் கொண்டிருக்கிருர் எனில், அந்த ஆக்கிரமிப்பாளரை (Trespasser) நிலத்தை விட்டு வெளியேற்றுவதற்கு

யாருக்கு அதிகாரம் உண்டு? அந்த நிலத்தின் சொந்தக்காரர் அல்லது அந்த நிலத்தை உடைமை கொள்ளும் பாத்தியதை பெற்றவர், இவர்கள்தாம் அமைதியான முறையிலோ அல்லது நீதிமன்றத்தின் வழியாகவோ ஆக்கிரமிப்பை அகற்ற முடியும். வேறு எவரும் ஆக்கிரமிப்பாளரின் உடைமையை எதிர்த்துக் கேட்க முடியாது. அச் சொத்தில் உரிமை எதுவும் இல்லாத மற்றொருவர் ஆக்கிரமிப்பாளரின் உடைமைக்கு ஊறு விளைவித்தால் அஃது அத்துமீறுவதேயாகும்.

எந்த விதப் பாத்தியமுமின்றி ஒரு நிலச் சொத்தை ஒருவர் ஆக்கிரமித்துச் சுவாதீனத்தில் வைத்துக் கொண்டிருக்கலாம். அப்படிப்பட்ட ஆக்கிரமிப்பான உடைமையும் சட்டத்தால் பாதுகாக்கப்படுகிறது. சம்பந்தம் இல்லாத இன்னொருவர் அந்த நிலச்சொத்தில் அத்துமீறி நுழைந்தால் முன் ஆக்கிரமிப்பாளருக்கு அதைத் தடுக்கும் அதிகாரம் உண்டு.

இவ்வாறு ஆக்கிரமிப்பாளரின் உடைமையும்கூடச் சொத்திற்குச் சம்பந்தமில்லாத பிறரிடமிருந்து பாதுகாக்கப்படுகிறது.

## (ஏ) அத்துமீறுதல் எப்பொழுது தீங்கு ஆவதில்லை?

உடைமைக்காரரின் அனுமதி பெற்று அல்லது சட்டம் அளிக்கும் அதிகாரத்தின்படி ஒரு சொத்தில் நுழைவது அத்துமீறிய செயல் ஆகாது. நீதிமன்ற உத்திரவின்படி சோதனையிடுவதற்கென்றோ, ஒருவரைக் கைது செய்வதற்கென்றோ, ஒரு பொருளை ஜப்தி செய்வதற்கென்றோ விதிகளுக்குட்பட்டு ஒரு சொத்தில் நுழைவது தீங்காவதில்லை.

நம்முடைய பொருள் மற்றவர் நிலத்தில் வைக்கப்பட்டிருந்தால் அமைதியான முறையில் அந்த நிலத்தில் புகுந்து நாம் எடுத்து வரலாம். பொதுப்பாதை வழியே ஓட்டப்பட்ட ஆடு மாடுகள் பாதையை ஒட்டி வேலியில்லாதிருக்கும் நிலத்திற்குள் நுழைந்துவிட்டால், அந்த நிலத்திற்குள் புகுந்து அவைகளைத் திரும்ப ஓட்டி வரலாம். இவ்வாறு புகுவது அத்துமீறிய நுழைவு ஆகாது. ஆனால் வேட்டையாடும்பொழுது ஒரு பிராணியைத் துரத்திக் கொண்டு மற்றொருவர் நிலத்தில் புகுதல் தகாது.

ஒருவர் வீடு தீப்பற்றி எரிகின்றது. அதை அணைக்காவிடில் நம் வீட்டிற்கும் நெருப்புப் பரவி விடும். இந்நிலையில் அவர் வீட்டிற்குள் நுழைந்து தீயை அணைக்க முற்படுகிறோம். இவ்வாறு தவிர்க்க முடியாத அவசியத்தினால் பிறர் சொத்தில் நுழைதலும் அத்துமீறுதல் ஆவதில்லை.

ஒரு சொத்தைப் பொறுத்து ஒன்றுக்கு மேற்பட்ட நபர்களுக்குக் கூட்டு அனுபோக உரிமை இருந்தால், ஒரு கூட்டு அனுபோகக்காரர்மீது மற்றவர் அத்துமீறியதாக வழக்குத் தொடர முடியாது.

## (ஐ) அத்துமீறுதலை நாமே அகற்றும் வழி

உடைமையைப் பறிகொடுத்த ஒருவர், அத்துமீறியவர் வசமுள்ள அச்சொத்தில் பலவந்தம் ஏதுமின்றி நுழைந்து தம் உடைமையை மீண்டும் நிலைநாட்டிக் கொள்ளலாம்.

நம் நேரடி உடைமையில் இருக்கும் சொத்தில் அத்துமீறி நுழைபவரை நாமே வெளியேற்றுவதைச் சட்டம் அனுமதிக்கிறது. அவ்வாறு வெளியேற்றுவதற்கு, அவசியமானல், வேண்டிய அளவு தகுந்த முறையில் பலவந்தத்தைப் பயன்படுத்தலாம். ஆனல் மிதமிஞ்சிய பலவந்தம் கூடாது.

அத்துமீறி நுழையும் ஆடு மாடுகளைப் பட்டியில் அடைத்துக் கால்நடைகளின் அத்துமீறுதலை அகற்றலாம்.

## (ஒ) நீதிமன்றத்தின் மூலம் நிவாரணங்கள்

### ஆக்கிரமித்தவரை வெளியேற்றுதல் (Ejectment)

நிலத்திலோ வீட்டிலோ அத்துமீறி நுழைந்து சுவாதீனத்திலிருப்பவரை நீதிமன்றத்தின் மூலம் வெளியேற்றலாம்.

நம் நாட்டில் அமுலில் இருக்கும் உரிய நிவாரணச் சட்டத்தின் (Specific Relief Act) 9 ஆவது பிரிவுப்படி சொத்தின் உடைமையைப் பறிகொடுத்தவர் எவரும், அதை இழந்த ஆறு மாதங்களுக்குள் நீதிமன்றத்தில் வழக்கிட்டு மீண்டும் உடைமையைப் பெறலாம். குத்தகைக்காரர், வாடகைக்காரர் இவர்களும் உரிமை ஏதுமின்றி உடைமையில் இருந்தவர்களுங் கூட, உடைமையை வல்லந்தமாக எடுத்துக் கொண்டவர் அச் சொத்தின் சொந்தக்காரராகவே இருந்தாலும், மேலே கூறியபடி உடைமையைத் திரும்பப் பெற முடியும். சொத்தின் சொந்தக்காரர் தமது சொத்துரிமையின் (Title) அடிப்படையில் வேறு வழக்குத் தொடர்ந்துதான் அச்சொத்தின் உடைமையை மீண்டும் அடைய முடியும்.

குற்றவியல் நடைமுறைச் சட்டத்தின் (Criminal Procedure Code) 145 ஆவது பிரிவும் ஒருவர் உடைமையை மற்றவர் பறிக்காமல் இருப்பதற்கு வகை செய்கிறது. உடைமையைப் பறிகொடுத்த எவரும் அதிலிருந்து இரண்டு மாதங்களுக்குள் குற்றவியல் நீதிமன்றங்கள் வாயிலாக இழந்த உடைமையைத் திரும்பப் பெறுவதற்கு வழி உண்டு.

குற்றம் செய்யும் நோக்கத்துடன் அத்துமீறி நுழைதல் இந்தியக் குற்றச் சட்டப்படி தண்டிக்கத்தக்க குற்றமாகும்.

நட்ட ஈடு பெறுதல்

அத்துமீறி ஒரு நிலத்திலோ, வீட்டிலோ அமர்ந்தவர் அச் சொத்தின் பயனை அடைகின்றார். உடைமையைப் பறிகொடுத்தவர் அந்தப் பயனை இழந்தவராகிறார். எனவே, உடைமையைப் பறிகொடுத்த வாதி, சொத்தின் உடைமையைத் திரும்பப் பெறுவதுடன் இழந்த வருமானத்தையும் ஆக்கிரமிப்பாளரிடமிருந்து பெறுவதற்குச் சட்டம் இடமளிக்கிறது. உடைமை இழந்த நாளிலிருந்து, மீண்டும் அதைப் பெற்ற நாள் வரையிலும் அந்தச் சொத்திலிருந்து நியாயமாக எவ்வளவு வருமானம் கிடைக்குமோ அந்த வருமானத்தை நட்ட ஈடாக அத்துமீறிய எதிர்வாதியிடமிருந்து வாதி பெறலாம். இந்த நட்ட ஈட்டை இடைக்கால வருமானம் (Mesne profits) என்பார்கள்.

ஆக்கிரமித்துக் கொண்ட விளைநிலத்தில் சாகுபடி செய்யவில்லை என்ற காரணங் காட்டி எதிர்வாதி நட்ட ஈடு கொடுக்க வேண்டிய பொறுப்பிலிருந்து தப்பமுடியாது. அத்து மீறப்பட்ட சொத்து நியாயமான முறையில் பயன்படுத்தப்பட்டால் என்ன வருமானம் கிடைக்கும் என்ற அடிப்படையை வைத்தே இடைக் கால வருமானத்தின் அளவு அறுதியிடப்படுகிறது.

வாதியின் பழைய கட்டிடம் ஒன்றை எதிர்வாதி அத்துமீறி நுழைந்து இடித்துவிட்டார் என வைத்துக்கொள்வோம். வாதிக்கு எந்த அடிப்படையில் நட்ட ஈடு அளிக்கப்படுகிறது? அதைப் போன்ற கட்டிடத்தைப் புதிதாகக் கட்டுவதற்குச் செலவாகும் தொகையைக் கணக்கிட்டு அதன்படி நட்ட ஈடு அளிக்கப் படுவதில்லை. பழைய கட்டிடத்தின் மதிப்பு இடிக்கப்பட்ட பொழுது எவ்வளவோ அவ்வளவே நட்ட ஈடாகக் கொடுக்கப் படும். [Lodge Holes Colliery Vs Wednesbury Corporation (1908) A. C. 323]

தடைக் கட்டளை

வாதியின் உடைமைக்கு ஊறு விளைவிப்பதற்கு எதிர்வாதி ஆயத்தமாகிறார் என்றால் வாதி வழக்குத் தொடர்ந்து, எதிர் வாதியின் முயற்சியைத் தடுக்கும் தடைக் கட்டளை (Prohibitory Injunction) பெறலாம்.

இவ்வாறு, ஒவ்வொருவருக்கும் நிலச்சொத்தின்மீதுள்ள நேரடி உடைமையைச் சட்டம் பாதுகாத்து நிற்கிறது.

---

# பகுதி 3

## அசைபொருள்கள் குறித்த தீங்குகள்
## (Wrongs to Movables)

*உடைமைக்கு எதிரான செயலே 'தீங்கு' ஆகிறது? - ''உடைமை'' என்பது எதைக் குறிக்கின்றது? - நல்வழி வந்த உடைமை, தீ வழி வந்த உடைமை இரண்டுமே பாதுகாக்கப்படுகின்றன - தீய வழியில் பெற்ற உடைமையையும் சட்டம் பாதுகாப்பது ஏன்? - உடைமை குலைத்தல் (Trespass to Chattels) - உடைமை அகற்றல் (Conversion) - உடைமை குலைத்தல் எப்போது தீங்காவதில்லை - வழக்கிடத்தக்கவர்கள் - நட்ட ஈட்டின் அளவு - உடைமை அகற்றல் விளையும் விதங்கள் - நியாயமின்றி எடுத்துக் கொள்ளல், வைத்துக் கொள்ளல், உரிமை மாற்றல், அழித்தல் - தவறுதலால் உடைமை அகற்றப்படல் (Conversion by Mistake) - வழக்கிடும் வாதியின் பாத்தியம் - கண்டெடுப்பவரின் உடைமைப் பாத்தியம் - உடைமைப் பாத்தியம் எதுவரை நீடிக்கின்றது? - கூட்டுச் சொந்தம் உடையவர்கள் - நிவாரணங்கள் - நட்ட ஈடு பெறுதல் (Damages) - குறித்த பொருளைத் திரும்பப் பெறுதல் (Specific restitution).*

தாவர சொத்துக்களை (நிலை பொருள்களை) அனுபவிப்பதற்கு எதிராக விளையும் தீங்குகளைப் பற்றிக் கண்டோம். இந்தப் பிரிவில் சங்கமப் பொருள்களை (அசைபொருள்களை) (Movables)க் குறித்துச் செய்யப்படும் தீங்குகளைக் கவனிப்போம்.

கால் நடைகள், நகை, தட்டுமுட்டுப் பொருள்கள், காசோலைகள், உரிமைப் பத்திரங்கள், படங்கள் இவைபோன்ற பொருள்களை அசை பொருள்கள் எனக் குறிக்கின்றோம். ஒருவர் உடைமையிலுள்ள இப்பொருள்களை மற்றவர் முறைதவறிப் பறிக்காமல் இருப்பதற்கும், அப்பொருள்களுக்குக் கேடு விளைவிக்காமல் இருப்பதற்கும் சட்டம் வகை செய்திருக்கிறது.

அசைபொருள்கள் குறித்த தீங்குகள் என்று இங்கு நாம் குறிப்பிடுவது, ஒருவருக்கு அசைபொருள்களின்மீதுள்ள உடைமைக்கு எதிரான செயல்களையேதாம். அப்பொருள்களின் சொத்துரிமை எவருக்கு இருந்தாலும், அவை யாருடைய உடைமையில் இருக்கின்றனவோ அவருடைய உடைமையைச் சட்டம் பாதுகாக்கிறது.

### ''உடைமை'' என்பது எதைக் குறிக்கின்றது?

இந்த இடத்தில், ''உடைமை'' (Possession) என்ற சொல்லின் உட்பொருளை நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

என்னுடைய புத்தகத்தை என் கையில் வைத்துக் கொண்டி டிருக்கிறேன். புத்தகம் எனக்குச் சொந்தமானது; அதன் உடைமையும் என்னிடமே இருக்கிறது. அந்தப் புத்தகத்தின் சொத்துரிமையும் உடைமையும் என்னிடமே இருக்கின்றன. இப்பொழுது உடைமை பற்றிய சிக்கல் ஏதுமில்லை. புத்தகத்தின் உடைமை என்னிடம் இருக்கிறது என்று எளிதில் கூறிவிடலாம். புத்தகத்தை வீட்டில் வைத்துவிட்டு அலுவலகத்திற்கு வருகிறேன். புத்தகம் என் கையில் நேரடியாக வைக்கப்பெற வில்லை என்பதால் புத்தகத்தின் உடைமை என்னிடம் இல்லை என்று கூறுவது சரியா? இல்லை. என் வீட்டிலுள்ள புத்தகம், இன்னும் மற்றப் பொருள்களெல்லாம் என்னுடைய ஆளுகையில் இருப்பதால், நான் அலுவலகத்தில் இருந்தாலும், வேறு எங்கிருந்தாலும், அவைகளின் உடைமை என்னிடத்திலேயே இருக்கிறது.

என் வீட்டிற்கு வந்த விருந்தினர் தாம் கொண்டுவந்த பெட்டியை வீட்டில் வைத்துவிட்டு வெளியே சென்றிருக்கிறார். அவருடைய பெட்டி என் வீட்டில் இருப்பதால் அதன் உடைமை என்னிடம் இருக்கிறதென்று சொல்வது சரியன்று. பெட்டி என் வசத்தில் (Custody) இருக்கிறது என்பது உண்மைதான். "பெட்டி என்னுடையது, அஃது என் உடைமையில் இருக்கிறது" என்ற உடைமை எண்ணம் என் விருந்தினருக்குத்தான் இருக்கிறது, எனக்கு இல்லை. எனவே, அந்தப் பெட்டியின் உடைமை அவரிடமே இருக்கிறது.

நமது நகையை ஒருவரிடம் அடகு வைக்கிறோம். கடன் பணத்தைக் கொடுத்த பின்பே நாம் நகையைத் திரும்பப் பெற வேண்டியிருக்கிறது. நேரடியாக நம் வசம் நகை இல்லாததால் நாம் நகையின் உடைமையை இழந்துவிட்டோம் என்பதன்று. அடகு பெற்றவரே நகையை நேரடியாக வைத்திருக்கிறார், எனவே, அவருக்கிருக்கும் உடைமையை நேரடி உடைமை (Immediate Possession) என்றும், நமக்கிருக்கும் உடைமை நேரடியற்ற உடைமை (Mediate Possession) என்றும் கூறுகிறோம். எனது பொருளை என் வேலையாளிடம் ஒப்புவித்திருக்கிறேன் என்றால், அந்தப் பொருளின் நேரடி உடைமை வேலையாளிடமும், நேரடியற்ற உடைமை என்னிடமும் இருக்கின்றன. வேலையாளிடமிருந்து அந்தப் பொருளை இன்னொருவர் பறித்துக் கொண்டால், அஃது அவருக்கிருக்கும் நேரடி உடைமைக்கு எதிரான தீங்காகும். நான் ஒப்புவித்த பொருளை வேலையாள் அபகரித்துக் கொண்டால் அஃது என்னுடைய நேரடியற்ற உடைமைக்கு எதிரான தீங்காகும்.

நகையை அடகு பெற்றவருக்குக் கடன் பணத்தைக் கொடுத்துத் தீர்க்காமல் நகையை அவரிடமிருந்து நான் எடுத்துக் கொண்டேன் என்ருல் அஃது அவருடைய நேரடி உடைமைக்கு எதிரான தீங்காகிறது. கடனைக் கொடுத்துத் தீர்த்த பின்பும் நகையை என்னிடம் திருப்பித் தர அவர் மறுத்தால் அது, அந்த நகைமீது எனக்கிருக்கும் நேரடியற்ற உடைமைக்கு எதிரான தீங்காகும். இந்த முறையில் நேரடி உடைமை, நேரடியற்ற உடைமை என்ற இரண்டு வகை உடைமைகளும் சட்டத்தால் பாதுகாக்கப்படுகின்றன.

மேலும், அடகு பெற்றவரிடமிருந்து எனது நகையை இன்னெருவர் வன்முறையில் எடுத்துக் கொள்ளுகிருர் என வைப்போம். அவ்வாறு எடுத்தவர்மீது, நேரடி உடைமை கொண்டிருந்த அடகு பெற்றவரோ அல்லது நேரடியற்ற உடைமை பெற்றிருந்த நானே வழக்கிடலாம்.

ஒரு பொருளின் உடைமை அப்போதைக்கு இல்லாதிருந்தாலும் அதை உடனே திரும்பப் பெறுவதற்கு உரிமையுள்ளவரெனில் உடைமைக்கு ஊறு விளைவிப்பவர்மீது வழக்கிடலாம்.

ஒரு பொருளை ஒருவர் கண்டெடுக்கின்ருர். அந்தப் பொருள் அவருக்குச் சொந்தமானதில்லை. இருப்பினும், கண்டெடுத்தவரின் (Finder of goods) உடைமையைச் சட்டம் ஒப்புக் கொள்கிறது. எனவே, அவரிடமிருந்து அந்தப் பொருளை மற்றவர் பறிப்பது தீங்கான செயலாகிறது.

புகை போக்கிகளைத் துடைத்து வாழும் ஒரு பையன், தான் கண்டெடுத்த நகையை ஒரு நகை வணிகரிடம் கொடுத்து விற்க முயன்ருன். நகை வணிகர் சிறுவனை ஏமாற்றலாமெனக் கருதி அரைப் பென்சு நாணயத்தை விலையாகக் கொடுக்கவே, சிறுவன் அதற்கு இசையவில்லை. நகையைத் திருப்பித் தர வணிகர் மறுத்ததால், சிறுவன் வணிகர்மீது வழக்கிட்டான். சிறுவனுக்கு அந்த நகை சொந்தம் இல்லையாயினும், அதை அவன் கண்டெடுத்ததால் அதன் உடைமையை மீண்டும் பெறுவதற்கு உரிமையுண்டு என்றும், வணிகர் நகையைக் கொடுக்க மறுத்தது அந்த உடைமைக்கு எதிரான தீங்கு என்றும் தீர்ப்புக் கூறப்பட்டது. [Armory V. Delamirie (1721) 1. Stra. 505]

### நல்வழி வந்த உடைமை; தீ வழி வந்த உடைமை, இரண்டுமே பாதுகாக்கப்படுகின்றன

ஒரு நகையை ஒருவன் திருடி வைத்திருக்கிருன். திருடனிடமிருந்து அந்த நகையை இன்னெருவர் தட்டிப் பறிக்கலாமா?

கூடாது. தீய வழியில் பெறப்பட்ட உடைமையாக இருந்தாலும், அந்த உடைமையையும் சட்டம் மதிக்கின்றது. எனவே, தன் வசமிருந்த திருட்டு நகையைப் பறித்தவர்மீது திருடன் வழக்கிடலாம். இதுபோன்றே ஒருவர் கையாடல் செய்து வைத்துக் கொண்டிருக்கும் பொருளை மற்றொருவர் கவர முடியாது. ஆனால், அந்தப் பொருளின் சொந்தக்காரர் அல்லது அவர் சார்பில் மற்றொருவர் அதைப் பறித்துக் கொண்டால் அது பற்றி வழக்கிடுவதற்கில்லை.

எனவே, சட்டத்தால் பாதுகாக்கப்படும் "உடைமை" என்பது, ஒரு பொருளின் சொந்தக்காரரின் நேரடியற்ற உடைமையாகவோ, அதை வைத்திருப்பவரின் நேரடி உடைமையாகவோ, கண்டெடுத்தவரின் உடைமையாகவோ, களவாடியவரின் உடைமையாகவோ இருக்கலாம் என்பதை நினைவிற் கொள்ள வேண்டும். சட்டப்படியுள்ள நியாயமான உடைமையாகவும் இருக்கலாம். அல்லது சட்ட முரணான தீய வழியில் பெற்ற உடைமையாகவும் இருக்கலாம். எந்த விதத்தில் உடைமை பெற்றவராக இருந்தாலும், அவருடைய உடைமைக்கு ஊறு விளைவிக்கும் செயல்களைத் தீங்கெனச் சட்டம் கொள்ளுகிறது.

### தீய வழியில் பெற்ற உடைமையையும் சட்டம் பாதுகாப்பது ஏன்?

பொதுவாக, சமூக வாழ்வில் அமைதிக்குப் பங்கம் விளைவது ஒருவர் உடலை மற்றவர் தாக்குவதாலும், ஒருவர் உடைமையை மற்றவர் பறிப்பதாலுமேயாம். எனவே, ஒருவர் உடலைப் பிறர் தாக்காதவாறு காப்பது சட்டத்தின் தலையாய கடனாக இருப்பது போல், ஒருவருடைய உடைமையைப் பிறர் வன்முறையில் பறிக்காதவாறு பாதுகாப்பதும் சட்டத்தின் முக்கிய கடனாகும்.

உடைமையில், நியாயமாகப் பெற்ற உடைமை, நியாயமின்றிப் பெற்ற உடைமை என்று வேற்றுமை பாராட்டினால் உடைமையைக் காக்கும் கடனைச் சட்டம் செவ்வனே செய்ய இயலாது.

நியாயமின்றித் தீய வழியில் பெற்றுள்ள உடைமையை வன்முறையாகப் பறிக்கப்படுவதிலிருந்து சட்டம் பாதுகாப்பது இல்லை என வைத்துக் கொள்வோம். அதன் விளைவு என்ன ஆகும்?

நியாயமாகப் பெற்றிருப்போரின் உடைமைக்கு அதிகமான இடையூறுகள் விளைவதற்கு ஏதுவாகிறது. பிறர் உடைமையைப் பறித்தவர், பறிக்கப்பட்டவரின் உடைமை நியாயமானதன்று என்று தாம் நினைத்துக்கொண்டதாக எதிர்வாதம் கூறலாம். நியாயமின்றி வைத்திருப்போரின் உடைமையைப் பறித்தல் தீங்காவதில்லை என்பதைச் சாக்காகக் கூறி நியாயமான உடைமை

களுக்கும் ஊறு விளைவிக்கப்படலாம். முதலில் பிறர் உடைமையைப் பறிப்பது, பிறகு, உடைமைக்கான உரிமைபற்றித் தீர்மானிப்பது என்ற நிலை ஏற்பட்டுவிடும். ஒரு பொருளின் உடைமை பற்றி இருவருக்குள் மாறுபாடு ஏற்பட்டால், அந்தப் பொருளை வைத்திருப்பவரின் உடைமையை நியாயமற்றது என்று கூறிக்கொண்டு, மற்றவர் அதை வன்முறையில் பறிக்க முற்படுவார். இந்நிலையால் வாழ்வில் வன்முறை மலிந்துவிடும்; அமைதி குலைந்துவிடும்.

இந்த நிலையைத் தவிர்ப்பதற்காகவே, ஒவ்வொருவரின் உடைமையையும், அதன் நியாயம்பற்றி ஆராயாமல் சட்டம் பாதுகாக்கிறது. ஒருவருடைய உடைமை அகற்றப்பட வேண்டுமானால், அதைச் சட்ட முறைப்படியேதான் செய்தல் வேண்டும். அதை வன்முறையாகவோ, வஞ்சகத்தாலோ செய்தல் கூடாது என்று சட்டம் விதிக்கிறது.

அசைபொருளுடைமைக்கு விளையும் தீங்குகளை இரு வகையாகப் பிரிக்கலாம் :

(1) உடைமை குலைத்தல் (Trespass to Chattels)
(2) உடைமை அகற்றல் (Conversion)

## (1) உடைமை குலைத்தல் (Trespass to Chattels)

ஆங்கில நாட்டின் சட்ட வளர்ச்சிப் போக்கின் பயனாய் அசைபொருள் உடைமைக்கு விளையும் தீங்குகள் "அசைபொருள் குறித்து அத்துமீறுதல்" (Trespass to Chattels) என்று கூறப்படுகின்றன. அத்துமீறுதல் (Trespass) என்ற சொல்லை நிலைபொருள்கள், அசைபொருள்கள், ஆகிய இரண்டுவகைப்பொருள்களுக்கும் விளையும் தீங்கிற்குப் பயன்படுத்துவது அச் சட்டத்தின் மரபு. நாம், அத் தீங்கின் சாரத்தை மனதிற் கொண்டு, அதை "உடைமை குலைத்தல்" என்றழைப்பதே பொருந்தும்.

### "உடைமை குலைத்தல்" என்றால் என்ன ?

நியாயமான காரணமின்றி, அசைபொருள்கள்மீது ஒருவருக்குள்ள உடைமையில் நேரடியாகக் குறுக்கிட்டு அப்பொருள்களுக்குக் கேடு விளைவித்தலை "உடைமை குலைத்தல்" என்கிறோம்.

ஒருவர் வசமுள்ள பொருளை எடுத்துச் செல்லுதல், அதற்குச் சேதம் விளைத்தல் போன்ற செயல்கள் இந்தத் தீங்கின் வகையைச் சேரும்.

ஒருவருடைய நாயைச் சுட்டுக் கொல்லுவது அல்லது காயப்படுத்துவது, பிறர் வளர்க்கும் பறவைகளைச் சுடுவது, ஒருவருடைய பொருளுக்குச் சேதம் விளைவிப்பது, அடுத்தவர் நிலத்தில் மேய்ந்து கொண்டிருந்த அவருடைய கால்நடைகளை அங்கிருந்து விரட்டிவிடுவது, பிறருடைய குதிரையை மிரட்டி ஓட வைப்பது, இவையெல்லாம் "உடைமை குலைத்தல்" என்ற தீங்குகள் என்பது தீர்ப்பு.

நியாயம் ஏதுமின்றிப் பிறர் பொருளைத் தொடுதல்கூடத் தகாத செயல்தான். அந்தப் பொருளுக்குக் கேடு விளைய வேண்டும் என்ற அவசியமில்லை. கண்காட்சிச் சாலையிலுள்ள கிடைத்தற்கரிய ஓவியங்கள் பாதுகாக்கப்பட வேண்டும் எனில் ஒரு பொருளை நியாயமின்றித் தொடுவதுகூடத் தகாத செயல் என்று சட்டம் இருப்பது அவசியமாகிறது. அரிய பொருள்களைக் காப்பதற்கு இவ்விதி உதவுகிறது.

### எப்போது தீங்காவதில்லை ?

ஆனால் தவிர்க்க முடியாத விபத்தால் விளையும் செயல் தீங்காவதில்லை. வாதியின் மின்சாரக் கம்பிகள் எதிர்வாதியின் நிலத்தில் புதைக்கப்பட்டிருந்தன. இஃது எதிர்வாதிக்குத் தெரியாது. அந்த நிலத்தைத் தோண்டுகையில் கம்பிகளுக்குப் பழுது ஏற்பட்டது. இதற்கு எதிர்வாதி பொறுப்பில்லை. ஏனெனில் இஃது எதிர்பாராச் செயல் என்று தீர்ப்பளிக்கப்பட்டது [National Coal Board V. Evans - (1951) 2. K. B. 861]

தம்மையோ, தம் சொத்தையோ காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டுப் பிறர் பொருளுக்குச் சேதம் விளைவிப்பதைச் சட்டம் தடுப்பதில்லை. இது தற்காப்புச் செயல் ஆகிறது.

வாதியின் நாய், எதிர்வாதியின் நிலத்தில் இரவு நேரத்தில் புகுந்து அங்கிருந்த ஆடு மாடுகளுக்குத் தொல்லை கொடுத்தது. நாயை விரட்டிய எதிர்வாதியின் மகனை நோக்கிப் பாய்ந்து அது வந்தது. எனவே, எதிர்வாதி நாயைச் சுட்டுக் கொன்றார். இது தற்காப்புச் செயலானதால் தீங்கில்லை என்பது தீர்ப்பு. [Creswell V. Sirl (1948) 1. K. B. 241]

ஆனால் நாய் எதிர்வாதியின் நிலத்தைவிட்டு ஓடிப்போன பின்னும் அதைத் துரத்திப்போய்ச் சுடுவது தீங்கான செயலாகும்.

நீதிமன்றக் கட்டளையை நிறைவேற்றும் வகையால் கேடு விளைந்தாலும் அது தீங்காகாது.

வழக்கிடத் தக்கவர்கள் யார் ?

பொருளை உடைமையில் உள்ளவர்களே உடைமை குலைந்தது என்று வழக்கிட முடியும். அடகு பெற்றவர், பிறர் பொருளைத் தம் வசம் வைத்திருப்பவர், தீய வழியில் உடைமை பெற்றவர் இவர்கள் வழக்கிடலாம். இவ்வாறு வழக்கிடுபவர் அந்தப் பொருளின் சொந்தக்காரர் அல்லர் என்ற வாதத்தைக் கூறித் தீங்கு இழைத்தவர் தப்ப முடியாது.

நட்டஈட்டின் அளவு

இழந்த பொருளின் மதிப்பையோ, அல்லது விளைந்த சேதத்தால் தோன்றும் இழப்பின் மதிப்பையோ நட்டஈடாக வழக்கிட்டவர் பெறலாம்.

இந்தத் தீங்கு தொடர்ந்து நிகழாதிருப்பதற்குத் தடை உத்தரவும் (Injunction) வாதி பெறலாம்.

## (2) உடைமை அகற்றல் (Conversion)

ஒருவரது உரிமைக்கு விரோதமாக நியாயமற்ற வழியில் குறுக்கிட்டு, ஒரு பொருளின் உடைமையையும் உபயோகத்தையும் அவரிடமிருந்து பறிப்பதையே "உடைமை அகற்றல்" என்று கூறுகிறோம்.

உடைமை அகற்றும் செயல் நியாயமற்றதாகவும், வேண்டுமென்றே செய்யப்பட்டதாகவும் இருக்கவேண்டும். மேலும் உடைமைக்காரரின் உரிமையை மறுக்கும் செயலாகவும் இருக்க வேண்டும். அப்பொழுதுதான் அஃது "உடைமை அகற்றல்" என்ற தீங்காகிறது. ஒருவருடைய கவனக் குறைவான செயலால் பிறரது பொருள் அழியலாம் அல்லது இழக்கப்படலாம். இருப்பினும் அஃது "உடைமை அகற்றல்" என்ற தீங்கு ஆகாது. "உடைமை குலைத்தல்" என்ற தீங்காகலாம்.

உடைமை அகற்றல் விளையும் விதங்கள்

(1) நியாயமின்றி எடுத்துக் கொள்ளல் (Wrongfully taking)
(2) நியாயமின்றி வைத்துக் கொள்ளல் (Wrongfully detaining)
(3) நியாயமின்றி உரிமை மாற்றல் (Wrongfully disposing)
(4) நியாயமின்றி அழித்தல் (Wrongfully destroying)

(1) நியாயமான காரணம் ஏதுமின்றி, ஒருவர் உடைமையிலுள்ள பொருளைத், தம் வசத்தில் வைத்துக்கொள்ளும் கருத்துடன், மற்றவர் எடுத்துக் கொள்வது, "நியாயமின்றி எடுத்தல்"

ஆகிறது. தம்வசம் வைத்துக்கொள்ளும் நோக்கத்துடன் எடுக்கப் பட்டிருக்க வேண்டும். ஒருவர் உடைமையிலுள்ள பொருளை இடம் மாற்றி வைத்ததால் மட்டும் அஃது "உடைமை அகற்றும்" செயல் ஆவதில்லை; அஃது உடைமை குலைத்தலே ஆகும்.

(2) ஒரு பொருளுக்குப் பாத்தியமானவரின் உரிமைக்கு விரோதமாக அதை ஒருவர் தம் வசத்தில் வைத்துக்கொள்ளுதலை "நியாயமின்றி வைத்துக் கொள்ளுதல்" என்கிறோம்.

ஒருவர் பொருள் மற்றவர் வசம் ஏற்கனவே இருக்கிறது. பொருளுக்குரியவர் அதைத் திருப்பிக் கேட்டபொழுது கொடுக்க மறுத்து அதைத் தம்மிடமே வைத்துக் கொள்வது "உடைமை அகற்றல்" ஆகிறது.

ஒரு பொருளின்மீது எவ்வித உரிமையும் இல்லாதிருந்தாலுங் கூட அப்பொருளை ஒருவர் வைத்திருப்பது தீங்கன்று. ஒரு பொருளைக் கண்டெடுத்தவர் அதைத் தம்வசம் வைத்திருக்கலாம். அதற்குச் சொந்தக்காரர் யார் என்று தேடிச் செல்ல வேண்டிய அவசியமில்லை. ஆனால் சொந்தக்காரர் வந்து அந்தப் பொருளைக் கேட்ட பின்பும் தருவதற்கு மறுத்து அதைத் தம் வசமே வைத்துக் கொண்டால் "உடைமை அகற்றல்" என்ற தீங்கு விளைகிறது.

ஒரு நகையை அடகாகப் பெற்றவர் கடன் தொகை கொடுக் கப்பட்டுத் தீர்ந்த பின்னும், அடகுப் பொருளை அதன் சொந்தக் காரருக்குத் திருப்பிக் கொடுக்க மறுத்தல்கூடாது. கடன் பூரா வாக அடைபடுவதற்கு முன் அவர் நகையைத் திருப்பிக் கொடுக்க மறுத்தால் அது நியாயமான செயலேயாகும்.

நியாமற்ற முறையில் ஒருவர் பொருளை வைத்துக் கொண்டி ருக்கிறார் என்பதைக் காட்டுவதற்கு, அந்தப் பொருளை வாதி கேட்டும் எதிர்வாதி கொடுக்கவில்லை என்பது மெய்ப்பிக்கப்பட வேண்டும்.

(3) தமக்குச் சொந்தமில்லாத ஒரு பொருளின் சொத்துரிமையை இன்னொருவருக்கு மாற்றிக் கொடுப்பதன் மூலம், அப் பொருளுக்கு உரிய வரின் பாத்தியதை நியாயமின்றிப் பறிக்கப்படலாம்.

பொதுவாக, விற்பவருக்கு ஒரு பொருள்மீது என்ன உரிமை இருந்ததோ அதையேதான் அதை வாங்குபவர் பெற முடியும். விற்றவரின் உரிமைக்கு அதிகமாக வாங்கியவருக்குக் கிடைப்பதில்லை. இது சட்ட விதி. எனவே, விற்கப்படும் பொருள்மீது விற்பவருக்கு உரிமை ஏதும் இல்லையெனில் அதை அவரிடமிருந்து வாங்கியவருக்கும் எவ்வித உரிமையும் கிடைப்ப தில்லை.

ஒருவர், தாம் திருடிய நகையைக் கடையில் விற்று விடுகிறார். கடைக்காரர் விற்றவர்தாம் அந்த நகைக்குச் சொந்தக்காரர் என்று உண்மையில் நம்பி அந்த நகையை வாங்கியிருக்கலாம். இருப்பினும், அந்த நகையின் சொந்தக்காரர் கடைக்காரரிட மிருந்து நகையைத் திரும்பப் பெற முடியும். அந்த நகைக்கு உரியவரிடமிருந்து அஃது அகற்றப்பட்ட தீங்கிற்குக் கடைக் காரரும் பொறுப்பாகின்றார்.

(4) மற்றவர் பொருளைத் தகுந்த காரணமின்றி அழிப்பதாலும் உடைமை அகற்றப்படுகிறது. சாதாரண சேதம் விளைத்தல் உடைமை அகற்றல் ஆகாது. அந்தப் பொருள் உருமாறிப் போயிருக்கவேண்டும். பருத்தி நூலாகவோ, தானியம் மாவா கவோ மாற்றப்படும்பொழுது முதற்பொருள் அழிந்து விடு கிறது. ஒருவர் பொருளை மற்றவர் நுகரும் வகையால் பொருள் அழிவதும் உண்டு. ஒருவருடைய தானியத்தை மற்றவர் சமைத்து உண்ணுவதால் தானியம் அழிகிறது. இவ்வாறு, பொருள் அழிக் கப்படுவதாலும் ஒருவருடைய உடைமை அகற்றப்படலாம்.

### தவறுதலால் உடைமை அகற்றப்படல் (Conversion by mistake)

தவற்றின் காரணமாகவும் "உடைமை அகற்றல்" விளையலாம். இருப்பினும் அது தீங்கான செயலேயாகும்.

திருட்டுச் சொத்தை ஒருவர் வாங்குகிறார். அது திருட்டுச் சொத்து என்று தெரிந்தும் அதை வாங்கினால் அச்செயல் தண்டிக்கத்தக்க குற்றமாகிறது. தமக்கு விற்பவர்தாம் அந்தப் பொருளுக்கு உரியவர் என்று தவறாக எண்ணித் திருட்டுச் சொத்தை வாங்குபவர் குற்றவாளியாவதில்லை. ஆயினும் அந்தப் பொருளுக்குச் சொந்தக்காரரின் உடைமையை அகற்றிய தீங்கிற் குப் பொறுப்பாகின்றார். பொருளுக்கு உரியவர் தம் பொருளை வாங்கியவரிடமிருந்து மீட்டுக் கொள்ளலாம்.

"மோசடிக் கருத்து ஏதுமின்றி, எனக்கு விற்றவருக்குத்தான் உரிமை இருந்தது என நம்பி, அந்தப் பொருளை வாங்கினேன். தவறாக நம்பி வாங்கியதன்றித் தீய எண்ணத்துடன் வாங்க வில்லை" என்று வாங்கியவர் சொல்லும் வாதத்தைச் சட்டம் ஏற்பதில்லை.

"உடைமை அகற்றல்" என்பது வேண்டுமென்றே செய்யப் படும் தீங்கு எனக் கண்டோம். உடைமை அகற்றும் செயலைச் செய்பவருக்கு அது தீங்கானது என்று தெரியாமல் இருக்கலாம். எனினும், அது திங்கேயாகும். அசை பொருள்களில் வாணிபம் செய்பவர்களும், அவைகளின்மீது சொத்துரிமை கொண்டாடு

பவர்களும் அதனுல் வரும் இடுக்கண்களை ஏற்றேயாகவேண்டும் என்பது சட்டத்தின் கொள்கை.

எனவே, தவருகத் திருட்டுப் பொருளை வாங்கியவருக்கு அந்தப் பொருள்மீது எந்த வித உரிமையும் ஏற்படுவதில்லை.

திருட்டுப் பொருள் வியாபாரத்தில் தரகர் அல்லது கமிஷன் ஏஜண்டு என்ற முறையில் நல்லெண்ணத்துடன் சம்பந்தப்பட்டவர்களும் அந்தத் தீங்கிற்குப் பொறுப்பாகின்றனர்.

பருத்தி வியாபாரத் தரகர், மோசடியாக உடைமை பெற்ற ஒருவரிடமிருந்த பருத்தியை மற்றவருக்கு விற்றுக் கொடுத்தார். விற்றவரின் மோசடி உடைமை பற்றித் தரகருக்குத் தெரியாது. விற்றுக் கொடுத்ததற்கான தரகுக் கூலி (Commission) மட்டுமே அவர் பெற்றுக்கொண்டார். இருப்பினும், பருத்தியின் சொந்தக்காரரின் உடைமையை அகற்றிய தீங்கிற்குத் தரகர் பொறுப்பாக்கப்பட்டு, பருத்தியின் மதிப்பை நட்ட ஈடாகத் தரகர் கொடுக்கவேண்டும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. [Hollins V. Fowler (1874) L. R. 7. H. L. 757]

அசை பொருள்களின் வாணிபத்தில் பங்கெடுப்போர் அதில் ஏற்படும் ஆபத்துக்களுக்கும் ஆளாகவேண்டும், என்ற கொள்கையின் அடிப்படையில் மேலே சொல்லப்பட்ட வழக்குத் தீர்க்கப்பட்டது.

எனவே, தவற்ருல் விளைந்தது என்ற காரணம் காட்டி "உடைமை அகற்றல்" தீங்கிற்கான பொறுப்பை ஒருவர் தட்டிக் கழிக்க முடியாது.

### வழக்கிடும் வாதியின் பாத்தியம்

ஒரு பொருளின் உடைமை தம்மிடமிருந்து அகற்றப்பட்டது என்று கூறி நட்ட ஈடு கோரும் வாதி அந்தப் பொருளுக்குச் சொந்தக்காரராக இருக்கவேண்டும் என்ற கட்டாயமில்லை. அந்தப் பொருளின் உடைமைப் பாத்தியமுள்ள எவரும் வழக்கிடலாம்.

அடகு வைக்கப்பட்ட நகையைப் பொறுத்துத் தீங்கு செய்யப்பட்டால் அதன் உடைமையை வைத்திருந்த அடகு பெற்றவர் அல்லது அதன் சொந்தக்காரர், இருவரில் எவரும் உடைமையை அகற்றியவர்மீது வழக்கிடலாம். எனவே, வழக்கிடும் வாதிக்கு உடைமைப் பாத்தியதை (Possessory Title) இருந்தாலே போதுமானது. அந்த வழக்கில், "வாதிக்குச் சொத்துரிமை இல்லை, பொருள் மூன்ருமவருக்கே சொந்தமானது" என்று உடைமை

அகற்றியவர் எதிர்வாதம் செய்ய முடியாது. [Jeffries V. Great Western Ry. (1856) 5. E & B 802]

ஆனல், உடைமை அகற்றியவர் அந்தப் பொருளை அதன் சொந்தக்காரரிடம் சேர்ப்பித்துவிட்டார் எனில், உடைமைப் பாத்தியம் மட்டும் உள்ளவர் இடும் வழக்குச் செல்லாது. அந்த வழக்கில், பொருளின் சொந்தம் மூன்றுமவருக்கு உரியது (Plea of jus turtii) என்ற எதிர்வாதத்தை உடைமை அகற்றியவர் எழுப்பலாம்.

## கண்டெடுப்பவரின் உடைமைப் பாத்தியம்

ஒரு பொருளைக் கண்டெடுத்தவரின் உடைமையைச் சட்டம் பாதுகாக்கிறது எனப் பார்த்தோம். ஒரு வீட்டுச் சன்னலின் மேற்புறத்திலிருந்து ஒரு நகையை ஒருவர் கண்டெடுத்தார். அது கண்டெடுத்தவருக்கே உரியது என்றும், வீட்டின் சொந்தக்காரர் அந்த வீட்டில் குடியிருக்கவில்லையாதலால் அவருக்கு நகை மீது பாத்தியம் கிடையாது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. [Hannah V. Peel (1945) K. B. 509]

ஆனல் கண்டெடுக்கப்பட்ட பொருள் தரையில் புதைந்திருந்தாலோ அல்லது தரையோடு பதிக்கப்பட்டிருந்தாலோ, அது அந்த நிலத்தின் சொந்தக்காரருக்கே உரியது. [Grafstein V. Holme (1958) 12. D. Z. R. 727]

## உடைமைப் பாத்தியம் எதுவரை நீடிக்கிறது ?

ஒரு பொருளின்மீது ஒருவருக்கு உடைமைப் பாத்தியம் மட்டுமே இருக்கிறது. அந்தப் பொருளை அவர் அடகு வைக்கிருர் என்றுல், அவரது உடைமைப் பாத்தியம் மறைந்து விடுகிறதா என்பது வினு. ஒரு பொருளின் சொந்தக்காரர் அடகு வைத்தால் எவ்வாறு அவரின் நேரடியற்ற உடைமை அப்பொருள் மீது இருக்கிறது எனச் சட்டம் கருதுகிறதோ, அவ்வாறே உடைமைப் பாத்தியம் மட்டும் உள்ளவர் ஒரு பொருளை அடகு வைத்தாலும் அவரது உடைமைப் பாத்தியம் அழிந்து விடுவதில்லை.

இராமன் ஒரு பொருளைக் கண்டெடுக்கிருர். இராமனுக்கு அப் பொருளின்மீது உடைமைப் பாத்தியம் ஏற்படுகிறது. அவர் அந்தப் பொருளைக் கோபாலனிடம் கொடுத்து வைக்கிருர். கோபாலனிடமிருந்த அந்தப் பொருளைக் கோவிந்தன் திருடிக் கொண்டார் என வைப்போம். இப்பொழுது திருடிய கோவிந்தன் மீது, கோபாலனும் வழக்கிடலாம், இராமனும் வழக்கிடலாம்.

கோவிந்தன் திருடியது கோபாலனிடம் இருந்துதான். அப்பொழுது இராமனுக்கு அந்தப் பொருள்மீது நேரடி உடைமை இல்லை என்பது உண்மையே. இருப்பினும் இராமனுக்கு முதலில் ஏற்பட்ட உடைமைப் பாத்தியம் (Possessory title) தொடர்ந்து இருந்துகொண்டிருக்கிறது. கோபாலனிடம் அந்தப் பொருள் ஒப்படைக்கப்பட்டபின் இராமனது உடைமைப் பாத்தியம் மறைந்து விடுவதில்லை. எனவே, கோவிந்தன் திருடிய செயல் கோபாலனுடைய நேரடி உடைமைக்கும், இராமனது உடைமைப் பாத்தியத்திற்கும் எதிரான தீங்காகும். எனவே, இருவரில் எவரும் கோவிந்தன்மீது உடைமை அகற்றிய தீங்கிற்கு வழக்கிடலாம். [Buckley V. Gross (1863) 32. L. J. Q. B. 129]

அந்தப் பொருளின் சொந்தக்காரர் உடைமைப் பாத்தியம் உள்ளவரிடமிருந்து அதை எடுத்துக்கொண்டாலோ, அல்லது உடைமைப் பாத்தியம் உள்ளவர் அந்தப் பொருளை வேறு ஒருவருக்கு விற்று விட்டாலோதான், உடைமைப் பாத்தியம் முடிவுறுகிறது.

### கூட்டுச் சொந்தம் உடையவர்கள் (Co-owners)

ஒரு பொருளின்மீது இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்களுக்குச் சொத்துரிமை இருக்கலாம். இதைக் "கூட்டுச் சொந்தம்" என்கிறோம். ஒவ்வொருவருக்கும் அந்தப் பொருளைத் தம்வசம் வைத்துப் பயன்படுத்தும் உரிமை உண்டு. இவர்களில் ஒருவர் மட்டுமே அந்தப் பொருளைத் தம்வசம் வைத்துப் பயன் அனுபவிக்கிறார் என்பதால், மற்றவர்கள் தங்கள் உடைமை அகற்றப்படுகிறது என்று கூறி வழக்கிட முடியாது. ஆனால், மற்றவர்களின் உரிமை அழியும் வகையில் ஒருவர் அந்தப் பொருளை மூன்றாமவருக்கு விற்றாலோ அல்லது அழித்தாலோ, "உடைமை அகற்றல்" என்ற தீங்கிற்கு அவர் ஆளாகிறார்.

### நிவாரணங்கள்

உடைமையை இழந்தவர், நட்டஈடு பெறலாம் அல்லது அதே பொருளைத் திரும்பப் பெறலாம்.

(i) நட்ட ஈடு பெறுதல்: ஒரு பொருளுக்குரியவர், தம் உடைமையிலிருந்து அகற்றப்பட்ட பொருளின் மதிப்பை நட்ட ஈடாக, உடைமை அகற்றியவரிடமிருந்து பெறலாம்.

சொத்துரிமையின்றி உடைமைப் பாத்தியம் மட்டும் உள்ளவர் கூடத் தீங்கிழைத்தவரிடமிருந்து இழந்த பொருளின் முழு மதிப்பையும் பெற முடியும்.

ஓர்அடகுக்காரரிடமிருந்து நகை அகற்றப்பட்டால், அவருக்கு நகையைப் பொறுத்துக் கிடைக்கவேண்டிய அடகுக் கடன் தொகையை மட்டுமே தீங்கிழைத்தவரிடமிருந்து பெறலாம் என் பது சரியன்று. அந்த நகையின் முழு மதிப்பையும் அவர் நட்ட ஈடாகப் பெறுகிருர். அந்த நகையின் சொந்தக்காரர் அடகுக் காரரிடமிருந்து, அடகுக்கடன் போக உள்ள மீதித் தொகையை வசூலித்துக் கொள்ளலாம்,

தபாலில் அனுப்பப்பட்ட பொருள்கள் கப்பல் ஓட்டியவர் களின் கவனக்குறைவால் கடலில் மூழ்கின. தபால் தலைமை அதிகாரி கப்பல் கம்பெனிமீது வழக்கிட்டார். தபால் அதிகாரிக்கு மூழ்கிய பொருள்கள்மீது சொத்துரிமை இல்லை. ஒப்படை பெற்றவர் (Bailee) என்ற முறையில் அவருக்கு உடைமைப் பாத்தியம் மட்டுமே இருந்தது. இருப்பினும், அவர் இழந்த பொருள்களின் முழுமதிப்பையும் நட்ட ஈடாகப் பெறலாம் எனவும், பொருள்களின் சொந்தக்காரர்கள் தபால் அதிகாரியிட மிருந்து அதை வசூலித்துக் கொள்ளலாமெனவும் தீர்ப்புக் கூறப் பட்டது. [The winkfield (1902) P. 42]

இந்த வழக்கில் பொருளின் இழப்பு கவனக்குறைவால் (Negli gence) ஏற்பட்டது. அந்த இழப்பு "உடைமை அகற்றல்" என்ற தீங்கிஞல் ஏற்பட்டாலும் அதே விதிதான்.

**நட்டத்தை மதிப்பிடுதல்**

பொதுவாக, பொருளின் மதிப்பை நிர்ணயம் செய்வது உடைமை மாற்றப்பட்ட தேதியில் அதற்கு இருந்த விலை மதிப்பு என்ன என்பதை வைத்தே தான். சில சந்தர்ப்பங்களில் தீர்ப் பளிக்கப்படும் தேதியில் உள்ள மதிப்பை நட்ட ஈடாக அளிப்ப துண்டு.

பங்குப் பத்திரங்களின் (Shares) விலை மதிப்பு அடிக்கடி கூடிக் குறையலாம். இப்பொழுது உடைமை மாற்றம் ஏற்பட்ட தேதிக் குப் பின் பொருளின் மதிப்பும் கூடியிருந்தால், அவ்வாறு கூடுத லான மதிப்பையும் நட்ட ஈடாகப் பெறலாம். [Aitken V. Gardiner (1956) 4. DZR. 119]

(ii) குறித்த பொருளைத் திரும்ப ஒப்படைத்தல்: (Specific Restitution) ஒருவருடைய உடைமையிலிருந்து அகற்றப்பட்ட பொருளை, மீண்டும் உடையவரிடம் ஒப்புவிக்குமாறு எதிர் வாதிக்கு நீதிமன்றம் உத்தரவிடலாம். சாதாரணப் பொருள்க ளாக இருந்தால், இழந்த பொருள்களுக்கான விலை மதிப்புத் தொகையை நட்ட ஈடாக வாதிக்கு எதிர்வாதி கொடுக்கவேண்டும்

என நீதிமன்றம் கட்டளையிடுகிறது. ஆனால், கிடைத்தற்கரிய ஓவியங்கள், கலைத்திறம் நிரம்பிய கைபுனைப் பொருள்கள், சொத்துரிமைப் பட்டயங்கள் போன்ற பொருள்களின் மதிப்பைப் பணத்தால் அறுதியிட முடியாது. எனவே, இம்மாதிரிப் பொருள்களின் உடைமையை அகற்றியவர், அந்தப் பொருளையே உரிமையாளரிடம் திரும்ப ஒப்புவித்தல் வேண்டும் (Specific restitution) என நீதிமன்றம் கட்டளையிடுவதற்குச் சட்டம் வகை செய்கிறது.

அதே பொருளைத் திரும்பக் கொடுக்க முடியாத நிலை ஏற்பட்டால் திரும்ப ஒப்புவிக்க வேண்டும் என்று நீதிமன்றம் உத்தர விடுவதில்லை. திருடிய கல்லைச் சிலையாக ஒருவர் வடித்திருக்கலாம். கல்லைத் திருடிய எதிர்வாதியைச் சிலையைத் திருப்பிக் கொடுக்கும்படி கட்டாயப்படுத்துவது முறையன்று. எனவே, கல்லின் விலை மதிப்பை அவர் நட்ட ஈடாகக் கொடுக்கவேண்டும் என்றே உத்தரவிடப்படும்.

வாதிக்குக் கிடைக்கவேண்டியது அதே பொருளா அல்லது நட்ட ஈடா என்பதை நீதிமன்றம் சூழ்நிலைகளுக்கேற்ப முடிவு செய்கிறது.

இந்த வகையில், அசை பொருள்களின் உடைமைக்கு விளையும் தீங்குகளைச் சட்டம் தடுத்து, அவரவர்களின் உடைமையைப் பாதுகாத்து நிற்கிறது.

---

# பகுதி 4

## தொல்லை (Nuisance)

*தொல்லை (Nuisance) என்பது என்ன? - தனித்த தொல்லை (Private Nuisance); - பொதுவான தொல்லை (Public Nuisance)- தனித்ததொல்லை விளையும் விதங்கள் - அயல் பொருள்களால் விளையும் கேடு - சொத்து அல்லது அதில் உள்ள பொருள்கள் பழுதுபடல் - சொத்தைப் பயன் படுத்துவோருக்கு ஏற்படும் தொந்தரவு அல்லது வசதிக் குறைவு - தொந்தரவு அல்லது வசதிக்குறைவு என்பது என்ன? - தொடர்ந்து நிகழ்வதே தொல்லையாகும் - ஏற்படும் இடைஞ்சல் நிகழ்ந்து கொண் டிருப்பதாக இருக்கவேண்டும் - ஏற்றுக்கொள்ளப்படாத எதிர் வாதங்கள்.*

### "தொல்லை'' என்பது என்ன?

நம் வசமுள்ள நிலச் சொத்துக்களை நாம் விரும்பியபடி அனுபவிப்பதற்கு நமக்கு உரிமை இருக்கிறது. அவ்வாறு, அனுபவிக்கும் பொழுது அதனால், அண்டையிலுள்ள சொத்துக்களில் இருப்பவர்களின் வசதிக்கு இடைஞ்சல் விளையாதபடி பார்த்துக் கொள்ளவேண்டும். அப்பொழுது தான் ஒவ்வொருவரும் தத்தம் உடைமையிலுள்ளசொத்துக்களை இடர்ப்பாடு ஏதுமின்றித் துய்க்க முடியும்.

அண்டையில் உள்ள கட்டிடத்தில் இயங்கும் இயந்திரத்திலிருந்து நாள் முழுதும் மிகுந்த இரைச்சல் கேட்டுக்கொண்டே இருந்தால் விட்டில் நிம்மதியுடன் நம்மால் இருக்க முடியாது. அருகிலுள்ள விட்டுக்காரர் தயாரிக்கும் இரசாயனப் பொருளிலிருந்து வரும் நச்சுப்புகை அடிக்கடி நம் வீட்டிற்குள் புகுந்து பரவினால் நம் உடல் நலனுக்கு ஊறு விளைகிறது. அடுத்துள்ள தொழிற்சாலையின் கழிவுநீர் நம் தோட்டத்திற்குள் புகுந்து பயிர்களைக் கெடுத்து விடலாம். நம் விட்டிற்கு நீண்ட நாட்களாகக் கிடைத்துக் கொண்டிருந்த காற்று, வெளிச்சம் இவைகளை அடுத்தவர் தடுத்து விடலாம். இதுபோன்று, நம் சொத்துக்களை அனுபவிப்பதற்குப் பலவித இடைஞ்சல்கள் விளைகின்றன. இவ்வித இடையூறுகளைப் போக்குவதற்குச் சட்டம் துணை செய்கிறது.

''தாமும் வாழ்ந்து பிறரும் வாழவேண்டும்'' என்ற அறக் கொள்கையின் அடிப்படையில், ஒவ்வொருவரும் தங்கள் சொத்தை அனுபவிக்கும்பொழுது அதனால் அண்டையிலுள்ள சொத்தைப் பெற்றிருப்பவர்களின் வசதிகட்குப் பாதகம் ஏற்படுத்

தாமல் இருக்கவேண்டும் எனச் சட்டம் விதிக்கிறது. அண்டையிலுள்ள சொத்தில் இருப்பவர்களுக்கு இடைஞ்சலோ, வசதிக் குறைவோ ஏற்படாதவாறு நாம் நமது சொத்தை அநுபவித்தல் வேண்டும் என்பது அடிப்படை விதி.

இடைஞ்சல் அல்லது தொந்தரவு ஏதுமின்றித் தம் சொத்தை அனுபவிக்கும் உரிமை ஒவ்வொருவருக்கும் உண்டு. அந்த உரிமைக்கு ஊறு விளைவித்தலைத் தீங்கான செயல் எனச் சட்டம் கொள்கிறது. அந்தத் தீங்கைத் 'தொல்லை' (Nuisance) என்று குறிப்பிடுகிறோம்.

தமது நிலச் சொத்து அல்லது அதைச் சேர்ந்த வசதி உரிமைகள் இவைகளை ஒருவர் அனுபவிப்பதில் சட்ட முரணான வகையில் குறுக்கிட்டுத் தொந்தரவு விளைவித்தல் "தொல்லை விளைவித்தல்" என்ற தீங்காகும்.

தனித்ததொல்லை : பொதுவான தொல்லை

ஒருவரின்செயலினால் ஏற்படும் தொல்லை தனிப்பட்ட நபருக்கு மட்டும் விளையலாம், அல்லது பொதுமக்கள் பலரையும் பாதிக்கலாம். தனி நபருக்கு விளையும் தொல்லையைத் 'தனித்த தொல்லை' (Private Nuisance) என்றும், பொதுமக்களுக்கு ஏற்படும் தொல்லையைப் 'பொதுவான தொல்லை' (Public Nuisance) என்றும் வேறுபடுத்திக் கூறுவார்கள்.

## தனித்த தொல்லை (Private Nuisance)

'தனித்த தொல்லை' என்றால் என்ன ?

ஒரு நிலச் சொத்தில் இருப்பவர், அடுத்திருக்கும் சொத்தைப் பிறர் அனுபவித்துப் பயனடைவதில் தொடர்ந்து இடையீடு ஏற்படுத்தி இடைஞ்சல் விளைவிப்பதே தனித்ததொல்லை (Private Nuisance) என்று கூறப்படுகிறது,

தனித்த தொல்லைகள் இன்னின்ன விதத்தில் தான் விளைவன என்று முழுதுமாக வகைப்படுத்திக் கூறுதல் இயலாது. இருப்பினும் தொல்லைச் செயல்களை மொத்தத்தில் இரு பிரிவுகளாக வகுக்கலாம் :

(1) அண்டை நிலச் சொத்திற்குள் உடல் நலனுக்கு ஒவ்வாத அயல் பொருள்களைப் புகவிட்டு இடைஞ்சல் விளைவித்தல்: நீர், புகை, ஆவி, அதிர்ச்சி, நாற்றம், ஒலி, விலங்கு, செடி, கொடி. நோய்பரப்பும் கிருமிகள், விலங்குகள், இவை போன்றவை எல்லாம் இடைஞ்சல் விளைவிக்கும் பொருள்களாகும்.

(2) அந்த நிலச் சொத்தைச் சேர்ந்த வசதி உரிமைகளுக்கு (Easements) ஊறு விளைவித்தல்.

அயல் பொருள்களால் விளையும் கேடு

அண்டை நிலத்திலிருந்து வரும் அயல் பொருள்களால் ஒரு சொத்தைப் பொறுத்து விளையும் கேடு இருவகைப்படும்.

(1) அந்தச் சொத்து அல்லது அதிலுள்ள பொருள்கள் பழுதுபடுதல்.

(2) அந்தச் சொத்தைப் பயன்படுத்துபவர்களுக்கு (அனுபவிப்பவர்களுக்கு) ஏற்படும் தொந்தரவு அல்லது வசதிக் குறைவு.

சொத்து அல்லது அதிலுள்ள பொருள்கள் பழுதுபடல்

ஒரு கட்டிடத்தில் இயந்திரங்கள் வேலை செய்வதால் ஏற்பட்ட மிகுந்த அதிர்ச்சியின் பயனாய் அருகிலிருந்த கட்டிடத்தின் சுவர் வெடித்துப் பழுதுபடலாம். ஒருவர் நிலத்தில் நிற்கும் மரத்தின் வேர்கள் அடுத்தவர் நிலத்தில் புகுந்து அங்குள்ள கட்டிடத்திற்குச் சேதம் விளைவிக்கலாம். அல்லது அம்மரத்தின் கிளைகள் அடுத்தவர் நிலத்திற்கு மேல் வெளியில் பரவி வளர்ந்து அடுத்த நிலத்தில் உள்ள பயிர் விளைச்சலுக்குச் சேதம் உண்டாக்கலாம். இவ்வாறு விளையும் கேடுகளுக்கு நட்டஈடு உண்டு.

எதிர்வாதியின் நிலத்தில் உலோகங்கள் காய்ச்சியதால் தோன்றிய ஆவி அடுத்திருந்த வாதியின் நிலத்தில் பரவியதால் அங்குள்ள மரம், செடிகள் கரிந்து போயின. அதற்கு எதிர்வாதி பொறுப்பாக்கப்பட்டார் [St. Helen's Smelting Co. V. Tipping (1865) 11. H. L. C. 642.]

வாதியின் சொத்திற்கு விளையும் கேடு கணிசமான அளவு இருக்கவேண்டும். அந்தக் கேட்டினால் சொத்தின் மதிப்புக் குறைந்திருக்கவேண்டும். அப்பொழுதுதான் வாதியின் சொத்து பழுதுபட்டிருக்கிறது எனக் கருதப்படும்.

சொத்தைப் பயன்படுத்துவோருக்கு ஏற்படும் தொந்தரவு

பெரும்பாலும் ஒலி, நாற்றம் இவைகளால் தான் ஒரு வீட்டில் இருப்பவருக்குப் பெரிதும் இடைஞ்சல் ஏற்படுகிறது. அடுத்த நிலத்திலிருந்து தொடர்ந்து வரும் மிகுந்த இரைச்சல், உடல் நலனைக் கெடுக்கும் நாற்றம், ஆவி, புகை இவைகளால் தொந்தரவு நேருகிறது. பகல் நேரத்தில்வரும் ஓசை ஒரு வீட்டில் வாழ்பவரின் வசதியைப் பாதிக்காமல் இருக்கலாம். ஆனால் அதே ஒலி இரவு நேரத்திலும் தொடர்ந்து வந்து கொண்டிருந்தால் தூக்கம் கெட்டுத் தொந்தரவு விளைகிறது. இவ்வாறு, பல வகைகளில் இடைஞ்சல் ஏற்படுகிறது.

ஒருவர் தம் சொத்தை அநுபவிப்பதில் தொந்தரவு (Discomfort) அல்லது வசதிக் குறைவு (Inconvenience) ஏற்படக்கூடாது என்பது விதி.

**தொந்தரவு அல்லது வசதிக் குறைவு என்பது என்ன ?**

சட்டம் எதைத் "தொந்தரவு" என்று கருதுகிறது என்பது சிறிது சிக்கலான கேள்வி.

நோயாளியான ஒருவருக்குச் சிறு ஒலி கூடத் தொந்தரவாக இருக்கலாம். பக்கத்து வீட்டுக்காரரின் வானொலிப் பெட்டியின் இடைவிடாத ஒலி சிலருக்குத் தலைவலியாயிருப்பதுண்டு. அண்டை வீட்டிலிருப்பவர் சங்கீதம் பயிலுவது ஒருவருக்கு இடைஞ்சலாக இருக்கலாம். பக்கத்து வீட்டில் இறைச்சி வறுக்கும்பொழுது பரவி வரும் நெடி சைவ உணவையே உண்ணும் அடுத்த வீட்டுக்காரருக்கு அருவருப்புணர்ச்சியை அளிப்பது இயல்பு. இவைகளையெல்லாம் தொல்லை விளைவிக்கும் தீங்குகளாகக் கொள்ள முடியுமா? இவையனைத்தும் இடைஞ்சல்கள்தாம் என்பதில் ஐயமில்லை. ஆனால் இந்த அற்பத் தொந்தரவுகளைப் பற்றிச் சட்டம் அக்கறை கொள்வதில்லை. இவைபோன்ற தொந்தரவுகளை நாம் சகித்துக் கொள்ளத்தான் வேண்டும், நம்மாலும் இவ்வாறான சிறு தொந்தரவுகள் பிறருக்கு விளையலாம். அவர்களும் அவற்றைப் பொறுக்கத்தான் வேண்டும். அப்பொழுதுதான் எல்லோருடைய வாழ்வும் இனிது நடைபெற முடியும்.

ஒரு சாதாரண மனிதனுக்கு வேண்டிய பொதுவான வசதித் தேவைகளை அடிப்படையாக வைத்தே, ஒரு செயல் தொந்தரவு விளைவிக்கும் தன்மையுடையதா, இல்லையா என்பதைச் சட்டம் நிச்சயிக்கிறது. நவநாகரிகத்தில் தோய்ந்த ஒருவரின் நளின உணர்வை உரைகல்லாக வைத்து ஒரு செயலைத் தொந்தரவாகச் சட்டம் கொள்வதில்லை. [Walter V. Selfe (1851) 4. De. G. & Sm. 315]

இடம், காலம், சொத்துப் பயன்படும் விதம், இதர சூழ்நிலைகள் இவையனைத்தையும் கருத்திற் கொண்டே தொல்லையின் தன்மை தீர்மானிக்கப்படுகிறது.

மக்கள் குடியிருப்பிற்கென்று தனித்து ஒதுக்கப்பட்ட இடத்தில் தொந்தரவு என்று கொள்ளப்படும் செயல் வாணிபம் நடைபெறும் கடைகள் நிறைந்த இடத்தில் தொந்தரவாகக் கருதப்படுவது இல்லை. கொல்லர் பட்டறையில் எழும் ஓசை குடியிருப்புப் பகுதியில் தொந்தரவாகக் கொள்ளப்படும். ஆனால் கைத்தொழிலுக்கு ஒதுக்கப்பட்ட நகரப் பகுதியில் அதை இடைஞ்சல் எனச் சொல்வதற்கில்லை. இரயில்வே நிலையத்திற்கு அருகில் குடியிருப்

பவர், இரயிலின் ஊதொலியாலும், ஓட்டத்தின் அதிர்ச்சியாலும் தமக்கு அசௌகரியம் ஏற்படுகிறது என்ருல் அதைச் சட்டம் ஏற்பதில்லை.

தாம் வாழும் நகர்ப் பகுதியில் உள்ள எல்லோருக்கும் என்ன வசதிகள் இருக்கின்றனவோ அதைவிட மிகுதியான வசதிகளை ஒருவர் எதிர்பார்க்கக் கூடாது. அண்டையிலுள்ள கடையில் எழும் ஆரவாரம் ஒருவருக்குத் தொந்தரவாக இருந்தால் அவர் நகரின் ஒதுக்கமான ஓரிடத்தில் தோட்டம் சூழ்ந்த தனித்த வீட்டில் குடியிருந்து கொள்ளலாம். நகரத்தின் மத்தியிலுள்ள வீதியில் குடியிருந்து கொண்டு, அடுத்திருக்கும் அங்காடியின் சந்தடி தொந்தரவாக இருக்கிறது என்று கூறுவதில் பயனில்லை. சந்தடியற்ற, நிம்மதியான சூழ்நிலையில் வாழ விரும்புபவர் அதற்குத் தக்க இடத்தைத் தேடிக் கொள்ளவேண்டும்.

ஆனுல் சாதாரண வசதித் தேவைகளுக்கு ஊறு விளைவிக்கும் செயல்களைச் சட்டம் தொந்தரவு எனக் கொண்டு அதற்குப் பரிகாரம் அளிக்கிறது.

அருகிலுள்ள சாக்கடை, இறைச்சிக் கடை, மாட்டுத் தொழுவம், செங்கல், சுண்ணும்புக் காளவாய்கள், எண்ணெய் ஆலை, இவைபோன்ற இடங்களிலிருந்து வரும் நாற்றத்தை இடைஞ்சலாகக் கொண்டு பரிகாரம் அளிக்கப்பட்டிருக்கிறது.

இம்மாதிரியே, மாவு ஆலைகள், வார்ப்படத் தொழிற்சாலை, மின்சார நிலையம், அச்சடிக்கும் இயந்திரம், இவை போன்றவைகளால் ஏற்படும் இரைச்சலை அகற்றச் சட்டம் வகை செய்கிறது.

சில மாதங்களுக்கு முன் அமெரிக்காவில், ஆகாய விமான நிலையத்திற்கு அருகில் வாழும் ஒருவருக்கு, விமானங்கள் அவர் வீட்டை ஒட்டிப் பறப்பதால் ஏற்பட்ட இரைச்சலினுல் விளைந்த இடைஞ்சலுக்கென நட்ட ஈடு கொடுக்கப்பட்டது.

பொதுவாக இரைச்சல் அதிகமாக உள்ள இயந்திரத்தொழில் நடக்கும் இடங்களிலும் வழக்கமான அசௌகரியங்களைக் காட்டிலும் அதிகமான இடைஞ்சல் விளைவித்தால் அதைச் சட்டம் தடுக்கிறது.

எதிர்வாதி புதிதாக வாங்கிய அச்சு இயந்திரத்தை இரவில் ஓட்டும்பொழுது அதுவரை இல்லாத இரைச்சல் உண்டாகி அயல் வீட்டாரின் அமைதியைக் கெடுத்தது. அது தொந்தரவு விளைவிப்பதாகும் என்று கொள்ளப்பட்டது. [Rushmer V. Polsue and Alferi Ltd. (1906) 1. Ch. 234]

நல்லதொரு குடியிருப்புப் பகுதியில் விலைமகளிர் தொழில் நடத்துவது அண்டையில் குடியிருப்பவர்களுக்கு இடைஞ்சல்

விளைவிப்பதாகும் என்று தடை செய்யப்பட்டது. [Thompson Schwab V. Costaki. (1956) 1. W. L. R. 335]

### தொடர்ந்து நிகழ்வதே தொல்லையாகும்

இடைஞ்சலாக உள்ள ஒரு செயல் தொடர்ந்து நிகழும் பொழுதுதான் அது "தொல்லை" ஆகிறது. வருடத்தில் ஒரு நாள் தம் விட்டிற்கு அடுத்துள்ள மைதானத்தில் நடக்கும் திருவிழாக் கூட்டத்தால் தமக்கு அமைதி குறைகிறது என்று ஒருவர் கூற முடியாது. வாரத்திற்கு ஒருமுறை அடுத்த விட்டுப் புதை சாக்கடை சுத்தம் செய்யப்படும்பொழுது துர்நாற்றம் வரலாம். ஆனால் அது தொல்லை ஆகாது. தொடர்ந்தாற்போல் வரும் துர்நாற்றமே தொல்லை விளைவிப்பதாகும். பக்கத்து நிலத்தில் செய்யப்படும் காரியத்தால் தொடர்ந்தாற்போல்அல்லது அடுத்தடுத்து இடைஞ்சல் விளைவதுதான் தொல்லை எனக் கொள்ளப்படுகிறது.

### ஏற்படும் இடைஞ்சல் நிகழ்ந்து கொண்டிருப்பதாக இருக்கவேண்டும்

வாதிக்கு இடைஞ்சல் நிகழ்ந்த பிறகுதான் அவர் அதை நிறுத்துவதற்கோ அல்லது நட்ட ஈடு கோரியோ வழக்குத் தொடரலாம். இனி, எதிர்காலத்தில் இடைஞ்சல் ஏற்படலாம் என்ற காரணங்காட்டி வழக்குத் தொடர முடியாது. [Pemberton V. Bright (1960) 1. A. E. R. 792] ஒருவர் தமது கட்டிடத்தைச் சரக்குகளை வைக்கும் கிடங்காக மட்டும் பயன்படுத்துகிறார் என வைத்துக் கொள்வோம். அருகில் உள்ள கட்டிடத்திலிருந்து வரும் இரைச்சலால் முதல் கட்டிடத்தில் இரவில் தூங்குவது முடியாமல் போகலாம். ஆனால் முதல் கட்டிடத்தில் யாரும் குடியிருக்கவில்லை யாகையால், இரைச்சல் வருவது இடைஞ்சல் என்று கூறி வழக்குத் தொடர முடியாது. முதல் கட்டிடத்திற்கு யாரேனும் குடி வந்த பின்னும் இரைச்சல் வந்து கொண்டிருந்தால்தான் வழக்கிட முடியும். இப்பொழுது நிகழ்ந்து கொண்டிருக்கும் இடைஞ்சல்களையே சட்டம் நீக்குகிறது. ஒரு செயலால் இனிமேல் "தொல்லை" நேரலாம் என்ற காரணத்திற்காக இப்பொழுதே பரிகாரம் ஏதும் பெறுவது முடியாது. [Salvin V. North Brancepeth Coal Co. (1874) L. R. 9. Ch. 705]

### ஏற்றுக் கொள்ளப்படாத எதிர் வாதங்கள்

பிறருக்கு இடைஞ்சல் விளைவிக்கும் ஒருவர் "எனது சொத்தை நியாயமான முறையில்தான் பயன்படுத்துகிறேன்" என்று கூறுவதைச் சட்டம் ஏற்பதில்லை. பிறருக்கு இடைஞ்சல் விளையும் வகையில் ஒரு சொத்து பயன்படுத்தப்பட்டால் அது நியாயமானமுறையில் பயன்படுத்தல் ஆகாது.

நாம் இடைஞ்சல் ஏற்படுத்துவது போலவே, அதே தொழில் செய்யும் பிறரும் இடைஞ்சல்கள் ஏற்படுத்துகின்றனர் என்று கூறி, எதிர்வாதி தமது பொறுப்பைக் கழிக்க முடியாது. இடைஞ்சல் ஏற்படுத்தும் ஒவ்வொருவரும் அதனால் ஏற்படும் நட்டத்திற்குப் பொறுப்பாகின்றனர்.

எதிர்வாதியின் செயல் போதிய கவனத்துடனும், திறமையுடனும் செய்யப்படுகிறது என்று கூறுவதைச் சட்டம் ஏற்பதில்லை. கவனமின்மையால் விளையும் தீங்கு ஒருவகை; இடைஞ்சலால் விளையும் தீங்கு வேறொரு வகை. ஒருவரின் செயலால் பிறருக்கு இடைஞ்சல் நேரும்பொழுது, அச்செயல் கவனத்துடன் செய்யப்படுகிறதா இல்லையா என்ற கேள்விக்கு இடமில்லை. [Bell V. Twentyman (1841) 1. Q. B. 766]

பிறருக்கு இடைஞ்சல் விளைவிக்கும் ஒருவர், தமது தொழில் பொதுமக்களின் நன்மைக்காக நடத்தப்படுவது என்றும், தனிப்பட்ட வாதிக்கு விளையும் இடைஞ்சலைவிடப் பொதுமக்கள் பெறும் நன்மை அதிகமானது என்றும் காரணம் கூறமுடியாது. எதிர்வாதி நடத்தும் தொழில் பொதுநன்மைக்காகவே இருக்கலாம். ஆயினும், தனி மனிதனுக்கு இடைஞ்சல் விளைந்தால் அது "தொல்லை"யாகவே கருதப்படுகிறது. [Shelfer V. City of London Electric Lighting Co. (1895) 1. Ch. 287]

ஆலை இயங்கிக் கொண்டிருக்கும் கட்டிடத்திற்கு அருகில் உள்ள நிலத்தை ஒருவர் விலைக்கு வாங்கி அதில் வீடு கட்டிக் குடியிருக்க ஆரம்பிக்கிறார் என வைத்துக் கொள்வோம். ஆலையிலிருந்து வரும் இரைச்சல் புதிதாகக் குடியிருக்க வந்தவருக்கு இடைஞ்சலாக இருக்கிறது. "ஆலை இயங்குவது தெரிந்துதானே, அருகிலுள்ள நிலத்தை வாங்கி அவர் வீடு கட்டினார்! ஆதலால் அவர் ஆலையிலிருந்து வரும் இரைச்சலைத் தொந்தரவாகச் சொல்வது தகாது" என்று வாதாடுவதைச் சட்டம் ஏற்பதில்லை. ஒரு சொத்தின் அருகில் ஏற்கனவே, "தொல்லை" விளைவிக்கப்படுகிறது என்ற காரணத்திற்காக எவரும் அச்சொத்தை வாங்காமலிருக்க வேண்டும் என்று எதிர்பார்ப்பது சரியன்று. எனவே, புதிதாகக் குடிவந்தவர் ஏற்கனவே இருக்கும் இடைஞ்சலை அகற்றுவதற்கு வழக்கிடலாம்.

ஒருவர் தம் வசமுள்ள சொத்தைத் தம் விருப்பப்படி பயன்படுத்தலாம் என்பது விதி. ஆனால், அவ்வாறு பயன்படுத்துகையில் அண்டை நிலத்தில் உள்ளவர்களுக்கு இடைஞ்சல் ஏற்படுத்துவது கூடாது என்பதும் விதி. மக்கள் இந்த இரு விதிகளையும் மனதிற் கொண்டு, ஒருவருக்கொருவர் விட்டுக்

கொடுத்து, "தாமும் வாழ்ந்து பிறரும் வாழவேண்டும்" என்ற குறிக்கோளுடன் நடந்து கொள்ளுவதே நல்வாழ்வு முறை. [Bamford V. Turnley (1862) 3. B & S 66] எனவே, அண்டைச் சொத்தில் இருப்போருக்கு இடைஞ்சல் விளையாத வகையிலேயே நம் சொத்தை நாம் அனுபவிக்கவேண்டும். இந்தக் கொள்கையின் அடிப்படையிலேயே, ஒரு செயல் "தொல்லை" விளைவிப்பதா, இல்லையா, என்பது உறுதி செய்யப்படுகிறது.

---

## பகுதி 5

### வசதி உரிமை பற்றிய தொல்லைகள்
### (Nuisance in relation to servitudes)

*வசதி பெறும் சொத்து (Dominant heritage) - வசதி தரும் சொத்து -(Servient heritage) - வசதியுரிமைகளின் வகைகள் - ஒளி வசதியுரிமை - (Right to light) - வளி வசதியுரிமை (Right to air) - வழி வசதியுரிமை (Right to way) - தாங்கு வசதியுரிமை (Right to support) - நீர் வசதி யுரிமை (Right in respect of water) - இயல்பான உரிமை (உற்ற உரிமை) (Natural right) - ஈட்டிய உரிமை (பெற்ற உரிமை) (Acquired right) ஏறுகரை நிலங்கள் (Upper riparian lands) - இறங்கு கரை நிலங்கள் (Lower riparian lands) - நீரோட்டம் இயற்கையில் அமைந்ததாக இருக்க வேண்டும் - வகுத்த வழி செல்லும் நீரோட்டத்தைப் பொறுத்தே உரிமை உண்டு - கரைநிலத் தேவைகள் - நீர் வசதியுரிமைக்கு விளையும் நீங்குகள் - நீரை எடுத்தல் - நீரைத் தடுத்தல் - நீரின் தன்மையை மாற்றுதல்.*

ஒரு நிலச்சொத்து நமக்குச் சொந்தமாக இருந்துவிட்டால் மட்டும் போதாது. அதை வசதியுடன் அனுபவிக்கும் உரிமையும் நமக்கு வேண்டும். ஒரு சொத்தின் பயன் அதை நுகர்வதில் தான் இருக்கிறது. நிலம், வீடு போன்ற நிலைச் (Immovable) சொத்துக்களை நாம் நுகர வேண்டுமெனில் போதுமான வெளிச்சம், காற்று, அச்சொத்துக்களை அடைவதற்குப் பாதை இவை அவசியமாகின்றன. எனவே, இவை குறித்து நமக்கு உரிமைகள் உண்டு. இந்த உரிமைகளுக்கு ஊறு விளைவித்தலும் “தொல்லை” என்ற தீங்காகிறது.

நம் வீட்டில் குடியிருப்பதற்கு வேண்டிய வெளிச்சமும் காற்றும் பெறுவதற்கெனச் சன்னல்கள் வைத்து வீட்டைக் கட்டியிருக்கிறோம். அண்டை நிலத்துக்காரர் அவர் நிலத்தில் ஓர் உயரமான கட்டிடத்தை நம் வீட்டை ஒட்டி எழுப்பி, நம் சன்னல்கள் வழி வரும் காற்றையும் வெளிச்சத்தையும் தடுத்து விடலாம். இதன் பயனாய் நம் வீடு குடியிருப்பதற்கு வசதியில்லாததாய்ப் போய் விடுகிறது. எனவே, அண்டை நிலத்துக்காரர் செய்யும் செயலால் நம் வீட்டிற்குத் தேவையான வெளிச்சமும் காற்றும் குறைதல் கூடாது எனச் சட்டம் விதிக்கிறது. அடுத்த நிலத்தைத் தாண்டாமல் நம் நிலத்தை அடைவது இயலாததாகலாம். இப்பொழுது, அடுத்தவர் நிலத்தின்மீது நடந்து நம் நிலத்திற்குச் செல்வது தவிர்க்க முடியாததாகும். இவ்வாறு, நம் சொத்தை

வசதியாக அனுபவிப்பதற்கென்று பிறர் சொத்தின்மீது நமக்குச் சில உரிமைகள் இருப்பது நியாயமேயாகும்.

பிறர் நிலத்தின்மீது நடந்து வரும் உரிமை, அடுத்தவர் நிலத்தைப் பயன்படுத்தும் விதத்தால் நம் சொத்திற்குக் கிடைக்க வேண்டிய வெளிச்சம், காற்று இவை பாதிக்கப்படாமல் பார்த்துக் கொள்ளும் உரிமை—இவை நம் சொத்தை வசதியுடன் அனுபவிப்பதற்கெனப் பிறர் சொத்தின்மீது நமக்குள்ள உரிமைகள் ஆகின்றன. இவை "வசதி உரிமைகள்" (Easements or servitudes) எனப் படுவன.

எந்தச் சொத்தின் வசதிக்காக இந்த உரிமைகள் இருக்கின்றனவோ, இந்த உரிமைகளால் எந்தச் சொத்து வசதி பெறுகின்றதோ, அச்சொத்து "வசதி பெறும் சொத்து" (Dominant heritage) என்றும், இந்த உரிமைகளுக்கு உட்பட்டு இருக்கும் சொத்து "வசதி தரும் சொத்து" (Servient heritage) என்றும் அழைக்கப்படுகின்றன.

வசதியுரிமைகளின் வகைகள்

முக்கிய வசதி உரிமைகளை ஐந்து பிரிவுகளாக வகைப் படுத்திக் கூறுவர் :

(1) ஒளி வசதியுரிமை (Right to light)
(2) வளி வசதியுரிமை (Right to air)
(3) வழி வசதியுரிமை (Right of way)
(4) தாங்கு வசதியுரிமை (Right of support)
(5) நீர் வசதியுரிமை (Right in respect of water)

இந்த உரிமைகள் தோன்றும் விதத்தை அடிப்படையாகக் கொண்டு இவைகளை (1) இயல்பான உரிமை (உற்ற உரிமை) (Natural right), (2) ஈட்டிய உரிமை (பெற்ற உரிமை) (Acquired right) என இரு பிரிவுகளாகக் கூறுவர்.

பக்கத்து நிலம் சரிந்து விழும் வகையில் தமது நிலத்தில் ஒருவர் குழி தோண்டக்கூடாது. ஒவ்வொருவர் நிலமும் சரிந்து விழாதபடி அடுத்தவர் நிலம் தாங்கி நிற்க வேண்டும். இவ்வாறு, ஒரு நிலம் அடுத்த நிலத்தால் தாங்கப்படும் உரிமை "இயல்பான உரிமை"யாகும். இஃது அந்த நிலத்திற்கு இயல்பாகவே "உற்ற உரிமை" ஆகும்.

ஒருவர் நிலத்திலுள்ள கட்டிடம் சரிந்து விழாத விதத்திலேயே அடுத்தவர் நிலம் பயன்படுத்தப்பட வேண்டும் என்ற விதி கிடையாது. தமது நிலத்தை ஒருவர் தோண்டியதால் அடுத்தவர் நிலத்திலுள்ள கட்டிடம் சரிந்தது எனில் அதற்குத் தோண்டி

யவர் பொறுப்பல்லர். ஆனால், அந்தக் கட்டிடம் இருபது வருடங்களுக்கு முன் கட்டப்பட்டிருந்து, அண்டை நிலத்தால் தாங்கப்படும் உரிமையை அந்த இருபது வருட காலமும் அது பெற்றிருந்தால், தாங்கப்படும் உரிமை அக்கட்டிடத்தின் சொந்தக்காரருக்கு உண்டு. இது நீண்டகால அனுபவ பாத்தியத்தால் ஈட்டப்பட்ட உரிமை. இந்த உரிமையை ஒப்பந்தம் மூலமாகவும் பெற்றிருக்கலாம். இதுபோல், ஒப்பந்த மூலமாகவோ, அனுபவப் பாத்தியத்தாலோ பெற்ற உரிமை "ஈட்டிய உரிமை" (பெற்ற உரிமை) எனப்படும்.

ஐந்து வகை வசதி உரிமைகளின் கூறுகளை இனிக் காண்போம்.

நம் நாட்டில் 1882 ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட இந்திய வசதியுரிமைச் சட்டம் (Indian Easements Act) வசதியுரிமைகளை வகைப்படுத்திப் பாதுகாக்கிறது.

## (1) ஒளி வசதி உரிமை (Right to light)

ஒரு சொத்திற்கு நான்கு பக்கங்களில் (lateral) இருந்து கிடைக்கும் வெளிச்சமும், நேரடியாக ஆகாயவழி கிடைக்கும் வெளிச்சமும் "ஒளியுரிமை" எனப்படுகிறது. ஆகாயவழி வரும் ஒளி "இயல்பான உரிமை"யாகும். அதை யாரும் தடை செய்ய முடியாது. நான்கு பக்கங்களிலிருந்து வரும் ஒளி அடுத்தவர் நிலத்தின்வழி வருவதாகும். எனவே, இஃது அனுபவ பாத்தியத்தாலோ, ஒப்பந்தத்தாலோ "ஈட்டிய உரிமை"யாகவே இருக்க முடியும்.

ஒருவருடைய திறந்த வெளியாக இருக்கும் நிலத்திற்கு உள்ள ஒளி உரிமை எவ்வளவு என்று கூறுவதற்கில்லை. எனவே, திறந்த வெளியான நிலத்தைப் பொறுத்து எவருக்கும் ஒளியுரிமை கிடையாது. அதில் கட்டிடம் இருந்து. அக்கட்டிடத்திலுள்ள சன்னல்கள், சாளரங்கள் இவை வழியாக எவ்வளவு வெளிச்சம் அக்கட்டிடத்திற்குள் புகுந்திருந்ததோ அதை வைத்தே அந்தக் கட்டிடத்திற்கான "ஒளி வசதி உரிமை" உறுதி செய்யப்படுகிறது.

இருபது வருடங்களுக்கு மேலாக இடையின்றி ஒருவர் அனுபவித்துவரும் வெளிச்சத்தைப் பொறுத்துத்தான் ஒருவருக்கு உரிமையுண்டு. அது "தொன்மையான வெளிச்சம்" "தொல் ஒளி" (ancient light) என்று அழைக்கப்படுகிறது.

ஒரு கட்டிடத்தின் சாளரங்கள் வழியே இருபது வருடங்களுக்கு மேற்பட்ட காலத்திற்கு வந்து கொண்டிருக்கும் வெளிச்

சத்தைப்பொறுத்து ஒருவருக்குள்ள ''வசதியுரிமையை''த் ''தொல் ஒளி உரிமை'' (right to ancient light) என்று கூறுவதுண்டு. அந்தக் கட்டிடத்தைப் பயன்படுத்துவதில் வசதிக் குறைவு ஏற்படும் வகையில் இந்தத் ''தொன்மையாக வரும் வெளிச்சம்'' குறைக்கப்பட்டால் அது தொல்லை விளைக்கும் தீங்காகிறது. இந்தக் கொள்கை Colls V. Home and Colonial Stores (1904) A. C. 179 என்ற வழக்கில் முடிவாகத் தீர்மானிக்கப்பட்டது.

அடுத்த நிலத்தில் ஒரு உயரமான கட்டிடம் கட்டப்படுவதால் நம் கட்டிடத்திற்குள் வரும் தொன்மையான வெளிச்சம் குறையலாம். இவ்வாறு குறைந்ததால் மட்டும் அதைத் தொல்லை விளைவிக்கும் தீங்கு எனச் சட்டம் கொள்வதில்லை. வெளிச்சம் குறைந்ததின் பயனாய் நம் கட்டிடத்தைப் பயன்படுத்துவதில் அசௌகரியமோ, வசதிக் குறைவோ ஏற்படவேண்டும். குடியிருப்பது போன்ற சாதாரணக் காரியத்திற்கும் பயன்படுத்த முடியாத அளவிற்கு வெளிச்சம் குறைந்து வசதிக் குறைவு ஏற்பட்டால் தான் அடுத்தவர்மீது நாம் நடவடிக்கை எடுக்க முடியும்.

ஒரு வீட்டிற்கு வடபுறமும், தென்புறமும் சன்னல்கள் இருக்கின்றன. வடபுறத்துச் சன்னல்கள் வழியாக வரும் வெளிச்சத்தைத் தடுத்து அண்டை நிலத்துக்காரர் ஒரு கட்டிடத்தை எழுப்புகிறார். அவர், தெற்குச் சன்னல்கள் வழியாக வரும் வெளிச்சமே அந்த வீட்டிற்குப் போதுமானது என்று வாதாட முடியாது. அந்தத் தென்புறச் சன்னலும் மறைக்கப்பட்டு அப்பொழுதும் போதுமான வெளிச்சம் வீட்டிற்குக் கிடைக்குமா என்பதையே சட்டம் கவனிக்கின்றது. [Sheffield Masonic Hall V. Sheffield Corporation (1932) 2. Ch. 17]

இருக்கும் சன்னல்கள் வழியாக வந்து கொண்டிருந்த வெளிச்சத்தை அசௌகரியம் விளைவிக்கும் அளவுக்கு மறைத்த எதிர்வாதி, வாதியின் கட்டிடத்தில் இன்னும் புதிய சன்னல்களை வைத்தாலோ அல்லது இருக்கும் சன்னல்களைப் பெரிதாக்கினாலோ போதுமான ஒளி பெறலாம் என எதிர்வாதம் கூறுவதைச் சட்டம் ஏற்பதில்லை.

சன்னல்களுடன் கூடிய தமது வீட்டை ஒருவர் இருபது வருடங்களாகத் தானியக் கிடங்காகவே உபயோகப்படுத்திக் கொண்டிருக்கலாம். குடியிருப்பதற்கு வேண்டிய வெளிச்சம் தானியக் கிடங்கிற்கு அவசியமில்லை. இந்தக் காரணத்தைக்காட்டி அடுத்த நிலத்துக்காரர், இந்த வீடு குடியிருப்பதற்குத் தகுதி இல்லாத வகையில் வெளிச்சத்தை மறைத்துத் தம் நிலத்தில் கட்டிடங்களைக் கட்டவோ வேறு வகையில் வெளிச்சத்தை மறைக்

கவோ கூடாது. வசதியுடன் குடியிருப்பதற்கு வேண்டிய வெளிச்சத்தைப் பெறுவதற்கான உரிமை அந்த வீட்டுக்காரருக்கு உண்டு. [Price V. Hilditch (1930) 1. Ch. 500]

ஒருவர் தமது கட்டிடத்தை இருபது வருடங்களுக்கு மேல் புகைப்படம் எடுப்பதற்கான நிலையமாகப் பயன்படுத்திவருகிறார். குடியிருப்பதற்கு வேண்டியதைவிட அதிகமான வெளிச்சம் இதற்குத் தேவைப்படுகிறது. இருபது வருடங்களுக்கும் மேலாகப் புகைப்படம் எடுப்பதற்கு வேண்டிய அதிகமான வெளிச்சத்தை அடைந்திருக்கலாம். இந்த அளவு வெளிச்சம் என்றுமே குறையாது கிடைக்க வேண்டும் என்று அந்தக் கட்டிடத்திற்கு உரியவர் கோர முடியாது. அந்தக் கட்டிடத்தில் குடியிருப்பதற்குச் சாதாரணமாக வேண்டிய அளவு வெளிச்சம் பெறுவதற்கே அவருக்கு உரிமை உண்டு. எனவே, அண்டை நிலத்துக்காரர் கட்டிடம் கட்டியதால் புகைப்படம் எடுப்பதற்குப் போதுமான அளவு வெளிச்சம் வழக்கம்போல் கிடைக்கவில்லை என்று கூறி அவர் வழக்கிட முடியாது. குடியிருக்கும் வசதிக்கு அசௌகரியம் விளைவிக்கும் அளவிற்கு வெளிச்சம் குறைக்கப்பட்டால் மட்டுமே, அண்டை நிலத்துக்காரரின் செயல் தீங்கானதெனக் கருதப்படும். [Ambler V. Gordon (1905) 1. K. B. 417]

எனவே, (1) ஒரு கட்டிடத்தின் சன்னல்கள், சாளரங்கள் இவற்றின் வழியே வந்துகொண்டிருக்கும் வெளிச்சத்தைப் பொறுத்தே ஒருவருக்கு உரிமையுண்டு. (2) அந்த வெளிச்சத்தை அவர் இருபது ஆண்டுகளுக்கு மேலாக இடையின்றிப் பெற்றிருக்க வேண்டும் (3) குடியிருப்பதற்கு அசௌகரியம் ஏற்படும் வகையில் அந்த வெளிச்சம் குறைக்கப்பட்டால் மட்டுமே அவர் வெளிச்சத்தை மறைத்தவர்மீது வழக்கிட முடியும்.

### (2) வளி (காற்று) வசதி உரிமை (Right to air)

திறந்த வெளியாக இருக்கும் நிலத்தைப் பொறுத்து எவ்வாறு ஒளி உரிமையைப் பெற முடியாதோ, அவ்வாறே காற்று உரிமையையும் பெற முடியாது.

ஒரு கட்டிடத்தின் குறிப்பிட்ட துவாரங்கள், சாளரங்கள், சன்னல்கள் இவற்றின் வழியே வரும் காற்றைப் பொறுத்தே வசதி உரிமை உண்டு. அந்த உரிமை இருபது வருடங்களாக அனுபவிக்கப்பட்டிருக்க வேண்டும். அல்லது ஒப்பந்தத்தால் பெறப்பட்டிருக்கவேண்டும்.

காற்றுடியால் இயங்கும் எந்திரம் (Wind-mill) ஒன்றை வாதி நடத்திக் கொண்டிருந்தார். அதன் அருகில் எதிர் வாதியால் கட்டப்பட்ட பள்ளிக்கட்டிடம் காற்றுடிக்கு நேராக வந்து கொண்

டிருந்த காற்றின் போக்கைத் தடை செய்தது. இருந்தும் வாதிக்கு எந்தப் பரிகாரமும் கிடைப்பதற்கில்லையென வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. [Webb V. Bird (1861) 10. C. B. (N. S) 268]

எனவே, கட்டிடத்திலுள்ள குறிப்பிட்ட சாளரங்கள் வழிவரும் காற்றோட்டத்தைப் பொறுத்தே ஒருவருக்கு வசதி உரிமை ஏற்படுகிறது.

(3) வழி வசதி உரிமை (Right of way)

வழிகளை (பாதைகளை)த் தனி வழிகள், பொது வழிகள் என இருவகையாகப் பிரிக்கலாம்.

நம் சொத்தை அடைவதற்காக இன்னொருவரின் சொத்தைக் கடந்து வரும் உரிமையை அவசியத்தாலோ, நீண்ட கால அனுபவத்தாலோ, ஒப்பந்தத்தாலோ பெறலாம். இது தனித்த வழியுரிமை (Private right of way) எனப்படும். அந்த வழியை அடைப்பது தொல்லை விளைவிக்கும் தீங்காகும்.

பொது வழியை (Public way)த் தடை செய்வது வசதியுரிமைக்கு விளையும் தீங்கன்று. அது "பொதுத்தொல்லை" ஆகிறது. அதுபற்றிப் பின்னர்க் காண்போம்.

(4) தாங்கு வசதியுரிமை (Right of support)

ஒரு நிலச் சொத்தை அடுத்திருக்கும் நிலமோ, அடி நிலமோ தாங்கி நிற்றலைத் "தாங்குதல்" (Support) என்கிறோம். நிலத்தின் மேல் இருக்கும் கட்டிடத்தையோ, மேல் நிலத்தையோ அடி நிலம் தாங்குதல் "அடித்தாங்குதல்" (Subjacent support) என்றும், அவைகளை அடுத்து இருக்கும் நிலமோ, கட்டிடமோ தாங்குதல் "புறத்தாங்குதல்" (Lateral support) என்றும் கூறப்படும்.

கட்டிடங்கள் இல்லாத ஒரு நிலத்தைப் பொறுத்தவரை அடுத்திருக்கும் நிலத்தால் அது தாங்கப்பட வேண்டிய உரிமை இயல்பாகவே உண்டு. நம் நிலம் சரிந்து விழத்தக்கபடி அடுத்த நிலத்துக்காரர் தம் நிலத்தில் பள்ளம் தோண்டக்கூடாது. சில வேளைகளில் பூமியின்மேல் நிலம் ஒருவருக்கும் அடித்தளம் மற்றொருவருக்கும் பாத்தியப்பட்டிருக்கலாம். அப்பொழுதும் மேல்நிலம் அடிநிலத்தால் தாங்கப்பட வேண்டும். இந்த உரிமை "இயல்பான வசதியுரிமை" ஆகும்.

நம் நிலத்திலுள்ள கட்டிடத்திற்கு அடுத்த நிலம் புறத்தாங்குதல் கொடுக்க வேண்டும் என்ற இயல்பான உரிமை கிடையாது. அந்த உரிமையை இருபது வருட அனுபவத்தாலோ அல்லது ஒப்பந்த வழியாகவோ மட்டுமே பெறமுடியும்.

நம் நிலத்தில் பல மாடிகள் கொண்ட உயரமான கட்டிடத்தைக் கட்டுகிறோம். அஃது அடுத்தவர் நிலத்தை ஒட்டி இருக்கிறது. அடுத்த நிலத்தைப் பள்ளமாகத் தோண்டினால் நம் கட்டிடத்தின் அடித்தளத்திற்குப் புறத்தாங்குதலின்றிக் கட்டிடம் சரிந்து விழலாம். அடுத்த நிலத்துக்காரர்மீது நாம் இப்பொழுது நட்டஈடு கோர முடியாது. ஆனால் நம் கட்டிடம் இருபது வருட காலமாக இருந்து அடுத்து இருக்கும் நிலத்தால் தாங்கப்படும் உரிமையை இருபது வருட அனுபவத்தால் பெற்றிருந்தால், அடுத்த நிலத்தின்மீது கட்டிடத்திற்கான தாங்கு வசதியுரிமை நமக்கு உண்டு. [Dalton V. Angus (1861) 6. A. C. 740]

வெற்றிடமான நிலத்திற்குத் தாங்கு வசதி உரிமை இயல்பாகவே உண்டு. கட்டிடத்திற்குள்ள தாங்கு வசதியுரிமை ஈட்டப்பட்டால்தான் உண்டு.

ஒருவர் நிலத்தினடியில் நிலக்கரி போன்ற சுரங்கப் பொருள்கள் இருக்கலாம். அவைகளை எடுக்கும் வாயிலாக அடுத்திருக்கும் நிலம் சரிந்து விழும்படி சுரங்கங்கள் தோண்டுதல் கூடாது.

ஒருவரது கட்டிடம் அடுத்தவருடைய கட்டிடத்தின் பக்கத்து ஆதரவால் நிற்கலாம். இருபது வருடங்கள் ஆனபின் பக்கத்துக் கட்டிடத்துக்குச் சொந்தக்காரர் தம் கட்டிடத்தை மாற்றியமைக்கும் வாயிலாக முதல் கட்டிடத்திற்குக் கொடுத்து வந்த பக்கத் தாங்குதலை அகற்றிவிட முடியாது.

தாங்கு வசதி உரிமை பெற்ற நிலமோ கட்டிடமோ சரிந்து விழுந்த பிறகுதான் வாதி எதிர்வாதியின்மேல் நடவடிக்கை எடுக்க முடியும். ஏனெனில், தாங்குதலை அகற்றிய செயலால் கேடு விளைந்த பின்தான் தீங்கு நேர்வதாகச் சட்டம் கொள்கிறது. தாங்குதலை அகற்றிய செயல் மட்டும் தீங்காகி விடுவதில்லை; அதன் பயனாய் அடுத்த நிலமோ, கட்டிடமோ சரிந்து விழுந்திருக்க வேண்டும். [Graff Brothers Estate Ltd. V. Rimrose Brook Joint Sewage Board (1953) 2. Q. B. 323]

## (5) நீர் வசதியுரிமை (Right to water)

நதி, கால்வாய் முதலிய நீரோட்டங்களின் இரு கரைகளிலும் நிலம், வீடு போன்ற சொத்துக்கள் அமைந்திருக்கின்றன. கரைகளிலுள்ள விளைநிலங்களின் சாகுபடிக்கும், குடியிருப்போரின் உபயோகத்திற்கும் நதிநீர் இன்றியமையாததாகிறது. நீண்ட தூரம் செல்லும் நதியின் இரு மருங்கின் நெடுகிலுமுள்ள நிலச் சொத்தையுடையவர்கள் அந்நதியின் நீரால் பெரும்பயன் அடைகின்றனர். கரை நிலங்கள் உடையவர்களுக்குக் கிடைக்கும்

இந்த நீரோட்ட வசதி, இயற்கை அவர்களுக்கு அளிக்கும் பெரும் பேருகும். இந்த உரிமைக்கு ஊறு விளைவிப்பதைச் சட்டம் "தொல்லை" என்ற தீங்காகக் கொள்கிறது.

இயற்கையான நீரோட்டத்தை ஒட்டி அமைந்திருக்கும் நிலச் சொத்துக்களைக் "கரை நிலங்கள்" (Riparian lands) என்கிறோம். அச்சொத்துக்களை உடையவர்கள் "கரை நிலத்தாளர்" (Riparian owners) எனப்படுவர். நீரோட்டத்தின் இரு மருங்கிலும் கரை நிலத்தாளர்கள் பலர் இருக்கின்றனர். இவர்கள் அனைவரும் இயற்கையளித்துள்ள நீரின் பயனைத் துய்ப்பதற்கு உரிமை யுள்ளவர்கள்.

ஒரு நதி மேற்கிலிருந்து கிழக்கு நோக்கி ஓடுகிறது என வைத்துக் கொள்வோம். கரையோர நிலங்களில் ஒரு நிலத்திற்கு மேற்றிசையிலுள்ள நிலங்களை ஏறுகரை நிலங்கள் (Upper riparian lands) என்றும், அதற்குக் கீழ்த் திசையில் உள்ள நிலங்களை இறங்குகரை நிலங்கள் (Lower riparian lands) என்றும் கூறுகிறோம். ஏறுகரை நிலங்களைக் கடந்தே ஆற்று நீர் இறங்கு கரை நிலங் களுக்குச் செல்கின்றது. ஒரே கரைநிலம் அதற்கு மேற்பகுதியி லுள்ள நிலங்களைப் பொறுத்தவரை இறங்கு கரை நிலமாகவும், அதற்குக் கீழ்ப்பகுதியிலுள்ள நிலங்களைப் பொறுத்தவரை ஏறுகரை நிலமாகவும் இருக்கிறது.

ஏறுகரையில் உள்ளவர்களுக்கு நீரைப் பயன்படுத்தும் உரிமையுண்டு. ஆனால் இறங்குகரை நிலக்காரர்களின் உரிமை யைப் பாதிக்காதபடி அவர்கள் நடந்து கொள்ளவேண்டும். இறங்கு கரையில் உள்ளவர்களின் உரிமை பாதுகாக்கப்பட வேண்டும் என்பதற்காக ஏறுகரை நிலத்தாளர்கள் நதியின் நீரைப் பயன்படுத்தக்கூடாது என்று தடுப்பதற்கில்லை. கரை நிலத்தாளர்கள் ஒவ்வொருவரின் உரிமையும் மற்றவர்களின் உரிமையைப் பாதிக்காத வகையில் செயல்பட வேண்டும்.

கரை நிலத்தாளர்களிடையே தோன்றிய வழக்குகளில் அவரவர்களின் உரிமையை நிர்ணயிப்பதில் பல சிக்கல்கள் எழுந்தன. எல்லோருடைய உரிமைகளும் பாதுகாக்கப்பட வேண்டும் என்ற நோக்குடன் அவர்களின் பாத்தியதையை லார்டு மக் நாட்டன் (Lord Macnaghten) என்ற நீதிபதி கீழ்க் கண்டவாறு அறுதியிட்டுக் கூறினர்:

*நீரோட்டத்தில் வழக்கமான ஓடும் நீரின் அளவிலோ, தன்மையிலோ உணரத்தக்க வகையில் மாறுபாடின்றி நீரைப் பெற்றுப் பயனடையும் உரிமை ஒவ்வொரு கரை நிலத்தாள ருக்கும் உண்டு.* [John Young & Co. V. Bankier Distillery Co. (1893) A. C. 691]

எனவே, கரைநிலத்தாளர் ஒவ்வொருவரும் நீரோட்டத்தின் அளவிலும் தன்மையிலும் மற்றவர்களின் உரிமையைப் பாதிக்கும் வகையில் மாறுதல் ஏற்படுத்தாமல் நீரைப் பயன்படுத்திக் கொள்ளலாம். இதுவே, கரை நிலத்தாளரின் உரிமை (Right of a riparian owner) அல்லது நீர்வசதியுரிமை (Right to water) எனப்படும்.

### நீரோட்டம் இயற்கையில் அமைந்ததாக இருக்கவேண்டும்

நீரோட்டம் இயற்கையில் அமைந்ததாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் கரைநிலத்தாளருக்கு இயல்பான நீர் வசதி யுரிமை ஏற்படுகிறது. செயற்கை நீரோட்டத்தைப் பொறுத்த உரிமை ஒப்பந்தத்தாலோ அல்லது நெடுநாள் அனுபவத்தாலோ தான் ஈட்டப்பட வேண்டும்.

### வகுத்தவழி செல்லும் நீரோட்டத்தைப் பொறுத்தே உரிமை உண்டு

வரையறையுள்ள வழியே செல்லும் நீரோட்டத்தைப் பொறுத் துத்தான் நீர் வசதி உரிமை கொண்டாடப்படுகிறது. இந்த நீரோட்டம் நதி, கால்வாய் போன்று பூமியின் மேற்பரப்பில் செல்லுவனவாக இருக்கலாம் ; அல்லது பூமியின் அடித்தளத்தில் வரையறைக் கடங்கிய வழியே செல்லும் பாதாள நீரோட்டங்களா கவும் இருக்கலாம். இந்த இருவகை நீரோட்டங்களைக் குறித்தும் கரைநிலத்தாளருக்கு உரிமை உண்டு.

ஒரு குறிப்பிட்ட ஊற்றிலிருந்து வரும் நீர் கால்வாயில் கலந்தது என்ருல், அந்த ஊற்று நீரைப் பூமிக்கு அடியிலேயே தடுத்துக் கால்வாயின் நீரோட்டத்தைக் குறைப்பது தீங்கான செயலாகும். ஏனெனில், பூமிக்கு அடியில் செல்லும் ஊற்று நீர், கசிவு நீர் போலன்றிக் குறிப்பிட்ட போக்குவழியிலே சென்று கால்வாயை அடைகிறது.

ஆனல், குறிப்பிட்ட போக்குவழி ஏதுமின்றித் தரை மீது பரவியோ அல்லது அடித்தளத்தில் கசிந்து வடிநீராகவோ (Percolation) வரும் நீரைக் குறித்து உரிமை கொண்டாட முடியாது.

வாதி ஒருவர் கசிவு நீர் வரும் கால்வாயை அடுத்து ஆலை யொன்றை வைத்து நடத்தி வந்தார். ஆலைக்குச் சிறிது தூரம் தள்ளியிருக்கும் தமது நிலத்தில் எதிர்வாதி கிணறு தோண்டி, அக்கிணற்று நீரை விசைக் குழாய்கள் வழியாக அடுத்திருந்த நகருக்கு எடுத்துச் சென்ருர். இதனல் கால்வாயில் வரும் கசிவு நீர் குறைந்து வாதியின் ஆலையை நடத்துவதற்கு இடைஞ்சல்

விளைந்தது. இருப்பினும், எதிர்வாதியின் செயல் தீங்கானது அன்று எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. ஏனெனில், கால்வாயில் வந்து கொண்டிருந்த கசிவு நீர் வரையறையுள்ள எந்தப் போக்குவழியாகவும் வந்து கால்வாயில் விழவில்லை. குறிப்பிட்ட போக்குவழியின்றிக் கசிந்து வரும் நீர் குறித்து வாதிக்கு எந்த வித உரிமையும் இல்லை. [Chasemore V. Richards. (1859) 7. H. L. C. 349]

### கசிவு நீரின் தன்மை மாற்றப்படுதல் கூடாது

ஒருவர் நிலத்திற்குள் செல்லும் கசிவு நீரின் அளவு குறையும் வகையில் அடுத்தவர் தமது நிலத்தில் அந்நீரைத் தங்க வைக்கலாம். ஆனல், அந்தக் கசிவு நீரின் தன்மையை மாற்றும்படியாகவோ அதை அசுத்தப்படுத்தும் வகையிலோ, எச்செயலும் செய்தல் கூடாது.

அண்டை நிலத்துக்காரர்களான வாதி எதிர்வாதி இருவரின் நிலங்களிலும் ஆழமான கிணறுகள் இருந்தன. எதிர்வாதி தமது கிணற்றில் சாக்கடை நீரை நிரப்பித் தங்க வைத்ததால் அந்தச் சாக்கடை நீர் கசிந்து போய் வாதியின் கிணற்று நீரையும் பாழ்படுத்தியது. வாதியின் கிணற்று நீரை அசுத்தப் படுத்திய தீங்கிற்கு எதிர்வாதி பொறுப்பாக்கப்பட்டார். [Ballard V. Tomlinson ('885) 29. Ch. D. 115]

### கரைநிலத் தேவைகளுக்கு (Riparian Uses) நீரைப்பயன்படுத்தும் உரிமை

ஒவ்வொரு கரைநிலத்தாளரும் நீரைப் பயன்படுத்தும் உரிமையுடையவர் எனக் கூறப்பட்டது. எந்த விதமாக நீரைப் பயன்படுத்தலாம் என்ற வினு எழுகின்றது. கரைநிலத் தேவைகளுக்கு (riparian uses) நீரைப் பயன்படுத்தும் உரிமையையே சட்டம் கரை நிலத்தாளருக்கு அளிக்கின்றது.

குடும்பக் காரியங்கள், ஆடுமாடுகள், சாகுபடி இவைகளுக்கான தேவைகள் கரைநிலத்தேவைகள் ஆகின்றன. கரை நிலத்தில் நடத்தப்படும் இயந்திரத் தொழிலும் கரைநிலக் காரியமேயாகும். சுருங்கக் கூறினல் கரைநிலத்தில் நடத்தப்படும் காரியங்கள் அனைத்திற்கும் நீர் பயன்படுத்தப்படலாம். கரைநிலத்திற்குச் சம்பந்தமில்லாத பிற காரியங்களுக்கு ஏற்படும் தேவை (Non-riparian use) கரைநிலத் தேவை எனக் கருதப்படுவதில்லை.

ஒரு நீரோட்டத்தையொட்டிய நிலத்தைப் பெற்றிருந்த இரயில்வேக் கம்பெனியார், நீரை எடுத்துப் புகைவண்டிப் பொறி

களுக்குப் பயன்படுத்தினர். இது கரைநிலத் தேவைக்கான உபயோகம் இல்லை எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. [Mc Cartney V. Londonderry and Lough Swilly Ry. Co. (1904) A. C. 301]

நீர் வசதியுரிமைக்கு மூன்று விதமான தீங்குகள் விளையலாம்

(1) நீரை எடுத்தல் (Abstraction)

(2) நீரைத் தடுத்தல் (Obstruction)

(3) நீரின் தன்மையை மாற்றுதல் (Pollution)

ஒரு நீரோட்டத்தின் நீரை எடுத்தோ, தடுத்தோ, அசுத்தப் படுத்தியோ, கரைநிலத்தாளர்களின் உரிமைக்கு ஊறு விளைவிப்பதைத் "தொல்லை" என்ற தீங்காகச் சட்டம் கொள்கிறது.

## எடுத்தல் (Abstraction)

கரைநில உபயோகங்களுக்கு நீரை எடுப்பதால் நீரின் அளவு குறைந்துவிட்டது என்று மற்றக் கரைநிலத்தாளர்கள் குறைகூற முடியாது. குடும்பக் காரியங்களுக்கு வேண்டியவை, சாகுபடி முதலிய தேவைகள், வழக்கமான கரைநிலத் தேவைகள் (Ordinary riparian uses) ஆகின்றன.

கரைநிலத்திலுள்ள கைத்தொழில், இயந்திரம் முதலிய தேவைகளை வழக்கமீறிய தேவைகள் (extra-ordinary uses) என்பார்கள். இந்த வழக்கமீறிய தேவைகளுக்கு நீர் எடுக்கும் பொழுது நீரோட்டம் குறைந்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். நீரின் அளவு குறைந்து இறங்குகரை நிலத்தாளருக்கு இடைஞ்சல் ஏற்பட்டால் இறங்குகரை நிலத்தாளர் மற்றவரின் வழக்கமீறிய உபயோகத்தைத் தடுக்கலாம்.

கரைநிலத்திற்குச் சம்பந்தம் இல்லாத காரியங்களுக்காக (Non-riparian uses) நீரைப் பிறர் எடுப்பதை, மற்றக் கரை நிலத்தாளர்கள் தடுப்பதற்கு உரிமையுண்டு. அவ்வாறு நீர் எடுப்பதால் மற்றக் கரைநிலத்தாளருக்கு இடைஞ்சல் ஏற்பட வேண்டும் என்ற கட்டாயமில்லை. அவர்களுக்கு இடையூறு விளைந்தாலும், விளையாவிட்டாலும், கரைநிலத்திற்குப் பயன்படுத்தாமல் பிற காரியங்களுக்காக நீர் எடுப்பது தடுக்கத் தக்கதாகும்.

## தடுத்தல் (Obstruction)

நீரோட்டத்தை அணையிட்டோ அல்லது வேறு வகையிலோ தடுத்தால் இறங்குகரை நிலங்களுக்கு நீர் கிடைக்காமல் போகலாம். தடுத்து நிறுத்தப்பட்ட நீர் தேங்கிநின்று பிறர் நிலத்திற்

குள் புகுந்துவிடலாம். எனவே, நீரோட்டத்தைத் தடுத்தல் தீங்கான செயலாகும். ஓர் ஓடையில் அணையிட்டுத் தேக்கிச் சில நிலங்களுக்கு நீர் பாய்ச்சும் வழக்கம் இருந்தால், அவ்வாறு செய்வது தீங்காவது இல்லை.

### தன்மையை மாற்றல் (Pollution or Altering the quality)

இரசாயனப் பொருள்கள், கழிவு நீர் இவைகள் நீரில் கலப்பதால் நீரின் தன்மை மாறுகிறது; அதனால் நீரைப் பயன்படுத்துவோர்களுக்கு இடையூறு விளைகிறது. எனவே, ஓடும் நீரின் தூய்மையையும் தன்மையையும் மாற்றுவது கூடாது.

ஒரு தொழிற்சாலையிலிருந்து வெளிவரும் கொதிநீர் நீரோட்டத்தில் விழுந்ததால் நீரின் வெப்பநிலை அதிகமாகிறது. கொதிநீரை நீரோட்டத்தில் கலக்கும்படி செய்வது தீங்கான செயல் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

நகராட்சியாளர்கள் சாக்கடை நீரை நதியில் கழிய விடுதல், தொழிற்சாலைகளிலிருந்து கழிவுநீரை நீரோட்டங்களில் புக விடுதல், இவைபோன்ற செயல்களைத் தடுத்து நீதிமன்றங்கள் பல வழக்குகளில் உத்தரவு பிறப்பித்திருக்கின்றன.

நீரின் தன்மை மாற்றப்பட்டதால் கரை நிலத்தாளர்களுக்குக் கேடு விளைந்திருக்கவேண்டும் என்ற கட்டாயமில்லை. நீரின் தன்மையோ, தூய்மையோ மாற்றப்பட்டதா என்பதே முக்கியமானது. ஏற்கனவே நீர் தூய்மையற்றதாயிருக்கிறது என்ற காரணங்காட்டி அதை மீண்டும் தூய்மையற்றதாக்குவதைச் சட்டம் ஏற்றுக்கொள்வதில்லை. அதுபோலவே, கழிவுப் பொருள்களை விடுவதற்கு வேறு வழியில்லை என்ற காரணத்திற்காக நீரோட்டத்தில் அவைகளைக் கலக்க விடுவதையும் சட்டம் மன்னிப்பது இல்லை.

கரைநிலத்தாளர்களால் எந்தக் காரியத்திற்கு நீர் பயன்படுத்தப்பட்டதோ அந்தக் காரியத்திற்குப் பயன்படத் தகாத வகையில் நீரின் தன்மை மாற்றப்பட்டது என்பதை வாதி மெய்ப்பித்தல் வேண்டும். அப்பொழுதுதான் எதிர்வாதியின் செயல் தடுக்கத் தக்கதாகும். நீரின் தன்மையில் ஏதோ சிறிய மாறுதல் விளைவிக்கப்பட்டது என்பதற்காக அதைத் தடுப்பதற்கு நடவடிக்கை எடுப்பது தகாது.

### நம் நாட்டுச் சாகுபடியாளர்களின் உரிமை

ஒரு குறிப்பிட்ட நீர்ப்பாசனத்திலிருந்து தங்கள் சாகுபடி நிலங்களுக்கு நீர் பெற்று வரும் சாகுபடியாளர்களின் உரிமை என்ன? நம் நாட்டில் நீர்ப்பாசனமூலங்கள் எல்லாம் அரசாங்கத்

கத்திற்கே சொந்தமாக இருக்கின்றன. அவர்கள் நீர்ப்பாசன மூலங்களை மாற்றி அமைக்கலாம். வழக்கமாகத் தங்கள் நிலங்களுக்கு வந்துகொண்டிருந்த அளவு நீரைப்பெறும் பாத்தியதையே சாகுபடியாளர்களுக்கு உண்டு. ஒரு குறிப்பிட்ட மூலத்தில் இருந்துதான் சாகுபடி நிலங்களுக்கு நீர் கிடைக்க வேண்டும் என்று எவரும் கோர முடியாது. நீர்ப்பாசன முறையை மாற்றியமைக்கும் அதிகாரமுடைய அரசாங்கம் தாங்கள் செய்யும் மாறுதலால் வழக்கமாகச் சாகுபடிக்குக் கிடைத்து வந்த நீரின் அளவு எவருக்கும் குறைந்துவிடாமல் பார்த்துக்கொள்ள வேண்டும்.

எனவே, ஒரு கால்வாயிலிருந்து தம் நிலத்திற்கு நீர் பெற்று வந்த ஒருவர் எப்பொழுதும் அந்தக் கால்வாயிலிருந்தே தம் நிலத்திற்கு நீர் பாயவேண்டும் என்று வற்புறுத்த முடியாது. அரசினர் வேறு கால்வாயிலிருந்து அவர் நிலத்திற்கு நீர் கிடைக்க வழிசெய்யலாம். ஆனால், அவர் நிலத்திற்கு வழக்கமாகக் கிடைத்து வந்த நீரின் அளவு குறைந்து விடலாகாது.

இந்த முறையில் கரைநிலத்தாளர்களின் நீர் வசதியுரிமையைச் சட்டம் பாதுகாக்கிறது. அந்த உரிமைக்கு ஊறு செய்யப்பட்டால் அதைத் தொல்லை விளைவிக்கும் தீங்காகக் கொண்டு நிவாரணம் அளிக்கிறது.

---

# பகுதி 6

## வழக்கத்தால் தோன்றும் வசதியுரிமைகள்
## (Customary Easements)

ஒரு கிராமத்திற்குப் பொதுவான நிலத்தில் ஊர்மக்களின் ஆடு மாடுகள் புல் மேயும் உரிமை நீண்ட நாட்களாக இருக்கலாம். இது நெடுநாள் வழக்கத்தால் வரும் உரிமையாகும். எனவே, கிராமவாசி ஒருவரின் ஆடு மாடுகள் பொதுநிலத்தில் மேய்வதைப் பிறர் தடுப்பது தீங்காகும்.

பஞ்சாப், உத்திரப் பிரதேசம் முதலிய மாகாணங்களின் சில பகுதிகளில் பெண்கள் "பர்தா" முறைப்படி, பிற ஆண்களின் கண்களில் படாதவாறு, வாழ்க்கை நடத்துகின்றனர். எனவே, அந்தக் குறிப்பிட்ட பகுதிகளிலுள்ள வீடுகளில் உள்ள சன்னல்கள் அடுத்த வீட்டிற்குள் பார்ப்பதற்கு ஏற்ற வகையில் அமைவது கூடாது. அடுத்த வீட்டின் சன்னல்கள் வழியாகத் தம் வீட்டினுள் எந்தப் பாகத்தையாவது பார்க்க முடிகிறது என்றால் அடுத்த வீட்டுச் சன்னல்களை அகற்றும் உரிமை ஒருவருக்கு உண்டு. இந்த உரிமை "பர்தா" முறையில் பெண்கள் வாழும் பகுதிகளில் நிலவும் நீண்ட நாள் வழக்கத்தின் காரணமாக எழும் உரிமையாகும். இந்திய வசதியுரிமைச் சட்டத்தின் 18-வது பிரிவில் இது போன்ற வழக்கத்தில் எழும் வசதியுரிமைகள் (Customary Easements) விளக்கப்படுகின்றன.

"பர்தா" வாழ்க்கை முறை வழக்கத்திலில்லாத சென்னை மாநிலத்தைப் பொறுத்தவரை, தம் வீட்டிற்குள் அயலார் பார்வை விழும் என்றகாரணத்திற்காக அண்டைவீடுகள் சன்னல்களின்றிக் கட்டப்பட வேண்டும் என்று எவரும் கூறமுடியாது. நம் வீட்டிற்குள் பிறர் பார்வை விழாதபடி நம் நிலத்திலேயே ஏதாவது தடுப்பை நிறுத்தி அடுத்த வீட்டில் புதிதாக வைக்கப்பட்ட சன்னல்கள் மூலம் பார்க்கமுடியாதபடி மறைப்பை ஏற்படுத்திக் கொள்ளலாம். இந்த உரிமை நமக்கு உண்டு. ஆனால் சன்னல்கள் வைத்து அண்டையில் வீடு கட்டுவதைத் தடுக்கும் அதிகாரம் நமக்குக் கிடையாது. இந்தக் கொள்கை Gomathi V. Gurunatha pillai (3. M. H. C. R. 141) வழக்கில் நீதிபதி சர். டி. முத்துசாமி அய்யரால் தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது. சட்டத்தின் இந்த விதி மக்களிடையே நன்கு பரவாத காரணத்தால்தான் இரு மருங்கிலும் சன்னல்கள் இன்றியே பல வீடுகள் கட்டப்படுவதை நாம் இன்றும் காணுகிறோம்.

இவ்வாறு வழக்கத்தில் எழும் சில வசதியுரிமைகளைச் சட்டம் ஏற்றுப் பாதுகாக்கிறது.

---

# பகுதி 7

## பொதுவான தொல்லை (Public Nuisance)

*பொதுவான தொல்லை என்பது என்ன? - பொதுப்பாதைகளில் தடை ஏற்படுத்துதல் - பொதுப் பாதைகளைப் பயன் படுத்து வோருக்கு ஆபத்து விளைவித்தல் - வழக்கிடும் முறை - பொதுப் பாதைகளைப் பராமரிப்பதில் தவறுதல்.*

### பொதுவான தொல்லை என்பது என்ன?

இதுவரை 'தனித்த தொல்லை' (Private Nuisance) பற்றிக் கண்டோம். இனி 'பொதுவான தொல்லை' என்பது என்ன என்று ஆய்வோம்.

பொது மக்களின் உரிமைக்கு ஊறு, ஆபத்து அல்லது தொந்தரவு ஏற்படுத்தும் செயல் 'பொதுவான தொல்லை' (Public Nuisance) எனப்படும். இது மக்களின் உரிமை, பாதுகாப்பு, வசதி இவைகளில் ஒன்றுக்கு எதிரான செயல் ஆகிறது. இது மக்களின் உரிமையைப் பாதிக்கும் தீங்காவதுடன், தண்டிக்கத்தக்க குற்றமும் ஆகும். இந்தியக் குற்றச் சட்டத்தின் 268ஆவது பிரிவுப்படி பொதுவான தொல்லை விளைவிப்போர் தண்டனைக்கும் ஆளாகின்றனர்.

பொதுவான தொல்லைச் செயல்கள் பல வழிகளில் செய்யப்படலாம். அவைகளில் பெரும்பாலானவை பொதுப்பாதைகளைப் பொறுத்தே நிகழ்கின்றன. நாம், இங்குப் பொதுப் பாதைகள் சம்பந்தமாகச் செய்யப்படும் பொதுவான தொல்லைகளைப்பற்றியே காண்போம்.

பொதுப் பாதைகளைப் பொறுத்த பொதுவான தொல்லைகள் இருவகைப்படுவன.

(1) பொதுப் பாதைகளில் தடை ஏற்படுத்துதல்.

(2) பொதுப் பாதைகளைப் பயன்படுத்துவோருக்கு ஆபத்து விளைவித்தல்.

### (1) பொதுப் பாதைகளில் தடை ஏற்படுத்துதல்

பொதுப் பாதையில் பள்ளம் தோண்டியோ, வேலி கட்டியோ வழியடைத்தல்; தம் சொத்தின் எல்லையைக் கடந்து கட்டிடம் கட்டிப் பொது வழியைக் குறுகச் செய்தல்; வண்டி, மாடு, குதிரை முதலியவற்றைப் பொதுப் பாதையில் நீண்ட நேரம் நிறுத்தி வைத்தல்; பாதையை அடைத்துக் கூட்டம் கூட்டுதல்; இவையெல்லாம் பொதுப் பாதையைத் தடை செய்யும் செயல்களாகும்.

பொதுப் பாதை வழியே அங்கும் இங்கும் செல்வதற்கான உரிமை மக்களுக்கு உண்டு. அவ்வாறு செல்வதற்கு இடையூறு விளைவித்துத் தடை செய்யும் செயல்கள் 'பொதுப் பாதையைத் தடை செய்தல்' (Obstruction to highway) என்ற தீங்கு ஆகின்றன.

பொதுப் பாதை என்ருல் அது நெடுஞ் சாலையாக இருக்க வேண்டும் என்பதில்லை. ஒரு நிலத்தின் வழியே பொதுமக்கள் போய்வர உரிமை இருந்தால் அந்த நிலம் 'பொதுப் பாதை' யாகிறது. படகுகளின் உதவியால் போக்குவரத்து நடைபெறும் நதியோட்டமும் 'பொதுப் பாதை'யேயாகும்.

பொதுப் பாதையின் மருங்கிலுள்ள கடையில் சாமான்கள் வாங்கும் மக்கள் வரிசையாக (queue) நின்றதால் பாதையில் சிறிது தடை ஏற்பட்டது. அதற்குக் கடைக்காரர் பொறுப்பல்லர் என்று தீர்ப்புக் கூறப்பட்டது. (Dwyer V. Mansfield. 1946 K.B. 437) ஆனல் அக்கடையில் ஒரு வேடிக்கைப் பொருளை விளம்பரத்திற் கென வைத்து அதனல் கூட்டம் கூடினல் அதற்குக் கடைக்காரர் பொறுப்பாகிருர்.

கட்டிட மராமத்து வேலைக்காகச் செங்கல் முதலிய சாமான் களைப் பொதுப் பாதையில் ஓரமாகப் போட்டு வைக்கலாம். ஆனல், அதை அளவிற்கு அதிகமான காலம் போட்டுவைப்பது கூடாது.

அவ்வாறே, சாமான்களை இறக்குவதற்கோ ஏற்றுவதற்கோ ஒரு கடையின் முன்னுள்ள பாதையில் வண்டிகளை நிறுத்தி வைக்கலாம். [Trevett V. Lee (1955) I.W.L.R. 113] ஆனல் மிதமிஞ் சிய நேரம் அவ்வாறு நிறுத்திவைத்தல் தகாது. [R. Vs. Russel (1805) 6. East. 427]

83 டன்கள் கனமுள்ள ஒரு பொருளை அகற்றிச் செல்கையில் ஏற்பட்ட கவனக்குறைவால் ஒரு பொதுப்பாதை 76 மணி நேரம் போக்குவரத்து தடைப்பட்டது. வழக்கமாக அந்தப் பாதை வழி யாகச் செல்லும் பஸ் கம்பெனியார், பாதைத் தடை ஏற்பட்டதால் விளைந்த நட்டத்திற்கு ஈடு பெறலாம் எனத் தீர்ப்பளிக்கப்பட் டது. [Chesterfeild Corporation V Arthur Robinson (Transport) Ltd. (1955) 106 L. J. (News) 61]

ஏழாவது எட்வர்டு மன்னரின் அந்திம ஊர்வலம் ஓர் ஊரின் முக்கிய தெருக்கள் வழியே செல்லுவதாக இருந்தது. ஒரு தெரு வின் மருங்கிலுள்ள வீட்டுக்காரர் அந்த வீட்டுச் சன்னல்கள் வழி யாக அதைப் பார்ப்பதற்கென வசதி செய்து பிறரிடமிருந்து பணம் வசூலிக்கத் திட்டமிட்டிருந்தார். அவர் வீட்டுச் சன்னலி

லிருந்து தெருவைப் பார்க்கும் காட்சி எதிர்வாதியால் மறைக்கப் பட்டது. இதனல், வீட்டின் சன்னல் வழியாக மக்கள் பார்ப்பதற்கு வசதிசெய்து பணம் பெற முடியாமற் போய்விட்டது. வீட்டுக் காரர் தெருக்காட்சியை மறைத்த எதிர்வாதியிடமிருந்து நட்ட ஈடு பெற்ருர். [Campbell V. Corporation of Paddignton (1911) 1. KB. 869]

பொதுப்பாதை தடை செய்யப்பட்டதால் மக்கள் போக்கு வரத்து நின்றுவிட்டது. அதன் பயனுல் அந்தப் பாதையின் மருங்கிலுள்ள கடைக்காரரின் வாணிபம் பாதிக்கப்பட்டது. கடைக்காரர் தடை ஏற்படுத்தியவரிடமிருந்து நட்டஈடு பெற்ருர். [Wilkes V. Hungerford Market Co., (1835) Bing N. C. 281]

### (2) பொதுப்பாதைகளேப் பயன்படுத்துவோருக்கு ஆபத்து விளைவித்தல்

பொதுப் பாதையில் விடப்பட்டிருக்கும் பொருளாலோ அல்லது பாதையை ஒட்டியிருக்கும் சொத்தில் நிகழும் செய லாலோ பொதுப் பாதையைப் பயன்படுத்துவோர்களுக்கு ஆபத் துக்கள் விளையலாம்.

இருட்டு நேரத்தில் நெடுஞ்சாலையில் பிறருக்கு எச்சரிக்கை செய்யாமல், வண்டியை நிறுத்தி வைத்திருப்பது, பாதையின் கீழே ஓடும் பாதாளக் குழாய்களின் மூடிகளைத் திறந்து விட்டிருப் பது, எச்சரிக்கை ஏதுமின்றிப் பாதையின் குறுக்கே பள்ளம் தோண்டி வைப்பது, வாழைப்பழத் தோல் முதலிய வழுக்கிவிடும் பொருள்களைப் பாதையில் போடுவது, இவைபோன்ற செயல்கள் ஆபத்து விளைவிப்பவையாகும்.

பொதுப் பாதையை ஒட்டியோ அல்லது அதன் அருகிலோ உள்ள கட்டிடம் இடிந்துவிழக்கூடிய நிலையில் இருந்தால் அதனு லும் பாதையில் செல்லுபவர்களுக்கு ஆபத்து விளையலாம். பாதையை அடுத்துப் பள்ளத்தைத் தோண்டி, பாதையை விட்டுச் சிறிது விலகினுலும் விழக்கூடிய நிலையில் வைத்தல், பாதையில் செல்லும் விலங்குகள் கண்டால் மிரண்டு ஓடத்தக்க பொருள் களைப் பாதையை அடுத்து வைத்திருத்தல், இவற்ருலும் ஆபத்து விளையலாம்.

தெருவில் எறியப்பட்டிருந்த கொழுப்புத் துண்டை மிதித்த தால் வழுக்கி விழுந்த ஒருவருக்குக் கொழுப்பை எறிந்த அருகி லுள்ள கசாப்புக் கடைக்காரர் நட்டஈடு கொடுக்க வேண்டும் என்று தீர்ப்பு அளிக்கப்பட்டது. [Dollman V. Hillman Ltd. (1941) 1. A. E. R. 355]

பொதுப்பாதையருகில் இருந்த விளையாட்டு மைதானத்திலிருந்து வந்த பந்து மோதியதால் பொதுப்பாதையில் மோட்டாரை ஓட்டிக்கொண்டிருந்த ஒருவர் கண்ணை இழந்தார். அதற்கு அவர் நட்டஈடு பெற்ருர். [Castle V. St. Augustine's links (1922) 38 TLR. 615]

எதிர்வாதியின் வசமுள்ள விட்டில் இருந்து ஒரு விளக்கு பொதுப் பாதையின்மீது நீட்டிக் கொண்டிருந்தது. அதில் ஏற்பட்ட கோளாறினல், அது பாதையில் நடந்து சென்று கொண்டிருந்த வாதியின்மேல் விழுந்து காயத்தை ஏற்படுத்தியது. வாதி அதற்கான நட்ட ஈடு பெறலாம் என்பது தீர்ப்பு. [Tarry V. Ashton (1876) 1 Q. B. D. 314]

எதிர்வாதியின் நிலத்திலிருந்து மரத்தின் கிளை பொதுப் பாதைக்கு மேல் பரவி வளர்ந்திருந்தது. அது திடீரென்று முறிந்து விழுந்ததால், கீழே நின்று கொண்டிருந்த வாதியின் வண்டிக்குச் சேதம் விளைந்தது. கிளை பலமற்று இருந்தது எதிர்வாதிக்குத் தெரியாதாகையால், எதிர்வாதி பொறுப்பல்லர் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Noble V. Harrison (1926) 2 K. B. 332]

வழக்கிடும் முறை

பொதுத் தொல்லையால் பாதிக்கப்படுபவர்கள் சார்பில் மாநிலத் தலைமை வழக்கறிஞரிடம் (Advocate-General) இசைவு பெற்று, தொல்லையை விளைவித்தவர்மேல் உரிமை வழக்குத் தொடரலாம். பாதிக்கப்படுபவர்கள் ஒவ்வொருவரும் தனித் தனியே வழக்கிட முடியாது; இவ்வாறு இல்லையெனில் தொல்லை விளைவித்தவர்மீது எண்ணற்ற வழக்குகள் ஏற்பட ஏதுவாகும்.

ஆனல் பொதுத் தொல்லையின் விளைவாகத் தனிப்பட்ட நட்டம் ஒருவருக்கு ஏற்பட்டால் அவர் தனித்து வழக்கிட்டு நட்ட ஈடு பெற முடியும். [Walsh V. Erwin (1952) V. L. R. 361] அவ்வாறு தனிப்பட்ட நபருக்கு விளையும் நட்டம் பொது மக்களுக்கு ஏற்பட்டதைவிட அதிகமாகவோ, அல்லது அதிலிருந்து வேறுபட்டதாகவோ இருக்கவேண்டும். பொருள் நட்டமாகத் தான் அஃது இருக்கவேண்டும் என்பதில்லை; மற்றப் பொது மக்களுக்கு ஏற்படாத இடைஞ்சலாகவோ, தொந்தரவாகவோ அஃது இருக்கலாம்.

நெடுஞ்சாலையின் குறுக்கே பள்ளந் தோண்டி வைத்திருப்பது 'பொதுத் தொல்லை' ஆகும். அஃது அந்தப் பாதையைப் பயன் படுத்தும் மக்களைப் பொதுவாகப் பாதிக்கிறது. அந்தப் பள்ளத்தில் தடுமாறி விழுந்து ஒருவருக்குக் காயம் ஏற்பட்டால், விழுந்த

வருக்கு விளைந்த கேடு, பொதுமக்களுக்கு அந்தப் பள்ளத்தால் விளையும் இடைஞ்சலினின்றும் தனிப்பட்டது, வேறுபட்டது. எனவே, பள்ளத்தில் விழுந்தவர் தனித்த முறையில் மாநிலத் தலைமை வழக்கறிஞரின் இசைவின்றியே, வழக்கிட்டு நட்ட ஈடு பெறலாம்.

### பொதுப் பாதைகளைப் பராமரிப்பதில் தவறுதல்

பொதுப் பாதைகளைப் பழுது பார்த்து நல்ல நிலையில் வைத்திருக்க வேண்டிய கடமை அரசாங்கத்திற்கோ அல்லது நகராண்மைக் கழகங்களுக்கோ இருக்கிறது. பொதுப் பாதைகள் சரியானபடி பராமரிக்கப் படாமல் இருப்பதால், போக்கு வரத்துக்கு இடைஞ்சல் இருக்கலாம். ஆயினும், பழுது பார்க்கத் தவறியவர்கள்மீது வழக்குத் தொடர்வதற்கில்லை. இதுவே, 1961 ஆம் வருடம் வரை இங்கிலாந்தில் சட்டமாக இருந்தது. 1961 ஆம் ஆண்டில் இதற்கெனப் புதிய சட்டம் அந்நாட்டில் இயற்றியிருக்கின்றனர். நம் நாட்டிலும் பொதுப் பாதைகளின் பராமரிப்புக் குறித்துச் சட்டங்கள் இயற்றப் பட்டிருக்கின்றன.

பொதுப் பாதைகளைப் பராமரிக்கும் கடமை தனிப்பட்ட கம்பெனி அல்லது நபர்களுக்கு இருந்து அதில் அவர்கள் தவறினல், அவர்கள்மீது வழக்கிடலாம்.

ஓர் இரயில்வேக் கம்பெனியார் தண்டவாளத்தை ஒட்டியுள்ள பாதையைச் செப்பனிடாமல் இருந்ததால், தண்டவாளம் பாதையின் மட்டத்திற்குமேல் உயர்ந்திருந்தது. அந்தப் பாதையில் சென்றவருக்கு அதனல் கேடு விளைந்தது. அவர் நட்ட ஈடு பெறலாம் என்று விதிக்கப்பட்டது. அவ்வாறே, ஒரு டிராம்வேக் கம்பெனியார் தண்டவாளத்தை ஒட்டிய பாதையைப் பழுது பார்க்கத் தவறியதால் விளைந்த தீங்கிற்குப் பொறுப்பாக்கப்பட்டனர். [Dubling Tramways Co. V. Fitzgerald. (1903) A. C. 99]

பொதுப் பாதைகளைப் பராமரிக்கும் நகராண்மைக் கழகங்கள் செய்ய வேண்டியதைச் செய்யவில்லை என்பதை வைத்து அவர்கள் மீது வழக்கிட முடியாவிட்டாலும், செய்யத் தகாததைச் செய்தார்களெனில் அவர்கள் அதற்குப் பொறுப்பாகின்றனர்.

பாதையின் குறுக்கே பள்ளத்தை ஏற்படுத்தி வைத்தல், மண்ணைக் குவித்து மேடிட்டு வைத்தல், இவைகளால் விளையும் தீங்கிற்கான பொறுப்பு அவர்களைச் சாரும். [Newsome V. Darton U.D.C. (1938) 3. A.E.R. 93]

உபயோகத்தில் இல்லாத தண்டவாளத்தைப் பொதுப் பாதையிலிருந்து அகற்ருமல் விட்டு வைக்கப்பட்டிருந்தது. சைக்

கிளில் போன ஒருவர் தண்டவாளத்தில் தடுக்கி விழுந்தார். அவ்வாறு சாய்ந்து விழுந்தவர்மீது அருகில் சென்று கொண்டிருந்த மோட்டார் ஏறி மரணத்தை விளைவித்தது. தண்டவாளத்தை அப்புறப்படுத்தத் தவறிய நகராண்மைக் கழகத்தார் இதற்குப் பொறுப்பாக்கப்பட்டனர். [Simon V. Islington B. C. (1943) IK. B. 188]

பாதாளச் சாக்கடையைப் பராமரிக்கும் பொறுப்புள்ள நகராண்மைக் கழகம் சாக்கடை மூடியிலுள்ள உடைந்த கம்பிகளைச் சரிப்படுத்தாமல் ஆறு மாதமாக விட்டு வைத்திருந்தனர். பொது வழியில் சென்று கொண்டிருந்த குதிரையின் கால்கள் மூடியின் உடைந்த கம்பிகளில் சிக்கியதால் குதிரைக்குக் காயம் விளைந்தது. அதற்கு நகராண்மைக் கழகம் பொறுப்பாயினர். [White V. Hindley Local Borad (1875) L.R. 10 Q. B. 219]

இவ்வாறு பொதுப் பாதையைப் பராமரிக்கும் பொறுப்புள்ள தனி நபர்கள் அல்லது கம்பெனிகள் கடமையில் தவறினல் அதனுல் விளையும் தீங்கிற்கு அவர்கள் பொறுப்பாகின்றனர்.

* * * *

இந்த வகையில் பிறரால் விளைவிக்கப்படும் தொல்லைகளைத் தீங்கென விதித்துத் தடைசெய்து, நம்முடைய சொத்துக்களை இடைஞ்சலோ, வசதிக்குறைவோ இன்றி நாம் துய்ப்பதற்குச் சட்டம் வகை செய்கிறது.

---

# பகுதி 8

## அவதூறு (Defamation)

ஈதல் இசைபட வாழ்தல் அதுவல்லது
ஊதியம் இல்லை உயிர்க்கு. (குறள் 231)

### (அ) அவதூறு என்பது என்ன ?

*பொன்றாது நிற்கும் புகழின் தன்மை - ''அவதூறு'' என்பது என்ன ? - அவமதித்தலும், அவதூறும் - சொல்லோ, செயலோ அவதூறு என எப்பொழுது கருதப்படுகிறது ? - நிலைத்த அவதூறு (Libel) - நிலையா அவதூறு (Slander).*

**பொன்றாது நிற்கும் புகழின் தன்மை**

நாம் அனைவரும் புகழுடன் வாழ விரும்புகிறோம். இசைபட வாழவேண்டும், வசை ஒழிய வாழவேண்டும் என்பதே நல்லோரின் குறிக்கோளாக இருக்கிறது.

புகழை நாடியேதான் சிறந்த செயல்களும் சீரிய முயற்சிகளும் செய்யப்படுகின்றன. புகழின்மீது மனிதனுக்குள்ள நாட்டமே அவனது வாழ்வை வளம்பெறச் செய்கிறது. பிறர் வியக்கும் காரியங்களைச் செய்து பிறர் மதிக்க வாழவேண்டும் என்ற ஆசையே மக்கள் வாழ்வின் முன்னேற்றத்திற்கு அடிப்படையாக அமைகிறது.

உயிரினும் பெரிதாகப் புகழையும், மானத்தையும் போற்றுகின்றனர் சான்றோர்கள்.

''......புகழ்எனின் உயிரும் கொடுக்குவர், பழிஎனின்
உலகுடன் பெறினும் கொள்ளலர்.....'' (புறம் 182)

இவர்களாலேயே உலகம் சிறப்புறுகிறது என்பது நம் முன்னோர் கண்ட உண்மை.

பொருளை விரும்பாதவர்கள் உலகில் இருக்கலாம்; ஆனால் புகழை நாடாதவர்கள் இல்லை என்றே கூறலாம். ஈதலும் அதனால் இசைபட வாழ்தலுமே உயிருக்கு ஊதியம் என்ற உயர் நோக்குடன், தாம் பாடுபட்டுத் தேடிய பொருளை ஈந்தாவது புகழைத் தேடுகின்றனர் நல்லோர்.

பொன்னும் மற்ற பொருள்களும் நிலைமாறி அழியும் தன்மையுடையன; ஆனால் புகழ் நிலைத்து நிற்பது. மற்றச் செல்வங்கள் எல்லாம் நாம் உடலை நீத்தபின் நம்முடையனவாக இருப்பதில்லை.

இதற்கு மாறாக, ஒருவரது புகழ்ச் செல்வம் அவருடையதாகவே அவருடைய வாழ்விற்குப் பின்னும் பொன்றாது நிற்கின்றது.

ஒன்றா உலகத்து உயர்ந்த புகழல்லால்
பொன்றாது நிற்பதொன்று இல். (குறள் 233)

இவ்வாறு, செல்வத்துளெல்லாம் சிறந்த செல்வமாகப் புகழைப் போற்றுகின்றனர் நன்மக்கள்.

சட்டமும் ஒருவரின் புகழை அவருடைய தலையான செல்வமாக மதிக்கிறது.

மற்ற பொருள்களைப் பாதுகாப்பதுபோல், ஒருவர் தமது புகழைப் பாதுகாப்பதும் அவரது ஒப்பற்ற உரிமை எனச் சட்டம் கொள்கிறது. ஒருவர் புகழுக்கு மற்றொருவர் இழுக்கு விளைவித்தால் அஃது உரிமைக்கு ஊறுசெய்யும் செயல் எனச் சட்டம் கருதுகிறது. பிறரைப் பழித்து அவரின் புகழைக் கெடுப்பவர் அவதூறு (Defamation) என்ற குற்றத்திற்கு ஆளாகின்றார். அவதூறு இழைத்தவர் அதன் பயனாய்ப் பிறருக்கு நேரும் தீங்கிற்கு ஈடு செய்ய வேண்டும் எனவும் சட்டம் விதிக்கிறது.

ஆகவே, அவதூறு தண்டிக்கத்தக்க குற்றம் ஆவதுடன் (Crime), உரிமைத் தீங்கும் (Tort) ஆகிறது.

## அவதூறு என்பது என்ன?

சட்டம் ஒப்பும் காரணம் ஏதுமின்றிப் பிறர் புகழுக்கு—நன் மதிப்பிற்கு—மாசு விளைவிப்பதையே அவதூறு என்று கூறுகிறோம்.

ஒருவரின் புகழ் என்பது பிறர் அவரைப் பற்றி உயர்வாக எண்ணுவதே ஆகும். பிறர் உள்ளக் கருத்தே புகழின் உறைவிடமாகிறது. ஒருவர் பிறரைப் பற்றிய தமது கருத்தை இன்னொருவருக்குத் தெரியப்படுத்தும் — வெளியிடும் — வாயிலாகத்தான் பிறரின் புகழோ, பழியோ பரவுகிறது. எனவே, ஒருவரைப்பற்றிப் பொய்யான தகவலை வெளியிட்டு, அதன்வழிப் பிறர் மனதில், அவருடைய புகழுக்கு இழுக்கு நேரும்படி செய்தல் அவதூறு என்ற தீங்கு இழைப்பதாகும்.

ஒருவர் இன்னொருவரைப்பற்றி இழித்துக் கூறலாம் அல்லது எழுதலாம். இன்னொருவரைப் பழிக்கும் வகையில் கேலிச் சித்திரங்கள் வரையலாம், அல்லது உருவங்கள் வரையலாம். வேறு எத்தனையோ வழிகளில் அவதூறு விளைவிக்கலாம். இவ்வாறு வாய்மொழியாலோ, எழுத்தாலோ, சைகையாலோ, பிறர் அறியும் வகையில் பல வகையான அறிகுறிகளாலோ, பிறர் புகழுக்கு இழுக்கு ஏற்படுத்தலாம். அவதூறு இழைப்பவர் தமது கருத்தை மேலே சொல்லப்பட்ட எந்த வகையிலாவது பிறர் அறிய வெளியிட வேண்டும்.

இவ்வாறு, பிறருக்குத் தெரியப்படுத்துவதில்தான் (Publication) அவதூறுச் செயல் அடங்கியிருக்கிறது.

அவமதித்தலும், அவதூறும்

ஒருவரை நேருக்கு நேராய்ப் பழித்துச் சொல்லுதல் ''அவமதித்தல்'' (Insult) என்ற செயலேயாகும்; அவதூறு ஆவதில்லை. பிறருக்குத் தெரியும்படி, மற்றவர்கள் அறியும் வகையில், இன்னொருவரை இழிவு படுத்துவதே அவதூறு ஆகின்றது. பிறர் பற்றிய பழியை மற்றவர் அறியும்படி வெளியிடும் செயலே (Publication) ''அவதூறு'' என்ற தீங்கிற்கு ஆதாரமாகும்.

சொல்லோ செயலோ, அவதூறு என எப்பொழுது கருதப்படுகிறது?

ஒருவருடைய புகழுக்கு மாசு கற்பிக்கும் செயல்கள் அவதூறு ஆகின்றன என்று கண்டோம். பிறரின் புகழுக்கு மாசு அல்லது இழுக்கு ஏற்படுத்துதல் என்றால் என்ன?

ஒருவரைப் பிறரின் இகழ்ச்சிக்கோ, வெறுப்பிற்கோ, அல்லது ஏளனத்திற்கோ ஆளாக்குதல்; ஒருவரின் தொழில், வாணிபம் இவற்றுக்குக் கேடு விளையும்படி செய்தல்; அயலார் அவரை வெறுத்து ஒதுக்கும்படி செய்தல் இந்தச் செயல்களில் ஏதேனும் ஒன்றைச் செய்தல் அவதூறுச் செயல், அஃதாவது, பிறர் புகழுக்கு இழிவு ஏற்படுத்தும் செயல் ஆகிறது.

புகழுக்குப் புன்மை சேர்ப்பது என்றால் என்ன என்பதை மேலே கூறியவாறு வரையறுத்து ஆங்கில நாட்டுத் தீர்ப்புக்களில் விளக்கம் தந்திருக்கின்றனர். [Parmiter Vs. Coupland (1840) 6 'M & W' 105]

ஒருவருடைய பண்பு, குணம், ஒழுக்கம் இவைகளைப் பொறுத்து இழுக்கு ஏற்படுத்துவதுதான் அவதூறு என நாம் பொதுவாக எண்ணுகிறோம். சட்டத்தில் அவதூறு என்ற சொல் சற்று விரிந்த பொருளுடையதாகும். ஒருவரைப் பைத்தியம் என்றோ, தொழு நோய் உடையவர் என்றோ குறிப்பதும் அவதூறேயாகும். ஏனெனில், பைத்தியம் அல்லது தொற்று நோய் பிடித்தவர்களிடமிருந்து பிறர் ஒதுங்கியிருக்கவே எண்ணுவார்கள். ஒரு பெண் வன்முறையில் கற்பழிக்கப்பட்டாள் என்று கூறுவது அவதூறுதான்; ஏனெனில் பிறர் அப் பெண்ணைப் பற்றி ஏளனமாகக் கருத இடமுண்டு. ஒரு நடிகையின் வயதைப் பத்து வருடங்கள் அதிகமாகக் குறிப்பது அவள் தொழிலுக்குக் கேடு விளைவிப்பதாகும். ஆகவே அஃது அவதூறு ஆகின்றது. [Chattel V. Daily Mail Publishing Co. (1900) 18. TLR. 165] ஒரு வழக்கறிஞரின் வாதம் சாரமற்றதாக இருந்தது என்று கூறுவதும்

அவதூறுதான். [Naganatha V. Subramania (1917) 32 M.L.J. 392]

ஒரு புகழ் பெற்ற எழுத்தாளரின் பெயரால் அவர் எழுதாத ஒரு கதையைப் பிரசுரிப்பது, ஒரு பொருளை மக்கள் வாங்குவதற்கு ஆதரவளிப்பதாகக் காட்டும் முறையில் ஒருவரின் பெயரையோ, புகைப்படத்தையோ அந்தப் பொருளைப்பற்றிய விளம்பரத்தில் பிரசுரிப்பது, ஒரு வணிகர் தன்னுடைய கடனைத் தீர்க்க முடியாத வராகி விட்டார் எனப் பிரசுரிப்பது, இவையும் அவதூறுகள் தான்.

ஒரு பெண்ணின் கணவரின் புகைப்படத்துடன் இன்னொரு பெண்ணின் புகைப்படம் அச்சிட்டு, படத்திலுள்ளவர்கள் கணவனும் மனைவியும் என்று குறிப்பிட்டு ஒரு பத்திரிகை பிரசுரித்தது. இஃது உண்மையான மனைவியின் ஒழுக்கத்திற்கும் இழுக்குக் கற்பிப்பதால் பிரசுரம் அவதூறானது எனத் தீர்ப்புச் செய்யப் பட்டது.

ஒழுக்கத்திற்கும் நன்னடத்தைக்கும் புறம்பான தீயகுணங்களை ஒருவர்மேல் ஏற்றிச் சொன்னால், அஃது அவரைப் பிறருடைய வெறுப்பிற்கும் புறக்கணிப்பிற்கும் ஆளாக்கலாம். ஆதலால் ஒருவரை நன்றிகெட்டவர் என்றோ, கல்நெஞ்சம் உடையவர் என்றோ, நாணயம் இல்லாதவர் என்றோ குறிப்பது அவதூறான செயலாகும். ஒருவர் பொய் கூறுபவர் என்றோ, தண்டிக்கத்தக்க குற்றம் செய்தவர் என்றோ கூறுவதும் அவதூறேயாகும்.

இவ்வாறு, ஒருவருடைய பண்பு, ஒழுக்கம், தகுதி, திறமை, கலைத் திறன், இலக்கியத்திறன், உத்தியோக மதிப்பு இவை பற்றியெல்லாம் அவதூறு விளைவிக்கப்படலாம்.

பிறர் மனதில் தோன்றும் இகழ்ச்சி எண்ணமே புகழுக்கு இழுக்காகிறது.

ஒருவர் புகழுடன் வாழ்கின்றார் என்றால் உலகனைத்தும் அவரைப் புகழுகின்றது என்பது பொருளன்று. உலகப் புகழ் பெறுவது எல்லோருக்கும் இயலுவதில்லை. ஒருவர் வாழும் சமூகத்தில், அவர் உற்றார், உறவினரிடையே வசையொழிய ஒருவர் வாழ்ந்தால் அவர் புகழுடன் வாழ்வதாகும். ஆதலால் ஒருவருக்கு அவமானம் நேர்ந்தது என்றால் அவரைத் தெரிந்தவர்களின் மனதில் அவரைக் குறித்து இகழ்ச்சி எண்ணம் தோன்றியது என்பதே பொருளாகும்.

காலத்திற்கேற்பவும், சமூகத்தில் நிலவும் கருத்துக்களுக்கு ஏற்பவும் ஒரு செயலின் அவதூறுத் தன்மை அமைகிறது. இங்கிலாந்து, ஜெர்மானிய நாட்டுடன் போர் புரிந்த காலத்தில், ஓர்

ஆங்கிலேயரை ஜெர்மானியர் என்று கூறுவது அவதூறு எனக் கொள்ளப்பட்டது. போருக்குமுன் அவ்வாறு கருதப்படவில்லை. அமெரிக்க நாட்டில் ஒருவரைப் பொதுவுடைமைக் கொள்கையுடையவர் என்று பொய்யாகக் குறிப்பது அவதூறு ஆகலாம்.

ஒரு கேளிக்கைச் சங்கத்தில் சூதாட்டம் நடைபெறுவதாகப் போலீசுக்குத் தகவல் கொடுத்தார் எனவும் அதன்மூலம் மற்ற உறுப்பினர்களைக் காட்டிக்கொடுத்தார் எனவும் ஓர் உறுப்பினர் கூறப்பட்டார். அந்த உறுப்பினர் கொண்டுவந்த வழக்கில் அவ்வாறு கூறியது அவதூறு அன்று எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. ஏனெனில், குற்றங்கள் நடப்பதுபற்றிப் போலீசுக்குத் தகவல் கொடுப்பது தப்பிதமான செயல் அன்று. சங்கத்தின் மற்ற உறுப்பினர்கள் வாதியைப்பற்றிக் குறைவாக நினைக்கலாம்; மற்ற மக்கள் அச்செயலை இழிந்த செயலாகக் கருதப்போவதில்லை. ஆதலால் அவதூறு இழைக்கப்படவில்லை என்று முடிவு செய்யப்பட்டது. [Byrne V. Deane (1937) K. B. 818]

ஒரு தகவலைப் பொதுவாக மக்கள் எந்த முறையில் புரிந்து கொள்ளுகிறார்கள் என்பதை வைத்தே அதன் அவதூறுத் தன்மை உறுதி செய்யப்படுகிறது.

### பிறர் மனதில் இகழ்ச்சி எண்ணம் ஏற்பட்டது என்பதை உறுதி செய்வது எவ்வாறு?

நேர்மையான எண்ணங்கொண்டவர்கள் மனதில் அவதூறான செயல் என்ன கருத்தைத் தோற்றுவிக்கும் எனச் சட்டம் உய்த்தறிகின்றது. அவதூறுக்கு ஆளானவரைப்பற்றி இழிவான கருத்துத் தோன்றியிருந்தால் அவமதிப்பு நேர்ந்தது எனத் தீர்மானிக்கலாம். இந்தக் கொள்கையை உரைகல்லாக வைத்தே ஒரு செயல் அவதூறு, இல்லையா என உறுதிசெய்யப்படுகிறது.

சமூகத்தில் நேர்மைக்குணம் உடையவர்களால், அவதூறு இழைக்கப்பட்டவர் குறைவாக அல்லது இழிவாகக் கருதப்பட்டாரா என்பதைக் கவனித்து அவ்வாறு கருதப்பட்டால், அவதூறு விளைந்ததாகும் எனச் சட்டம் கருதுகிறது. (Lord Atkin in Sim V. Stretch)

நேர்மையானவர்களின் மனதில் அவதூறெனக் கூறப்படும் செயல் என் கருத்தைத் தோற்றுவித்தது என்பதைக் கொண்டே அச்செயலின் அவதூறுத் தன்மை உறுதிசெய்யப் படுகிறது.

## நிலைத்த (நிலைவடிவு) அவதூறு (Libel), நிலையா அவதூறு (Slander)

ஆங்கில நாட்டுச் சட்டத்தில் அவதூறு இருவகைப்படும்.

வாய் மொழியாகவோ அல்லது உடனே தோன்றிமறையும் தன்மையிலோ அவதூறு இருந்தால் அது "நிலையா அல்லது உடன் மறையும் அவதூறு" (Slander) என்றும், எழுத்து, சித்திரம், உருவம் போன்ற நிலைத்த வடிவில் இருந்தால் அதை "நிலைத்த அவதூறு" (Libel) என்றும் இருவகைப்படுத்திக் கூறுவதுண்டு.

பேச்சு, சைகை, ஒலிபரப்பு இவை மூலம் நிகழும் அவதூறு "நிலையா அவதூறு" எனப்படும். ஏனெனில் பேச்சு, சைகை மூலம் வெளிப்படும் அவதூறு முதலில் வெளிப்பட்ட உடனேயே மறைந்து விடுகிறது; நிலைத்த உருவில் நிற்பதில்லை. எழுத்து, நிழற்படம், பேசும்படம், சித்திரம், சிற்பம் இவை மூலம் அவதூறு செய்தால் அது "நிலைத்த அவதூறு" எனப்படும். காரணம் அது முதலில் வெளியிடப்பட்ட பின்னும் நிலைத்து அழியாமல் நிற்கிறது.

நிலைத்த அவதூறு மட்டுமே தண்டிக்கத்தக்க குற்றம் (Offence) என ஆங்கில நாட்டுச் சட்டம் கொள்கிறது. நிலையாத (உடன் மறையும்) அவதூறு சில சூழ்நிலைகளில்-அஃதாவது அரசின்மீது பகைமை ஏற்படுத்துதல், நீதிமன்றத்தை அவமதித்தல், குற்றம் இழைக்கத் தூண்டுதல் அல்லது கீழ்த்தர உணர்ச்சிகளைத் தூண்டுதல் இவ்வகையில் இருந்தால்—மட்டுமே தண்டிக்கத்தக்க குற்றமெனக் கொள்ளப்படுகிறது. நிலைத்த அவதூறினல் தனக்கு நட்டம் ஏற்பட்டது என்று வாதி மெய்ப்பிக்கவேண்டியது இல்லை. நட்டம் விளைந்தாலும், விளையாவிட்டாலும் நட்ட ஈடு உண்டு. நிலையா அவதூறினல் குறிப்பிட்ட நட்டம் விளைந்தது என்று மெய்ப்பிக்கப்பட்டால்தான் பொதுவாக நட்ட ஈடு உண்டு. ஆனல், ஒருவர் தொற்றுவியாதி உடையவர் என்றோ, குற்றம் இழைத்தவர் என்றோ, ஒரு பெண்ணின் கற்பைப் பழித்தோ குறிக்கும்வகையில் உடன் மறையும் அவதூறு இருந்தால் அதற்கு நட்டஈடு எப்பொழுதும் உண்டு.

நிலைத்த அவதூறு, நிலையா அவதூறு என்ற பாகுபாடு நம் இந்தியச் சட்டத்தில் இல்லை. இருவகைச் செயல்களையும் "அவதூறு" என்ற பொதுப் பெயராலேயே இந்தியச் சட்டம் அழைக்கிறது. அவதூறு இந்தியக் குற்றச் சட்டம் 499 ஆவது பிரிவுப்படி தண்டிக்கத்தக்க குற்றமும் ஆகும்.

## (ஆ) அவதூறு வழக்கில் வாதி மெய்ப்பிக்கவேண்டிய கூறுகள்

*எதிர்வாதியின் செயலிலுள்ள அவதூறான தன்மை - மறைமுக அவதூறு (Innuendo) - அவதூறு வாதியைக் குறிப்பதாக இருக்க வேண்டும் - ஒரு வகுப்பினரைப் பற்றிய அவதூறு - ஒரு பொருளைக் குறிக்கும் இழிசொல் நபர்களைப் பாதிக்கலாம் - அவதூறு பிறர் அறியப் பிரசுரம் ஆகியிருக்கவேண்டும் - வெளியிடுதல் அல்லது 'பிரசுரம்' என்றால் என்ன? - கவனக் குறைவால் வெளியிடுதல் - ஒருவரின் சம்மதத்துடன் அவரைப் பற்றிய அவதூறை வெளியிடுதல்.*

அவதூறு இழைத்தவரின் நோக்கம் அல்லது கருத்துப்பற்றிச் சட்டம் கவனிப்ப தில்லை. அவதூறான செயலைச் செய்தவர் என்ன நோக்கத்தோடு அதைச் செய்தார் என்பதுபற்றிச் சட்டம் ஆராய்வது இல்லை.

பிறருக்கு அவமதிப்பு விளைவித்த செயலைத் தீய எண்ணத் துடன் செய்யவில்லை என்பதையோ, அவதூறுக்கு ஆளான வரைப்பற்றித் தமக்கு ஏதுமே தெரியாது என்பதையோ மெய்ப் பித்த போதிலும் அவதூறு விளைவித்தவர் பொறுப்பிலிருந்து விலகிக் கொள்ளமுடியாது. அவதூறுக்கான பொறுப்பு அதைச் செய்தவரின் கருத்தைப் பொறுத்தது அன்று; அவதூறு விளைந்ததைப் பொறுத்த தேயாகும். [Hulton V. Jones (1910) - A. C. 20] குறிப்பிட்ட செயலால் வாதிக்கு இழிவு நேர்ந்ததா என்பதே முக்கியமாகும்; அச்செயலைச் செய்த எதிர்வாதி என்ன கருத்துடன் அதைச் செய்தார் என்பது முக்கியமன்று.

அவதூறான வாசகம் அல்லது குறிப்பு பொய்யானது என்று வாதி நிலைநாட்ட வேண்டிய கட்டாயம் இல்லை. எல்லா மனிதர் களையும் நல்ல பண்பு உடையவர்களாகவே சட்டம் கருதுகிறது. ஆதலால், ஒருவருடைய குணத்தை அல்லது பண்பைப்பற்றிக் குறைகூறும் செய்திகளைப் பொய்யானவை என்றே சட்டம் கொள் கிறது. அவை உண்மையாக இருந்தால் அதை நிலைநாட்டும் பொறுப்பு எதிர்வாதியைச் சேர்ந்ததேயாகும்.

எனவே, எதிர்வாதியின் தீய எண்ணம் பற்றியும், அவ தூறுச் செய்தியின் பொய்ம்மை பற்றியும் வாதி எந்தவித சாட்சி யமும் அளிக்கவேண்டியது இல்லை.

ஆனால், தமக்கு அவமானம் விளைந்தது என்று நட்டஈடு கோரி வழக்குத் தொடரும் வாதி கீழே கண்ட மூன்று கூறுகளையும் நீதிமன்றத்தில் நிலைநாட்டவேண்டும். இல்லையேல் அவர் நட்ட ஈடு பெறமுடியாது :

(1) எதிர்வாதியின் செயலிலுள்ள அவதூருன தன்மை.
(2) அவதூறு வாதியைக் குறிப்பதாக இருக்கவேண்டும்.
(3) அவதூறு பிறர் அறியப் பிரசுரம் ஆகியிருக்கவேண்டும்.

## (1) எதிர்வாதியின் செயலிலுள்ள அவதூருன தன்மை

அவதூருன வாசகத்தின் பொருள் தெளிவாகவும் வெளிப் படையாகவும் இருந்துவிட்டால், அதில் அவதூறு இருக்கிறதா எனக் காண்பது எளிதாகிவிடுகிறது.

சில வேளைகளில் வாசகத்தின் பொருள் தெளிவற்றதாகவோ, இருபொருள் படத்தக்கதாகவோ இருக்கலாம். அப்பொழுது, வாசகம் முழுவதையும் படித்து அதன் பொருளைத் தெளிய வேண்டும். வாசகத்தில் உள்ள தனித்த ஒரு வாக்கியத்தையோ, சொற்ருெடர்களையோ இடம் பெயர்த்து எடுத்துப் பொருள் கொள்வது கூடாது.

"பொய்யான ஆதாயக் கணக்குக் கொடுத்ததற்காகச் சங்கத் தின்மீது வழக்கு" என்ற தலைப்பில் ஒரு பத்திரிகை செய்தியை வெளியிட்டது. "பொய்யான" என்ற சொல் "மோசடியான" என்ற பொருளையும் "தவறுதலான" என்ற பொருளையும் கொடுக் கிறது. வழக்கின் சூழ்நிலைகளிலிருந்து "மோசடியான" என்ற பொருளிலேயே வெளியிடப்பட்டது என்று தீர்மானித்து நட்ட ஈடு கொடுக்கும்படி நீதிமன்றம் உத்தரவிட்டது. [English and Scottish...Society...Ltd. V. Odhams Press Ltd. (1940) I K.B. 440]

### மறைமுக அவதூறு (Innuendo)

சில வேளைகளில் வாசகம் வெளிப்படையாக இழிவு படுத்தாத தாகவும் ஆனால் மறைமுகமான அவதூறு உள்ளதாகவும் இருக் கலாம். இதை ஆங்கிலத்தில் Innuendo என்று கூறுவார்கள். ஒருவர் ஈயாத குணமுடையவர் என்பதை மறைமுகமாகக் குறிப் பதற்கு அவரைக் "கொடையில் கர்ணன்" என்று வருணித்து இருக்கலாம். இவ்வாறு வஞ்சப் புகழ்ச்சியாக ஒருவரை இழித்துக் கூறலாம்.

வாசகம் வெளிப்படையாக இழிவு குறிக்காமல் இருந்தால் அதில் உள்ளுறையாக இருக்கும் அவதூறைக் காட்டும் பொறுப்பு வாதியைச் சேர்ந்ததாகும்.

வாசகத்தைப் போன்றே சித்திரம் முதலிய மற்றச் செயல் களும் வெளிப்படையாக இன்றி அவதூறை மறைத்துக் காட்டலாம்.

ஒரு குறிப்பிட்ட கம்பெனியார் செய்யும் இனிப்புப் பண்டத்தை வெளியில் தெரியும்படி தம் பையில் வைத்துக் கொண்டு ஒரு புகழ் பெற்ற ஆட்டக்காரர் பந்தாடுவதுபோல் ஒரு கேலிச் சித்திரம் வெளியிடப்பட்டது. இதில் வெளிப்படையாக அவதூறு ஏதும் இருப்பதாகத் தெரியவில்லை. ஆனால், அச்சித்திரத்தின் உட்பொருள் கம்பெனியார் செய்யும் மிட்டாய்க்கு விளம்பரம் அளிப்பதற்குத் தம் படத்தைப் பயன்படுத்த அந்த விளையாட்டுக் காரர் கம்பெனியாருக்கு அனுமதியளித்தார் என்பதேயாகும் என்று தீர்மானித்து நட்ட ஈடு கொடுக்கப்பட்டது. [Tolley V. Fry. (1931) A. C. 333]

ஒரு பெண்ணிற்குக் குழந்தை பிறந்திருப்பதாகப் பத்திரிகையில் பிரசுரிக்கப்பட்டது. இச்செய்தி உண்மையன்று. இருப்பினும், பிரசுரத்தில் எந்தவித அவதூறும் இருப்பதாகத் தோன்றவில்லை. ஆனால், பிரசுரமான தேதிக்கு ஒரு மாதத்திற்கு முன் தான் அந்தப் பெண்ணின் திருமணம் நடந்தது. ஆதலால் பத்திரிகையாளர் அப்பெண்ணிற்கு நட்டஈடு கொடுக்கவேண்டும் என்று தீர்ப்புக் கூறப்பட்டது. [Morrison. V. Ritchi and Co (1902) 4 F. 645]

ஒரு குறிப்பிட்ட பாங்கிற்கு உண்டியல் கொடுத்தால் ஏற்றுக் கொள்ளப்பட மாட்டாது என்று ஒரு கம்பெனியார் தமது வாடிக்கைக்காரர்களுக்குச் சுற்றறிக்கை அனுப்பினர். இதன் விளைவாகப் பலர் அந்தப் பாங்கியின் பொருளாதார நிலையில் நம்பிக்கையிழந்து தங்கள் பணத்தைப் பாங்கியிலிருந்து எடுக்க ஆரம்பித்தனர். எனவே, கம்பெனியின்மீது பாங்கு அவதூறு வழக்குத் தொடர்ந்தது. பாங்கியின்மீது மக்களுக்குள்ள நம்பிக்கையைக் குறைப்பதற்காகக் கம்பெனியார் சுற்றறிக்கை அனுப்பினார்கள் என்பது வாதியின் வழக்கு. ஆனால், அந்த முறையில் சுற்றறிக்கையை நேர்மையானவர்கள் புரிந்து கொள்ளமாட்டார்கள் என்று முடிவு செய்யப்பட்டு, வழக்கும் தள்ளுபடி செய்யப்பட்டது. [Capital and Counties Bank. V. Henty & Sons (1887) L. R. 7 AC]

நேர்மையாகச் சிந்திப்பவர்களுக்கு மறைமுக அவதூறு தெரிய வேண்டும். ஏதோ ஒரு சிலர் அவதூறு இருப்பதாக எண்ணினர் என்றால் அஃது அவதூறின் தன்மையை மெய்ப்பிப்பது ஆகாது.

(2) அவதூறு வாதியைக் குறிப்பதாக இருக்கவேண்டும்

இரண்டாவதாக, அவதூறு தம்மைக் குறித்தது என்பதை வாதி மெய்ப்பிக்கவேண்டும். அப்பொழுதுதான் அவதூறு அவருக்கு விளைந்ததாகக் கருதமுடியும்.

அவதூறு வாசகத்தில் வாதியின் பெயர் இடம் பெற்றிருக்க வேண்டிய அவசியம் இல்லை. அவர் பெயரின் முதல் எழுத்துக்களாலோ, அவருடைய உடல் தோற்றத்தைப் பற்றிய குறிப்புக்களாலோ, கற்பனைப் பெயர்களாலோ, வேறு சூழ்ச்சிகளாலோ அவதூறு இழைக்கப்படுபவர் குறிப்பிடப்பட்டிருக்கலாம்.

ஆங்கில நாட்டிலுள்ள ஒரு பேசும்படக் கம்பெனியார் "பைத்தியச் சாமியார்—ராஸ்புதீன்" என்று ஒரு படம் எடுத்தனர். அது ராஸ்புதீன் என்ற இகழார்ந்த ருஷ்யரின் வாழ்க்கையைக் காட்டும் கதையாகும். நடாஷா என்ற ருஷ்ய இளவரசியை ராஸ்புதீன் வன்முறையில் கற்பழித்ததாகவும், அதனால் அந்த இளவரசியை மணம் புரிய இருந்தவன் ராஸ்புதீனைக் குத்திக் கொன்றதாகவும் படத்தில் காட்டப்பட்டது. ஐரினு என்ற ருஷ்ய இளவரசி, நடாஷா என்று படத்தில் வரும் பாத்திரம் தன்னைக் குறிப்பது என்று பலரும் கருதியதாகவும், அதனால் தனக்கு அவமானம் விளைந்தது என்றும் கூறி, நட்டஈடு பெறுவதற்கு வழக்குத் தொடர்ந்தாள். சாட்சியத்திலும் அவள் வாதம் மெய்ப்பிக்கப் பட்டதால், நட்டஈடாக வாதிக்கு இருபத்து ஐயாயிரம் பவுன்கள் பேசும்படக் கம்பெனி கொடுக்கவேண்டும் எனத் தீர்ப்பளிக்கப் பட்டது. [Youssoupoff V. Metro - Goldwyn Mayor Ltd. (1934) 50 TLR 581]

இந்த வழக்கிலுள்ள சாரம் இதுதான்: பேசும்படக் கம்பெனியார் வாதிக்கு அவமானம் விளைவிக்கவேண்டுமென்று கருதவேயில்லை. இருப்பினும், படத்தைப் பார்த்தவர்களின் மனதில் படத்தில் வரும் நடாஷா என்ற பாத்திரம் வாதியைக் குறிப்பதாகக் கருத்துத் தோன்றியதால் நட்டஈடு கொடுக்கவேண்டியதாயிற்று. எதிர்வாதியின் நோக்கம்பற்றிச் சட்டம் கவனிப்பதில்லை. செயலின் விளைவே முக்கியமானது என்பதற்கு இந்த வழக்கு ஓர் எடுத்துக்காட்டாகும்.

பிரான்சு நாட்டில் நடந்த ஒரு மோட்டார்க் கண்காட்சியில் ஜோன்சு என்ற பெயருடைய ஆங்கிலேயர் கீழ்த்தரமாக நடந்தார் என்றும், பரத்தையர்களுடன் தொடர்பு கொண்டிருந்தார் என்றும் ஓர் ஆங்கிலப் பத்திரிகையின் பாரிஸ் நகர நிருபர் எழுதியிருந்ததை அப்பத்திரிகை வெளியிட்டது. லண்டனிலுள்ள ஜோன்சு என்ற பெயருடைய வழக்குரைஞர் அந்த வெளியீட்டினால் தனக்கு அவமானம் விளைந்தது என்று அப் பத்திரிகைமீது அவதூறு வழக்குத் தொடர்ந்தார். பத்திரிகையில் குறிப்பிட்ட ஜோன்சு என்பது கற்பனைப்பெயர் என்றும் அது வாதியைக் குறித்து எழுதப் படவில்லை என்றும் பத்திரிகையாளர் வாதிட்டனர். பத்திரிகையாளர்களின் வாதம் உண்மையானது என்று கொள்ளப்பட்டது.

ஆனால் வாதியின் சாட்சிகள் அந்த வெளியீடு வாதியைக் குறிப்ப தாகவே தாங்கள் கருதியதாகக் கூறினர். எனவே, வாதிக்குப் பத்திரிகையாளர் நட்டஈடு கொடுக்கவேண்டுமெனத் தீர்ப்பளிக் கப்பட்டது. பத்திரிகையாளரின் எண்ணம் எதுவாக இருந்தாலும் வெளியீட்டின் விளைவாக வாதிக்கு அவமானம் நேர்ந்ததால் அதற்குப் பத்திரிகையாளரே பொறுப்பு என்பது தீர்ப்பின் சாரம். [Hulton V. Jones (1910) A. C. 20]

வாதிக்கு அவமானம் விளைவிக்க வேண்டும் என்ற கருத்து எதிர்வாதிக்கு ஒரு சிறிதும் இல்லாதிருந்தாலும், எதிர்வாதியின் செயல் நேர்மையானவர்களின் மனதில் என்ன கருத்தைத் தோற்றுவித்தது என்ற அடிப்படையில் அவதூறின் தன்மை உறுதி செய்யப்படுகிறது என்பது மேலே கூறப்பட்ட தீர்ப்புக்களி லிருந்து தெளிவாகும்.

இரு பெண்களின் புகைப்படங்களை அச்சிட்டு அதன் அடியில் "காம்பர் வெல்லில் இருக்கும் முப்பது வயதுள்ள நியூஸ்ட்டெட் என்பவர் இரு பெண்களை மணந்த குற்றத்திற்காகத் தண்டிக்கப் பட்டார்" என ஒரு பத்திரிகை வெளியிட்டது. இஃது உண்மை யான செய்தியேதான். நியூஸ்ட்டெட் என்ற பெயருடைய இன் னொருவர் இந்த வெளியீட்டால் தமக்கு அவமதிப்பு விளைந்தது என்று வழக்குத் தொடர்ந்தார். ஒருவரைக் குறித்து வெளி யிடப்பட்டிருந்தாலும் அதே பெயருடைய வாதியைக் குறிப்ப தாகப் பிறர் எண்ணினால் அஃது அவதூறேயாகும் என முடிவு செய்யப்பட்டு நட்டஈடும் அளிக்கப்பட்டது. [Newstead V. London Express Ltd (1939) 4. AER. 319. C.A.]

ஆனால் ஒரு பார்த்திங் நாணயம்தான் நட்டஈடாகக் கொடுக் கப்பட்டது.

காரிகன் என்ற ஒருவருடைய புகைப்படத்தை அச்சிட்டு அவருக்கும் இன்னொரு பெண்ணிற்கும் மணமாகப் போவதாக ஒரு பத்திரிகை வெளியிட்டது. காரிகன் என்பவர் கொடுத்த தகவலை வைத்தே இந்த வெளியீடு செய்யப்பட்டது. ஏற்கனவே காரிகன் மணமானவர். அவர் மனைவி, வெளியீட்டின் விளைவாகத் தம் கணவனுடன் தாம் வாழ்வது கூடாவொழுக்கம் எனப் பிறர் கருதினர் என வாதாடி நட்டஈடு பெற்றார். [Cassidy V. Daily Mirror News papers—(1929) 2 K. B. 331]

மேலே சொல்லப்பட்ட வழக்குகளிலிருந்து விளங்கும் கொள்கை என்ன? எதிர்வாதி உண்மையிலேயே வாதிக்கு அவ மதிப்பு விளைவிக்கக் கருதினாரா என்பது பற்றிச் சட்டம் ஆராய்வ தில்லை. நேர்மையாகச் சிந்திப்பவர்கள், வெளியீட்டில் உள்ள அவதூறு

வாதியைக் குறிப்பது என்று கருதினர்களா என்பதை ஆதாரமாக வைத்தே எதிர் வாதியின் பொறுப்பு உறுதி செய்யப்படுகிறது. ஆதாயத்திற்குப் பத்திரிகை நடத்தும் பத்திரிகையாளர்கள் தமது வெளியீட்டால் விளைந்த பலனுக்குப் பொறுப்பாக்கப்படுகின்றனர்.

நீதி மன்றங்கள் வகுத்த இந்தக் கொள்கை பத்திரிகை அல்லது புத்தகங்கள் வெளியிடுபவர்களுக்கு இடையூறு இழைப்பதாகக் கருதப்பட்டதால் 1952ஆம் ஆண்டில் அவதூறுச் சட்டம் (Defamation Act 1952) என்ற ஒரு சட்டத்தை இங்கிலாந்தில் இயற்றியுள்ளார்கள். எவருக்கும் தீங்கு நினையாத வகையில், போதிய கவனத்துடன், செய்யப்பட்ட வெளியீட்டின் விளைவாக ஒருவருக்கு அவமதிப்பு நேர்ந்தால் அந்தப் பத்திரிகையாளர் வருத்தம் தெரிவித்து ஒரு திருத்தத்தை வெளியிட்டு அதை அவதூறுக்கு ஆளானவர் ஏற்றுக்கொண்டால், அதன்பின் நட்ட ஈடு கோரும் வழக்குத் தொடர முடியாது. திருத்தம் வெளியிடப் படுவதை அவமதிப்புக்குள்ளானவர் ஏற்றுக்கொள்ள வில்லை எனினும், அவர் தொடரும் வழக்கில், பத்திரிகையாளர் திருத்தத்தை வெளியிட ஒப்புக்கொண்டது குற்றத்தைப் போக்கும் செயலாக ஏற்றுக் கொள்ளப்படும். இதற்கு ஆங்கில நாட்டு அவதூறுச் சட்டம் வகை செய்கிறது.

நம் நாட்டில் மேலே சொன்ன முறையில் சட்டம் இல்லை. பத்திரிகைகள், புத்தகங்கள் வெளியாகும் தொழில் வளர்ந்து வரும் இக்காலத்தில் நம் நாட்டிலும் ஆங்கில நாட்டுச் சட்டம் போன்றதொரு சட்டம் அவசியமானதாகும்.

சாதாரணமாகக் குற்ற வழக்குகளில் குற்றம் சாட்டப்பட்டவரின் தீய எண்ணத்தை வைத்தே தண்டனை அளிக்கப்படுகிறது. ஆனால், நட்டஈடு கோரும் வழக்குகள் குற்ற வழக்குகள் அல்ல: அவை உரிமை வழக்குகள். உரிமை வழக்குகளில் சம்பந்தப்பட்டவர்களின் நோக்கம், கருத்து இவை முக்கியமானவையல்ல. ஆதலால் எதிர்வாதி எந்தக் கருத்துடன் வெளியிட்டார் என்பதைவிட, வாதிக்கு உண்மையில் அவமதிப்பு விளைந்ததா என்பதே முக்கியமானதாகும்.

### கூட்டமைப்பு (Company or Corporation) பற்றிய அவதூறு

கம்பெனி போன்ற கூட்டமைப்பும் சட்டப்படி ஒரு நபரேயாகும். கூட்டமைப்பின் நிர்வாகம் பற்றியோ, அதன் வாணிபச் செல்வாக்குப் பற்றியோ அவதூறு விளைவிக்கப்படலாம். ஒரு வாணிபக் கூட்டமைப்பு விற்கும் பொருள்கள் தரத்தில் குறைந்தவை என்று கூறுவது கூட்டமைப்பின் வாணிபத்தைப் பாதிப்பதால் அவதூறு ஆகிறது. ஒரு கம்பெனி சட்ட விரோதமான

வியாபாரத்தில் ஈடுபடுகிறது என்று கூறுவது, அதன் இயக்குநர் கள் நாட்டின் விரோதிகளான அயல் நாட்டினர் என்று குறிப்பது போன்றவை, கம்பெனிக்கு அவதூறு செய்வனவாகும். ஒரு நகராண்மைக் கழக நிர்வாகத்தில் கைக்கூலி (லஞ்சம்) மிகவும் மலிந்திருக்கிறது என்று சொல்லுவது அவதூறு ஆவதில்லை. ஏனெனில், குறிப்பிட்ட நபர்கள்தான் கைக்கூலி வாங்கும் குற்றத் திற்கு ஆளாகலாம். நகராண்மைக்கழகமும், கழகம் என்ற முறை யில் அக்குற்றத்தைச் செய்யமுடியாது. [Mayor of Manchester V. Williams (1891) I Q B 94]

### ஒரு வகுப்பினரைப்பற்றி அவதூறு

ஒரு வகுப்பினரைப் பற்றிப் பொதுவாகக் குறைத்துக் கூறினால் அந்த வகுப்பைச் சேர்ந்த தனி நபர் எவரும் அவதூறு வழக்குத் தொடர முடியாது. வழக்குரைஞர்களைப் பற்றியோ, வைத்தியர்களைப் பற்றியோ பொதுவான முறையில் ஒருவர் இழிவாய்ப் பேசினால் தனிப்பட்ட வழக்குரைஞரோ, வைத்தியரோ அவதூறு வழக்கிட முடியாது.

"எல்லா வழக்குரைஞர்களும் திருடர்கள்" என்று ஒருவர் எழுதினால் தனிப்பட்ட ஒரு வழக்குரைஞர் தமக்கு அவமானம் விளைந்தது என்று கூறி வழக்கிடுவதற்கில்லை. [Eastwood V. Hol mes (1858) IF&F 34] தனிப்பட்ட வழக்குரைஞர் ஒருவரைக் குறிப் பதாக இருந்தால் அவர் நட்டஈடு கோரலாம். பொதுவாக ஒரு வகுப்பினரைப் பற்றிய இழிவுரை அந்த வகுப்பைச் சேர்ந்த தனிப் பட்டவர்களுக்கு அவதூறு விளைவிப்பதாகச் சட்டம் கருதுவ தில்லை.

குறிப்பிட்ட ஒரு சில நபர்களை மட்டும் குறித்து அவதூறு இழைக்கப்பட்டால், அந்த நபர்கள் எல்லோரும் சேர்ந்தோ அல்லது தனித்தனியாகவோ வழக்குத் தொடரலாம். பங்கமைப் பில் (Partnership) உள்ள பங்காளிகளைப் பற்றியோ ஒரு நிலையத் தின் டிரஸ்டிகளைப்பற்றியோ அவதூறு செய்யப்பட்டால் அவர்கள் எல்லோரும் மேலே சொன்னவாறு வழக்கிடலாம்.

### ஒரு பொருளைக் குறிக்கும் இழிசொல் நபர்களைப் பாதிக்கலாம்

ஒருவர் விற்கும் பொருள் கலப்படமானது என்று கூறினால், அவர் கலப்படமான பொருளை விற்பவர் என்பதே குறிக்கப்படு கிறது. ஆகவே அது விற்பவரைக் குறித்த அவதூறு ஆகிறது. ஒருவர் விற்கும் புத்தகங்கள் கீழ்த்தரமானவை என்று கூறுதல் விற்பவரைப் பற்றிய அவதூறு எனவே சட்டம் கொள்கிறது.

இழிவுரை ஒரு பொருளைக் குறித்து மட்டும் கூறப்பட்டாலும், சூழ்நிலைகளைப் பொறுத்துப் பிறர் நடத்தையை மறைமுகமாகக் குறிப்பதால் அந்த இழிசொல் நபர்களைக் குறிக்கும் அவதூறு ஆகிறது.

(3) அவதூறு பிறர் அறியப் பிரசுரம் ஆகியிருக்கவேண்டும்

மூன்ருவதாக, அவதூறு வழக்கில் வாதியால் மெய்ப்பிக்கப் படவேண்டியது அவதூருன செயல் பிறர் அறிய வெளியிடப் பட்டது என்பதாகும்.

ஒருவரை இழிவு செய்வதே அவதூறு எனக் கண்டோம். ஒருவரைப் பற்றிய புகழ்ச்சியும், இகழ்ச்சியும் மற்ற மக்களின் மனதில் உள்ள கருத்தேயாகிறது. எனவே, ஒருவருக்கு இழிவு விளை விப்பது என்ருல் பிறர் கருத்தில் அவரைப்பற்றி இழிவுணர்ச்சி தோன்றச் செய்வதே யாகும். அதற்கு, இழிவு செய்யும் குறிப்பினைப் பிறருக்குத் தெரியும்படி வெளி யிடுதல் அவசியமாகிறது.

அப்படி வெளியிட்டால்தான் பிறர் கருத்தில் இழிவுணர்ச்சி ஏற்படமுடியும். அவதூறு பிறப்பதே இவ்வாறு வெளியிடப்படும் செயலால்தான். எனவே, ஒருவரைப்பற்றிய இகழ்ச்சியைப் பிறர் அறியும்படி வெளியிடுவதிலேயே அவதூறு தோன்றுகிறது எனலாம். வெளியீடு இல்லையேல் அவதூறு இல்லை.

‘வெளியிடுதல்’ அல்லது ‘பிரசுரம்’ என்ருல் என்ன ?

ஒருவர் இன்னெருவருக்குத் தமது கருத்தைச் சொல்லுவது, எழுதுவது, வேறு வகையில் தெரிவிப்பது, இதுவே வெளியிடுதல் அல்லது பிரசுரம் (Publication) எனப்படும்.

ஒரு தகவலை அச்சிட்டுப் பலரும் அறியும்படி வெளியிட்டால்-தான் பிறர் அறிய வெளியிடுவதாகும் என்பதன்று. ஒருவரைப் பற்றிய எனது கருத்தை மூன்ருவது மனிதருக்கு நான் தெரி விக்கும் செயல் வெளியிடும் செயலேயாகும். ஒருவர் மற்ெருரு வரைப் பற்றிய இழிவுரையை இன்னெருவருக்குத் தெரிவித்தால் அதுவே பிரசுரிக்கும் செயலாகிவிடுகிறது.

“ பிறர் அறிய அவதூருன கருத்தை வெளியிடுதல்” என்ருல் “ எவரைப்பற்றி அவதூறு செய்யப்படுகிறதோ அவரைத் தவிர, வேறு ஒரு நபருக்கு அந்த அவதூருன குறிப்புத் தெரிவிக்கப் படுதல்” என்பதே பொருள்.

ஆதலால், ஒருவர் மற்ெருருவரைத் தனித்து நேருக்கு நேராகப் பழித்துப் பேசினுல் அஃது அவதூறு ஆவதில்லை. ஒருவரைப் பழித்து எழுதி அதை உறையில் வைத்து ஒட்டி அவருக்கே அனுப்பிவைப்பது அவதூறு அன்று. ஏனெனில் மூன்ருவது நபர் யாருக்கும் அஃது அறிவிக்கப்படவில்லை.

மூன்ருவது நபருக்கு அறிவிப்பது என்ருல் ஒரு குறிப்பிட்ட நபருக்கு அவதூருன தகவலைத் தெரிவிப்பது மட்டுமன்று. பிறர் அதைத் தெரிந்து கொள்ளும்வகையில் செய்யும் காரியங்கள் எல்லாம் பிரசுரங்கள் ஆகின்றன.

அவதூருன தகவல் எழுத்தாளரிடம் கொடுக்கப்பட்டு நகல் எடுக்கப்பட்டால் அஃது எழுத்தாளருக்கு வெளியிடும் செயலாகும்; அஃது அச்சடிக்கப்படும்பொழுது அச்சடிப்பவருக்கு வெளியிடும் செயலாகும். அவதூறின் தகவலை ஓர் அட்டையில் எழுதிப் பிறர் பார்க்கும்படி வைப்பதும் பிரசுரந்தான்.

ஓர் அஞ்சல் அட்டையில் (Post card) அவதூருன தகவலை எழுதி அவதூறு இழைக்கப்படுபவருக்கு அனுப்பினுலும் அது பிரசுரம் செய்யும் செயலாகும். ஏனெனில், அஞ்சல் அட்டையில் உள்ளதை யாரும் பார்க்கவும் படிக்கவும் செய்யலாம். தந்தியில் அனுப்பினுல் அது தந்தியை அனுப்பும் அலுவலருக்குப் பிரசுரம் செய்ததாகும். ஆனுல், குறியீடுகள் (Code) மூலம் தந்தி அனுப்பினுல் அதைப் பிரசுரம் என்று கொள்வதில்லை. ஏனெனில் குறியீடுகளைப் பிறர் புரிந்துகொள்ள முடியாது.

ஒருவர் தம் மனைவிக்கு இன்னொருவரைப்பற்றி அவதூருகக் குறிப்பிட்டு எழுதினுல் அதை நீதிமன்றத்தில் மெய்ப்பிக்க முடியாது. ஏனெனில் கணவன் மனைவிக்குள்ள கடிதப் போக்கு வரத்துகளை நீதிமன்றத்தில் சாட்சியமாகக் காட்டுவதைச் சம்பந்தப்பட்டவர்கள் தடுப்பதற்குச் சட்டம் இடமளிக்கிறது. ஆனுல், கணவனைப் பற்றி மனைவிக்கோ, மனைவியைப்பற்றிக் கணவனுக்கோ அவதூருக எழுதினுல் அது பிரசுரமே ஆகும்.

### கவனக் குறைவால் வெளியிடுதல்

ஒருவருடைய கவனக் குறைவினுல் இன்னொருவரைப்பற்றிய அவதூறு வெளியிடப்படலாம். இப்பொழுது, கவனக் குறைவாக இருந்தவர் அவதூறு வெளியீட்டிற்குப் பொறுப்பாகிருர்.

ஒருவர் மற்ருெருவரைப்பற்றி இழிவுபடுத்தி எழுதி அதை இழிவு படுத்தப்பட்டவருக்கே அனுப்பவேண்டும் என வைத்திருக்கிருர். ஆனுல், அது தவறுதலாக மூன்ருவது நபருக்குப் போகும் அஞ்சலுடன் போடப்பட்டு மூன்ருவது நபரின் கைக்குக் கிடைத்துவிடுகிறது. இந்நிலையில், இழிவுபடுத்தி எழுதியவரே அந்தப் பிரசுரத்திற்குப் பொறுப்பாகிருர். ஒருவர் பிறரை இழிவு படுத்தும் ஒரு குறிப்பை வேருெரு குறிப்பு எனத் தவறுதலாக நினைத்து இன்னொருவரிடம் கொடுத்தாலும், அவதூறைப் பிரசுரம் செய்தவரேயாகிருர்.

இழிவு படுத்தப்பட்டவருக்கு முத்திரையிட்டு மூடி அனுப்பும் அஞ்சல் உறையை அவருடைய எழுத்தாளரோ அல்லது உறவினரோ பிரித்துப் பார்க்கும் வாய்ப்பு உண்டு என்று தெரிந்தும், அஞ்சல்மூலம் அவதூறுச் செய்தியை அனுப்பி, அஃது எழுத்தாளராலோ உறவினராலோ பிரித்துப் பார்க்கப்பட்டால் அதுவும் பிரசுரம் செய்த செயலேயாகும். ஒட்டப்பட்ட உறைமேல் ''இரகசியம்'' அல்லது ''தனிப்பட்டது'' என்று எழுதியிருந்தும் அதைப் பிறர் பிரித்துப் படித்தால் அதை அனுப்பியவர் பொறுப்பாவதில்லை.

ஒருவரால் அவருடைய பெட்டியில் வைக்கப்பட்டிருந்த அவதூறின் குறிப்பு திருடப்பட்டு அஃது ஒரு மூன்ருவது மனிதர் கைக்குக் கிடைத்துப் பிரசுரம் ஆனது என்ருல், அதற்குப் பெட்டியில் வைத்திருந்தவர் பொறுப்பல்லர்.

ஒரு கேளிக்கைச் சங்கத்தின் சுவரின்மீது ஒருவரைப் பற்றிய அவதூருன குறிப்பு எவராலோ ஒட்டப்பட்டிருந்தது. அச்சங்க நிர்வாகிகள் அக்குறிப்பைப் பார்த்த பின்பும் அதை அகற்றுவதற்கு எந்த முயற்சியும் எடுக்கவில்லை. இப்பொழுது, அந்த அவதூறு மேலும் பிரசுரமாவதற்குப் பொறுப்பு சங்கத்தின் நிர்வாகிகளைச் சேரும். [Byrne V. Deane (1937) 1 K. B. 818]

அவதூறுக் குறிப்பை எழுதியவர் ஒருவராக இருக்கலாம். அதை மற்ருெருவர் எடுத்து மூன்ருவது நபருக்குக் காண்பித்தால், எடுத்துக் காண்பித்தவர் அவதூறுக் குறிப்பைப் பிரசுரம் செய்தவர் ஆகிருர். பிறரை இழிவுபடுத்தும் சொற்களை முதலில் கூறியவர் ஒருவராக இருக்கலாம். அதை மீண்டும் மற்ருெருவர் பிறர் அறியக் கூறினுல் அவர் அவதூறுப் பிரசுரம் செய்தவராகின்ருர். இவ்வாறு செய்யப்படும் ஒவ்வொரு பிரசுரமும் தனித் தனிக் குற்றம் ஆகிறது. அக் குறிப்பை வெளியிடுபவர்கள் ஒவ்வொருவரும் அவதூறு செய்தவர்கள் ஆகின்றனர்.

ஒரு விருந்தின் முடிவிற் பேசும்பொழுது விருந்துக்கு வந்திருந்த ஒருவரைப்பற்றி மற்ருெருவர் வேடிக்கையாக, ஆனுல், இழிவுபடுத்தும் முறையில் பேசினுர். அந்தப் பேச்சைப் பிரசுரித்த செய்திப் பத்திரிகை அவதூறுச் செயலுக்குப் பொறுப்பாக்கப் பட்டது. ஒருவர் தம்மைப்பற்றிக் குறைவாகவோ இழிவுபடுத்தியோ பேசலாம். ஆனுல், அப்பேச்சைப் பிரசுரிப்பது அவதூறேயாகும். [Cook V. Ward (1830) 6 Bing 409].

ஓர் அவதூறுச் செய்தி புத்தகத்திலோ செய்தித்தாளிலோ பிரசுரிக்கப்பட்டால் அதை எழுதியவர், வெளியிடுபவர், அச்சிடுபவர் எல்லோருமே அந்த அவதூறின் பிரசுரத்திற்குப் பொறுப்

பானவர்கள். அதை அச்சிட்டு வெளியிட்டபின் தான் பிரசுரமானது என்று கொள்வது சரியன்று. வெளியிட்டபின் பொது மக்களுக்குப் பிரசுரமாகிறது. ஆனால் அதற்கு முன்பே, எழுதியவர் அப்புத்தகத்தை வெளியிடுபவரிடம் கொடுத்தபொழுது முதன் முறையாக எழுதியவரிடமிருந்து வெளியிடுபவருக்குப் பிரசுரம் ஆகிறது. இந்தப் பிரசுரத்திற்கு எழுதியவர்மட்டும் பொறுப்பாகிறார். அஃது அச்சிடப்படுவதற்குக் கொடுக்கப்பட்டபின் அஃது அச்சிடுபவருக்குத் தெரியப்படுத்தப் படுவதால் இரண்டாவது முறையாகப் பிரசுரமாகிறது. இந்தப் பிரசுரத்திற்கு எழுதியவர், வெளியிடுபவர் இருவரும் பொறுப்பாகின்றனர். அச்சிட்டுப் பொதுமக்களுக்கு வெளியிடுதல் மூன்றாவதாக நடக்கும் பிரசுரமாகும். இதற்கு எழுதியவர், அச்சிடுபவர், வெளியிடுபவர் மூவருமே பொறுப்பாகின்றனர். மேலே கூறப்பட்ட ஒவ்வொரு பிரசுரத்திற்கும் தனித்தனியே வழக்குத் தொடரப்படலாம். ஆனால், நடைமுறையில் புத்தகம் அல்லது பத்திரிகை அச்சிடப்பட்டு வெளிவந்தபின் புத்தகத்தை எழுதியவர், அச்சிடுபவர் வெளியிடுபவர் ஆகிய மூவர் மேலும் வழக்குத் தொடரப்படுகிறது.

ஒரு செய்தித் தாளில் அவதூறான பிரசுரம் இருக்கிறது என்றால் அதை விற்றவர்கள் அச் செய்தித்தாளில் இருந்த அவதூறு பற்றி தங்களுக்குத் தெரியாது என மெய்ப்பித்தால் அவர்கள் அதற்குப் பொறுப்பாவது இல்லை. செய்தித்தாளை விற்கும் பலருக்கும், அதைப் பிறர் படிக்கும்படி வைத்திருக்கும் நூல்நிலைய நிர்வாகிகளுக்கும், அதில் உள்ள அவதூறுச் செய்தி தெரியாமல் இருக்கலாம். அவ்வாறு தங்களுக்குத் தெரியாது என்பதை அவர்கள் நிலைநாட்டினால் அவதூறைப் பரப்பியதற்கு அவர்கள் பொறுப்பாவது இல்லை. இல்லையேல் அவர்களும் பொறுப்பாவார்கள். "செய்தித் தாள்களை நெருப்பைப் போல் ஆபத்தானதாகக் கருதமுடியாது". அதில் உள்ள தகவல்களை அறியாமலே ஒருவர் அதை வைத்திருக்கலாம் அல்லது அதை இன்னொருவரிடம் கொடுக்கலாம். அப்படியெனில், அவர் அச் செய்தித்தாளில் இருந்த அவதூறைப் பிரசுரித்த குற்றத்திற்கும் பொறுப்பாவது இல்லை. [Emmens V. Pottle (1885) 16 Q. B. D. 358]

அவதூறைப் பரப்புதற்கு வானொலி நிலையம் பயன்படுத்தப்பட்டால் அதற்கு இசைந்த வானொலி நிலையத்தினரும் அவதூறைப் பரப்பிய செயலுக்குப் பொறுப்பாகின்றனர். எழுதி ஏற்றுக்கொள்ளப்பட்ட வாசகத்தைப் படிக்கும்பொழுது அதில் இல்லாததை வானொலியில் பேசுபவர் வெளியிட்டால் அதற்கு வானொலி நிர்வாகிகள் பொறுப்பாவதில்லை.

ஒருவரின் சம்மதத்துடன் அவரைப் பற்றிய அவதூறை வெளியிடுதல்

ஒருவர் தம்மைப் பற்றிய அவதூறன செய்தி வெளியிடுவதற்கு ஒப்புதலை வெளிப்படையாகவோ குறிப்பாகவோ அளித்திருந்தால் பிரசுரமான அவதூறு குறித்து அவர் வழக்கிட முடியாது.

## (இ) அவதூறன செய்தியைத் திரும்பவும் வெளியிடுவோர்

*அவதூறை முதலில் வெளியிட்டவரின் பொறுப்பு.*

அவதூறு இழைப்பதின் அடிப்படை அவதூறுச் செய்தி வெளியிடப்படுவதுதான் எனக் கண்டோம். ஒருவர், மற்றொருவரிடமிருந்து கேள்விப்பட்ட அவதூறன செய்தியை மூன்றுவது நபருக்கு வெளியிட்டால் அதுவும் அவதூறன செயலேயாகும். "இன்னொருவர் என்னிடம் கூறியதைத் தான் நான் வெளியிட்டேன்" என்று கூறப்படுவதைச் சட்டம் ஏற்பதில்லை.

முதல் தடவையாக அவதூறை வெளியிடுபவர் பைத்தியக்காரராகவோ சமூகத்தில் மதிப்பு ஏதும் இல்லாதவராகவோ இருக்கலாம். ஆனல், மதிப்பு மிக்க மற்றொருவர் அதை மீண்டும் வெளியிட்டால் அவதூறின் தன்மை இன்னும் கடுமையாகிறது. ஆகவே, அவதூறன செய்தியைக் கேட்டவர் அல்லது அதைப் படித்தவர் மீண்டும் அதை இன்னொருவர்க்கு வெளியிட்டால் அதுவும் அவதூறன செயலேயாகிறது.

அவதூறை முதலில் வெளியிட்டவரின் பொறுப்பு

இனி, முதலில் அவதூறை வெளியிட்டவர், அது மறுபடியும் பிறரால் வெளியிடப்பட்டால், அதற்குப் பொறுப்பாகிறாரா என்பதுபற்றிக் காண்போம்.

முருகன் என்பவர் கண்ணனைப் பற்றிய அவதூறன செய்தியைக் கோபாலனிடம் கூறுகிறர் என வைத்துக்கொள்வோம். இப்பொழுது முருகன் அவதூறு இழைத்தவர் ஆகிறர். தாம் முருகனிடமிருந்து கேட்ட அவதூறைக் கோபாலன் இன்னொருவரிடம் கூறினல் கோபாலனும் அவதூறு இழைத்தவர் ஆகிறர். கோபாலன் தன்னிச்சையாய் இழைத்த அவதூறுக்கு முருகன் பொதுவாகப் பொறுப்பாவதில்லை. ஆனல், (1) கோபாலன் இழைத்த அவதூறு முருகனல் தூண்டிவிடப்பட்டது என்றலும், அல்லது (2) அது முருகனல் முதலாவதாக வெளியிடப்பட்டதன் விளைவு என்றலும், அல்லது (3) கோபாலன் மறுபடியும் அதைத் திரும்ப வெளியிடும் கடமை உடையவராக இருந்தாலும்,

கோபாலனுல் திரும்பவும் வெளியிடப்பட்ட அவதூறுக்கு முருகனும் பொறுப்பாகின்ருர்.

மேற்கோள்கள் :—

ஒரு கம்பெனியின் இயக்குநர்கள் கூட்டத்தில் அவதூருன செய்தியை ஓர் இயக்குநர் வெளியிடுகிருர். இயக்குநர்களின் கூட்டத்தில் இவ்வாறு பேசுவதற்குச் சட்டம் இடமளிக்கலாம். அவ்வாறு பேசியவர் அதைப் பத்திரிகைகளில் வெளியிடுமாறு அக்கூட்டத்திற்கு வந்திருந்த பத்திரிகை நிருபர்களைக் கேட்டுக்கொள்கிருர். அதற்கிணங்கப் பத்திரிகைகளில் அச்செய்தி பிரசுரிக்கப்படுகிறது. இப்பொழுது, பத்திரிகையாளர், இயக்குநர்கள் கூட்டத்தில் முதலில் அவதூறை வெளியிட்டவர் இருவருமே பொறுப்பாகின்றனர். ஏனெனில், இயக்குநர் கூட்டத்தில் பேசியவரின் தூண்டுதலினுலேயே பத்திரிகையில் அந்த அவதூறு பிரசுரமாகியது.

புறங்கூறித் திரிவதையே தொழிலாகக் கொண்ட ஒருவரிடம் அவரைப்பற்றி நன்கு அறிந்த மற்ருெருவர் அவதூருன செய்தியைக் கூறுகிருர். புறங்கூறும் குணம் படைத்தவர் தாம் கேட்ட செய்தியைப் பலருக்கும் சொல்லுகிருர். தம்மிடம் கேட்டவர் திட்டமாக மூன்ருவது மனிதரிடம் அதைச் சொல்லுவார் என்பது தெரிந்திருந்தும் அவதூறை வெளியிட்ட காரணத்தால், பின் வெளியீட்டிற்கு இருவருமே பொறுப்பாகின்றனர்.

சில வேளைகளில் ஓர் அவதூருன செய்தியைக் கேட்பவருக்கு அதை இன்னெருவருக்குச் சொல்லவேண்டிய கடமை இருக்கலாம். ஓர் அதிகாரியைப் பற்றிய அவதூறு சொல்லப்படும்பொழுது ஒரு மேலதிகாரி அதைக் கேட்கிருர். அந்த மேலதிகாரி தாம் கேள்விப்பட்ட செய்தியைத் தலைமை அதிகாரிக்குத் தெரிவித்து, அதன் பயனுக, எந்த அதிகாரியைப் பற்றி அவதூறு கூறப்பட்டதோ அவர் வேலையிலிருந்து நீக்கப்படுகிருர் என வைத்துக்கொள்வோம். இப்பொழுது, முதலில் அவதூறு கூறியவர் எல்லா விளைவுகளுக்கும் பொறுப்பாகிருர். ஏனெனில் முதலாவதாக அவதூறைக் கேட்ட அதிகாரிக்கு அச் செய்தியைத் தலைமை அதிகாரியிடம் கூறவேண்டிய நேர்மைக் கடன் (Moral duty) இருக்கிறது. அந்தக் கடமைப்படியே தலைமை அதிகாரியிடம் தாம் கேள்விப்பட்டதை முதல் அதிகாரி கூறினுர். இந்த அதிகாரிக்குள்ள நேர்மைக் கடன் பற்றி அவதூறை முதலில் அறிவித்தவருக்குத் தெரிந்திருக்கவேண்டும். அதைத் தெரிந்திருந்தும், அவர் அவதூறை வெளியிட்டிருந்தால்தான் இரண்டாவது வெளியீட்டின் விளைவுகளுக்கான பொறுப்பு அவரைச் சாருகின்றது. (Odgers : "Libel and Slander")

இவ்வாறு, சில சூழ்நிலைகளில் அவதூறு கூறுபவர்கள் அதைப் பிறர் திரும்ப வெளியிடுவதால் ஏற்படும் விளைவுகளுக்கும் பொறுப்பாகின்றனர்.

## (ஈ) அவதூறு விளைவது அனுமதிக்கப்படும் தறுவாய்கள்

*அவதூறு வழக்கில் சட்டம் ஏற்றுக்கொள்ளும் எதிர்வாதங்கள் - உண்மை உரைத்தல் - அவதூறு பற்றிய குற்ற வழக்குகள் - நேர்மையான கருத்துரை - பொது நன்மைக்குச் சம்பந்தப்பட்ட காரியங்கள் எவை? - கருத்துரையைத் தோற்றுவித்த நிகழ்ச்சி உண்மையானதாக இருக்கவேண்டும் - நிகழ்ச்சியுரைக்கும் கருத்துரைக்கும் தொடர்பு இருக்கவேண்டும் - சிறப்புரிமைத் தறுவாய்கள் - வரம்பற்ற சிறப்புரிமை - நீதிமன்ற நடவடிக்கைகள் - நாடாளு மன்ற நடவடிக்கைகள் - அரசின் விவகாரங்கள் குறித்த அறிக்கைகள் - வரம்புள்ள சிறப்புரிமை - சிறப்புரிமையுள்ள தறுவாய் எது? - இணைந்த கடமை அல்லது நலன் உடையவர்கள் - சிறப்புரிமை பெற்ற செய்திகள் - சிறப்புரிமைச் செய்திகள் வெளியிடத் தக்க தறுவாய்கள் - நம் கடமையை நிறைவேற்றுவது - பணி முறையான கடமை - சமூக உறவு அல்லது ஒழுக்க முறையான கடமை - நம் நலனைப் பாதுகாப்பது - நம் செயல்கள் நியாயமானவை என நிலைநாட்டுவது - பிறர் நலன்களைப் பேணுவதற்குத் தகவல் அறிவித்தல் - பொது நலனைப் போற்றும் தகவல்கள் - வரம்புள்ள சிறப்புரிமையின் முக்கிய மூன்று கூறுகள் - தீய நோக்கம் (Malice) என்பது என்ன? - வரம்புள்ள சிறப்புரிமை பெற்ற அறிக்கைகள் அல்லது பிரசுரங்கள் - நீதிமன்ற நடவடிக்கைகள் பற்றிய அறிக்கைகள் - சட்டமன்ற நடவடிக்கைகள் - பொதுக்கூட்ட நடவடிக்கைகள் பற்றிய அறிக்கைகள்.*

### அவதூறு வழக்கில் சட்டம் ஏற்றுக்கொள்ளும் எதிர்வாதங்கள் (Defences)

பிறர்பழி கூறுதல் சில வேளைகளில் கட்டாயமாகிறது. மக்களின் பொதுநலனுக்காகச் சிலரின் குறைகளை வெளியிட வேண்டிய தறுவாய்கள் ஏற்படுகின்றன. நீதிமன்ற நடுவர்கள் தங்கள் கடமையைச் செய்யும்பொழுது எவர்மாட்டும் கண்ணோட்டமின்றி வழக்கில் சம்பந்தப்பட்டவர்களின் குற்றங்குறைகளைக் கூறவேண்டியிருக்கிறது. உறுப்பினர்கள் தங்கள் கருத்துக்களை ஒளிவு மறைவின்றிப் பாராளுமன்றத்தில் எடுத்துரைத்தால்தான் குடியரசு நல்லரசாக இயங்க முடியும். செய்தித் தாள்கள் பொதுக்காரியங்களைக் குறித்து நேர்மையான கருத்துரைகளை மக்களுக்குச் சொல்லுவது மக்களாட்சியை மாண்புறச் செய்வதாகும். உண்மையை உரைத்து அதைப் பிறர் அறியும்படி செய்தல் பொதுவாழ்வில் தூய்மையை நிலைநாட்டுவதற்கு உதவி செய்

கிறது. எனவே, குறிப்பிட்ட சில சூழ்நிலைகளில் பிறர் பழிப்பு நேர்வதற்குச் சட்டம் இடமளிக்கிறது.

ஆதலால் அவதூறு வழக்கில் எதிர்வாதி பிறர் குறைகளை வெளியிட்டதற்குச் சட்டப்படியான முகாந்திரங்கள் இருக்கின்றன என்று காரணங் காட்டலாம். அந்த முகாந்திரங்களை மெய்ப்பிக்கும் பொறுப்பு எதிர்வாதியையே சேரும்.

இனி, எந்தெந்தச் சூழ்நிலைகளில் பிறர் பழி வெளியிடப்படுவதற்குச் சட்டம் இடமளிக்கிறது எனக் காண்போம்.

அவதூறு விளைவது அனுமதிக்கப்படும் தறுவாய்கள்

(1) உண்மை உரைத்தல் (Justification by truth)
(2) நேர்மையான கருத்துரை வழங்குதல் (Fair Comment)
(3) சிறப்புரிமைத் தறுவாய்கள் (Privileged Occasions)

## (1) உண்மை உரைத்தல் (Justification by truth)

அவதூறு வழக்கில் எதிர்வாதி, தாம் வாதியைப்பற்றி வெளியிட்ட செய்தியின் உண்மையை நிலைநாட்டினால் அது தகுந்த சமாதானமாக ஏற்றுக் கொள்ளப்படுகிறது. இதை ஆங்கிலத்தில் "Justification by truth" (உண்மை என்று காரணங்காட்டுதல்) என்பார்கள்.

அவதூறு வழக்கின் அடிப்படை ஒருவருடைய நன்மதிப்புக்கு இழுக்கு விளைவதுதான். ஒருவரைப்பற்றிய உண்மையான தகவல் வெளியிடப்பட்டதால் அவருக்கு அவமானம் விளைந்தது எனில், அதைத் தீங்காகக் கொள்வதற்கில்லை. மெய்யான செய்தியை வெளியிட்டதன் பயனாய் ஒருவரின் மதிப்புக் குறைந்தது என்றால், குறைய வேண்டிய மதிப்புக் குறைந்தது என்பதேயாகும். ஆதலால், நன்மதிப்பு இல்லாத ஒருவர் அல்லது மதிப்புக்குத் தகுதியற்ற ஒருவர் அந்த நன்மதிப்பிற்கு இழுக்கு நேர்ந்தது என்று சொல்வது பொருளற்றதாகும்.

ஒருவரைப்பற்றி "அவர் பல்கலைக் கழகப் பட்டதாரி அல்லர்" என்று ஒரு பத்திரிகை பிரசுரிக்கிறது. உண்மையிலேயே அவர் பட்டதாரி அல்லர். பத்திரிகைப் பிரசுரத்தினால் தமக்கு இழுக்கு விளைந்ததாக அவர் கூறுவது தகுமா? பட்டதாரி என்ற மதிப்பு அவருக்கு உண்மையில் இல்லை. ஒரு சிலர் அவரைத் தவறாகப் பட்டதாரி என்று மதித்திருந்தாலும் அது தகாத மதிப்பு ஆகும். அந்தத் தகாத மதிப்பு மறைவது நியாயமானதன்றோ? ஆதலால், அவருக்கு எந்தவித அவமதிப்பும் ஏற்படவில்லை என்பதே உண்மை நிலை. இவ்வாறே, சட்டமும் கொள்ளுகிறது.

இல்லாத மதிப்பை இழந்து விட்டதாகக் கூறி அதற்கு நட்ட ஈடு பெறுவதைச் சட்டம் அனுமதிப்பதில்லை. எனவே, "உண்மையே உரைக்கப்பட்டது" என்று எதிர்வாதி மெய்ப்பித்தால் அதைச் சட்டம் ஏற்றுக் கொள்ளுகிறது.

அவதூறுச் செய்தியில் உள்ளது உண்மை எனக் கூறி வாதாடும் எதிர்வாதி அந்த உண்மையை மன்றத்தில் மெய்ப்பிக்க வேண்டும். அதில் தவறினுல், அவர் இழைத்த அவதூறுச் செயலின் தன்மை இன்னும் அதிகமாகிறது.

இன்னொருவர் கொடுத்த தகவலின் அடிப்படையில் ஒருவரைப் பற்றிய அவதூருன செய்தியை ஒரு பத்திரிகை வெளியிட்டது என்ருல், அதனுல் எழுந்த வழக்கில் தகவலை இன்னொருவர் அனுப்பியது உண்மை என்பதை மெய்ப்பித்தல் போதாது; வெளியிடப்பட்ட செய்தியின் உண்மை மெய்ப்பிக்கப்பட வேண்டும்.

ஒருவரைப்பற்றி "நாணயம் இல்லாதவர்" என்று அவதூருகக் கூறினுல் அவர் நாணயமற்றவர் என்று கூறத்தக்கபடி எந்தெந்தச் செயல்களைச் செய்தார் என்பதை விளக்கி, அந்தச் செயல்களை அவரே செய்தார் என்பதையும் எதிர்வாதி மெய்ப்பிக்க வேண்டும். இதுவன்றி, "வாதி நாணயம் இல்லாதவர் என்பது உண்மைதான்" என்று மட்டும் வழக்கில் மீண்டும் கூறுவது, அவதூறுச் செயலைத் திரும்பவும் செய்வதாகுமேயன்றி, வழக்கிற்குச் சரியான முகாந்திரம் ஆகாது. [Zierenberg. V. Labourchre (1893) 2. Q. B. 183]

ஒருவரை "நம்பிக்கை மோசம் செய்பவர்" என்று கூறிவிட்டு அவர் பொய்ச்சாட்சி கூறியதற்காகத் தண்டிக்கப்பட்டிருந்ததை மெய்ப்பித்துப் பயனில்லை. அவர் "நம்பிக்கை மோசம்" புரிந்ததை நிலைநாட்டவேண்டும். அவதூருன கூற்றில் உள்ளதையோ அல்லது அதற்கு ஆதாரமான செய்திகளையோ மெய்ப்பித்தால்தான் "உண்மை உரைக்கப்பட்டது" என்ற எதிர்வாதம் ஏற்றுக்கொள்ளப்படும்.

அவதூறுப் பிரசுரத்தில் உள்ள செய்தியை ஒருசிறிதும் பிசகாமல் மெய்ப்பிக்கவேண்டும் என்பதில்லை. அது பெரும்பாலும் உண்மையானது என்று காட்டினுல் போதுமானது. ஒருவர் மூன்றுவாரச் சிறைத் தண்டனை அடைந்தவர் என்று கூறப்பட்டது. ஆனுல் அவர் இரண்டு வாரச் சிறைத் தண்டனையே பெற்றிருந்தார். இருப்பினும், அச் செய்தி பொதுவாக உண்மையின் அடிப்படையில் இருப்பதால் எதிர்வாதியின் "உண்மையே

உரைக்கப்பட்டது'' என்ற வாதம் ஏற்றுக் கொள்ளப்பட்டது. [Alexander V. N. E. Ry. Co. (1865) 6 B S. 340]

அவதூறான தகவல் மிகைப்படுத்திக் கூறப்பட்டதாக இருப்பது கூடாது. ஒரு பத்திரிகையாளரைப்பற்றி "அவர் வழக்கமான அவதூறுச் செய்திகளையே பிரசுரிப்பவர்'' என்று கூறப்பட்டது. ஆனால் அப்பத்திரிகையாளர் ஒரே ஒரு முறைதான் அவதூறுக் குற்றத்திற்கு ஆளாகியிருக்கிறார். எனவே, "அவர் எப்பொழுதும் அவதூறான செய்திகளைப் பிரசுரிப்பவர்'' என்ற கூற்று மிகைப்படுத்திக் கூறப்பட்டதாகும். ஆதலால் அது உண்மையை அடிப்படையாகக் கொண்டதன்று எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. [Wakley. V. Cooke. (1849) 4. Ex 511]

அவதூறு பற்றிய குற்ற வழக்குகள்

அவதூறு செய்தல் தீங்கு மட்டுமின்றிக் குற்றமும் ஆகிறது எனக் கண்டோம்.

குற்ற வழக்கில் அவதூறுச் செய்தியின் உண்மைத் தன்மையை நிலைநாட்டினால்மட்டும் போதாது. அச் செய்தியைப் பிரசுரித்தது பொது நன்மைக்கு (Public good) இன்றியமையாதது என்பதையும் குற்றம் சாட்டப்பட்டவர் மெய்ப்பிக்கவேண்டும். அப்பொழுதுதான் அவதூறு இழைத்தவர் தண்டனையின்றித் தப்பமுடியும். எனவே, பொது நலனுக்குத் தேவை இல்லாத, ஆனால், ஓர் உண்மையான, அவதூறுச் செய்தியை ஒருவர் பிரசுரித்தால், உரிமை வழக்கில் அவர் பொறுப்பாக்கப்படுவதில்லை. என்றாலும், குற்ற வழக்கில் அவர் தண்டிக்கப்படலாம்.

(2) நேர்மையான கருத்துரை (Fair comment)

நம் வாழ்வில் பொதுவான காரியங்கள் குறித்துத் தங்கள் கருத்துக்களைத் தெரிவிப்பது மக்களின் உரிமையாகும். பொதுச் செயல்களை ஆய்ந்து அவை பற்றிய கருத்துக்களை வெளியிடும் உரிமை இருந்தால்தான், நாகரிக வளர்ச்சியும், கலை, இலக்கியம், விஞ்ஞானம் இவைகளில் முன்னேற்றமும் ஏற்பட ஏதுவாகும். அவ்வாறு கருத்துக்களை வெளியிடும்பொழுது தனி மனிதர்களின் திறமை, தகுதி, குணம் இவை குறித்துப் புகழ்ச்சியாகவோ, இகழ்ச்சியாகவோ கூறும் அவசியம் ஏற்படலாம். இது தவிர்க்க முடியாதது.

எனவே நேர்மையான முறையில், தீய எண்ணம் இன்றிப், பொதுக் காரியங்கள் குறித்துக் கருத்து வெளியிடுபவர்களைச் சட்டம் பாதுகாக்கிறது. இந்த உரிமை செய்திப் பத்திரிகைகளுக்குத்தான் உண்டு என்பதில்லை; எல்லா மக்களுக்கும் உண்டு.

ஆகையால், அவதூறு வழக்கில், ஒருவர் கூறியது பொதுக் காரியங்கள் குறித்த நேர்மையான கருத்துரையாகும் என்ற முகாந்திரம் காட்டப்படலாம். அதைச் சட்டம் ஏற்றுக் கொள்ளுகிறது. இந்த எதிர்வாதத்தை "நேர்மைக் கருத்துரை" (Fair comment) என்று கூறுவார்கள்.

"நேர்மைக் கருத்துரை" என்ற எதிர்வாதம் ஏற்றுக் கொள்ளப்படுவதற்கு மெய்ப்பிக்கப்பட வேண்டிய இருகூறுகளாவன :

(1) அவதூறு என்று சொல்லப்படுவது நேர்மையான கருத்துரை என்பது,

(2) அக்கருத்துரை பொது நன்மைக்குச் சம்பந்தப்பட்டது என்பது ;

இந்த இரண்டு கூறுகளும் நிலைநாட்டப்பட வேண்டும்.

**பொது நன்மைக்குச் சம்பந்தப்பட்ட காரியங்கள் எவை ?**

(1) அரசின் செயல்கள்—மந்திரிகள், அரசாங்க அதிகாரிகள், இவர்களின் பொதுக்காரியங்களைப் பொறுத்த நடத்தை ; அவர்கள் கடமையாற்றும் விதம்,

(2) நீதி வழங்கும் முறை,

(3) ஆட்சி முறை,

(4) சட்டமன்ற நடவடிக்கைகள்,

(5) நகராண்மை பற்றிய காரியங்கள்,

(6) புத்தகங்கள், மற்றக் கலைப் பொருள்கள்,

(7) நாடகம், பேசும்படம், நாட்டியம், பாட்டு முதலிய கலா நிகழ்ச்சிகள்,

(8) அற நிலையங்களின் நிர்வாகம், இது போன்ற மக்களின் பொது வாழ்வுடன் தொடர்புடைய இதர செயல்கள்.

இவையெல்லாம் மக்களின் பொதுவாழ்வை ஒட்டிய செயல்கள், இவை குறித்து மக்கள் தங்கள் கருத்தைக் கூறுவது மக்களின் முதன்மையான உரிமையாகிறது. இது மக்களாட்சி முறைக்கு இன்றியமையாததாகும்.

ஒரு புத்தகத்தை எழுதி ஒருவர் வெளியிடுகிறார். வெளியிட்டபின், அப்புத்தகம் மக்களின் பொதுவாழ்வுடன் சம்பந்தப்பட்டதாகிறது. ஆகவே, புத்தகத்தில் உள்ள குற்றங்குறைகளை எடுத்துக்

காட்டுவதற்கு மக்களுக்கு உரிமை இருக்கிறது. புத்தகத்தின் வாயிலாக வெளிப்படும் ஆசிரியரின் திறனை ஆய்ந்து, அதுபற்றி எல்லோரும் கருத்துரைக்கலாம்.

"புத்தகம் எழுதும் ஒவ்வொருவரும் பொது மக்களின் தீர்ப்புக்குத் தம்மை ஆளாக்கிக் கொள்ளுகின்றனர். பிறர் அப்புத்தகம் குறித்துப் புனைந்துரை ஏதுமின்றிக் கண்டனம் செய்தால் அது அவருடைய நேர்மையானதும் சட்டப்படியானதுமான உரிமையே யாகும்'' என்று லார்டு எல்லன்பரோ என்ற நீதிபதி 1808 ஆவது ஆண்டிலேயே கூறியுள்ளார். [Carr V. Hood (1808) 1 Camp 355] ஒருவர் எழுதிய மதிப்புரையை ஆய்ந்து அதில் குற்றம் குறைகள் இருந்தால் அதைப்பற்றிப் பிறர் கூறலாம்.

ஒரு புத்தகத்தைப் பற்றி மதிப்புரை எழுதுகையில் புத்தகத்திலிருந்து காணப்படும் ஆசிரியரின் தகுதியின்மையையோ, அறியாமையையோ கண்டனம் செய்யலாம். ஆனால் ஆசிரியரைத் தனிப்பட்ட முறையில் இழிவுபடுத்துவது கூடாது.

''இப்புத்தகத்திலிருந்து ஆசிரியரின் அறியாமை நன்கு தெரிகிறது'' என்று கூறினால் அது நேர்மைக் கருத்துரை. "அறியாமை மிக்க ஆசிரியர் இப்புத்தகத்தை இவ்வாறு எழுதியதில் வியப்பில்லை,'' என்று கூறுவது அவதூறு விளைவிப்பதாகும்; அது நேர்மைக் கருத்துரை ஆவதில்லை. புத்தகத்தில் இல்லாத குற்றங்களை ஏற்றிச் சொல்லி அந்த அடிப்படையில் புத்தகத்தைக் கண்டனம் செய்வதும் நேர்மைக் கருத்துரை எனக் கொள்ளப்படுவதில்லை.

இம்மாதிரியே நாடகம், நாட்டியம், இசை போன்ற கலா நிகழ்ச்சிகள் குறித்துப் பிறர் கருத்துரை வழங்கலாம். இந்தக் கருத்துரைகளால் கலா நிகழ்ச்சியை நடத்தியவருக்கு அவமதிப்பு ஏற்பட்டது என்று வழக்கிட முடியாது.

இசைக் கலைஞரின் குரல் இனியதாக இல்லை என்று கூற மதிப்பு ஆய்வாளருக்கு உரிமை உண்டு. ஒரு பேசும் படம் மிகவும் கீழ்த்தரமாக இருக்கிறது என்று மதிப்புரை எழுதுவோர் கூறலாம். கலை வளர்ச்சிக்கு இத்தகைய உரிமை முக்கியமானதாகும்.

கூறப்படும் கருத்துரை நேர்மையானதாக இருக்கவேண்டும். பொய்யான செய்திகளுடனோ, பிறரை வேண்டுமென்றே பழித்துரைக்கும் முறையிலோ இருப்பது தகாது. வன்மம், பகைமை எண்ணம் ஏதுமின்றி நேர்மையானபடி மதிப்புரை வழங்குவதையே "நேர்மைக் கருத்துரை'' என்று சட்டம் ஏற்றுக் கொள்ளுகிறது.

**கருத்துரையைத் தோற்றுவித்த நிகழ்ச்சி உண்மையானதாக இருக்கவேண்டும்.**

மூல வாசகம் இருந்தால்தான் அதற்கு விளக்கவுரை எழுத முடியும். அதுபோல் ஓர் உண்மை நிகழ்ச்சி இருந்தால்தான் அதுபற்றிக் கருத்துரை வழங்குவதற்கு வாய்ப்பு இருக்கிறது. கருத்துரை என்பது ஒரு நிகழ்ச்சியைப் பற்றிக் கருத்தைத் தெரிவிப்பதாகும். ஒரு நிகழ்ச்சியிலிருந்து எழுவது, அதிலிருந்து ஊகிக்கப்படுவது, நிகழ்ச்சி பற்றிய கருத்துரையாகிறது. எனவே, நிகழ்ச்சி வேறு, அது பற்றிய கருத்துரை வேறு என்பது தெளிவு.

எந்த நிகழ்ச்சிபற்றிக் கருத்துரை கூறப்படுகிறதோ அந்த நிகழ்ச்சி உண்மையானதாக இருக்கவேண்டும். நிகழ்ச்சி கற்பனையில் தோன்றியதாக இருக்கக் கூடாது. ஆதலால், நடக்காத நிகழ்ச்சிகளின் அடிப்படையில் கருத்துரை அமைவது நேர்மைக் கருத்துரை ஆவதில்லை.

ஒருவரைப்பற்றி "அவர் கையாடல் குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டவர். ஆகவே அவர் நாணயம் இல்லாதவர்" என்று கூறுவது கருத்துரையாகும். "கையாடல் குற்றத்திற்காகத் தண்டிக்கப்பட்டவர்" என்பது நிகழ்ச்சியுரை (Statement of fact). அதிலிருந்து எழும் கருத்துரையே, "ஆகவே அவர் நாணயம் இல்லாதவர்" என்பது. இரண்டாவதாக உள்ள கருத்துரையை நாம் நேர்மையானது என்று கொள்ளவேண்டுமென்றால், முதலிற் சொல்லப்பட்ட நிகழ்ச்சியுரை உண்மையானதாக இருக்கவேண்டும். இல்லாத தொன்றை ஆதாரமாக வைத்து அதுபற்றிக் கருத்துரை வழங்கினால், அது "நேர்மைக் கருத்துரை" ஆவதில்லை.

ஏற்கனவே மெய்ப்பிக்கப்பட்ட காரியங்களை ஆதாரமாகக் கொண்டு கருத்துரைகள் வெளியிடப்படலாம். அரசாங்க அறிக்கைகள், அரசிதழ்கள் (Gazettes), நீதிமன்றத் தீர்ப்புகள், இவைகளின் அடிப்படையில் கருத்துரைகளைக் கூறலாம்.

**நிகழ்ச்சியுரைக்கும் கருத்துரைக்கும் தொடர்பு இருக்கவேண்டும்**

நிகழ்ச்சியுரையிலிருந்து கருத்துரை தோன்றியிருக்கவேண்டும். ஒன்றுக்கொன்று சம்பந்தம் இல்லாதிருத்தல் கூடாது. ஒருவரைக் குறித்து "அவர் வைத்தியப் படிப்பில் பட்டம் பெறாதவர், ஆதலால் அவர் வைத்தியம் செய்யத் தகுதியற்றவர்" என்று கூறும்பொழுது "வைத்தியப் படிப்பில் பட்டம் பெறாதவர்" என்ற நிகழ்ச்சியுரைக்கும், "ஆதலால் அவர் வைத்தியம் செய்யத் தகுதியற்றவர்" என்ற கருத்துரைக்கும் தொடர்பு இருக்கிறது. ஏனெனில், நிகழ்ச்சியுரையிலிருந்து கருத்துரை இயல்பாக எழுகிறது.

"அவர் சொத்து இல்லாதவர். ஆதலால் மோசக் கருத்து உடையவர்" என்று கூறுவது நிகழ்ச்சியுரைக்கும் கருத்துரைக்கும் தொடர்பு இல்லாததாகும், பணம் இல்லாதிருப்பதும் மோசக் கருத்துடன் இருப்பதும் தொடர்பில்லாதவை. ஆகவே, "மோசக் கருத்துடையவர்" என்று கூறப்பட்டது நேர்மையான கருத்துரை அன்று. எனவே, கூறப்பட்ட கருத்துரை, நிகழ்ச்சியுரையுடன் இயல்பான தொடர்புடையதாய் இருக்கவேண்டும், இல்லையேல், கருத்துரையை நேர்மையானதாகக் கருதுவதற்கில்லை.

நேர்மைக் கருத்துரையைத் தெரிவிக்கும் உரிமை மக்கள் எல்லோருக்கும் உண்டு. செய்திப்பத்திரிகைகளில் கையாளப் படும் நடை கடுமையானதாக இருந்தாலும், பிறர்மீதுள்ள தாக்குதல் சிறிது மிகைப்பட்டிருந்தாலும், அது நேர்மைக் கருத்துரையாக இருந்தால் சட்டம் பொறுத்துக்கொள்ளுகிறது. வேறு வகையில், செய்திப் பத்திரிகைகளுக்கென்று தனிச்சலுகை கிடையாது.

மக்களின் பொதுவாழ்வுடன் தொடர்பில்லாத காரியங்களைக் குறித்துக் கருத்துரை தெரிவிக்கப்பட்டு, அதனால் பிறருக்கு அவமதிப்பு விளைந்தால், அது அவதூறேயாகும். மக்களின் பொது நன்மைக்கு அவசியமான காரியங்களைக் குறித்துக் கூறப்படுவதுதான் நேர்மைக் கருத்துரை ஆகலாம் என்பதை நாம் மறந்து விடக்கூடாது.

இவ்வாறு, மக்களின் பொதுநலனைப் பேணும் நோக்கத்தோடு, தனி நலனுக்கு எதிரான அவதூறு நேர்மைக் கருத்துரையில் இருந்தாலும் அதைச் சட்டம் அனுமதிக்கின்றது.

### (3) சிறப்புரிமைத் தறுவாய்கள் (Privileged Occasions)

தங்கள் கடமைகளை நிறைவேற்றுதல், நலன்களைப் பாதுகாத்தல் முதலிய தருணங்களில் ஒரு சிறிதும் அச்சமோ, தயக்கமோ இன்றி மக்கள் தங்களுடைய கருத்துக்களை வெளியிடுதல் இன்றியமையாததாகிறது. அவ்வாறு வெளியிடப்படும் கருத்துக்களில் உள்ள அவதூறுபற்றி அவர்கள்மீது சட்டப்படி நடவடிக்கை எடுக்கலாம் என்று இருந்தால், கடமைகளை அவர்களால் செவ்வனே செய்ய இயலாது போய்விடும். ஆதலால், சில தறுவாய்களில் பொய்யானதும் அவதூறானதுமான செய்திகள் வெளியிடப்படுவதற்கும் சட்டம் பாதுகாப்பளிக்கிறது. இந்தத் தறுவாய்கள் "சிறப்புரிமை பெற்ற தறுவாய்கள்" "Privileged Occasions" என்று கூறப்படும். பொதுநலனைக் கருத்திற்கொண்டு இந்தச் சலுகையைச் சட்டம் குறிப்பிட்ட சூழ்நிலைகளில் வழங்குகிறது.

இவ்வாறு சட்டத்தால் அளிக்கப்படும் சிறப்புரிமைகள் இரு வகைப்படும். அவையாவன :

(1) வரம்பற்ற சிறப்புரிமை (Absolute Privilege)

(2) வரம்புள்ள சிறப்புரிமை (Qualified Privilege)

சட்டத்திற்கு முதலிடம் கொடுத்துச் சட்டத்தின் அடிப்படையில் அரசு இயங்கும் நாடுகளில் அரசின் தலையாய அலுவல்கள் மூன்று வகைப்படுவன. அவை நீதி வழங்குதல், சட்டம் இயற்றல், ஆட்சி நடத்துதல் (நிர்வாகம் செய்தல்) என்பனவாம். இந்த மூன்று வகை அலுவல்களிலும் ஈடுபட்டவர்கள் தங்கள் கடமைகளை எவ்வித அச்சமுமின்றி ஆற்றவேண்டியது நாட்டின் நல்லாட்சிக்கு இன்றியமையாததாகும்.

வழக்குகளை விசாரித்துத் தீர்ப்பளிப்பதிலும், சட்டமன்ற நடவடிக்கைகளிலும், ஆட்சிமுறையிலும் பிற நபர்களின் தகுதி, திறமை, குணம் இவைபற்றிக் கருத்துக்கள் வெளியிடப்பட வேண்டியது கட்டாயமாகிறது. கடமையைச் செய்பவர்களில் ஒரு சிலர் தீய எண்ணத்துடன் பிறரைப் பழித்துக் கூறலாம். அவர்களில் யார் தீய எண்ணத்துடனும், யார் நல்ல எண்ணத்துடனும் பிறர்பழி கூறினார்கள் என்று வழக்கில் விசாரித்து உறுதிப்படுத்தலாம் என்று சட்டம் இருந்தால், கடமையைச் செய்பவர்களுக்குப் பாதுகாப்பு உணர்ச்சியும், கடமையாற்றுவதில் அச்சமின்மையும் இல்லாது போய்விடும். எவரும் தமது கடமையை நேர்மையுடன் நிறைவேற்றமுடியாது. நேர்மையாகக் கடமையை நிறைவேற்ற வேண்டியவர்கள் பிறருடைய குற்றங்களைக் கூற அஞ்சித் தங்கள் கடமையில் தவறுவதற்கு ஏதுவாகும். இதன் பயனாய் நல்லாட்சி முறை இயங்குவதற்கு இடையூறு விளைகிறது. ஆகவே, மேலே கூறப்பட்ட மூன்றுவகைப் பணிகளைச் செய்பவர்கள் தங்கள் கடமையைச் செய்யும்போது எந்த எண்ணத்துடன் பிறர் பழியை வெளியிட்டாலும், அதுபற்றி வழக்குத் தொடர முடியாது எனச் சட்டம் கூறுகிறது.

இவ்வாறு, வழக்குத் தொடரப்படுவதிலிருந்து முழுதுமாக விலக்கப்பட்ட சிறப்புரிமையை "வரம்பற்ற சிறப்புரிமை" (Absolute Privilege) என்று கூறுகிறோம்.

மேலே சொன்ன அளவில் முக்கியத்துவம் இல்லாத சில வேளைகளிலும்கூடப் பிறர்பழி கூறப்படுவதற்குச் சட்டம் இடங் கொடுக்கிறது. தங்கள் நலனைப் பாதுகாப்பதற்கும், மற்றவர்களின் நலனுக்காகவும், தங்கள் கடமையைச் செய்யும்பொழுதும், பிறர்பழியை வெளியிடுவது கட்டாயம் ஆகலாம். ஆனால், தீய எண்ணம் இல்லாதவகையிலேயே அவ்வாறு வெளியிடலாம்

எனச் சட்டம் கூறுகிறது. தீய எண்ணம் இருத்தல் கூடாது என்ற வரம்புக்கு உட்பட்ட சிறப்புரிமையை "வரம்புள்ள சிறப்புரிமை" (Qualified Privilege) என்று கூறுகிறோம்.

## இருவகைச் சிறப்புரிமைகளுக்கும் உள்ள வேறுபாடு

வரம்பற்ற சிறப்புரிமையாற் பாதுகாக்கப்படும் வெளியீடுகளை எதிர்வாதி தீய எண்ணத்துடன் செய்தார் என்று வாதி கூறுவதைச் சட்டம் ஒப்புக்கொள்வதில்லை. ஆகவே, வாதி எந்த வகையிலும் நட்டஈடு பெறமுடியாது. எதிர்வாதிக்கு வரம்புள்ள சிறப்புரிமைதான் இருந்தது என்றால் அவர் தீய எண்ணத்துடன் நடந்துகொண்டார் என்பதை வாதி மெய்ப்பித்து நட்டஈடு பெறலாம். வரம்பற்ற சிறப்புரிமை பொருந்தும் சூழ்நிலைகளில் அவதூறுத் தகவலை வெளியிட்டவர்களின் தீய எண்ணம் பற்றிய கேள்விக்கே இடமில்லை. வரம்புள்ள சிறப்புரிமை பொருந்தும் சூழ்நிலைகளில் அவதூறுத் தகவலை வெளியிட்டவருக்குத் தீய எண்ணம் இருந்ததா என்பது ஆராயப்படலாம். இதுவே இரண்டு வகைச் சிறப்புரிமைகளுக்கும் உள்ள வேறுபாடாகும்.

மற்றுமொரு நுட்பமான வேறுபாடு இந்த இருவகைச் சிறப்புரிமைகளுக்கிடையே உண்டு.

வரம்பற்ற சிறப்புரிமைக் கொள்கை குறிப்பிட்ட தறுவாய்களைத் தழுவி நிற்பதாகும். தறுவாய்கள் சிறப்புரிமை பெற்றவை என்றால், அந்தந்தத் தறுவாய்களில் வெளியிடப்படுபவை அனைத்தும் பாதுகாக்கப்படுகின்றன. வரம்புள்ள சிறப்புரிமைக் கொள்கை வெளியீடுகளையே தழுவி நிற்கிறது. வெளியீடுகளின் தன்மையிலிருந்தே வரம்புள்ள சிறப்புரிமை பொருந்துமா, இல்லையா என்பது உறுதி செய்யப்படுகிறது. வரம்பற்ற சிறப்புரிமை தறுவாயைப் பொறுத்தது; வரம்புள்ள சிறப்புரிமை வெளியீட்டின் தன்மையைப் பொறுத்தது, [Pullman V. Hill & Co. (1891) I Q B. 524]

## (1) வரம்பற்ற சிறப்புரிமை (Absolute Privilege)

மேலே கூறியபடி (i) நீதி வழங்குதல், (ii) சட்டமியற்றல் (iii) ஆட்சி செய்தல் என்ற மூவகையான அரசின் அலுவல்கள் நடைபெறும் தறுவாய்களுக்கு வரம்பற்ற சிறப்புரிமை உண்டு.

### (i) நீதிமன்ற நடவடிக்கைகள் (Judicial Proceedings)

நீதிமன்ற நடுவர், வழக்குரைஞர்கள், சாட்சிகள், வழக்கில் உள்ள வாதி எதிர்வாதிகள், இவர்கள் ஒரு வழக்கைப்பொறுத்து நீதிமன்றத்தில் வெளியிடும் எந்தக் கருத்துப்பற்றியும் அவதூறு

நடவடிக்கை எடுக்கமுடியாது. அவர்கள் தீய எண்ணத்துடன் அக்கருத்துக்களை வெளியிட்டாலும் அதற்கு வரம்பற்ற சிறப்புரிமை உண்டு.

நீதிமன்ற நடுவர் கூறிய சொற்கள் வழக்குக்கு நேரடியான தொடர்பில்லாதனவாகவும் ஆதாரமற்றனவாகவும் இருப்பினும் அவர்மீது வழக்குத் தொடர முடியாது.

உரிமை வழக்குமன்ற நடுவர் (Civil Judges) குற்ற வழக்கு மன்ற நடுவர் (Magistrates) இருவரும் சிறப்புரிமை பெற்றவர்கள்.

வாதி எதிர்வாதிகளின் ஆணைப்பத்திரம் (Affidavits & Pleadings), குற்றச்சாட்டுப் பத்திரம் (Complaint), வாக்குமூலம், இவையனைத்தும் பாதுகாக்கப்படுகின்றன. குற்ற வழக்கில், குற்றம் சாட்டப்பட்டவர் நீதிமன்றத்தில் கூறுபவைகளுக்கும் சிறப்புரிமை உண்டு.

நீதிபதியோ சாட்சியோ நீதிமன்ற நடவடிக்கைகளுடன் தொடர்பில்லாத காரியங்களைக் குறித்துக் கருத்துகள் வெளியிட்டால் அவைகளுக்குச் சிறப்புரிமை கிடையாது.

வழக்குரைஞருக்கும் அவரது கட்சிக்காரருக்கும் இடையே உள்ள கடிதப் போக்குவரத்தில் கூறப்பட்டவைகளும் சிறப்புரிமை பெற்றவை. ஆனால் அச்சிறப்புரிமை வரம்பற்றதா, வரம்புள்ளதா என்பதுபற்றிக் கருத்து வேறுபாடு உண்டு. போலிசு அதிகாரியிடம் கொடுக்கப்படும் மனுவில் கூறப்பட்டவைகளும் சிறப்புரிமை உள்ளவை. [Bapalal. & Co. V. Krishnaswami A. 1. R. 1941 Madras 332]

நீதிமன்ற உத்தரவுப்படி ஒரு குற்றச்சாட்டைப் பற்றிப் புலன் விசாரித்துப் போலிசு அதிகாரி அனுப்பும் அறிக்கைகளுக்கும், நீதிமன்ற அலுவலர்கள் வழக்குகளைப்பற்றி அனுப்பும் அறிக்கைகளுக்கும் இப்பாதுகாப்பு இருக்கிறது.

மக்களுக்குள் முறை செய்தல் அரசின் தலையாய கடமை. நீதி வழங்கும் ஒருவர் எவர் மாட்டும் கண்ணோட்டம் காட்டாமல் அச்சமும் தயக்கமுமின்றி தம் முழு உரிமையுடன், தம மனச் சான்றையே வழிகாட்டியாகக் கொண்டு தம் கடமையை ஆற்ற வேண்டியவர் ஆகிறார். இவ்வாறு நடுவர் தம் கடமையைச் செய்யும் போது அவர் வெளியிடும் கருத்துக்களைக் குறித்து அவர்மீது வழக்குத் தொடரலாம் எனச் சட்டம் இருந்தால் அது நீதிமுறையின் நீர்மைக்கு ஒவ்வாததாகும். முறைமன்ற நடுவர் நீதி வழங்குவதற்கு உதவி செய்பவர்களே வழக்குரைஞர்களும், சான்றுரைப்போர்களும். ஆகவே அவர்களுக்கும் சிறப்புரிமை தரப்படுகிறது.

### (ii) நாடாளுமன்ற நடவடிக்கைகள் (Parliamentary Proceedings)

ஆங்கில நாட்டில் நாடாளுமன்றத்தில் வெளியிடப்படும் கருத்துக்கள் அனைத்தும் வரம்பற்ற சிறப்புரிமை பெற்றவை. ஆனால் மன்ற உறுப்பினர்கள் நாடாளுமன்றத்திற்கு வெளியே பேசும் பேச்சுக்களுக்குச் சிறப்புரிமை இல்லை.

இந்திய அரசமைப்புச் சட்டத்தின்படி, நம் நாட்டு மத்திய சட்டமன்றம், இராச்சியங்களின் சட்டமன்றம், அவைகளின் குழுக்கள், இங்கு நடைபெறும் பேச்சுக்கள், விவாதம், இவை குறித்து உறுப்பினர்கள்மீது எவ்வித வழக்கும் தொடர முடியாது.

மந்திரி, அரசாங்க ஊழியர், தனிப்பட்டவர்கள் இவர்களின் குற்றங்குறைகள், திறமை, தகுதி, நடத்தை முதலியவை குறித்துச் சட்டமன்றத்தில் உறுப்பினர்கள் இழிவுபடப் பேசினாலும், அவ்வாறு பேசியது அந்த உறுப்பினர்களின் தனிப்பகைமையின் அல்லது தீய எண்ணத்தின் காரணமாக இருந்தாலும், அவர்கள் மீது நடவடிக்கை எடுக்க முடியாது.

நாடாளு மன்றத்தில் பேசுபவர்கள் தங்கள் கருத்தை எவ்வித அச்சமும் ஒளிவு மறைவுமின்றி வெளியிட முடிந்தால்தான் நாட்டின் ஆட்சிமுறை சீருடையதாயும் தூய்மையானதாயும் இருக்க முடியும். எனவே, சட்டம் வரம்பற்ற சிறப்புரிமையைச் சட்ட மன்ற நடவடிக்கைளுக்கு அளிக்கின்றது.

சட்டமன்ற நடவடிக்கைகளை வெளியிடும் அரசினர் அறிக்கைகளும் (Official Reports) இத்தகைய சிறப்புரிமை பெற்றவை.

### (iii) அரசின் விவகாரங்கள் குறித்த அறிக்கைகள் (Reports relating to Affairs of State)

அரசின் விவகாரங்கள் குறித்து மந்திரிகளிடையும், மந்திரிகளுக்கும் நாட்டின் தலைவருக்குமிடையும் நடக்கும் செய்திப் போக்கு வரவுகள் அறிக்கைகள் எல்லாம் வரம்பற்ற சிறப்புரிமை பெற்றவை.

மற்ற அரசாங்க அலுவலர்களிடையே அரசின் அலுவல் தொடர்பாக நடைபெறும் கடிதப் போக்குவரத்துகளுக்கு வரம்புள்ள சிறப்புரிமையே உண்டு.

### (2) வரம்புள்ள சிறப்புரிமை (Qualified Privileges)

குறிப்பிட்ட தறுவாய்களில் தோன்றும் அவதூறுகள் தீய நோக்கமின்றி வெளியிடப்பட்டால்மட்டும், வெளியிட்டவர்களுக்

குச் சட்டம் பாதுகாப்பளிக்கிறது எனக் கண்டோம். இந்தத் தறுவாய்கள் சிறப்புரிமை பெற்ற தறுவாய்கள் (Privileged Occasions) எனக் கண்டோம்.

### சிறப்புரிமையுள்ள தறுவாய் எது ?

ஒருவர் தம் நலனைப் பேணும் வகையிலோ அல்லது கடமையை நிறை வேற்றும் முறையிலோ அதற்கு இயைந்த நலனே கடமையோ உள்ள இன்னொருவருக்கு ஒரு செய்தியைத் தெரிவிக்கும் தறுவாயைச் "சிறப்புரிமை உள்ள தறுவாய்" (Privileged Occasion) என்று கூறு கிறோம். இருவருக்கும் உள்ள இணைந்த கடமை சட்டப்படியான அல்லது சமூக வாழ்வையொட்டிய அல்லது ஒழுக்கத்தைச்சார்ந்த கடமையாக இருக்கலாம். அந்த நலன் அல்லது கடமை, செய்தியை வெளியிடுவோர் அதைப் பெறுபவர், இருவருக்கும் பொதுவான தாக, இணைந்ததாக இருக்க வேண்டும்.

"சிறப்புரிமையுள்ள தறுவாய்" என்பதை நீதிபதி லார்டு அட்சின்சன் மேலே கூறியபடி விளக்குகிறார். [Adam V. Ward. (1917) AC. 3(9]

### இணைந்த கடமை அல்லது நலன் உடையவர்கள்

தலைவர் - பணியாளர், வழக்குரைஞர் - கட்சிக்காரர், ஒரே குடும்பத்தில் உள்ளவர்கள், ஒரு சங்கத்தில் உள்ள உறுப்பினர் கள், இவர்களுக்குள் ஒருவர் நலனைப் பேணும் கடமை இன்னொரு வருக்கு இருக்கிறது. அவர்கள் ஒவ்வொருவரின் நலனும் கடமை யும் மற்றவரின் நலன், கடமைகளுடன் இணைந்தனவாகும். தலைவர் நலனைப் பேணுவது பணியாளர் கடமை. தம் கட்சிக்காரரின் நல னைக் காப்பது வழக்குரைஞரின் கடமை. ஒரே குடும்பத்திலுள்ள வர்கள் ஒவ்வொருவரும் அக்குடும்பத்திலுள்ள மற்றவர்களின் நலனைப் பேணும் நிலையில் உள்ளவர்கள். இது போன்றே, நம்மை நம்பி ஒரு தகவலைப்பற்றிக் கேட்பவர்களுக்கு நாம் உண் மையை உரைப்பது நம் நேர்மையான கடமையாகிறது.

இவர்கள் ஒன்றுபட்ட நலனும் கடமையும் உள்ளவர்களாக இருக்கின்றனர் ஆதலால், இவர்களுக்குள் வழங்கப்படும் தகவல் கள் சிறப்புரிமை பெற்றவை ஆகின்றன.

### சிறப்புரிமை பெற்ற செய்திகள் (Privileged Communications)

மேலே கூறப்பட்ட சிறப்புரிமைத் தறுவாய்களில் வழங்கப் பெறும் செய்திகளைச் சிறப்புரிமை பெற்ற செய்திகள் (Privileged Communi cations) என்று கூறுகிறோம்.

“ஒருவர் சட்டமுறையான அல்லது ஒழுக்க முறையான கடமையை ஆற்றும்பொருட்டும், தம் சொந்த நலனைப் பாது காக்கும் பொருட்டும் அந்தந்தச் சந்தர்ப்பங்களுக்கு ஏற்ப, தீய கருத்து ஏதுமின்றி நேர்மையான முறையில் வெளி யிடும் செய்திகள் எல்லாம் சிறப்புரிமை பெற்ற செய்திகள் ஆகின்றன. சமூகத்தில் பொது நலனைக் காப்பதற்கு வாய்ப் பளிக்கும் வகையில் வரம்புக்குட்பட்ட இந்த உரிமையைச் சட்டம் அளிக்கிறது”

இவ்வாறு நீதிபதி பார்க் என்பார் “சிறப்புரிமைச் செய்திகளை” விளக்கியுள்ளார். [Toogood V. Spyring (1834) 1. C. M. & R. 181]

வெளியிடப்பட்ட செய்தி எந்தச் சூழ்நிலையில் எந்த முறையில் கூறப்பட்டது என்பதை ஆராய்ந்து அதன்பின்னரே அது சிறப் புரிமை உடையதா இல்லையா என்பது தீர்மானிக்கப்படுகிறது. அச்செய்தியின் தன்மையைப் பொறுத்தே அதன் சிறப்புரிமை உறுதி செய்யப்படுகிறது.

எந்தெந்தச் சூழ்நிலைகளில் வெளியிடப்படும் செய்திகளுக் குச் சிறப்புரிமை உண்டு என்பதை அறுதியிட்டுக் கூறுதல் இய லாது. இருப்பினும், கீழே கண்ட தறுவாய்களில் கூறப்படும் செய்திகள் சிறப்புரிமை பெற்றவை எனச் சட்டம் கொள்கிறது.

**சிறப்புரிமைச் செய்திகள் வெளியிடத்தக்க தறுவாய்கள் :**

(1) நம் கடமையை நிறைவேற்றுவது

(2) நம் நலன்களைப் பாதுகாப்பது

(3) நம் செயல்கள் நியாயமானவை என்று நிலை நாட்டுவது

(4) பிறர் நலன்களைப் பேணுவது

(5) பொது நன்மையைப் போற்றுவது

இக்காரியங்களுக்காக ஒருவர் ஒன்றுபட்ட கடமை அல்லது நலன் உள்ள இன்னொருவருக்குச் செய்தி தெரிவிக்கும் தறுவாய் கள் வரம்புள்ள சிறப்புரிமைத் தறுவாய்கள் ஆகின்றன.

## (1) நம் கடமையை நிறைவேற்றுவது

பணிமுறையான கடமைகள், சமூக உறவு அல்லது ஒழுக் கத்தை ஒட்டிய கடமைகள் என நம் கடமைகளை இரண்டு வகை களாகப் பிரிக்கலாம்.

### பணிமுறையான கடமை (Official duty)

பொது அதிகாரி ஒருவர் தாம் விசாரித்து அறிந்த காரியத்தைக் குறித்து மேலதிகாரிக்கு அனுப்பும் அறிக்கையில் பிறர் பற்றிய அவதூறு இருக்கலாம். அதிகாரிகளிடையே நடக்கும் கடிதப் போக்குவரத்துக்களில் பிறர் பற்றிய குறிப்பு இருப்பது இயல்பே யாகும். தங்கள் அலுவல் பற்றிய கடமைகளைச் செய்கையில் அரசாங்கப் பணியாளர்கள் பாதுகாக்கப்பட வேண்டியது கட்டாயமாகும். அப்பொழுதுதான் அவர்கள் நேர்மையுடன் பணியாற்றமுடியும். ஆதலால், பொது அலுவலர்கள் தங்கள் கடமையைச் செய்யும் வகையில் வழங்கிக் கொள்ளும் செய்திகளுக்குச் சட்டம் சிறப்புரிமை அளிக்கிறது.

### சமூக உறவு அல்லது ஒழுக்க முறையான கடமை (Social or Moral duty)

ஒருவருடைய நற்பண்போ அல்லது தீய குணமோ நாட்டில் உள்ள ஒவ்வொருவருக்கும் உடனே தெரிவதில்லை. ஒருவருடைய நடத்தை குறித்து இன்னொருவரிடம் கேட்டுத்தான் அதை நாம் தெரிந்துகொள்ளவேண்டியிருக்கிறது. மக்கள் ஒவ்வொருவரும் பிறருடைய தீய நடத்தையைப்பற்றி நேரடியாகப் பழகியே தெரிந்துகொள்ளவேண்டும் எனச் சட்டம் இருந்தால் தீயோர்களின் தீச்செயல்கள் பெருகுவதற்கு வாய்ப்பளிப்பதாகும்.

என்னிடம் வேலை செய்த ஒரு பணியாளை என் நண்பர் தம்மிடம் வைத்துக்கொள்ள நினைக்கிறார். அதற்கு முன் அப்பணியாளின் நடத்தை பற்றி நண்பர் தெரிந்துகொள்ள விரும்புவது இயல்பேயாகும். எனவே, அது குறித்து என்னைக் கேட்கிறார். அந்த வேலையாள் எனது பொருளைத் திருடியதால் நான் அவனை வேலையிலிருந்து விலக்கியிருந்தேன் என வைத்துக்கொள்வோம். இப்பொழுது இந்தத் தகவலை என் நண்பருக்குத் தெரிவிப்பதா இல்லையா என்பது கேள்வி. நண்பருக்கு உண்மையைத் தெரிவிக்க வேண்டிய கடமை எனக்கிருக்கிறது. அது சட்டப்படியான கடமை அன்று. ஆனால் அது சமூக உறவையொட்டிய, நேர்மையான கடமை என்பதில் ஐயம் இல்லை. நான் வேலையாளின் நடத்தையைப் பற்றி நண்பருக்குத் தெரிவிக்கவில்லையெனில் நண்பரிடமும் அவன் திருடலாம். ஆதலால் வேலையாளின் திருட்டுத்தனம் பற்றி அவருக்குத் தெரிவிக்கிறேன். இதை அவதூறு எனக் கூறுதல் தகுமா? தகாது. நான் அவதூறை வெளியிட்ட செயல் என் சமூகக் கடமையில் எழுந்ததாகும். நண்பரின் நலனைப் பாதுகாக்கும் நேர்மைக் கடன் (Moral duty) எனக்கு இருக்கிறது. ஆதலால்,

நான் நண்பருக்கு வேலையாள்பற்றிய தகவலைத் தெரிவித்தது சிறப்புரிமை பெற்ற தறுவாய் எனச் சட்டம் கொள்கிறது.

அரசாங்கத்திலோ, வாணிப நிலையங்களிலோ உள்ள முக்கிய மான பதவிகளுக்கு ஒருவரை நியமனம் செய்வதற்கு முன் அவரது நடத்தைபற்றி அவரை நன்கு தெரிந்தவர்களிடம் கேட்கப்படுவது உண்டு. வேலைக்கு விண்ணப்பஞ்செய்தவரின் தகுதி பற்றி உண்மையைக் கூறுவது அவரைப்பற்றித் தெரிந்தவரின் நேர்மையான கடமையாகும். இதனுல், மனுதாரருக்கு அவதூறு விளைந்தது என்று சொல்லமுடியாது.

### (2) நம் நலனைப் பாதுகாப்பது

நம்முடைய நலனைப் பாதுகாப்பதற்கென வெளியிடும் செய்திகள் சிறப்புரிமை பெற்றவை.

ஒருவர் ஒரு பேசும்படத்தைப்பற்றிக் குறைகூறி வானெலியில் கருத்துரை பகன்ருர். அவ்வாறு பகன்றவர் மக்களின் இயல்பை அறியாதவர் என்றும், பொழுது போக்குக் காட்சிகளில் மக்கள் விரும்பும் கூறுகள் பற்றித் தெரியாதவர் என்றும், அறியாமை மிகுந்த அவரை இனியும் படங்களைப்பற்றி விளக்கஞ் செய்யவிட வேண்டாம் என்றும் கூறி, அந்தப் படத்தை ஆக்கியவர்கள் வானெலி நிலையத்திற்கு எழுதினர். படத்தயாரிப்பாளர்களின் நலனைப் பாதுகாப்பதற்கென அவ்வாறு எழுதப்பட்டதால் அது சிறப்புரிமை பெற்றது எனத் தீர்ப்புச் செய்யப்பட்டது. [Turner V. Metro Goldwyn Mayor Pictures Ltd. (1950) I AER 449]

### (3) நம் செயல்கள் நியாயமானவை என நிலைநாட்டுவது

நாம் செய்த செயல் இன்னெருவரால் குறை கூறப்படுகிறது. அச்செயல் நியாயமானது என்று மெய்ப்பிக்கும் கடமை நமக்கு இருக்கும்பொழுது, அதற்கென நாம் கூறும் தகவலில் பிறர்பற்றிய அவதூறு இருக்கலாம். நாம் செய்தது நியாயமானது என்று நிலைநாட்டும் கடமை சிறப்புரிமை பெற்றதாகும். ஆனுல் நாம் வெளியிடும் தகவல் குறை கூறியவர்மீது வஞ்சம் தீர்க்கும் முறையிலோ, திருப்பிக் கூறும் பழிப்புரையாகவோ இருத்தல் கூடாது.

### (4) பிறர் நலன்களைப் பேணுவதற்குத் தகவல் அறிவித்தல்

நம்முடைய உற்ருர் உறவினர்களுக்கோ அல்லது பிறருக்கோ ஏற்படவிருக்கும் கெடுதல்களைத் தவிர்க்கும் நோக்கத்துடன் அல்லது அவர்களின் நலன்களைப் பேணும் நோக்கத்துடன் நாம் பிறர்பற்றிய தகவல்களைக் கூறலாம்.

திருமணங்கள் உறுதி செய்யப்படுவதற்கு முன் மணமகனைப் பற்றி மணமகள் வீட்டாரும், மணமகளைப்பற்றி மணமகன் வீட்டாரும் பிறரிடம் கேட்டே தெரிந்துகொள்கின்றனர். இதன் பொருட்டு எழுகின்ற தகவல்களில் அவதூறான செய்திகள் இருக்கலாம். இருப்பினும், அவை சிறப்புரிமை பெற்றவை.

நம்மிடமிருந்து விலக்கப்பட்ட வேலையாளின் நாணயமின்மை குறித்து அவனை வேலைக்கு வைக்கவிரும்பும் ஒருவருக்கு நாம் தெரிவிக்கலாம். ஒருவர் இன்னொருவரை நம்பி ஏமாறப்போகிறார் என நமக்குத் தெரிந்தால் ஏமாற இருப்பவரை எச்சரித்து நாம் தகவல் கூறலாம்.

நம் வீட்டில் தங்கியிருக்கும் விருந்தினரிடம் நம் வேலையாளின் தீய குணங்களைச் சொல்லி எச்சரிக்கலாம். அப்பொழுதுதான் வேலையாளிடம் அவர் கவனமாக இருந்துகொள்ள முடியும். ஒரு வேலையாளைப்பற்றி மற்ற வேலையாட்களுக்கும் எச்சரிக்கை யளிப்பதும் இத்தன்மையதே.

வழக்குரைஞர் தம் கட்சிக்காரரின் நலனைப் பாதுகாப்பவர். அதற்கென அவர் தம் கட்சிக்காரருக்குத் தெரிவிக்கும் செய்திகள் சிறப்புரிமை பெற்றவை.

வணிகர்கள் தங்களுக்குள் சங்கம் வைத்துக்கொண்டு பிறருடைய நாணயத்தைப்பற்றியும் பணநிலைபற்றியும் தெரிந்துகொள்ளலாம். சங்கத்தின் உறுப்பினர்களான வணிகர்களுக்குள் பரிமாறிக்கொள்ளும் பிறர் பற்றிய தகவல்கள் சிறப்புரிமை பெற்றவை. [The London Association for Protection of Trade V. Green land. (1916) 2 AC 15]

### (5) பொதுநலனைப் போற்றும் தகவல்கள்

பொதுப் பணியாளர்களின் நெறிதவறிய நடத்தை குறித்து மேலதிகாரிகளுக்குத் தெரிவிப்பது, குற்றம் புரிந்தவர்கள் பற்றிப் போலீசு அதிகாரிகளுக்கு அறிவிப்பது, தேர்தலில் போட்டியிடுபவர்களின் தகுதிபற்றிப் பொது மக்களுக்குக் கூறுவது இவையெல்லாம் பொதுநலனைக் குறித்து வெளியிடப்படுவதால் சிறப்புரிமை பெற்றவை ஆகின்றன.

பொது அதிகாரிகளைப் பற்றி அனுப்பப்படும் செய்திகள் அவர்களைத் திருத்தும் அல்லது தண்டிக்கும் அதிகாரம் உள்ளவர்களுக்கே அனுப்பப்படுதல் வேண்டும்; தொடர்பு இல்லாத பிறருக்குத் தெரிவித்தல் கூடாது.

வரம்புள்ள சிறப்புரிமையின் முக்கிய மூன்று கூறுகள்

"சிறப்புரிமையுள்ள தறுவாய்" என்றால் எது என்று முன்னர்க் கண்டோம். அந்தத் தறுவாய்களில் வெளியிடப்படும் செய்திகளே பாதுகாக்கப்படுகின்றன. வெளியிடப்படும் செய்தி தறுவாய்க்குத் தகுந்ததாக, பொருத்தமானதாகத், தொடர்புள்ளதாக இருத்தல்வேண்டும். மேலும், நேர்மையான நோக்கத்துடன், அஃதாவது, தீய நோக்கம் ஏதுமின்றிச் செய்தி வெளியிடப்பட்டிருக்கவேண்டும்.

சிறப்புரிமையுள்ள தறுவாய், தறுவாய்க்குத் தொடர்புள்ள செய்தி, தீய நோக்கமின்மை இம்மூன்று கூறுகளும் இருந்தால்தான் "வரம்புள்ள சிறப்புரிமை"க் கொள்கை பொருந்துவதாகும்.

கடன் கொடுத்தவர் கடனைத் திருப்பிச் செலுத்துமாறு கேட்டுக் கடன் வாங்கியவருக்குத் தம்முடைய வழக்குரைஞர் மூலம் ஒரு குறிப்பு அனுப்புகிறார். கடன் பெற்றவர் இதற்கு அனுப்பும் பதிலை அந்த வழக்குரைஞருக்கே அனுப்பலாம். இந்தப் பதிலில், குறிப்பு அனுப்பியவர் கடன் கொடுத்ததாகச் சொல்லியிருப்பதைப் பொய் என்றோ, மோசக் கருத்துடன் குறிப்பு அனுப்பப்பட்டிருக்கிறது என்றோ, கூறலாம். ஆனால் குறிப்பு அனுப்பியவரைப் பற்றி, தொடர்பில்லாத வேறு காரியங்களைக் குறித்து அவதூறாகக் கூறிப் பதில் அனுப்பினால் அது சிறப்புரிமை பெறுவதில்லை. எனவே, கூறப்பட்ட செய்தி சிறப்புரிமையுள்ள தறுவாய்க்குச் சம்பந்தமான காரியங்கள் பற்றி மட்டுமே இருக்கவேண்டும்.

நாம் யாருக்குச் செய்தியை அனுப்புகிறோமோ அவருக்கு மட்டுமே தெரியும்படி செய்தி அனுப்பப்படவேண்டும். அதைப் பிறரும் அறியும்படி அஞ்சல் அட்டையிலோ, தந்தி மூலமாகவோ தெரிவித்தால் அது சிறப்புரிமையை மீறும் செயலாகும். இதற்குச் சில விதிவிலக்குகள் உண்டு.

அவசரமோ அவசியமோ ஏற்படும்பொழுதும், இயல்பான நடைமுறையில் உள்ள வழக்கப்படியும், ஒரு செய்தி அனுப்பப் படும்பொழுது அதை அச்சிட்டோ, எழுத்தாளர் உதவியுடன் படி எடுத்தோ, தந்தி மூலமாகவோ அனுப்பலாம்.

பெரிய வணிக நிறுவனங்களிலும், அரசாங்க அலுவலகங்களிலும் கடிதப் போக்குவரத்துக்களைத் தட்டெழுத்துப் படிவங்கள் எடுத்தே நடத்துகின்றனர். எழுத்தர்களே பெரிய நிறுவனங்களின் கடிதப் போக்குவரத்துக்களைக் கவனிக்கின்றனர். இவ்வாறு எழுத்தர்களுக்குத் தெரியப் படுத்துவதால் சிறப்புரிமை மறைந்துவிடுவதில்லை.

சில சமயங்களில் ஒருவரிடம் நாம் தகவலைக் கூறும்பொழுது தொடர்பு இல்லாதவர்கள் தற்செயலாக அருகில் நின்றுகொண் டிருக்கலாம். அவர்களுக்கு நாம் வெளியிடும் தகவல் தெரியலாம். இதனால் சிறப்புரிமை மீறப்பட்டது என்று சொல்லமுடியாது.

அவதூறான செய்தியை வெளியிட்ட தறுவாய் மேலே கூறப் பட்ட எந்த வகையிலாவது சிறப்புரிமை பெற்றது என்பதை எதிர்வாதி மெய்ப்பித்துவிட்டாலுங்கூட, எதிர்வாதி செய்தியை வெளியிட்டது தீய நோக்கத்தால்தான் என்பதை வாதி நிலை நாட்டலாம். தீயநோக்கம் இருந்தது என்பதை மெய்ப்பிக்கும் பொறுப்பு வாதியையே சாரும்.

### தீய நோக்கம் (Malice) என்பது என்ன ?

"தீய நோக்கம்" என்ற சொற்றொடர் நேர்மையான நோக்கம் இல்லாதிருத்தலையே குறிப்பதாகும். வாதியின்மேல் பகைமையோ, வெறுப்போ, வஞ்சந்தீர்க்கும் எண்ணமோ அவதூறினை வெளி யிட்ட எதிர்வாதிக்கு இருந்தால்தான், அது தீய நோக்கமாகும் எனக் கொள்வது தவறு.

வரம்புள்ள சிறப்புரிமைத் தறுவாய்கள் இல்லாத வேளை களில் அவதூறு வெளியிடப்பட்டால் அது தீயநோக்கத்துடன் வெளியிடப்பட்டதாகவே சட்டம் கருதுகிறது. அவ்வாறே சிறப் புரிமைத் தறுவாய்க்குத் தொடர்பில்லாத அல்லது பொருந்தாத காரியங்கள் குறித்து அவதூறு வெளியிடப்படுதலும் தீய நோக்கத்துடன்தான் என்றே கருதப்படுகிறது. இவ்வாறு, நேர்மையான நோக்கம் இல்லாத வெளியீடுகளைத் தீய நோக்க முடைய வெளியீடுகள் எனச் சட்டம் கொள்கிறது.

எனவே, வாதிக்கும் எதிர்வாதிக்கும் முன் பகைமை இருந் ததா என்பதுபற்றிச் சட்டம் பார்ப்பது இல்லை. எதிர்வாதியின் செயல் நேர்மையான நோக்கத்துடன் செய்யப்பட்டதா என்பதே கவனிக்கப்படுகிறது. நேர்மை நோக்கம் இல்லை எனில் தீய நோக்கம் இருப்பதாக உறுதி செய்யப்படுகிறது. [Turner. V. Metro Goldwyn Mayor Pictures Ltd (1950) I. A. E. R. 449]

தம் கடமையைச் செய்வது, பிறர் நலன், தம்நலன், பொது நலன் இவைகளைப் பேணுவது என்ற நோக்கம் ஏதுமின்றி வெளியிடப்படும் அவதூறு "தீயநோக்குடன்" வெளியிடப்படுவ தாகும் என்று சட்டம் கருதுகிறது.

வெளியீட்டில் கையாளப்பட்ட சொற்கள், நீதிமன்றத்தில் எதிர்வாதி வாக்குமூலம் கொடுக்கும் விதம், வெளியிடுவதில் எதிர்வாதி கொண்டுள்ள தகாத நோக்கம், இன்னும் பல சூழ்

நிலைகளிலிருந்து எதிர்வாதி அவதூறை வெளியிட்டது சட்டம் ஏற்கும் தக்க நோக்கத்துடன் அன்று என்பது உறுதிசெய்யப் படுகிறது. தக்க நோக்கம் எதிர்வாதிக்கு இல்லையெனில் "தீய நோக்கம்" இருந்தது என்று உறுதி செய்யப்படுகிறது.

"தீய நோக்கம்" (Malice) என்று சட்டத்தில் கூறப்படுவது வன்மம், பகைமை, வஞ்சம் தீர்த்தல் போன்ற எண்ணங்களைக் குறிப்பது அன்று; "நேர்மை நோக்கம் இல்லமையையே" அது குறிக் கின்றது.

### வரம்புள்ள சிறப்புரிமை பெற்ற அறிக்கைகள் அல்லது பிரசுரங்கள்

நீதி மன்றங்களிலும் சட்ட மன்றங்களிலும் நிகழும் நடவடிக் கைகள் அனைத்தும் வரம்பற்ற உரிமையுள்ளவை எனக் கூறப் பட்டது. அந்த நடவடிக்கைகளின் விவரங்களைப் பொது மக்கள் அறிவது நாட்டின் நல்லாட்சிக்கு இன்றியமையாததாகும். ஆத லால், அச் செய்திகளைப் பிறர் வெளியிடுவதையும் சட்டம் பாது காக்கிறது.

வரம்பற்ற சிறப்புரிமையுடன் அரசினரே அந்தச் செய்திகளை வெளியிடலாம். பிறர் அவைகளை வெளியிடுவதற்கு அளிக்கப் படும் சிறப்புரிமை வரம்பிற்கு உட்பட்டதேயாகும். அஃதாவது, பத்திரிகைகள் அல்லது மற்றவர்கள் அச்செய்திகளை எவ்வகை யான தீய நோக்கமுமின்றி வெளியிடவேண்டும்.

வரம்புள்ள சிறப்புரிமை பெற்ற அறிக்கைகள் எவை எனக் காண்போம் :—

(1) நீதிமன்ற நடவடிக்கைகள் பற்றியவை.

(2) சட்டமன்ற நடவடிக்கைகள் பற்றியவை.

(3) பொதுக்கூட்ட நடவடிக்கைகள் பற்றியவை.

### (1) நீதி மன்ற நடவடிக்கைகள் பற்றிய அறிக்கைகள்

பொது மக்கள் அனைவரும் காணக்கூடியவகையிலேயே நீதி மன்றத்தில் வழக்கு விசாரணைகள் நடைபெறுகின்றன. அவ் வாறு நடைபெறுவதில்தான் நீதிமுறையின் சிறப்பு அடங்கி யிருக்கிறது. ஆதலால், அந்த நடவடிக்கைகளை நீதி மன்றத் திற்கு நேரில் வந்து அறிய முடியாதவர்களுக்கும் தெரியும்படி வெளியிடுவது பொது நன்மைக்கு உகந்ததாகும்.

நீதிபதியின் தனி அறையில் நிகழும் வழக்குகளின் விபரங் களையோ, இழிவுணர்ச்சியூட்டும் செய்திகளையோ வழக்கில் ஈடு படாதவர்கள், மன்றத்தில் வேடிக்கை பார்ப்பவர்கள் இவர்கள் கூறும் செய்திகளையோ வெளியிடுவது சிறப்புரிமை பெற்றதன்று.

நடவடிக்கைபற்றிய அறிக்கைகள் சரியானதாகவும், நேர்மையானதாகவும் இருக்கவேண்டும். ஒரு சில பகுதிகளை மட்டும் பொருத்தமில்லாத தலைப்பிலே வெளியிட்டு மக்கள் மனதில் தவறான கருத்துக்கள் தோன்றும் வகையில் வெளியிடு இருக்கக் கூடாது.

(2) சட்டமன்ற நடவடிக்கைகள்

சட்டமன்ற நடவடிக்கைகளைச் சரியான முறையில் வெளியிடுவது சிறப்புரிமை பெற்றது. சட்டமன்றத் தலைவர் ஓர் உறுப்பினரின் பேச்சையோ, அல்லது பேச்சின் ஒரு பகுதியையோ வெளியிடுவது கூடாது என உத்திர விட்டால் அதை வெளியிடுவது கூடாது.

(3) பொதுக்கூட்ட நடவடிக்கைகள் பற்றிய அறிக்கைகள்

சட்டமன்ற, நீதிமன்ற நடவடிக்கைகளைப் போல், பொதுக்கூட்ட நடவடிக்கைகள் வெளியிடுவது பொதுநலனுக்கு உகந்தது என்று சொல்லுவதற்கில்லை. பேச்சுரிமையுள்ள நாடுகளில் பொதுக்கூட்டங்கள் பல நடைபெறுகின்றன. அவற்றில் அவதூறான செய்திகள் வெளியிடப்படலாம். அவைகளை மீண்டும் வெளியிடுவது அவதூறு மேலும் பரவுவதற்கு வழி செய்வதாகும். ஆதலால், பொதுக்கூட்ட நடவடிக்கைகளை வெளியிடுவதில் சில கட்டுப்பாடுகளைச் சட்டம் விதிக்கிறது.

வெளிப்படுத்தும் செய்திகள் பொது மக்களுக்குத் தெரிய வேண்டியவையாகவும், பொது நலனுக்கு உகந்தவையாகவும் இருக்கவேண்டும். கீழ்மை உணர்ச்சியைத் தோற்றுவிக்கும் செய்திகளை வெளியிடுதல் கூடாது. சட்டத்தால் தடை செய்யப்பட்ட செய்திகளையும் வெளியிடக் கூடாது.

1952 ஆம் வருடத்திய அவதூறுச் சட்டத்தின் வாயிலாக ஆங்கில நாட்டில் பொதுக்கூட்ட நடவடிக்கைகளை வெளியிடுவதற்கென விதிமுறைகள் ஆக்கப்பட்டிருக்கின்றன. நம் நாட்டில் அதுபோன்ற சட்டம் இல்லை.

## (உ) அவதூறுக்கான நட்ட ஈடு

*அவதூறுக்கான நட்டஈடு - பொது நட்டஈடு - தனிப்பட்ட நட்டஈடு.*

எல்லோரும் புகழுடன் வாழ்பவர்கள் என்ற ஆரம்பக் கொள்கையின் அடிப்படையில் எவருக்கு அவதூறு விளைந்ததோ, அவருடைய புகழுக்கு இழுக்கு நேர்ந்ததாகச் சட்டம் கருதுகிறது. அதற்கான நட்ட ஈட்டை அவதூறு செய்தவர் கொடுக்கவேண்

டியவராகிறார். ஆதலால், தமக்கு அவதூறு விளைந்தது என்பதை மட்டும் வாதி நிலைநாட்டினால் போதுமானது. நட்ட ஈட்டின் அளவை நீதிமன்றமே சூழ்நிலைகளுக்கு ஏற்பத் தீர்மானிக்கிறது. இது பொது நட்டஈடு (General damages) எனப்படும்.

அவதூறின் காரணமாகத் தமக்குக் குறிப்பிட்ட தனி நட்டம் விளைந்தது என்றால் அதை வாதி மெய்ப்பிக்கவேண்டும். தமக்கு நேர்ந்த அவதூறின் விளைவாக ஒருவர் தமது வேலையை இழந்திருக்கலாம், அல்லது தமது வாணிபத்தில் நட்டம் அடைந்திருக்கலாம். இவ்வாறு குறிப்பிட்ட நட்டம் அடைந்தவர்கள் அதற்கான தனிப்பட்ட நட்ட ஈட்டையும் (Special damages) பெறுவதற்கு உரிமையுள்ளவர்களாகின்றனர். தனிப்பட்ட நட்டத்தை நிலைநாட்டும் பொறுப்பு வாதியையே சாரும்.

அவதூறில் கையாளப்பட்ட வாசகம், வெளியீட்டின் தன்மை, பாதிக்கப்பட்டவர்களின் சமூக மதிப்பு, எதிர்வாதியின் தீய நோக்கம் இவை போன்ற பல கூறுகளையும் சீர்தூக்கி ஆராய்ந்தே நட்ட ஈட்டுத்தொகை உறுதி செய்யப்படுகிறது. ஆயிரக்கணக்கில் விற்கும் செய்தித்தாளில் வெளியாகும் அவதூறின் தன்மைக்கும், ஒரு சிலருக்கு மட்டும் தெரிவிக்கப்படும் அவதூறுக்கும் வேறுபாடு உண்டு. முன்னதில் விளையும் கேடு அதிகம். ஆகவே, அதற்கு அதிக நட்டஈடு உண்டு. வாதியின் தொழில் அல்லது வாணிபம் இவற்றைப் பாதிக்கும் முறையிலோ, வாதி கொடுங்குற்றங்கள் செய்தவர் என்று பிறர் எண்ணும் வகையிலோ அவதூறு இருந்தால் அதற்கு அதிகமான நட்டஈடு அளிக்கப்படுகிறது.

வாதியின் புகழ் சமூகத்தில் எப்படியிருக்கிறது என்பதுபற்றி நீதிமன்றம் அறிந்து கொள்ளவேண்டியிருக்கிறது. ஆதலால், பலராலும் மிகவும் கீழ்த்தரமாகக் கருதப்படும் ஒருவர் தமக்கு அவதூறு விளைந்தது எனக் கொண்டுவரும் வழக்கில், விளைந்த அவதூறு மெய்ப்பிக்கப்பட்டாலும் அற்பமான நட்ட ஈட்டுத் தொகையே அளிக்கப்படும். எனவே, வசைபட வாழ்பவர்கள் தங்கள் இசை கெட்டுவிட்டது என்று சொல்வதற்கில்லை.

வாதி தம்மைப்பற்றி அவதூறு விளைவிக்க இருப்பவர்மேல் வழக்கிட்டு அவர் அதைச் செய்யாதிருக்கும்படி தடை உத்தரவும் (Injunction) பெறலாம்.

தாம் செய்த அவதூறு குறித்து எதிர்வாதி மன்னிப்புக் கோருதலை, செய்யப்பட்ட அவதூறுக்குக் கழுவாயாகச் சட்டம் ஏற்பதில்லை. இதைக் கவனத்திற் கொண்டு நட்ட ஈட்டுப்பணத்தின் அளவு குறைக்கப்படலாம். ஆங்கில நாட்டில் மன்னிப்புக்

கோருதல் சில சூழ்நிலைகளில் அவதூறுக் குற்றத்திற்குக் கழுவாயாக ஏற்றுக்கொள்ள வகை செய்யும் சட்டம் இயற்றப்பட்டிருக்கிறது. நம் நாட்டில் அது போன்ற சட்டம் இல்லை.

மக்களின் பொது வாழ்வு தூய்மையுடன் துலங்க வேண்டும். ஒவ்வொருவருக்கும் தம் புகழைப் போற்றி வாழும் உரிமை இருக்க வேண்டும். இந்த நன்னோக்கத்துடன் தகுந்த காரணமின்றிப், பிறர் புகழுக்கு இழுக்கு ஏற்படுத்துவதைச் சட்டம் தடை செய்கிறது.

நாம் எல்லோரும் நல்ல பெயருடன் வாழவே விரும்புகிறோம். ஒருவரின் நற்பெயருக்கு இழுக்கு விளைவிப்பது, அவருடைய பொருளையோ, சொத்தையோ பறிப்பதை விடக் கொடுமையான தீங்காகும். பொன்னையும் பொருளையும் இழந்தவர் மீண்டும் அதை ஈட்டிக்கொள்ளலாம். ஆனால், மானம் அழிய நேர்ந்தால் சான்றோர் உயிரையும் விட்டுவிடுவர். "இளிவரின் வாழாத மானம் உடையாரின்" இயல்பைப் போற்றும் முறையிலேயே சட்டம், அவமானம் விளைவிக்கும் அவதூறுச் செயலைத் தண்டிக்ககத் தக்க குற்றம் எனவும், நட்டஈடளிக்கத் தக்க தீங்கு எனவும் விதிக்கிறது.

---

# பகுதி 9

## முறையற்ற சட்ட நடவடிக்கைகள்
## (Wrongful Process of law)

### (அ) தீயநோக்குடன் குற்றவழக்கிடல்
### (Malicious Prosecutions)

வழக்கில் மெய்ப்பிக்கப்படவேண்டிய கூறுகள்:- (1) குற்றவழக்கிட்டதற்கு எதிர் வாதியே பொறுப்பாயிருந்திருக்கவேண்டும், (2) நியாயமான ஒப்பத் தகுந்த காரணங்களின்றிக் குற்ற வழக்கு இடப்பட்டிருக்கவேண்டும், (3) தீயநோக்குடன் குற்றம் சாட்டியிருக்கவேண்டும், (4) குற்ற வழக்கு வாதிக்கு அநுகூலமாக முடிந்திருக்கவேண்டும், (5) வாதிக்கு நட்டம் விளைந்திருக்கவேண்டும் - நட்ட ஈடு கோரி வழக்கிடுவோர் கவனிக்க வேண்டியது.

பிறர் கேடு சூழ்பவர்கள் பல வழிகளைக் கையாளுகின்றனர் பிறர் புகழுக்கு இழுக்குநேரும் வகையில் அவதூறு இழைக்கின்றனர்; உடலைத் தாக்கி ஊறு விளைக்கின்றனர்; பிறர் சொத்தை வல்லந்தமாகக் கைப்பற்றித் தம் வயப்படுத்துகின்றனர். இவையெல்லாம் நேரடியாகச் செய்யப்படும் தீங்குகள் ஆகின்றன. சிலர் சட்டத்தின் உதவி கொண்டே பிறருக்குத் தீங்கு இழைக்க முயலுகின்றனர். நீதி நிலைப்பதற்குக் கருவியாகச் சட்டம் இயங்குகிறது. அச்சட்டத்தையே தவறான நோக்கத்திற்குப் பயன்படுத்தி அநீதி இழைக்க முற்படுகின்றனர்.

தம் பகைவருக்குத் தண்டனை கிடைக்க வேண்டும் என்ற தீய நோக்கத்துடன் அவர்மீது பொய்யாகக் குற்றம் சாட்டி ஒருவர் வழக்கிடலாம். தகுந்த ஆதாரமின்றி ஒருவர்மீது குற்றம் சுமத்தப்படலாம். இவ்வழக்குகளில் நீதி தவறி, குற்றமற்றவர்கள் தண்டனை பெற்றால், அவர்களின் புகழுக்கும் தன்னுரிமைக்கும் பெருங்கேடு விளைகிறது. தண்டனையின்றி விடுதலை பெற்றாலும், குற்றம் சாட்டப்பட்டவருக்கு மனவேதனையும், பொருள் நட்டமும் விளைகின்றன. எனவே, தீயெண்ணத்தால், பொய்யாகவோ, தகுந்த காரணம் ஏதுமின்றியோ, குற்றம் சாட்டி ஒருவர்மீது மற்றொருவர் வழக்கிடுவதைச் சட்டம் தடை செய்கிறது. இவ்வாறு வழக்கிடுவது முறையற்ற சட்ட நடவடிக்கை (Wrongful Process of law) ஆகும். எனவே, அதைத் தீங்கான செயல் எனச் சட்டம் விதிக்கிறது.

தீய நோக்கத்துடன் பொய்யாகவோ, ஆதாரமின்றியோ குற்ற வழக்கிடுதல், "தீயநோக்குடன் குற்றவழக்கிடல்" (Malicious Prosecution)என்ற தீங்காகும்.

இப்படி வழக்கிட்டவரிடமிருந்து, குற்றம் சாட்டப்பட்டவர் நட்ட ஈடு பெறுவதற்குச் சட்டம் வகை செய்கிறது.

ஆதாரம் ஏதுமின்றிக் குற்றம் சாட்டப்பட்டவருக்குத்தான் நட்டஈடு உண்டு. குற்றம் சாட்டப்பட்டவருக்கு வழக்கில் தண்டனை விதிக்கப்பட்டால், அதை ஆதாரமற்ற குற்றச்சாட்டு என்று கொள்ள முடியாது. எனவே, குற்றம் சாட்டப்பட்டவர் வழக்கில் விடுதலை அடையவேண்டும். விடுதலை பெற்றவர்கள் அனைவரும் குற்றமற்றவர்கள் என்று கூறுவதற்கில்லை. தகுந்த காரணமின்றி அவர்மீது குற்றம் சாட்டப்பட்டதா என்பது அடுத்து ஆராய வேண்டியதாகும். தீய நோக்கத்தோடு வழக்கிடப்பட்டதா என்பதும் கவனிக்கப்படுகிறது. இத்தனை கூறுகளையும் ஆய்ந்த பின்னரே, விடுதலை பெற்றவர் குற்றம் சாட்டி வழக்கிட்டவரிடமிருந்து நட்டஈடு பெறத் தகுதி உடையவரா என்பதைச் சட்டம் உறுதி செய்கிறது.

### வழக்கில் மெய்ப்பிக்கப்படவேண்டிய கூறுகள்

நட்டஈடு கோரும் வழக்கில், குற்ற வழக்கில் விடுதலை அடைந்தவர் வாதியாகவும் குற்ற வழக்கிட்டவர் எதிர்வாதியாகவும் இருக்கின்றனர். இவ்வழக்கில் வாதி மெய்ப்பிக்க வேண்டிய கூறுகளாவன :—

(1) வாதியின் மேல் தொடரப்பட்ட குற்ற வழக்கிற்கு எதிர்வாதியே பொறுப்பாயிருந்தார் என்பது ;

(2) நியாயமானதும், ஒப்பத்தகுந்ததுமான காரணமின்றிக் குற்ற வழக்கு இடப்பட்டது என்பது ;

(3) தீய நோக்கத்துடன் எதிர்வாதி வழக்கிட்டார் என்பது ;

(4) குற்ற வழக்கு வாதிக்கு அனுகூலமாக முடிந்தது என்பது ;

(5) வாதிக்கு நட்டம் விளைந்தது என்பது.

இந்த ஐந்து கூறுகளையும் விரிவாக இனிக் காண்போம்.

### (1) குற்ற வழக்கிட்டதற்கு எதிர்வாதியே பொறுப்பாயிருந்திருக்க வேண்டும்

குற்ற நீதிமன்றத்தில் நேரடியாகவே குற்ற முறையீட்டை (Complaint) எதிர்வாதி பதிவு செய்திருந்தால், அவர்தாம் வழக்கிற்குப் பொறுப்பானவர் என்று கொள்வது எளிதாகிவிடுகிறது.

பொதுவாகக் குற்ற வழக்குகளை அரசின் சார்பில் போலிசார் தாம் நடத்துகின்றனர். வாதியே குற்றம் செய்தார் என்று போலிசாருக்குத் தகவல் கொடுத்ததோ, போலிசாரை வாதிமீது

வழக்கிடும்படி செய்ததோ, எதிர்வாதி எனில் வழக்கிட்டதற்குப் பொறுப்பு அவருடையதேயாகும். குற்றம் செய்தது இன்னார் என்று தமக்குள்ள நியாயமான சந்தேகத்தைப் போலிசாரிடம் தெரிவித்ததோடு மட்டும் ஒருவர் நின்றுவிட்டார் எனில், அவரை வழக்கிட்டதற்குப் பொறுப்பானவர் என்று கூறமுடியாது. சாட்சி கூறியவர்கள் அனைவரையும் வழக்கிற்குப் பொறுப்பானவர்கள் என்று கூறுவதும் சரியன்று. தெளிவாக ஒருவர்மீது குற்றம் சாட்டிப் போலிசாருக்குத் தகவல் கொடுத்து அதற்கான சாட்சிகளையும் சேகரித்து வழக்கிடும்படி போலிசாரைத் தூண்டுபவர், குற்ற நீதி மன்றத்தில் குற்ற முறையீட்டை நேரடியாகக் கொடுத்துப் பதிவு செய்பவர், இவர்களே குற்ற வழக்கிட்டதற்குப் பொறுப்பானவர்கள்.

"குற்ற வழக்கிடுதல்" (Prosecution) என்று எதைக் கூறுகிறோம்?

ஒருவர்மீது குற்றம் சாட்டி மற்றொருவர் போலிசாரிடம் தகவல் கொடுக்கிறார். போலிசார் புலன் விசாரித்தபின் நீதி மன்றத்தில் வழக்கு ஏதும் தொடரவில்லை. இதைக் "குற்ற வழக்கிடுதல்" என்று சொல்ல முடியாது. நீதி மன்றத்தின்முன் குற்றச்சாட்டுப் பரிசீலனைக்கு வந்தபின்தான் "வழக்கிடப்பட்டது" என்ற நிலை ஏற்படுகிறது.

குற்ற முறையீட்டு மனு (Complaint) நேரிலேயே நீதி மன்றத்தில் கொடுக்கப்படுகிறது என வைப்போம். அந்த மனுவைப் பெற்ற உடனேயே அதை ஆய்ந்து, அதன்மீது எவ்வித நடவடிக்கையும் எடுக்கவேண்டிய அவசியம் இல்லை என்று கருதி நீதிமன்ற நடுவர் மனுவைத் தள்ளுபடி செய்துவிடலாம். அப்பொழுது குற்றம் சாட்டப்பட்டவருக்கு எவ்வித நட்டமும் ஏற்படவில்லை. இந்நிலையில் குற்ற முறையீட்டு மனுவைக் கொடுத்தவர் மீது நடவடிக்கை எடுக்கமுடியாது.

குற்றச்சாட்டு முறைப்படி விசாரணைக்கு வந்து சாட்சிகள் விசாரிக்கப்பட்டால்தான் குற்ற வழக்கு நடத்தப்பட்டது என்று கொள்வது சரியன்று. நீதி மன்றத்திலிருந்து குற்ற முறையீடு பற்றிய அறிவிப்புக் குற்றம் சாட்டப்பட்டவருக்கு அனுப்பப்பட்டு, அவர் நீதிமன்றத்திற்கு வரும்படி நேர்ந்தாலும் குற்றம் சாட்டப்பட்டவருக்கு நட்டஈடு கோரும் உரிமை உண்டு. நீதிமன்றத்தில் குற்ற முறையீடு பதிவானபின், குற்றம் சாட்டப்பட்டவருக்கு நட்டம் அல்லது இழுக்கு நேரலாம் என்ற நிலை ஏற்பட்ட பின்னரே "குற்ற வழக்கிடுதல்" என்ற செயல் நிகழ்ந்ததாகச் சட்டம் கொள்கிறது. [Mohammad Amin V. Bannerjee (1947) A. C. 322]

### (2) நியாயமான, ஒப்பத்தகுந்த காரணங்களின்றிக் குற்ற வழக்கு இடப்பட்டிருக்க வேண்டும்

நியாயமான, ஒப்பத் தகுந்த காரணங்களை (Reasonable and Probable Causes) வைத்து ஒருவர்மீது மற்றொருவர் குற்றம் சாட்டினால் அதைக் குறை கூறுவதற்கில்லை. ஆதாரம் ஏதுமின்றிக் குற்ற வழக்கிட்டால் அது காரணமற்ற செயலாகும்.

குற்றச்சாட்டிற்கு நியாயமான காரணங்கள் இருந்தனவா எனத் தீர்மானிப்பது சிக்கலான காரியம்.

சாதாரண அறிவுள்ள ஒருவர் குறிப்பிட்ட சூழ்நிலைகளை ஆய்ந்தபின் குற்றம் சாட்டப்பட்டவர்தாம் அக் குற்றத்தைச் செய்திருக்க வேண்டுமென்று உறுதியாக நம்புவாரா? அவ்வாறு நம்புவார் எனில் குற்ற வழக்கு நியாயமான காரணத்தோடுதான் இடப்பட்டது என்று கூறலாம். இல்லையேல் அவ்வாறு கூற முடியாது. குற்றம் சாட்டப்பட்டவரேதாம் அக்குற்றத்தைச் செய்திருக்கவேண்டும் என்று மதியுள்ள ஒருவர் உண்மையாக நம்பத் தக்க வகையில் அவர் கண்ட சூழ்நிலைகள் இருந்தனவா என்று சட்டம் ஆராய்கின்றது. குற்றம் சாட்டும்பொழுது அவருக்குத் தெரியாதிருந்த சூழ்நிலைகளை நாம் கணக்கில் எடுப்பதில்லை. இந்த அடிப்படையிலேயே குற்றச் சாட்டிற்கு நியாயமான காரணங்கள் இருந்தனவா என்பது உறுதி செய்யப்படுகிறது. இந்த விதி 1878ஆம் ஆண்டில் ஹாக்கின்ஸ் (Hawkins J.) என்ற நீதிபதியால் [Hicks V. Faulkner (1878) 8 Q.B.D. 171] என்ற வழக்கில் விளக்கப்பட்டது.

தம் வீட்டில் உள்ள பொருள்கள் திருட்டுப் போய்விட்டன என்றும், குறிப்பிட்ட ஒருவரைச் சந்தேகப்படுவதாகவும் ஒருவர் போலீசாரிடம் தகவல் கொடுக்கிறார். போலீசார், புலன் விசாரணைக்குப் பின் சந்தேகப்பட்ட நபர்மீது வழக்குத் தொடருகின்றனர். ஆனால் வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவர் விடுதலை அடைகின்றார். இப்பொழுது விடுதலை பெற்றவர் திருட்டுக் கொடுத்தவர் மீது நட்டஈடு கோரமுடியாது. ஏனெனில், தமது சந்தேகத்தையே போலீசாரிடம் திருட்டுக்கொடுத்தவர் கூறியிருக்கிறார். குற்றம் சாட்டப்பட்டவர் திருடிக்கொண்டு ஓடியதைத் தாம் நேரில் கண்டதாகப் போலீசாரிடமும் நீதிமன்றத்திலும் அவர் கூறினார் என வைப்போம். அவர் அளித்த சாட்சியம் நம்பத் தகுந்தது அன்று எனக் கருதிக் குற்றம் சாட்டப்பட்டவரை நீதிமன்றம் விடுதலை செய்தால், குற்றம் சாட்டியவர் தொடுத்த வழக்கு நியாயமான காரணங்கள் இல்லாதது என்று நாம் கொள்ளலாம்.

குற்றம் சாட்டப்பட்டவர் திருடிக்கொண்டு ஓடும்பொழுது தம் வேலையாட்கள் பார்த்ததாகக் கூறித் திருட்டுக் கொடுத்தவர் வழக்கிடுகிறார் என வைத்துக்கொள்வோம். வேலையாட்களின் சாட்சியத்தை ஏற்காமல் நீதிமன்றம் குற்றம் சாட்டப்பட்டவரை விடுதலை செய்கிறது. இப்போது வழக்கிட்டவரின் பொறுப்பு என்ன? தம் வேலையாட்கள் கூறியதை வைத்துக் குற்றம் சாட்டப் பட்டவர்தாம் திருடியிருக்க வேண்டுமென்று அவர் உண்மை யிலேயே நம்பினாரா என்பதை நாம் ஆராயவேண்டும். அவ்வாறு உண்மையில் நம்பியிருந்தால், குற்ற வழக்கிட்டது நேர்மையான காரணத்தோடுதான் எனச் சட்டம் கொள்கிறது,

குற்றம் சாட்டப்படுபவர்தாம் குற்றத்தைச் செய்திருக்க வேண்டுமென்ற உண்மையான நம்பிக்கை வழக்கிடுபவருக்கு இருக்க வேண்டும். மேலும் இந்த நம்பிக்கைக்கு நியாயமான காரணங்கள் இருக்க வேண்டும். அப்படியெனில், காரணமின்றி வழக்கிடப்பட்டது என்று கூறமுடியாது. சந்தேகத்தின் பேரிலோ, கிடைத்த தகவல் பற்றித் தீர விசாரிக்காமலோ, அவசரப்பட்டோ, குற்றம் சாட்டு வது உண்மையான நம்பிக்கையின்றிக் குற்றம் சாட்டுவதாகும்.

குற்ற வழக்கிடுபவருக்கும் குற்றம் சாட்டப்பட்டவருக்கும் முன்பகைமை இருக்கலாம். பகைமையின் காரணமாகத் தீய நோக் குடன் வழக்கிடப்படலாம். இருப்பினும், குற்றம் சாட்டியதற்குத் தகுந்த காரணங்கள் இருந்தால், குற்றம் சாட்டியதைத் தீங்கான செயல் என்று கொள்ள முடியாது. நியாயமான காரணத்துடன் கூடிய குற்றச்சாட்டுத் தீயநோக்கத்துடன் செய்யப்பட்டாலும், அது தகாத செயலன்று.

### (3) தீயநோக்குடன் குற்றம் சாட்டியிருக்க வேண்டும்

தகாத, முறையற்ற நோக்கத்தைத் தீயநோக்கு என்று கூறு கிறோம். உண்மையான குற்றவாளிக்குத் தண்டனை கிடைக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் வழக்கிடுவது முறையேயாகும். வழக்கிடுவதின் நோக்கம், உண்மையான குற்றவாளி சட்டப்படி தண்டனை பெறவேண்டும் என்பதானால் அது சட்டம் ஒப்பும் நன்னோக்கமேயாகும். ஆனால் பகைவரைப் பழிவாங்க வேண்டும் என்ற நோக்கத்துடனோ, பிறரிடமிருந்து பணம் பறிக்கவேண்டும் என்ற தீய எண்ணத்துடனோ அவர்மீது குற்றம் சாட்டுவது தகாத செயல். உண்மையாகவே குற்றம் செய்த ஒருவர் அவர் மீது தொடரப்பட்ட வழக்கில் விடுதலை பெறலாம். அவர் தண்டனை யிலிருந்து தப்பி விட்டாரே என்ற காரணத்திற்காக, அவர்மீது பொய்யாக இன்னொரு குற்ற வழக்கைத் தொடருதல் தீநோக் குடன் கூடிய செயலாகும்.

குற்றம் சாட்டப்பட்டவர்தாம் அக்குற்றத்தைச் செய்தார் என்ற நேர்மையான நம்பிக்கை வேறு; வழக்கிடுவதற்கான தீய நோக்கம் வேறு. நேர்மையான நம்பிக்கை இல்லையேல் தக்க காரணமின்றி வழக்கிடப்பட்டது என்கிறோம்; நேர்மையான நோக்கம் இல்லையேல் தீயநோக்கத்துடன் வழக்கிடப்பட்டது என்று கூறுகிறோம்.

ஒருவர்மீது குற்றவழக்கு இடுவதற்கு முன், குற்றச் சாட்டிற்குத் தகுந்த காரணம் இருக்கிறதா என்று ஆராய்ந்துணர்வதில் ஒருவர் தவறு செய்துவிடலாம். எனவே, தக்க காரணமின்றிக் குற்றம் சாட்டப்பட்டிருக்கலாம். எனினும், தீயநோக்கம் ஏதுமின்றி அவர் வழக்கிட்டால், அவரைத் தீயநோக்கால் வழக்கிட்டவர் என்று கூற முடியாது. வழக்கிட்டவருக்கும் குற்றம் சாட்டப்பட்டவருக்கும் முன்பகைமை இருக்கலாம். பகைவருக்குத் தண்டனை கிடைக்கவேண்டும் என்ற தீயநோக்கத்துடனேயே குற்ற வழக்கிடப்படலாம். இருப்பினும், குற்றச்சாட்டிற்குத் தக்க காரணங்கள் இருந்தால் அதையும் தீயநோக்கால் எழுந்த குற்றச்சாட்டு என்று கொள்ள முடியாது. தகுந்த காரணமின்மை, தீயநோக்கு ஆக இரண்டும் இருந்தால்தான் "தீயநோக்குடன் குற்றம் சாட்டுதல்" என்ற தீங்கு எழுகின்றது. இவை இரண்டில் ஒன்று இல்லாவிட்டாலும், அது தீயநோக்குடனெழும் குற்ற வழக்காவதில்லை.

குற்றம் செய்தவர்களைத் தண்டனைக்கு ஆளாக்குவது பொது நலனுக்கு அவசியமாகும். தக்க காரணமின்றிக் குற்ற வழக்கிடுபவர்கள் அனைவரும் நட்டஈடு கொடுக்கவேண்டியவர்கள் என்று விதி இருந்தால், உண்மைக் குற்றவாளிகள்மீதுகூடக் குற்றம் சாட்டுவதற்குப் பலரும் அஞ்சுவார்கள். எனவே, தீய நோக்கம் ஏதுமின்றிக் குற்ற வழக்கிட்டவர், நட்டஈடு கொடுப்பதற்குப் பொறுப்பாவதில்லை.

### (4) குற்ற வழக்கு வாதிக்கு அனுகூலமாக முடிந்திருக்க வேண்டும்

குற்ற வழக்கில் தண்டனை பெற்ற ஒருவர், தம்மீது சாட்டப்பட்ட குற்றம் பொய்யானது என்றோ, ஆதாரமற்றது என்றோ கூறமுடியாது. விடுதலை அடைந்தவர்தாம் குற்ற வழக்கிட்டவரிடமிருந்து நட்டஈடு கோர முடியும். விடுதலை பெறுவது விசாரணை நடந்த நீதிமன்றத்திலோ அல்லது அப்பீல் நீதி மன்றத்திலோ இருக்கலாம்.

வழக்கில் சாட்சியமனைத்தையும் விசாரித்துப் பரிசீலனை செய்த பின் ஏற்பட்ட தீர்ப்பின்படிதான் குற்றம் சாட்டப்பட்டவர் விடுதலை பெற்றிருக்கவேண்டும் என்ற அவசியம் இல்லை. வழக்கு இடையிலேயே நிறுத்தப்படலாம்; ஆரம்ப விசாரணையிலேயே

குற்றம் சாட்டப்பட்டவரை விடுவித்து (discharge) விடலாம். அவர் குற்றவாளி என்ற தீர்ப்பு இல்லாமல் இருந்தாலே போதுமானது.

## (5) வாதிக்கு நட்டம் விளைந்திருக்கவேண்டும்

குற்ற வழக்கில் குற்றம் சாட்டப்பட்டவருக்கு விளையும் நட்டம் மூன்று வகைப்படும். ஒன்று புகழுக்கு இழுக்கு; இரண்டு, தன்னுரிமைக்கும் உயிருக்கும் ஏற்படும் ஆபத்து; மூன்று, வழக்கை நடத்துவதில் ஏற்படும் பணச் செலவு.

புகழுக்கோ, தன்னுரிமைக்கோ ஆபத்து விளைக்காத குற்ற வழக்குகள் உண்டு. குழந்தைகளுக்கு அம்மை குத்திக்கொள்ளவில்லை என்று சுகாதாரச் சட்டத்தின்கீழ்க் குற்றம் சாட்டி ஒருவர் மீது வழக்கிடப்படலாம். இவ்வழக்கினல் புகழுக்கு இழுக்கோ, தன்னுரிமைக்கு ஆபத்தோ இல்லை. ஏனெனில், இக்குற்றத்திற்குப் பொதுவாக அபராதமே விதிக்கப்படுகிறது; சிறைத் தண்டனையன்று. கையாடல், களவு, கொலை முதலிய சிறைத் தண்டனை கிடைக்கத்தக்க குற்றச் சாட்டுகளால்தாம் புகழுக்கு இழுக்கும், உயிருக்கும் தன்னுரிமைக்கும் ஆபத்தும் விளைகின்றன. இவ்வாறு விளையும் நட்டத்திற்குத் தக்க ஈடு அளிக்கப்படுகிறது.

மேலே கூறப்பட்ட ஐந்து கூறுகளையும் மெய்ப்பித்தால்தான் “தீயநோக்கால் குற்ற வழக்கிடல்” என்ற தீங்கிற்கான நட்ட ஈட்டை ஒருவர் பெறமுடியும்.

## நட்டஈடு கோரி வழக்கிடுவோர் கவனிக்கவேண்டியது

குற்ற வழக்கில் விடுதலை அடைந்தவர்களில் பலர் குற்ற வழக்கிட்டவர்மீது நட்டஈடு கோரி நம் நாட்டில் வழக்கிடுகின்றனர். குற்ற வழக்கில் விடுதலை கிடைத்துவிட்டதால், குற்றம் சாட்டப்பட்டவரிடமிருந்து நட்டஈடு பெறத் தமக்கு உரிமை உண்டு என்று அவர்கள் நம்புகின்றனர். அவ்வாறு நினைப்பது தவருகும்.

குற்ற வழக்கை விசாரிப்பது குற்ற நீதிமன்றம் (Criminal Court). நட்டஈடு வழக்கைப் பரிசிலனை செய்வது உரிமை நீதிமன்றம் (Civil Court). குற்றச்சாட்டு ஒரு சிறிதும் சந்தேகத்திற்கு இடமின்றி மெய்ப்பிக்கப்பட்டதா என்பதையே குற்ற நீதிமன்றம் ஆராய்கின்றது. அதில் சிறு சந்தேகம் இருந்தாலும் அதன் பலன் குற்றம் சாட்டப்பட்டவருக்கு அனுகூலமாக நிற்கிறது. அதனல் அவர் விடுதலை அடைகிருர்.

நட்டஈடு வழக்கில் உரிமை நீதி மன்றம் தீர்மானிப்பது என்ன? ஒப்பத்தக்க காரணங்களின்றி, தீய நோக்குடன் குற்ற வழக்கு இடப்பட்டதா என்பதேயாகும். ஒப்பத்தக்க காரணங்களுடன் தொடரப்பட்ட குற்ற வழக்கிலும் குற்றம் சாட்டப்

பட்டவர் விடுதலை பெறலாம். சாட்சியத்திலுள்ள முரண்பாடுகள், சந்தேகத்தின் பலன், வழக்கு நடத்திய முறையில் உள்ள குறை பாடுகள் முதலிய பலவித காரணங்களால் குற்றம் சாட்டப் பட்டவர் விடுதலை செய்யப்படுகிறுர். மேலும், தக்க காரணங்க ளின்றி வழக்குத் தொடரப்பட்டிருந்தால் மட்டும் போதாது. தீய நோக்குடனும் அது தொடரப்பட்டிருக்க வேண்டும். எனவே, குற்ற வழக்கில் விடுதலை பெற்ற காரணத்தை மட்டும் வைத்துக் கொண்டு குற்ற வழக்கிட்டவரிடமிருந்து நட்டஈடு பெற முடி யாது. குற்றம் சாட்டப்பட்டவரை விடுதலை செய்வதற்கு வேண் டிய ஆதாரங்கள் வேறு; அந்தக் குற்ற வழக்குத் தீய நோக்கத் தால், தக்க காரணமின்றி இடப்பட்டது என்று கொள்வதற்கு அவசியமான ஆதாரங்கள் வேறு.

எனவேதான், குற்ற வழக்கில் விடுதலை பெற்ற பலருக்கும் நட்டஈடு கோரும் வழக்கில் வெற்றி கிடைப்பதில்லை. தகுந்த காரணமின்றித் தீய நோக்குடன் குற்ற வழக்குத் தொடரப் பட்டது என்பதை மெய்ப்பிக்க முடிந்தால்தான் நட்டஈடு பெற முடியும்.

## (ஆ) முறையற்ற இதர சட்ட நடவடிக்கைகள்

*தீய நோக்குடன் கைது செய்வித்தல் - தீய நோக்குடன் சொத்தை ஜப்தி செய்வித்தல், - தீய நோக்கால் "இன்சால் வென்சி" "கம்பெனி கலைத்தல்" முதலிய நடவடிக்கைகள் எடுத்தல்.*

முறைசெய்வதற்குக் கருவியாக அமையும் சட்டத்தைத் தீய நோக்குடன் பயன்படுத்தும்போது கேடு விளைகிறது எனக் கண் டோம். தீய நோக்கால் குற்ற வழக்கிடுதலும், முறையற்ற சட்ட நடவடிக்கை ஆகும். இது தவிர, கீழ்க்கண்ட வழிகளிலும் முறை தவறிய வகையில் சட்டம் பயன்படுத்தப்படலாம்.

(1) தீய நோக்குடன் கைது செய்வித்தல் (Malicious Arrest)

(2) தீய நோக்குடன் சொத்தை ஜப்தி செய்வித்தல். (Malicious Attachment)

(3) தீய நோக்கால் "இன்சால்வென்சி" "கம்பெனி கலைத்தல்" முதலிய நடவடிக்கைகள் எடுத்தல். [Malicious Bankruptcy and Liquidation proceedings)

கொலை, களவு, கையாடல் முதலிய பெருங்குற்றங்கள் செய்த வர்களை விசாரணைக்கு முன்பே குற்ற நீதி மன்றம் கைது செய்ய உத்திரவிடுகிறது. வாங்கிய கடனை மோசம் செய்ய வேண்டும் என்ற எண்ணத்துடன் ஒருவர் ஒரு கோர்ட்டின் அதிகார

எல்லையை விட்டுச்செல்ல இருக்கிருர் எனில், அவரைக் கைது செய்யும்படி உரிமைநீதிமன்றம் உத்தரவிடலாம். கடனைக் கொடுக்காமல் ஏமாற்றும் நோக்கத்துடன் ஒருவர் தமது சொத்தைப் பாராதீனம் செய்கிருர் எனில், அச் சொத்தை ஜப்தி செய்யும்படி நீதிமன்றம் உத்தரவிடலாம். தகுந்த காரணம் இன்றித் தீய நோக்குடன், நீதி மன்றத்தை நாடிக் கைது செய்வதற்கோ, சொத்தை ஜப்தி செய்வதற்கோ உத்தரவு பெற்ருல், அவர்மீது நட்டஈடு கோரி நடவடிக்கை எடுக்கலாம் எனச் சட்டம் அனுமதிக்கிறது.

ஒருவரைக் கடனிறுக்கச் சக்தியற்றவர் (இன்சால்வென்ட்) என்று தீர்ப்பு வாங்குவதற்கு நீதிமன்றத்தில் தக்க காரணமின்றி நடவடிக்கை எடுப்பது, ஒரு கம்பெனியைக் கலைக்க வேண்டும் என்று தீய நோக்குடன் நடவடிக்கை எடுப்பது இவையும் தகாத செயல்களேயாகும்.

தக்க காரணமின்றி ஒருவருடைய கட்டிடத்தைச் சோதனையிடச் செய்வது (Malicious Search) போலிசாரிடம் பொய்த் தகவல் கொடுத்து இன்னொருவரைக் கைது செய்யச் சொல்வது இவைகளும் தீங்குச் செயல்கள்தாம்.

இச் செயல்களின் பயனுய் வாதிக்குக் கேடு விளைந்ததா என்பதைச் சட்டம் கவனிக்கிறது. முறையற்ற வகையில் சட்ட நடவடிக்கை எடுத்தவர் அவ்வாறு விளைந்த கேட்டிற்கு நட்டஈடு கொடுக்க வேண்டும்.

இவ்வாறு, தீய நோக்கோடு முறையற்ற வகையில் சட்டத்தின் துணைகொண்டு பிறருக்குக் கேடு விளைவிக்க முற்படுவதைச் சட்டம் தடைசெய்கிறது.

---

# பகுதி 10

## கவனமின்மை (Negligence)

### I

*''கவனமின்மை'' என்பதன் பொருள் - கவனமின்மையான நடத்தை வேறு, கவனமின்மை என்ற தீங்கு வேறு - ''கவனமின்மை'' என்ற தீங்கு எப்பொழுது விளைகிறது? - ''தகுந்த கவனம்'' என்றால் என்ன? (Degree of care)-நல்லறிவுள்ளவர் நடக்கும் விதம் - கவனமின்மையின் முக்கிய கூறுகள்-தீங்கைத் தவிர்க்க வேண்டிய கடமை.*

ஒருவரால் இன்னொருவருக்கு விளையும் தீங்கு இரு வழிகளில் விளையலாம். ஒருவர் வேண்டுமென்றே கருதிச் செய்யும் செயலால் (Intentional act), தீங்கு விளைவது ஒரு வழி. ஒருவரது கவனக்குறைவான செயலால் (Negligent act) தீங்கு நிகழ்தல் மற்றொரு வழி. தீமை செய்யவேண்டும் என்ற கருத்தொன்றாத செயலைக் கவனமற்ற செயல் என்கிறோம். விளையத்தக்க தீங்கை விலக்கவேண்டும் என்ற முன்னறிவற்ற செயல் கவனக் குறைவான செயல் ஆகிறது. ஒருவர் கருதிச் செய்ததாலோ, அவரது கவனமின்மையாலோ தோன்றும் பலன் ஒன்றேதான்; அஃதாவது, பிறருக்கு விளையும் தீங்கு. எனவே, விளைந்த தீங்கிற்கு ஈடுசெய்யும் பொறுப்பு அதைக் கருதிச் செய்தவருக்கும் உண்டு, கவனமின்மையால் செய்தவருக்கும் உண்டு.

ஒருவர் தம் பகைவரைக் கொல்ல வேண்டும் என்ற கருத்துடன் துப்பாக்கியால் சுட்டுக் கொல்லுகிறார். இன்னொருவர் மக்கள் அதிகமாக நடமாட்டம் உள்ள இடத்தில் துப்பாக்கியால் சுடுவதற்குப் பழகிக் கொண்டிருக்கையில், அவருடைய கவனக் குறைவினால் அங்குப் போய்க்கொண்டிருந்த ஒருவர்மீது குண்டு பாய்ந்து மரணம் விளைகிறது. முன்னவர் செய்தது கொலைக்குற்றம்; பின்னவர் செய்தது கவனமின்மையால் மரணத்தை விளைவித்த குற்றம். கொலை செய்தவருக்குத் தூக்குத் தண்டனை விதிக்கப்படுகிறது. கவனமின்மையால் மரணம் விளைவித்தவருக்குச் சிறிது குறைந்த தண்டனை அளிக்கப்படுகிறது. இருவரும் தண்டனைக்கு ஆளாகின்றனர். அவ்வாறே, விளைந்த தீங்கிற்கு ஈடு செய்யும் பொறுப்பும் இருவருக்கும் உண்டு.

வேண்டுமென்றே பிறருக்குத் தீங்கிழைத்தல் தகாத செயல். தீங்கான செயலை வேண்டுமென்றே செய்யாமலிருந்தால் மட்டும் போதாது. நமது கவனமின்மையின் காரணத்தாலும் பிறருக்குத் தீங்கு விளைதல் கூடாது. அவ்வாறு விளைந்தால் அதுவும் தகாத

செயலேயாகும். பிறருக்குத் தீங்கு கருதியும் செய்யப்படக்கூடாது, கவனமின்மையாலும் செய்யப்படக்கூடாது.

ஒரு செயலை ஒருவர் கருதிச் செய்வதைக் குற்றம் எனக் கொண்டால், அதே செயல் அவரது கவனக் குறைவினுல் விளைந்தாலும் சட்டம் அதைக் குற்றமாகவே கொள்கிறது.

"கவனமின்மை" என்பது சட்டத்தில் என்ன பொருளில் வழங்கி வருகிறது எனக் காண்போம்.

### "கவனமின்மை" என்பதன் பொருள்

பொச்சாப்பு, மறவி, அசாக்கிரதை, அசட்டை என்ற சொற்கள் ஓரளவு "கவனமின்மை" என்ற சொல்லின் கருத்தைக் குறிக்கின்றன.

கவனமின்மை என்ற சொல் பொதுவாக ஒரு செயலைச் செய்பவரின் மன நிலையைக் குறித்து நிற்கிறது. தனது செயலால் விளையத்தக்க தீங்குகளைத் தவிர்க்கவேண்டும் என்ற ஆர்வம் இல்லாத மன நிலையைக் கவனக் குறைவான நிலை எனலாம். ஒருவர் தமது நடத்தையைப்பற்றியும் அதனுல் ஏற்படத் தக்க விளைவுகள் குறித்தும் அக்கறையின்றி அசட்டையுடன் இருக்கும் மனநிலையைப் பொதுவாகக் "கவனமின்மை" என்று குறிப்பிடுகிறோம். ஆனுல், செயலின் தன்மையை ஆராய்ந்தே அதைச் செய்தவரின் மனநிலை தீர்மானிக்கப்படவேண்டியிருக்கிறது. செயலை விலக்கிவிட்டு, மனநிலையைத் தனித்து ஆராய்ந்து அறிதல் இயலாது. ஒருவரின் மனநிலையை மட்டும் வைத்து அவர்மீது நடவடிக்கை எடுக்க முடியாது. எனவே, கவனமின்மை என்பது ஒருவரின் நடத்தை (Conduct) யைக் குறிப்பதாகும்; மனநிலையைமட்டும் குறிப்பதன்று.

### கவனமின்மையான நடத்தை வேறு: கவனமின்மை என்ற தீங்கு வேறு

ஒருவரது கவனமின்மையான செயல் பிறருக்குப் பல தீங்குகளை விளைக்கலாம். ஒருவரது கவனமின்மையான நடத்தையால் பிறருக்கு அவதூறு, தொல்லை போன்ற தீங்குகள் விளைவதுண்டு. ஆனுல், இங்கு நாம் ஆராயவிருப்பது "கவனமின்மை" என்ற தனிப்பட்ட தீங்கைப்பற்றியாகும். "கவனமின்மையால் அத்துமீறல் என்ற தீங்கு விளைந்தது" என்று கூறும்பொழுது, அத்துமீறல் என்ற தீங்கு விளைந்த விதத்தைக் குறிக்கிறோம். "கவனமின்மை என்ற தீங்கு விளைந்தது" என்று கூறுகையில் "கவனமின்மை" என்ற தனிப்பட்ட தீங்கை (Negligence as a separate tort)க் குறிப்பிடுகிறோம். "கவனமின்மை" என்பதே ஒரு தனித்த தீங்காகும் என்ற கோட்பாட்டை ஆங்கிலச் சட்டவல்லு

நர்கள் நீண்ட நாளையச் சட்ட வளர்ச்சிக்குப் பின்னர்தான் ஏற்றுக்கொண்டனர்.

ஒருவருடைய நடத்தை கவனமின்மையாக இருந்தது என்பதை மட்டும் வைத்துக் "கவனமின்மை" என்ற தீங்கு விளைந்துவிட்டது என்று கூறுதல் சரியன்று. அத்தீங்கு எப்பொழுது விளைகிறது எனக் காணலாம்.

### "கவனமின்மை" என்ற தீங்கு எப்பொழுது விளைகிறது?

தகுந்த கவனத்துடன் நடக்கவேண்டிய கடமை சட்டப்படி இருந்தும் அந்தக் கடமையில் ஒருவர் தவறியதின் பயனைப் பிறருக்குத் தீமை விளைந்தால் அது "கவனமின்மை" (Negligence) என்ற தீங்கு ஆகிறது. [Riddel V. Reid (1943) A. C. 1]

(1) தகுந்த கவனத்துடன் நடக்கவேண்டிய கடமை

(2) அந்தக் கடமையில் தவறுதல்

(3) அதனுல் விளைந்த தீங்கு.

இந்த மூன்று கூறுகளும் மேலே கூறப்பட்ட விளக்கவுரையில் அடங்கியிருப்பதை நாம் கருத்தில் கொள்ளவேண்டும். தக்க கவனத்துடன் ஒருவர் ஒரு செயலைச் செய்தாரா என்று எவ்வாறு தீர்மானிப்பது? "தகுந்த கவனம்" என்று எந்த அளவு கவனத்தைக் கூறுகிறோம்? இது ஒரு சிக்கலான கேள்வி.

### "தகுந்த கவனம்" என்றால் என்ன? (Degree of care)

"தகுந்த கவனம்,' என்பது ஒரு பண்பியலான கருத்தையே தெரிவிக்கின்றது. அதை அளவிட்டு, அறுதியிட்டுக் கூறுதல் இயலாததாகும். சூழ்நிலைகளுக்கு ஏற்ப வேண்டிய கவனத்தின் நிலையும், அளவும் மாறுகின்றன.

கத்தியை உபயோகிக்கும்பொழுது வேண்டிய கவனத்தை விடக் கைத்துப்பாக்கியைக் கையாளுகையில் அதிகக் கவனம் வேண்டும். சாலை வழியாக மாட்டுவண்டியை ஓட்டிச் செல்லும் பொழுது ஒருவருக்கு இருக்கவேண்டிய கவனத்தைவிட அவர் ஒரு மோட்டார் வண்டியைச் செலுத்தும் பொழுது அதிகக் கவனம் வேண்டும். மோட்டார் வண்டியை ஆள் நடமாட்டம் அதிகமில்லா ஒரு நெடுஞ்சாலையில் ஓட்டும்பொழுது வேண்டிய கவனத்தைவிட மக்கள் நெருக்கமுள்ள ஒரு நகர வீதியில் செலுத்துகையில் அதிகக் கவனம் தேவை. வெடி மருந்து போன்ற அபாயம் நிறைந்த பொருள்களைக் கையாளுகையில் மிக அதிகமான கவனம் அவசியமாகிறது. திறமை மிக்க தொழிலை மேற்கொள்ளுபவரின் திறன் அந்தத் தொழிலுக்கேற்ற நிலையில்

அமையவேண்டும். இல்லையேல் அது கவனமின்மையே ஆகும். இவ்வாறு சூழ்நிலைகளுக்கு ஏற்பத் தேவையான கவனத்தின் நிலையும் மாறுபடுகின்றது.

எனவே, ஒருவர் ஒரு குறிப்பிட்ட சூழ்நிலையில் தகுந்த கவனத்துடன் நடந்தாரா என்பது அந்தச் சூழ்நிலையின் பல்வேறு கூறுகளையும் ஆராய்ந்து முடிவு செய்யவேண்டியதாக இருக்கிறது. எல்லாச் சூழ்நிலைகளிலும் இந்த ஒரு நிலையில்தான் கவனம் இருக்கவேண்டும் என்று கவனத்தின் அளவைத் திட்டமிட்டுக் கூறுதல் இயலாது.

நல்லறிவுள்ள ஒருவர் (Reasonable man) குறிப்பிட்ட சூழ்நிலையில் எந்த முறையில் கவனமாக நடந்துகொள்வாரோ அந்த அளவு கவனத்துடன் எல்லோரும் நடக்கவேண்டுமென்றே நாம் எதிர்பார்க்கமுடியும். சட்டமும் அதையே விதிக்கிறது. இந்தக் கருத்தின் அடிப்படையிலேயே "கவனமின்மை" என்பதை நீதிபதிகள் விளக்கியிருக்கின்றனர்.

முன்மதியும் நல்லறிவும் உள்ள மனிதன் குறிப்பிட்ட காரியத்தைப் பொறுத்து எதைச் செய்வானோ அதைச் செய்யாதிருத்தலும் எதைச் செய்யமாட்டானோ அதைச் செய்தலும் "கவனமின்மை" ஆகிறது. கவனமின்மையான செயலை நீதிபதி ஆல்டர்சன் (Alderson) என்பார் இவ்வாறு விளக்குகிறார். [Blyth V. Birmingham Water Works Co. (1856) II Ex 781]

குறிப்பிட்ட சூழ்நிலையில் மிகுந்த கவனத்துடன் ஒருவர் நடக்கவில்லை என்ற காரணத்தால் ஒருவரைக் குறை சொல்ல முடியாது. அதுபோன்றே கவனமின்றி நடந்து கொண்டவர், "என்னறிவுக்குத் தக்க கவனத்துடன் நடந்து கொண்டேன். எனவே, நான் குற்றம் செய்யவில்லை", என்று கூறுவதையும் சட்டம் ஏற்பதில்லை. ஆதலால்தான், நல்லறிவும் முன்மதியும் உள்ள ஒருவர் எவ்விதக் கவனம் செலுத்துவாரோ அதை அடிக்கோலாகச் சட்டம் விதிக்கிறது. நல்லறிவுள்ள மனிதனின் நடத்தையை வரையளவாக (Standard)க் கொண்டு ஒருவர் தகுந்த கவனத்துடன் நடந்தாரா இல்லையா என்பது தீர்மானிக்கப்படுகிறது.

## நல்லறிவுள்ள மனிதன் (Reasonable man) நடக்கும் விதம் என்ன?

"எதிரதாக் காக்கும்" அறிவுடையோர்களே உண்மை அறிவுடையவர்கள். முன்னறியத்தக்க இடையூறுகள் விளையாதவாறு தடுப்பதில் கவனத்தைச் செலுத்தி ஒரு காரியத்தைச் செய்பவரே "எதிரதாகக் காக்கும்" அறிவுடையர் ஆவர். நிகழத்தக்க ஆபத்துக்களைத் தடுப்பதிலும் தவிர்ப்பதிலும் ஒருவர் கவனத்தைச் செலுத்தவேண்டும். ஆனால் முன்னறிய முடியாத

(Unforeseen) இடையூறுகளைத் தவிர்ப்பது எவராலும் இயலாது. நிகழத்தக்க இடையூறுகளை (Probable dangers) ஒருவர் தவிர்க்கலாம்; நிகழக்கூடிய எல்லா ஆபத்துக்களையும் (Possible dangers) எவராலும் தவிர்த்தல் முடியாது. ஒரு செயலின் பயனும் யாரும் எதிர்பார்க்கமுடியாத எத்தனையோ இடையூறுகள் விளையலாம். முன்னறிய முடியாத ஆனல் நிகழக்கூடிய எல்லா இடையூறுகளையும் (Unforeseen possible dangers) தவிர்ப்பது யாராலும் முடியாது. முன்னறியக் கூடியதும் நிகழத் தக்கதுமான ஆபத்துக்களை (Forseeable probable dangers)த் தவிர்ப்பது நல்லறிவுள்ள ஒருவரின் இயல்பாகும். இதையே, முன்மதியும் நல்லறிவுமுள்ள மனிதனின் நடத்தை என்று கூறுகிறோம்.

பின்வரும் மேற்கோள் இக்கருத்தை நன்கு விளக்கும்.

வேலியிட்ட கிரிக்கட் மைதானத்திற்கு அருகில் உள்ள சாலையில் நின்று கொண்டிருந்த ஒருவர்மீது கிரிக்கட் பந்து மோதிக் காயம் ஏற்பட்டது. காயமடைந்தவர் மைதானத்தில் விளையாட்டை நடத்தியவரிடமிருந்து நட்டஈடு கோரினர். ஒரு நிலத்தின் சொந்தக்காரருக்கு அந்த நிலத்திலிருந்து எவ்வித இடையூறும் சாலையில் நடமாடுபவர்களுக்கு ஏற்படாமல் தவிர்க்கும் பொறுப்பு உண்டு. ஆனல் விளையாடும்பொழுது கிரிக்கட் பந்து தகுந்த நீள அகலமுள்ள மைதானத்தையும் 17 அடி உயரமுள்ள வேலியையும் கடந்து சாலையில் போவோர்மீது மோதிக் காயம் விளைவிக்கலாம் என்பதை நல்லறிவுள்ள ஒருவர் முன்னறிய முடியும் என்று சொல்லமுடியாது. சாலையில் நடந்து சென்றவர்மேல் பந்து விழுந்து காயம் விளைவித்தது முன்னறிய முடியாத ஆனல் நிகழக்கூடிய செயல் (Unforeseen Possibility); முன்னறியக்கூடிய நிகழத்தக்க செயல் (Foreseeable Probability) அன்று. ஆதலால் வாதியின் வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. [Bolton V. Stone (1951) A.C. 850]

செய்யப்படும் செயல், நிகழத்தக்க இடையூறுகளின் தன்மை, இதர சூழ்நிலைகள் இவைகளைப் பொறுத்தே முன்னறிவுள்ள ஒருவரது கவனம் அமைகிறது. குழந்தைகளைப் பொறுத்து ஒருவர் அதிகக் கவனத்துடன் நடந்துகொள்ளவேண்டும்.

கவனக் குறைவால் பேராபத்து விளையலாம் என்ருல், மிக அதிகமான கவனம் செலுத்துவது முன்மதியுள்ள ஒருவரின் இயல்பாகும். சட்டமும் அதையே விதிக்கிறது.

இந்த முறையில், நல்லறிவும் முன்மதியும் உள்ள மனிதனின் நடத்தையை வரையளவாகக் (Standard) கொண்டும், குறிப்பிட்ட சூழ்நிலையின் பல்வேறு கூறுகளை ஆராய்ந்தும் "கவனமின்மை" நிகழ்ந்ததா என்பது உறுதி செய்யப்படுகிறது.

### கவனமின்மையின் முக்கிய கூறுகள்

ஒருவருடைய கவனமின்மையால் தனக்குக் கேடு விளைந்தது எனக் கூறி நட்டஈடு கோரும் வாதி கீழ்க்கண்ட மூன்று கூறுகளையும் மெய்ப்பிக்கவேண்டும்.

(1) வாதிக்கு விளைந்த தீங்கைத் தவிர்க்கவேண்டிய கடமை எதிர்வாதிக்கு இருந்தது என்பது,

(2) எதிர்வாதி அந்தக் கடமையில் தவறினர் என்பது,

(3) எதிர்வாதியின் கடமை தவறிய செயலால் வாதிக்குத் தீங்கு விளைந்தது என்பது.

### தீங்கைத் தவிர்க்கவேண்டிய கடமை

என்னுடைய பணப்பையை நான் கவனமின்றிக் கைதவற விட்டேன் என்ருல், அந்தக் கவனமின்மைக்கு என்மீது யாரும் நடவடிக்கை எடுக்கமுடியாது. ஏனெனில் நான் கவனத்துடன் இருந்திருக்கவேண்டும் என்பது என்னுடைய நலனைப் பொறுத்ததுதான். அது இன்னொருவருக்கு நான் காட்டவேண்டிய கடமை இல்லை.

பொதுவாகப் பிறருக்கு விளையும் தீங்கைத் தடுப்பது நம் கடமை எனலாம். ஆனல், அந்தக் கடமை எப்போது பிறக்கிறது? எவரைக் குறித்து அக்கடமை தோன்றுகிறது? இந்த வினக்களுக்கு விடை காணவேண்டும்.

இந்த உலகிலுள்ள மக்கள் எல்லோருக்கும் தீங்கு விளையாமல் தடுக்கும் கடமை நமக்கு உண்டு என்று கூறமுடியாது. நம்முடன் தொடர்பு உடையவர்கள், நம் செயலினல் பாதிக்கத் தக்கவர்கள் இவர்களைப் பொறுத்து நமக்குக் கடமை இருக்கலாம். வாழ்வில் எண்ணற்ற சூழ்நிலைகளிலும் எத்தனையோ வகைகளிலும் மக்களுக்குள் தொடர்பு ஏற்படுகிறது. இன்னின்ன வேளைகளில்தான் ஒருவருக்கு ஏற்படும் தீங்கை இன்னெருவர் தவிர்க்கவேண்டும் என்ற கடமை எழுகின்றது என்று பொதுவாக அறுதியிட்டுக் கூறுதல் ஆகாத காரியம். எனவே, அந்தந்தச் சூழ்நிலைகளின் பல கூறுகளையும் ஆராய்ந்து, ஒருவருக்கு விளையத்தக்க தீங்கைத் தவிர்க்கும் கடமை இன்னெருவருக்கு இருக்கிறதா என்பது முடிவு செய்யப்படுகிறது.

வாதிக்கு விளைந்த தீங்கைத் தவிர்க்கும் முறையில் கவனமாக இருக்கவேண்டிய கடமை எதிர்வாதிக்கு இருந்ததா என்பது நீதிபதியே தீர்மானிக்கவேண்டியதொன்ருகும். பலவிதச் சூழ்நிலைகளில் எழுந்த பலதிறப்பட்ட வழக்குகளில் எதிர்வாதியின்

கடமையைப்பற்றி நீதிபதிகள் முடிவு செய்திருக்கின்றனர். அவ் வழக்குகளில் சிலவற்றைக் காண்போம் ;

புட்டியில் அடைத்து விற்கப்பட்ட இஞ்சி நீரை ஒருவர் வாங்கி அருந்தினர். இஞ்சி நீருடன் கலந்து இறந்த நத்தையின் உடலும் புட்டியில் இருந்ததால், அதை அருந்தியவருக்கு நோய் உண் டாகியது. எனவே, அவர் இஞ்சி நீரைத் தயாரித்தவர்கள்மீது நட்டஈடு கோரி வழக்குத்தொடர்ந்தார். வழக்கில் நட்டஈடு அளிக் கப்பட்டது. [Donoghue V. Stevenson (1932) A.C. 562]

இந்த வழக்கில் "கவனமின்மை" பற்றிய முக்கியக் கொள்கை கள் விதிக்கப்பட்டன. "அயலாருக்குத் தீங்கு செய்தல் கூடாது" என்பதில் "அயலார்" என்று யாரைக் குறிக்கிறோம் என்ற கேள் விக்கு நீதிபதி லார்டு அட்கின் (Lord Atkin) தெளிவாக விடை யளித்து இருக்கிறார்.

"அயலார்மீது அன்பு காட்டு என்ற ஒழுக்கவிதி, அயலாருக்குத் தீங்கு விளைவிக்காதே என்ற சட்ட விதியாக மாறு கிறது. "அயலார் என்று குறிப்பது யாரை?' என்பது கேள்வி. என்னுடைய செயலுடன் நேரடியாகவும் நெருங்கியும் தொடர்புடையவர்களைக் கருத்தில்கொண்டு அவர்களுக்குத் தீங்கு விளைவிக்கத்தக்க செயல்களைச் செய்யா திருக்க வேண்டும்." இவ்வாறு, "அயலார்" என்பவர்கள் யார் என் பதை விளக்கிக் கூறியிருக்கிறார். நம் செயலுடன் நேரடியாகவும் நெருங்கியும் தொடர்புடையவர்க்குத் தீங்கு விளையாதபடி நம் செயல் அமையவேண்டும் என்பது கொள்கை. இஞ்சி நீர் போதிய கவனம் இன்றித் தயாரிக்கப்பட்டால் அதை அருந்துபவர்கள் கேடு அடையலாம் என்பது தயாரிப்பாளர்களுக்குத் தெரிந்திருக்க வேண்டும். எனவே, இஞ்சி நீரை அருந்துபவருக்கு விளையும் தீங்கைத் தவிர்க்கும் கடமை அதைத் தயாரிப்பவர்களுக்கு உண்டு.

எதிர்வாதியின் வண்டி, கவனமின்றி ஓட்டப்பட்டதால், சாலையைவிட்டு விலகி ஒரு மதுக்கடைக்குள் நுழைந்துவிட்டது. அந்த மதுக்கடையில் உள்ள ஒரு பணிப்பெண் அதைக் கண்டு அதிர்ச்சி அடைந்துவிட்டாள். பணிப்பெண் தனக்கு ஆபத்து விளையலாம் என அஞ்சியதால், அவள் அடைந்த அதிர்ச்சியின் விளைவுகளுக்கு வண்டிக்காரர் பொறுப்பாகிறார் எனத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. [Dulieu V. White & Sons (1901) 2 KB 669]

"சாலையில் நடமாடுபவர்களுக்கும், சாலையின் இருமருங்கிலும் உள்ள சொத்துக்களை அனுபவிப்பவர்களுக்கும், தமது செயலால் தீங்கு விளையாதபடி, வண்டியையோ, குதிரைகளையோ கவனத் துடன் ஓட்டவேண்டிய கடமை வண்டியை ஓட்டுபவருக்கு இருக் கிறது" என்று மேலே கூறப்பட்ட வழக்கில் விதிக்கப்பட்டது.

சாலையின் குறுக்கே இருந்த பள்ளத்திற்கு வேலி அமைக்கப்பட்டிருந்தது. இரவில் அந்த வேலியைக் காட்டுவதற்காக வைக்கப்பட்டிருந்த விளக்கு அணைந்துவிட்டதால், சைக்கிளில் வந்த ஒருவர் வேலிமீது மோதிக் காயமடைந்தார். வேலியைப் போட்ட நகராண்மைக் கழகத்தார் வேலிக்கு விளக்கு வைக்காத காரணத்தால் நட்டஈடு கொடுக்கக் கடமைப் பட்டவர்கள் எனத் தீர்ப்புக் கூறப்பட்டது. [Foster V. Gillingham Corporation (1942) I A.E.R. 304]

மூன்று சக்கர மிதி வண்டியில் சென்றுகொண்டிருந்த சிறுவன் மீது ஒருவர் தாம் ஓட்டிவந்த காரை மோதிவிட்டார். சிறுவனின் அலறலைக் கேட்ட அவன் தாயார் சன்னல் வழியே பார்த்தார். அப்பொழுது மிதிவண்டி காரின் அடியில் கிடந்தது. சிறுவனைக் காணவில்லை. ஆதலால், தாய் அதிர்ச்சியடைந்தாள். தாய் அடைந்த அதிர்ச்சிக்கு மோட்டாரை ஓட்டியவர் நட்டஈடு கொடுக்கவேண்டியதில்லை எனத் தீர்ப்புக் கொடுக்கப்பட்டது. சிறுவனின் தாய்க்கு விளைந்த அதிர்ச்சியை யாரும் முன்னறிய முடியாதாகையால், காரை ஓட்டியவருக்குத் தாய்க்கு விளைந்த அதிர்ச்சியைத் தவிர்க்கவேண்டும் என்ற கடமை இல்லை. [King V. Philips. (1953) I Q.B. 429]

மோட்டார் சைக்கிளில் சவாரி செய்துகொண்டிருந்த ஒருவர் இன்னொரு மோட்டார்கார்மீது மோதிவிட்டார். இந்த மோதலால் ஏற்பட்ட பலத்த ஓசையை அந்த வேளையில் அருகிலுள்ள டிராம் வண்டியிலிருந்து கூடையுடன் இறங்கிக் கொண்டிருந்த ஒரு மீன் விற்கும் பெண் கேட்டாள். அதனல், அவளுக்கு அதிர்ச்சி ஏற்பட்டுக் குறைப்பிரசவம் நேர்ந்தது. மோட்டார் சைக்கிளும் காரும் மோதியதற்கும் இந்தப் பெண்ணிற்கும் தொடர்பு ஒன்றும் இல்லாததால் நட்டஈடு அளிக்கப்படவில்லை [Bourhill V. Young. (1943) AC 92]. பெண்ணிற்கு நேர்ந்த அதிர்ச்சி சைக்கிளும் காரும் மோதிய செயலோடு தொடர்புடையதன்று என்ற காரணத்தால் வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. இந்தத் தீர்ப்பைச் சரியானதாகச் சட்டவல்லுநர்கள் கொள்ளவில்லை.

குழந்தைகளுக்கான பள்ளியொன்றில் நான்கு வயதுப் பையன் ஒருவன் உலாவச் செல்லுவதற்குத் தயாராக ஒரு வகுப்பறையில் விடப்பட்டிருந்தான். அவனைக் கவனிப்பார் யாருமில்லையாதலால், சிறுவன் அருகிலிருந்த நெடுஞ்சாலைக்குப் போய்விட்டான். அப்பொழுது சாலையில் வந்துகொண்டிருந்த லாரி ஓட்டுபவர் சிறுவன்மீது லாரி மோதாமல் இருக்கும்பொருட்டு லாரியை ஒதுக்கிச் செலுத்தினர். அந்த முயற்சியில் லாரி ஒரு தந்திக் கம்பத்தில் மோதியது. அதனல் லாரியை ஓட்டியவர்

இறந்துவிட்டார். பள்ளியை நடத்துபவருக்குப் பையனைப் பொறுத்து இருக்கும் கடமையைப்போல், பையனுக்குக் காயம் விளைவிக்காமல் தவிர்த்தவர்களைப் பொறுத்தும் கடமை உண்டு என்ற கொள்கை விதிக்கப்பட்டது. பள்ளியை நடத்துபவர்கள் லாரியை ஓட்டியவரின் மரணத்திற்குப் பொறுப்பானவர்கள் என்பது தீர்ப்பு. [Lewis V. Carmarthenshire County Council (1953) I W.L.R. 1439] மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட முன்னறியும் திறன் ஒருவருக்கு இருந்தால்தான் மேலே சொன்ன சூழ்நிலையில் விளைந்த ஆபத்தை ஒருவர் தவிர்க்க முடியும்.

பிறருடைய உயிர், உடல், நலம், சொத்து இவைகளுக்கு விளையவிருக்கும் தீங்கைத் தவிர்க்கும் கடமைதான் நமக்கு உண்டு. பிறருக்குப் பண நட்டம் வராமல் பாதுகாக்கவேண்டிய கடமை நமக்கு இல்லை.

ஒரு சொத்தின் மதிப்புப் பற்றி அதிகமாகக் குறிப்பிட்டு ஒரு மதிப்பீட்டாளர் சான்றுப் பத்திரம் கொடுத்தார். அந்தச் சான்றிதழை நம்பி அச் சொத்தை வாங்கிய கம்பெனிக்கு நட்டம் ஏற்பட்டது. சான்றுப்பத்திரம் கொடுத்தவர் நட்டத்திற்குப் பொறுப்பல்லர் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. [Oldgate Estates Limited V. Toplis (1939) 3 A.E.R. 209]

### மேலே கூறப்பட்ட தீர்ப்புக்களிலிருந்து காணப்படும் விதிகள்

நாம் ஒரு செயலைச் செய்வதாலோ அல்லது அதைச் செய்யாது இருப்பதாலோ பிறருக்குத் தீங்கு விளையுமெனில் அந்தத் தீங்கைத் தவிர்ப்பதற்கு வேண்டிய கவனத்துடன் நாம் நடந்து கொள்ள வேண்டியது நம் கடமையாகிறது. இக் கடமையில் தவறிய காரணத்தால் பிறருக்குத் தீங்கு விளைந்தது எனில் அதற்கு நட்டஈடு கொடுக்கும் பொறுப்பு நமக்கு உண்டு. விளைந்ததீங்கு நம் கவனமின்மையின் காரணமாக விளைந்திருக்க வேண்டும். நம் கவனமின்மைக்கும் விளைந்த தீங்கிற்கும் எவ்வகைத் தொடர்பும் இல்லையெனில் நட்டஈடு தரவேண்டிய பொறுப்பு நமக்கு இல்லை.

எதிர்வாதியின் கவனமின்மைக்கும் வாதிக்கு விளைந்த தீங்கிற்கும் உள்ள காரண காரியத் தொடர்பையும், விளைந்த தீங்கு முன்னறியத் தக்கதா என்பதையும், செயலின் தன்மையையும், வாதி எதிர்வாதி இவர்களிடையுள்ள உறவையும், இதர சூழ்நிலைகளையும் நன்கு ஆராய்ந்தே, தீங்கைத் தவிர்க்கவேண்டிய கடமை எதிர்வாதிக்கு இருந்ததா என்பது உறுதிசெய்யப்படுகிறது.

## II

## கவனமின்மை விளையும் சில தறுவாய்கள்

*சிறந்த திறமை வேண்டிய தொழில்கள் - தொற்று நோய்களைப் பரவச் செய்வது - நெடுஞ்சாலையைப் பயன்படுத்துவோர் - பள்ளி நடத்துபவர்கள் - இரயில்வேக்கள் - கைத்தொழில் பொருள்களைச் செய்பவர்கள், பழுதுபார்ப்பவர்கள் - முதலாளி, தொழிலாளி இவர்களுக்குள்ள கடமைகள் - தொழிலாளிக்கும் முதலாளியைக் குறித்துக் கடமைகள் உண்டு - பாங்கி நடத்துபவர்களின் கடமைகள்.*

கவனமின்மை நேரும் சூழ்நிலைகள் அனைத்தையும் கணக்கிடுதல் இயலாது. விஞ்ஞான முன்னேற்றம் வேகமாக வளர்ந்து வரும் இக்காலத்தில் செயல்களின் தன்மையும் மக்களுக்குள் ஏற்படும் தொடர்பும் பலவகைகளாகப் பெருகி வருகின்றன. எனவே, கவனமின்மைச் செயல்களை அறுதியிட்டு வகைப்படுத்திக் கூறுதல் இயலுவதில்லை.

பலதிறப்பட்ட வழக்குகள் தங்கள்முன் தீர்ப்புக்கு வரும் பொழுது, அந்தந்தச் சூழ்நிலைகளில் எதிர்வாதிக்குத் தீங்கை விலக்கவேண்டும் என்ற கடமை இருந்ததா என்பதை நீதிபதிகள் தீர்மானித்திருக்கின்றனர். வாதி எதிர்வாதிகளின் நிலை, அவர்களுக்குள் உள்ள தொடர்பு, செய்யப்பட்ட செயல், இவை போன்ற பல கூறுகளையும் ஆய்ந்து எதிர்வாதியின் கடமைகளைத் தெளிவுபடுத்தியிருக்கின்றனர். அந்தத் தீர்ப்புக்களில் விதிக்கப்பட்ட கொள்கைகளிலிருந்து குறிப்பிட்ட சூழ்நிலைகளில் ஒவ்வொருவருக்கும் உள்ள கடமை என்ன என்பதை ஓரளவு நாம் அறியலாம். இனி, தீர்ப்புக்களில் விதிக்கப்பட்ட கொள்கைகளை ஒழுங்குபடுத்திப் பலவேறு தலைப்புக்களில் காண்போம்.

### சிறந்த திறமை வேண்டிய தொழில்கள்

சிறப்பான திறமை தேவைப்படும் தொழிலைத் தகுந்த திறமை இல்லாதவர் ஏற்றுச் செய்வது கூடாது. "என்னுடைய திறமைக்குத் தக்கவாறு அந்த வேலையைச் செய்தேன்" என்று கூறினால் அதைச் சட்டம் ஏற்பதில்லை. ஏற்றுக்கொண்ட வேலைக்குத் தகுந்த திறன் ஒருவரிடம் இருந்தால்தான் அந்த வேலையை அவர் ஏற்கலாம். இதுவே நல்லறிவுள்ள மனிதனின் செயலாகும்.

வைத்தியர்கள் : நோயாளிகளைக் குணப்படுத்துவதில் வைத்தியர்கள் கவனமாக இருக்கவேண்டும். அறுவை மருத்துவம் செய்த மருத்துவர் அறுவை செய்யும்பொழுது வைக்கப்பட்ட துணியை நோயாளியின் உடலினுள்ளிருந்து அகற்ற மறந்து விட்டார். அதனால் நோயாளிக்கு விளைந்த கேட்டிற்கு மருத்துவர்

பொறுப்பாக்கப்பட்டார். கவனமின்றி ஒருவரைப் பைத்தியம் பிடித்தவர் என்று சான்றிதழ் (Certificate) கொடுத்ததற்கு மருத்துவர் பொறுப்பாக்கப்பட்டார். மயக்க மருந்து கொடுக்கும் பொழுது கவனமின்றி மருத்துவர் இருந்ததால் நோயாளிக்குக் கேடு விளைந்தது. அதற்கும் பொறுப்பு மருத்துவரையே சேரு கிறது என்பது தீர்ப்பு.

நோயாளிகளைக் கவனித்துக்கொள்ளும் தாதிகளும் கவன மாகத் தங்கள் கடமைகளைச் செய்யவேண்டும். மருத்துவர் எழுதிக் கொடுத்த மருந்தைக் கவனமின்றி அதிக அளவில் கொடுத்து நோயாளிக்குத் தீங்கு விளைவித்த தாதி நட்டஈடு கொடுக்க வேண்டும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

வழக்குரைஞர்களும் தங்கள் கட்சிக்காரரின் நலன்களைக் கவனத்துடன் பாதுகாக்கும் கடமையுள்ளவர்கள்.

### தொற்றுநோய்களைப் பரவச் செய்வது

தொற்றுநோய் உள்ள ஒருவர் இன்னொருவருக்கு அந்தநோய் பரவும் விதத்தில் நடந்தால் அதற்கு அவர் பொறுப்பாகிறார்.

தன்னிடம் கள்ளக்காதல் கொண்டிருந்தவரின் நடத்தையால் தனக்கு மேகநீர் வியாதி வந்தது என்று, அதற்கு நட்டஈடு கோரி ஒரு பெண் வழக்குத் தொடர்ந்தாள். இருவர் நடத்தையும் குறை கூறத்தக்கதாக இருந்ததால் வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. இந்த வழக்கில் வாதியின் நடத்தை ஒழுக்கத்தினின்று வழுவாமல் இருந்திருந்தால் நட்டஈடு அளிக்கப்பட்டிருக்கும்.

### நெடுஞ்சாலையைப் பயன்படுத்துவோர்

நெடுஞ்சாலையில் வண்டியை ஓட்டுபவர் அச்சாலையைப் பயன் படுத்தும் பிறருக்கோ, சாலையின் மருங்கில் உள்ள கட்டிடங்களில் வசிப்பவர்களுக்கோ தமது கவனமின்மையால் தீங்கு விளைவித்தல் கூடாது. சாலையில் ஊர்தியில் செல்லுபவர்கள் அளவுக்கு அதிக மான வேகத்தில் செல்லுதல் கூடாது. அதிக வேகத்தில் ஊர்தி யைச் செலுத்தி அதனால் மோதல் ஏற்பட்டால் வேகமாகச் சென்ற வர் அதற்குப் பொறுப்பாகிறார். சாலையில் செல்லும் வண்டி குடை சாய்ந்தால், அது ஓட்டியவரின் கவனமின்மையால் விளைந்த தாகவே சட்டம் கொள்கிறது.

குதிரை பூட்டப்பட்ட வண்டியைச் சாலையில் விட்டுப்போய், குதிரை தானாக வண்டியை இழுத்து அதனால் விபத்துக்கள் விளைந் தால் வண்டியைக் கவனியாமல் விட்டுச் சென்றவர் பொறுப் பாகிறார். தெருவில் போய்க்கொண்டிருந்த பையனின் குறும்புத்

தனத்தால் குதிரை ஓடத் தொடங்கி இடர் விளைந்தாலும் குதிரையைக் கவனிக்காமல் சாலையில் விட்டவரே பொறுப்புடையவர் ஆகின்றார்.

மோட்டார் வண்டியைச் சாலையில் நிறுத்திச் செல்வது கவனமற்ற செயல் அன்று. ஏனெனில் சாதாரணமாக மோட்டார் தானாக இயங்கத் தொடங்கி நகருவதில்லை. ஆனால் சரிவான சாலையில் அது தானாக இயங்கும் நிலையில் விட்டு வைப்பதும், குழந்தைகளுங்கூட அதை இயக்கி ஓட வைக்கும் நிலையில் அதை நிறுத்தி வைப்பதும் கவனமின்மையாகும்.

சாலைகள் குறுக்கே தடுக்கப்பட்டிருந்தால் அந்தத் தடுப்புத் தெரியும்படி இரவு வேளைகளில் சிவப்பு விளக்கு வைக்கப்பட்டிருத்தல் வேண்டும். வெளிச்சம் இல்லாத காரணத்தால் சாலையில் வந்த வண்டி தடுப்பின்மீது மோதினால், அதற்குச் சிவப்பு விளக்கு வைக்கத் தவறியவர்கள் பொறுப்பாகின்றனர்.

இரயில் பாதையும் வண்டிச்சாலையும் சந்திக்கும் இடங்களில் - (Level Crossings) இரயில் பாதையின் இருபுறங்களிலும் கதவுகள் அமைத்து ரயில் வரும்பொழுது அக்கதவுகளை மூடுவது அவசியம். அவ்வாறு செய்யவில்லையெனில் அது கவனமின்மையாகும்.

நெடுஞ்சாலையை ஒட்டிய கட்டிடங்களில் இருப்பவர்களுக்கும் கடமைகள் உண்டு. சாலை ஓரத்தில் கடை வைத்திருப்பவர்கள் வாழைப்பழத்தின் தோலைச் சாலையில் எறிந்து அதை மிதித்தவர் வழுக்கி விழுந்தால் அதற்குக் கடைக்காரர் பொறுப்பாவார். சாலையை அடுத்திருக்கும் கட்டிடத்தின் கூரையில் படியும் பனிக்கட்டிகளை அவ்வப்போது அகற்றாத காரணத்தால், பனிக்கட்டிகள் சேர்ந்து திரண்டு வீதியில் செல்லுவோர்மீது விழுந்தது எனில், அதற்கு அக்கட்டிடத்தில் இருப்பவரே பொறுப்பாகிறார்.

### பள்ளி நடத்துபவர்கள்

தம் பொறுப்பிலிருக்கும் குழந்தையைப் பொறுத்துக் கவனமுள்ள பெற்றோர்கள் காட்டும் கவனத்தை ஆசிரியரும் காட்ட வேண்டும். தீயகம் போன்ற ஆபத்தான பொருள்களை மாணவர்கள் எடுக்கத்தக்க இடங்களில் வைத்தல் கூடாது. விளையாடும் நேரங்களில் ஆசிரியரின் மேற்பார்வையும் கவனமும் அவசியமாகும். இடர் ஏற்படத்தக்க உடற்பயிற்சி விளையாட்டுகளைப் பள்ளியில் அனுமதிப்பது கவனமின்மையாகும். பள்ளிக் கட்டிடங்கள் நல்ல நிலையில் சரியாக வைக்கப்பட்டிருக்கவேண்டும். அது சரியான நிலையில் இல்லாத காரணத்தால் மாணவர்களுக்குத் தீங்கு விளைந்தது எனில் அதற்குப் பள்ளியை நடத்துபவர்கள் பொறுப்பாகின்றனர்.

**இரயில்வேக்கள்**

இரயில்வேக்களில் வேலைபார்ப்பவர்கள் தகுந்த கவனத்துடன் நடந்து இடர்கள் விளையாமல் பார்த்துக்கொள்ள வேண்டும். இரண்டு இரயில் வண்டிகள் மோதிக்கொள்வது, வண்டி தடம் புரளுவது இவையெல்லாம் கவனமின்மையான செயல்களாவன.

தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட பொருள்களின் பாதுகாப்புக்கு இரயில்வேக்கள் பொறுப்பானவை. அந்தப் பொறுப்பின் தன்மையை இந்திய இரயில்வேச் சட்டம் (Indian Railways Act) வரையறுத்திருக்கிறது.

பிரயாணிகளின் பாதுகாப்பிற்கும் இரயில்வே பொறுப்பு ஆகிறது. பிரயாணச் சீட்டு வாங்காமல், ஆனால் அனுமதி பெற்று இரயிலில் செல்வோரும் பிரயாணிகளாகவே கருதப்படுகின்றனர். பிரயாணச் சீட்டு வாங்காமல் இரயிலில் தலைமறைவாய்ச் செல்பவர்கள் பிரயாணிகளாகக் கருதப்படுவதில்லை. அவர்கள் வரம்பு மீறி நுழைந்தவர்களேயாகின்றனர். அவர்களைப் பொறுத்து இரயில்வேக்களுக்குக் கடமை ஏதும் இல்லை. இரயில் வண்டிக்குள் அளவுக்கு மீறிய கூட்டம் ஏறிவிடாமல் பார்த்துக் கொள்ளவேண்டிய பொறுப்பு நிர்வாகத்தினருக்கு உண்டு. வண்டி வந்து நிற்கும் மேடையிலும் கூட்டம் அதிகமாக இல்லாமல் பார்த்துக்கொள்ளவேண்டும். கூட்டம் அதிகமாகி ஒரு பிரயாணி இரயில்பாதையின்மேல் தள்ளப்பட்டுக் காயமடைந்தால் நிர்வாகத்தினர் நட்டஈடு கொடுக்கவேண்டும்.

இதர பிரயாணிகளால் ஒரு பிரயாணிக்குத் தீங்கு விளைந்தால் அதற்கு இரயில்வே பொறுப்பாவதில்லை. ஒரு பிரயாணி வண்டியில் கதவை அடைக்கும்பொழுது மற்றவரின் கைவிரல் இடையில்பட்டு நசுங்குதல், ஒரு பிரயாணி இன்னொருவரைத் தாக்கிக் காயம் விளைவித்தல், ஒருவர் மற்றவர் பொருளைத்திருடுதல், இவைகளுக்கெல்லாம் அதைச் செய்தவரே பொறுப்பாகிறார்; இரயில்வே நிர்வாகம் பொறுப்பு ஆவதில்லை.

ஒரு பிரயாணி வைத்திருந்த வெடிகுண்டு வெடித்ததால் மற்றொரு பிரயாணி காயமடைந்தார். இதற்கு இரயில்வே பொறுப்பாவதில்லை என்று தீர்ப்புச் செய்யப்பட்டது.

கப்பல், ஆகாய விமானங்கள், பஸ்கள் போன்ற போக்குவரத்துக்களுக்கான சாதனங்களை நிர்வகிப்பவர்களுக்கும் மேலே கூறியபடி பிரயாணிகளைக் கவனத்துடன் பாதுகாக்கும் கடமை இருக்கிறது.

### கைத்தொழில் பொருள்களைச் செய்பவர்கள் (Manufacturers)

மக்கள் பயன்படுத்துவதற்கெனப் பலவிதப் பொருள்களைச் செய்தளிப்பதில் பலர் ஈடுபட்டிருக்கின்றனர். இயந்திரத் தொழில் முன்னேற்றத்தாலும், போக்குவரத்து வசதிகளின் வளர்ச்சியாலும் ஒருவர் ஆக்கியளிக்கும் பொருள் பலராலும் பயன்படுத்தப் படுகிறது. அது உண்ணும் உணவாகவோ, பூசிக்கொள்ளும் பொடியாகவோ, தைலமாகவோ, மருந்தாகவோ இருக்கலாம். இவைகளை உற்பத்தி செய்பவர்களுக்கும் பயன் படுத்துபவர் களுக்கும் நேரடியான தொடர்பு இருப்பதில்லை. பொருள்களைப் பயன் படுத்துபவர்களைப் பொறுத்து, அவைகளை ஆக்கியளிப்பவர் களுக்குக் கடமை உண்டா இல்லையா என்ற வினு எழுகின்றது.

ஒப்பந்தம் அல்லது நேரடித் தொடர்பில் எழும் கடமை இருந்தாலன்றி, ஒருவரைப் பொறுத்து இன்னொருவருக்குக் கடமை கிடையாது என்ற கொள்கையே நீண்ட நாட்களாகப் பின்பற்றப்பட்டு வந்தது. இந்தக் கொள்கை [Donoghue V. Stevenson. (1932) A. C. 562] என்ற வழக்கில் மாற்றப்பட்டது.

எதிர்வாதிகள் இஞ்சி நீரைத் தயாரித்துக் கருமை நிறக் கண்ணாடிப் புட்டிகளில் அடைத்து விற்று வந்தனர். எனவே புட்டிகளில் உள்ள நீரைச் சோதித்துப் பார்க்கும் வசதி அதை விற்பவர்களுக்கோ, வாங்கிக் குடிப்பவர்களுக்கோ இல்லை. வாதி வாங்கி அருந்திய இஞ்சி நீருடன் இறந்த நத்தையின் உடலும் கலந்திருந்ததால் வாதி நோய்வாய்ப்பட்டு அல்லலுற்றார். எதிர் வாதியின் கவனமின்மையால் வாதிக்கு ஏற்பட்ட தீங்கிற்கு எதிர் வாதி நட்டஈடு கொடுக்கவேண்டுமெனத் தீர்ப்பளிக்கப்பட்டது.

இந்த வழக்கில் வாதிக்கும் எதிர்வாதிக்கும் நேரடித் தொடர்போ, ஒப்பந்தமோ இல்லை. இருப்பினும் வாதியைப் பொறுத்து எதிர்வாதிக்குக் கடமை உண்டு எனக் கொள்ளப் பட்டது.

"பொருள்களைத் தயாரிப்பவர்கள், தங்கள் கவனமின்மையால் அவைகளைப் பயன்படுத்துவோர் பாதிக்கப்படலாம் என அறிந் தும், அந்தப் பொருள்களின் நிலையை எவரும் இடையில் சோதித்து அறிய முடியாதபடி விற்பனை செய்தால், பயன் படுத்து வோரின் உயிருக்கோ, உடைமைக்கோ ஊறு ஏற்படாதபடி கவன மாக இருக்கும் கடமையுள்ளவர்கள்" என்ற கொள்கை நீதிபதி அட்கின் என்பவரால் (Lord Atkin) விதிக்கப்பட்டது.

இந்த வழக்கின் பயனாய் ஒரு பொருளைத் தயாரிப்பவருக்கும் அதைப் பயன்படுத்துபவருக்கும் ஒப்பந்தமோ நேரடித்

தொடர்போ இருந்தால் மட்டுமே கடமை தோன்றுகிறது என்ற பழைய கொள்கை மாறிச் சட்டத்தில் புதிய திருப்பம் ஏற்பட்டது.

ஒரு பொருளைத் தயாரிப்பவர் எச்சரித்தும் அதைப் புறக்கணித்து விட்டு அப்பொருளைச் சில்லறையாக விற்பனை செய்பவர் அந்தப் பொருளால் விளையும் தீங்குகளுக்கும் பொறுப்பாகிறார்.

புதை குழியில் பொருத்தப்பட்ட கல் சரியாக வைத்துக் கட்டப்படாத காரணத்தால் அது ஒருவர்மீது விழுந்து காயம் விளைவித்தது. அதைக் கட்டியவர் அதற்குப் பொறுப்பானார். குடிநீர் பகிர்ந்தளிக்கும் நகராண்மைக்கழகம் நீரில் கலந்திருந்த நச்சுப் பொருளினால் நீரைக் குடித்தவர்களுக்கு ஏற்பட்ட கேட்டிற்குப் பொறுப்பாக்கப்பட்டது.

### பழுது பார்ப்பவர்கள் (Repairers)

இம்மாதிரியே சாமான்களைப் பழுது பார்ப்பவர்கள், அவர்களுடைய கவனமின்மையால் எவருக்குத் தீங்கு விளைந்தாலும் அதற்குப் பொறுப்பாகின்றனர்.

மோட்டார் லாரியைப் பழுது பார்த்தவர் ஒரு சக்கரத்தைச் சரியாகப் பொருத்தாததால், அந்தச் சக்கரம் கழன்று தெருவில் நடந்துபோய்க்கொண்டிருந்தவர்கள்மீது மோதிக் காயம் விளைவித்தது. மோட்டார் வண்டியைச் செப்பனிட்டவர் இதற்குப் பொறுப்பாகிறார் என்பது தீர்ப்பு.

இந்த வகையில், ஒரு பொருளைத் தயாரிப்பவர்களும் விநியோகிப்பவர்களும் செப்பனிடுபவர்களும் தங்கள் கவனமின்மையால் விளையும் தீங்குகளுக்குப் பொறுப்பாக்கப்படுகின்றனர்.

### முதலாளி தொழிலாளி இவர்களுக்குள்ள கடமைகள்

தம்மிடம் வேலை செய்யும் தொழிலாளி வேலையில் ஈடுபட்டிருக்கும் பொழுது அவருக்குத் தீங்கு நேர்ந்து விடாதபடி பாதுகாக்கும் கடமை முதலாளிக்கு இருக்கிறது.

தொழிலின் தேவைக்கேற்ற இயந்திரங்களும் கருவிச் சாதனங்களும் அமைத்து அவை சரியான நிலையில் இயங்கும்படி செய்தல் முதலாளியின் கடனாகும். ஆபத்து நிறைந்த தொழிலில் ஈடுபட்டு இருக்கும் ஊழியர்களுக்குப் பாதுகாப்பளிக்கத்தக்க உடைகளும் கருவிகளும் அளித்து அவைகளைப் பயன்படுத்தச் செய்யும் பொறுப்பும் முதலாளியைச் சேரும்.

பாதுகாப்புடைய வேலைமுறையமைப்பை வகுத்து அதன்படி ஊழியர்கள் தொழிலைச் செய்யும்படி ஏற்பாடு செய்தல், வேலையின் தன்மைக்கேற்பவும் ஆபத்துக்களைத் தவிர்க்கும் வகையிலும்

வேலை முறையை அமைத்தல், இவைகளும் முதலாளியின் கடனாகும்.

தொழில் நடக்கும் இடம், கட்டிடம் இவை வேலை செய்வோர்களுக்கு இடையூறுகளை விளைவிக்காத நிலையில் வைக்கப்பட வேண்டும். அதிக மழையினால் ஒரு தொழிற்சாலையின் தரையில் எண்ணெயும் நீரும் கலந்து பரவியிருந்தன. ஒரு தொழிலாளி அதில் வழுக்கி விழுந்து காயமுற்றார். அதற்கு முதலாளியே பொறுப்பு என்பது தீர்ப்பு. [Latimer V. A. E. C. Ltd (1953) A. C. 643]

ஒரு வேலையாளின் கவனமின்மையால் மற்றொரு தொழிலாளிக்குத் தீங்கு விளைந்தால் அதற்கும் முதலாளியே பொறுப்பாகிறார். மேலே கூறப்பட்டவை குறித்து இப்பொழுது பல சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. தொழிற்சாலைகள் எவ்வாறு இயங்கவேண்டும், அந்தந்தத் தொழிலுக்கேற்பத் தொழிலாளிகளுக்கு எந்த முறையில் பாதுகாப்பளிக்கப்படவேண்டும் என்பவை பற்றியுள்ள சட்டங்களின்படி தொழிலை நடத்துபவர் ஏற்பாடு செய்யக் கடமைப்பட்டிருக்கிறார். அதில் தவறினால் அவர் கவனமின்மையாக நடந்துகொண்டாரெனக் கருதப்படுகிறது.

### தொழிலாளிக்கும் முதலாளியைக் குறித்துக் கடமைகள் உண்டு

தமது வேலையைத் திறம்படவும் கவனத்துடனும் செய்வதற்கு வேலையாள் கடமைப்பட்டவர். வேலையாளின் கவனமின்மையால் முதலாளிக்கு விளையும் தீங்கிற்கு ஈடு செய்யும் பொறுப்பு வேலையாளைச் சேருகிறது. மோட்டாரை ஓட்டுபவர் கவனக்குறைவாக அதை மரத்தில் மோதி, அதனால் மோட்டாருக்குச் சேதமோ, அதிலிருந்த முதலாளிக்குக் காயமோ ஏற்படுத்தினால், அதற்கான நட்டத்தை ஈடு செய்யும் பொறுப்பு ஓட்டிய வேலையாளுக்கு உண்டு.

இவ்வாறு, முதலாளியும் தொழிலாளியும் ஒருவருக்கு ஒருவர் கடமையுள்ளவர்களாக இருக்கின்றனர்.

### பாங்கி நடத்துபவர்களின் கடமைகள்

பாங்கிகளை நடத்துபவர்கள் தங்களிடம் ஒப்படைக்கப்பட்ட பணத்தைப் பாதுகாத்து வைத்திருக்கவும், திறமையுடன் பாங்கித் தொழில் நடத்தவும் கடமைப்பட்டவர்கள்.

தங்களிடம் வரும் காசோலைகள் (Cheques) உண்மையானவை தாமா என்பதைத் திறமையுடன் அறிந்து அதற்கான பணத்தைப் பாங்கிகள் கொடுக்கவேண்டும். போலிக்காசோலைமீது (Forged

Cheques) பணத்தைக் கொடுத்தால் அதற்குப் பாங்கியேதான் பொறுப்பாகிறது. காசோலையை இன்ன முறையில்தான் எழுத வேண்டும் என்று பாங்கிகள் விதித்திருந்தும் அந்த முறைப்படி காசோலையை வரையாததால், அது திருத்தப்பட்டு அதில் குறிக்கப்பட்ட தொகை அதிகமாக எழுதப்பட்டது. பாங்கி இந்த அதிகத் தொகையைக் காசோலைமீது செலுத்தியது. காசோலை திருத்தப்பட்டதற்கு அதை எழுதிக் கையெழுத்திட்டவரின் கவனமின்மையே வாய்ப்பளித்ததால் பாங்கி பொறுப்பன்று என்பது தீர்ப்பு.

பணம் போட்டிருப்பவர்கள் காசோலைப் புத்தகங்களைப் பாதுகாப்பாகப் பூட்டி வைத்திருக்கவேண்டும் எனவும், அவ்வாறு வைக்கப்படாமல் அது திருடப்பட்டுப் பிறரால் பயன்படுத்தப்பட்டு அதனுல் நட்டம் விளைந்தால் அதற்குப் பாங்கி பொறுப்பாகாது எனவும் ஒரு பாங்கி விதிகளை இயற்றியிருந்தது. இவ்வாறு காசோலைப் புத்தகம் பூட்டி வைக்கப்படாததால் அது திருடப்பட்டு இன்னொருவரால் போலிக்காசோலை தயாரிக்கப்பட்டது. பாங்கியும் அந்தப் போலிக்காசோலைமீது பணம் கொடுத்தது. இப்பொழுது ஏற்பட்ட நட்டத்திற்குப் பணம் போட்டவர் பொறுப்பல்லர் என்றும் பாங்கியே பொறுப்பு என்றும் தீர்ப்பு. எனவே உண்மையான காசோலையா என்பதைத் திறமையுடன் கவனித்துப் பார்த்துப் பணம்கொடுக்கும் பொறுப்புப் பாங்கியைச் சேர்ந்ததாகும். அதில் தவறினுல் அந்தக் கவனம் இன்மையால் விளையும் நட்டம் பாங்கியையே சேருகிறது.

காசோலையை அனுப்பியவரின் பணம் பாங்கியில் இருந்தும் காசோலைக்குப் பணம் அளிக்காமல் திருப்பியனுப்பினுல் பாங்கியே அச்செயலுக்குப் பொறுப்பாகிறது. காசோலை புறக்கணிக்கப்பட்டதால் தனக்கு நட்டம் விளைந்ததென்று கோரி அதை அனுப்பியவர் பாங்கியிலிருந்து நட்டஈடு பெறலாம். காசோலை புறக்கணிக்கப்பட்டது தவறுதலால்தான் என்று கூறிப் பாங்கி தனது பொறுப்பிலிருந்து விலக முடியாது. ஒருவருடைய பணம் பாங்கியில் இருந்தும் அவருடைய காசோலை காரணமின்றிப் புறக்கணிக்கப்பட்டால் அவருக்கு நட்டம் விளைந்ததாகச் சட்டம் கொள்கிறது. [The New Central Hall V. United Commercial Bank, Mathurai (1959) I. M. L. J. 28]

இவ்வாறு, பலவகைத் தொழில்களில் ஈடுபட்டிருப்பவர்களுக்கு அந்தந்தத் தொழிலின் தன்மைக்கேற்பக் கடமைகள் எழுகின்றன. தமது செயலால் பிறருக்குத் தீங்கு விளைவதைத் தவிர்க்கும் கடமையில் தவறுபவர்கள் அந்தத் தீங்கிற்கு ஈடு செய்

யும் பொறுப்பு உடையவராகின்றனர். புதிய புதிய தொழில்களால் ஏற்படும் மாறுபட்ட சூழ்நிலைகளுக்கு ஏற்பக் கடமைகள் தோன்றுவது இயல்பு. ஆதலால், பிறருக்குத் தீங்கு விளையாமல் தவிர்க்கும் கடமை ஒருவருக்கு ஏற்படும் சூழ்நிலைகள் இன்னின்ன என்று அறுதியிட்டு அதற்கேற்ப ஒரு பொது விதியை இயற்றுவது இயலாத காரியம். அந்தந்த வழக்குகளில் உள்ள பல்வேறு கூறுகளையும் ஆராய்ந்து எதிர்வாதியின் கடமை என்ன என்பதை நீதிமன்ற நடுவர் உறுதி செய்கின்றார். எனவே, கவனமின்மையின் வகைகள் பலதிறப்பட்ட வழக்குகளால் பெருகி வளர்கின்றன.

## III

## கவனமின்மையால் விளையும் நட்டம்

*எதிர்வாதியின் கவனமின்மையை வாதியே மெய்ப்பிக்கவேண்டும்- "செயலே செப்புகிறது" (Res ipsa loquitur) என்று கூறத்தக்க செயல்கள்.*

எவருக்கும் நட்டம் விளைவிக்காத கவனமின்மையான செயலைப் பொறுத்து எந்த நடவடிக்கையும் எடுக்கமுடியாது. எதிர்வாதியின் கவனமின்மையால் தனக்கு நட்டம் விளைந்தது என்பதை வாதி மெய்ப்பித்தால்தான் எதிர்வாதிக்கு நட்டஈடு கொடுக்கவேண்டிய பொறுப்பு உண்டு.

விளைந்த நட்டம் வாதியின் சொத்துக்கோ அல்லது உடலுக்கோ நேர்ந்திருக்கலாம்.

சொத்திற்கு ஏற்பட்ட நட்டத்தை அளவிடுவது எளிது. சேதப்பட்ட சொத்தின் மதிப்பையோ, அல்லது அதைச் சீர்படுத்துவதில் ஏற்படும் செலவையோ அடிப்படையாக வைத்துச் சொத்திற்கு நேர்ந்த நட்டத்தின் அளவை உறுதி செய்யலாம்.

ஒருவரது உடலுக்கு ஊறு விளைந்தால் அதனால் அவருக்கு ஏற்படும் நட்டத்தை அளவிடுவது அவ்வளவு எளிதன்று. தீங்கு அடைந்தவரின் வருவாய், பொருள் ஈட்டும் திறன், வயது, எதிர்காலத்தில் அவருக்கு விளையத்தக்க வருவாய்க்குறைவு, ஆயுள் காலக் குறைவு, காயத்தைப் போக்குவதற்கு வேண்டிய மருத்துவச் செலவு இவை அனைத்தையும் கருத்திற்கொண்டு ஒருவரது உடலுக்கு ஏற்பட்ட கேட்டினால் விளையும் நட்டம் தீர்மானிக்கப்படுகிறது.

### எதிர்வாதியின் கவனமின்மையை வாதியே மெய்ப்பிக்கவேண்டும்

எதிர்வாதி தம் கடமையிற் சோர்ந்து கவனமின்றி நடந்தார் என்பதை மெய்ப்பிக்கும் பொறுப்பு வாதியையே சேரும். எதிர்

வாதியின் செயலால் தமக்கு நட்டம் விளைந்தது எனபதை மட்டும் வாதி காட்டினுல் போதாது.

சில வேளைகளில் செயலின் தன்மையிலிருந்து எதிர்வாதியின் கவனமின்மை ஊகிக்கப்படலாம்.

### "செயலே செப்புகிறது" (res ipsa loquitur) என்று கூறத்தக்க செயல்கள்

எதிர்வாதியின் கடையின் மாடியிலிருந்து ஒரு பீப்பாய் உருண்டு தெருவில் விழுந்து, தெருவில் போய்க்கொண்டிருந்த வாதிக்குக் காயம் விளைவித்தது. எதிர்வாதியின் கடையிலிருந்து பீப்பாயை எவர் உருளவிட்டார்கள் என்பதோ, எந்தச் சூழ்நிலையில் அவ்வாறு நேர்ந்தது என்பதோ வாதியால் அறிய முடியாது. ஆனுல் ஒன்று மட்டும் தெளிவு. எதிர்வாதியின் அல்லது அவருடைய ஆட்களின் செயலால் பீப்பாய் உருண்டது என்பதும், அவர்கள் கவனத்துடன் இருந்திருந்தால் அவ்வாறு தெருவில் பீப்பாய் உருண்டு விழுந்திருக்காது என்பதும் சான்று எதுவும் இல்லாமல் ஊகிக்க வேண்டியவை. இவ்வாறு பீப்பாய் உருண்டு விழுந்த செயலே கவனமின்மையைச் சுட்டிக் காட்டுகிறது. இது போன்ற செயலை லத்தீன் மொழியில் Res ipsa loquitur "செயலே செப்புகிறது" (செயலின் விளைவே செப்புகிறது) என்று கூறுவார்கள். [Byrne V. Boadle (1863) 2H & C 722]

இரண்டு இரயில் வண்டிகள் மோதிக்கொண்டால், இரயில்வே சிப்பந்திகளின் கவனமின்மைதான் அதற்குக் காரணம் என்பதை நாம் ஊகிக்கலாம். அறுவை மருத்துவம் செய்யப்பட்டவரின் உடலில் அறுக்கப்பட்ட பாகத்தினுள் துணித்துண்டு அகற்றப் படாமலிருந்தால் அது மருத்துவரின் கவனமின்மை என்பது தெளிவு. விதியில் போய்க்கொண்டிருந்த மோட்டார் நடைபாதைமேடைமீது ஏறி அங்கு நின்றுகொண்டவர்மீது மோதினுல் அது மோட்டார் ஓட்டியவரின் கவனமின்மை என்பது வெளிப்படை. இம்மாதிரி செயல்களின் தன்மையே அதில் அடங்கியுள்ள கவனமின்மையைத் தெளிவாகக் காட்டுகின்றது. அஃதாவது கவனமின்மையை அதனுல் ஏற்பட்ட செயல்களே செப்புகின்றன. எனவே இவைபோன்ற செயல்களை "செயலே செப்புகிறது" என்று லத்தீன் மொழியில் கூறுவதுண்டு.

"செயலே செப்புகிறது" என்று சொல்லத்தக்க செயல்களில், எதிர்வாதியின் கவனமின்மையை வாதி மெய்ப்பிக்க வேண்டியதில்லை. விளைவே, அச்செயலே, எதிர்வாதியின் கவனமின்மையைக் காட்டி நிற்பதால் எதிர்வாதியின் கவனமின்

மைக்குச் சான்ருக அவர் செயலே அமைகின்றது. அச்செயல் நிகழ்ந்தது தமது கவனமின்மையால் அன்று என்பதை நிலே நாட்டும் பொறுப்பு எதிர்வாதியையே சேரும்.

எனவே, ஒரு நிகழ்ச்சியிலிருந்தே கவனமின்மை வெளிப் பட்டு, அந்த நிகழ்ச்சிக்குத் தன் கவனமின்மை காரணமன்று என்று எதிர்வாதி நிலேநாட்டத் தவறினல் அந்த நிகழ்ச்சியின் தன்மையைச் "செயலே செப்புகிறது" என்று குறிப்பிடுகிருேம்.

"செயலே செப்புகிறது" (செயலின் விளேவே செப்புகிறது) என்பது ஒரு சட்ட விதி அன்று; ஒரு செயலின் தன்மையை விளக்குவதற்குப் பயன்படுத்தப்படும் குறிப்புப் பெயராகும்.

## IV

## கவனமின்மைக்கும் விளேந்த தீங்கிற்கும் உள்ள காரண காரியத்தொடர்பு (Causal Relation)

*இசைந்து ஏற்றது நீங்காவது இல்லே - தற்கவனமின்மை - எதிர்வாதியின் கவனமின்மையால் ஏற்படும் ஆபத்துக்களேத் தவிர்க்க வாதி செய்யும் முயற்சிகள் - எதிர்வாதியின் நடத்தை யால் வாதி விழிப்பின்றி இருத்தல் - தற்கவனமின்மை பற்றிய சில வழக்குகள் - தற்கவனமின்மைக் கொள்கை குழந்தைகளேப் பொறுத்து ஏற்கப்படுவதில்லே.*

எதிர்வாதியின் கவனமின்மையான செயலேயும் தமக்கு விளேந்த தீங்கையும் வாதி மெய்ப்பித்தால் மட்டும் போதாது; முன்னதிலிருந்து பின்னது விளேந்தது என்பதையும் நிலேநாட்ட வேண்டும். எதிர்வாதியின் கவனமின்மையான செயலே காரணம் என்றும், அந்தக் காரணத்தின் விளேவே தமக்கு நேர்ந்த தீங்கு என்றும் வாதி மெய்ப்பித்தால்தான் அவர் நட்டஈடு பெற முடியும்.

கவனமின்மைக்கும் விளேந்த தீங்கிற்கும் காரணகாரியத் தொடர்பு (Causal relation) இருந்ததா என்பதை உறுதிசெய்தே நட்டஈடு அளிக்கப்படுகிறது. இந்தக் காரண - காரியத் தொடர்பை உறுதிப்படுத்துவதற்குப் பல வழக்குகளில் பல வித மான வழிகளேக் கையாண்டனர்.

இரயில்வேக் கம்பெனியின் வேலேயாட்கள் காய்ந்த சருகு களே இரயில் பாதைகளினருகே குவித்து வைத்திருந்தனர். இரயில் இன்ஜினிலிருந்து சிதறிச் சென்ற தீப்பொறியினல் சருகு களில் தீப்பிடித்தது. அடுத்திருந்த வாதியின் குடிசைக்கும் அந்தத் தீ பரவிக் குடிசை சாம்பலாயிற்று. இரயில்வேக் கம்பெனி யார் வாதிக்கு நட்ட ஈடு கொடுக்கவேண்டும் என்று தீர்ப்பளிக் கப்பட்டது [Smith V. L. & S. W. Railway Co. (1870) L. R. 6].

இரயில்வேப் பாதையருகில் சருகுகளைச் சேர்த்து வைத்திருந்தது கவனமற்ற செயல். இன்ஜினிலிருந்து தீப்பொறி விழுந்து சருகுகளில் தீப்பிடித்ததின் நேரடி விளைவே வாதியின் குடிசை தீக்கிரையானது. இம்மாதிரியான விளைவை இரயில்வே ஊழியர்கள் எதிர்பார்க்காதிருந்திருக்கலாம். ஆனால் அவர்கள் செயல் தீங்கிற்கு நேரடிக் காரணமாக இருப்பதால் விளைந்த தீங்கு முன்னறியத் தக்கதா இல்லையா என்பதுபற்றி அக்கறையில்லை என்று தீர்ப்பில் கூறப்பட்டது.

எதிர்வாதி குதிரைகளைச் சாலையில் விட்டுவைத்திருந்தார். கவனிப்பாரற்று நின்று கொண்டிருந்த குதிரைகளை ஒரு குறும்புக்காரப் பையன் துரத்தியதால் அதைத் தடுக்கமுயன்ற வாதிக்குக் காயம் ஏற்பட்டது. எதிர்வாதி குதிரைகளைத் தெருவில் விட்ட செயலே வாதிக்கு விளைந்த தீங்கிற்கு முக்கிய காரணமாக இருந்ததால் எதிர்வாதி பொறுப்பாகிறார் எனத் தீர்ப்பு அளிக்கப்பட்டது. [Haynes V. Harwood (1935) 1. K. B. 146]

சில வேளைகளில் எதிர்வாதியின் கவனமின்மையான செயலுக்கும் வாதிக்கு விளைந்த தீங்கிற்கும் இடையில் மூன்றாவது மனிதரின் செயல் குறுக்கிடுவதுண்டு. இரயில் பாதையில் ஒரு பையன் நுழைந்து அங்கு நின்றுகொண்டிருந்த இரயில் பெட்டி ஒன்றைத் தள்ளிவிட்டான். தடம் சரிவாக இருந்ததால் வண்டி நகர்ந்து போய் ஒரு சாலையும் இரயில் தடமும் சந்திக்கும் இடத்தில் (Level Crossing) போய்க்கொண்டிருந்த ஒருவர்மீது மோதியது. இதற்கு இரயில்வேக் கம்பெனி பொறுப்பல்ல என்பது தீர்ப்பு. [Mc. Dowell V. G. W. Ry. Co. (1903) 2. K. B. 331]

குதிரை பூட்டிய வண்டி தெருவில் நெடுநேரம் கவனியாமல் எதிர்வாதியால் விடப்பட்டிருந்தது. தெருவில் போய்க்கொண்டிருந்த ஒருவர் குதிரையைச் சவுக்கால் அடித்தார். அதனால் குதிரை வண்டியை இழுத்துக்கொண்டு ஓடி வாதியின்மீது மோதிக் காயம் விளைவித்தது. இதற்கு எதிர்வாதியே பொறுப்பாகிறார். [Illidge V. Goodwin (1831) S. C. & P. 190]

இரயில்வேக் கம்பெனியார் ஒரு வண்டியில் அளவுக்கு மீறிக் கூட்டத்தை ஏறும்படி விட்டனர். அந்தக் கூட்டத்திலிருந்த திருடர்கள் வாதியின் பொருளைக் கொள்ளையடித்துச் சென்றனர். இதற்கு இரயில்வே பொறுப்பில்லை என்று தீர்ப்புச் சொன்னார்கள். [Cobb V. G. W. Ry. Co. (1893) 1 Q. B. 517]

மூன்றாவது மனிதர்களின் செயல் இடையில் குறுக்கிட்டாலும், சில வேளைகளில் எதிர்வாதியே தமது கவனமின்மையால் வாதிக்கு விளைந்த தீங்கிற்குப் பொறுப்பாகிறார்.

கீழ்க்கண்ட விதிகளைப் பின்பற்றி எதிர்வாதியின் பொறுப்புத் தீர்மானிக்கப்படுகிறது.

வாதிக்கு விளைந்த தீங்கு, எதிர்வாதியின் கவனமின்மையினுல் ஏற்பட்ட இயல்பானதும் நிகழத் தக்கதுமான விளைவுதானு (Natural and Probable Consequence)? வாதிக்கு விளைந்த தீங்கு எதிர்வாதியின் கவனமின்மையின் நேரடி விளைவா(Direct Result)?

பலதிறப்பட்ட சூழ்நிலைகளையும் ஆராய்ந்து அந்தந்த வழக்குகளில் எதிர்வாதியின் கவனமின்மைக்கும் வாதிக்கு ஏற்பட்ட தீங்கிற்கும் உள்ள காரண - காரியத் தொடர்பு உறுதி செய்யப்படுகிறது.

## இடையூறுகளை ஏற்றுக்கொள்ளுவதற்கு வாதியே இசைந்திருத்தல் : இசைந்து ஏற்றது தீங்காவதில்லை (Volenti non-fit injuria)

ஆபத்துக்கள் நிறைந்த செயல்களில் வாதியே இசைந்து ஈடுபடலாம். அதனுல் விளையும் தீங்கிற்கு இன்னொருவர் பொறுப்பாவதில்லை. ''இசைந்து ஏற்றது தீங்காவதில்லை'' "Volenti non-fit injuria'' என்பது லத்தீனில் உள்ள ஒரு விதி. கிரிக்கட், ஹாக்கி முதலிய விளையாட்டுக்களில் பந்தினுல் ஒருவர் அடிபட்டுக் காயம் பெறலாம். பந்து எறிந்தவர் தீய எண்ணங்கொண்டு எறிந்தாலன்றி அவர்மீது நடவடிக்கை எடுக்கமுடியாது.

விலங்குப் பயிற்சிக் காட்சியில் (Circus) வேலை செய்யும் ஒருவரை அதிலுள்ள ஒரு விலங்கு தாக்கிக் காயப்படுத்தியது என்ருல், அவர் அதை நடத்தும் உரிமையாளரிடமிருந்து நட்டஈடு பெற முடியாது.

இவ்வாறு வாதி இசைதல் வெளிப்படையான ஒப்பந்தம் மூலமாக இருக்கலாம், அல்லது அவர் நடத்தையிலிருந்து ஊகித்தறியும் விதத்திலும் இருக்கலாம்.

வாதியே இசைந்து இடையூறுகள் மிக்க செயலில் ஈடுபட்டார் என்பதை நிலைநாட்டினுல் எதிர்வாதி நட்டஈடு கொடுக்கவேண்டியதில்லை.

## தற்கவனமின்மை (Contributory Negligence)

ஒருவர் ஒரு செயலைச் செய்யும்போது அதனுல் பிறருக்குத் தீங்கு விளையாமல் கவனமாயிருப்பதுபோன்றே தமக்கும் அதனுல் தீங்கு விளையாமல் கவனமாக இருக்க வேண்டும். இதுவே முன்னறிவுள்ள ஒருவரது நடத்தையாகும். தமக்குத் தீங்கு விளைவதைத் தடுக்கும் கடமை எவருக்கும் சட்டப்படி இல்லை. ஆனுல்

நிகழத் தக்கவை என்று முன்னறியத்தக்க தீங்குகளைத் தமக்கு நேராதவாறு தவிர்க்கும் வகையில் ஒரு காரியத்தைச் செய்தலே நல்லறிவுள்ள மனிதனின் நடத்தையாகும். தாம் செய்யும் செயலினல் தமக்கு நேரத்தக்க தீங்கை ஒருவர் தவிர்க்காமல் இருப்பது "தற்கவனமின்மை" ஆகிறது.

ஒருவருடைய கவனமின்மையால் இன்னெருவருக்குத் தீங்கு விளைந்தால் அதற்குக் கவனமின்றி நடந்துகொண்டவர் பொறுப்பாகிருர் எனக் கண்டோம். விளைந்த தீங்கிற்குக் காரணம் எதிர்வாதியின் கவனமின்மையாக மட்டும் இருந்தால் சிக்கல் எதுவும் ஏற்படுவதில்லை. சில வேளைகளில், வாதிக்கு நேர்ந்த தீங்கு எதிர்வாதியின் கவனமின்மையாலும் வாதியின் தற்கவனமின்மையாலும் விளையலாம். இப்பொழுது அந்தத் தீங்கிற்கு யார் பொறுப்பு? எதிர்வாதியின் பொறுப்பு என்ன? இதுபற்றி இங்கு ஆராய்வோம்.

வாதி, எதிர்வாதி, இருவர்களுடைய கவனமின்மையாலும் வாதிக்குத் தீங்கு விளைந்தால் வாதி எதிர்வாதியிடமிருந்து நட்டஈடு பெற முடியுமா என்பது கேள்வி. 1. வாதியின் தற்கவனமின்மையே அவருக்கு நேர்ந்த தீங்கிற்குக் கடைசிக் காரணமாக இருந்தாலோ அல்லது 2. வாதியின் தற்கவனமின்மையும் எதிர்வாதியின் கவனமின்மையும் ஒருசேர நிகழ்ந்து, எவருடைய கவனமின்மையால் வாதிக்குத் தீங்கு நேர்ந்தது என்பதைத் தீர்மானிப்பது இயலாதிருந்தாலோ, வாதி எதிர்வாதியிடமிருந்து நட்டஈடு பெற முடியாது. 1945ஆம் வருடம் வரை இதுவே விதியாக ஆங்கில நாட்டில் இருந்தது.

எதிர்வாதி சாலையின் குறுக்கே ஒரு கழியை வைத்துச் சாலையைத் தடுத்திருந்தார். குதிரைமீது வேகமாகச் சவாரி செய்துகொண்டு வந்த வாதி கழியால் தடுக்கப்பட்டு விழுந்து காயம் அடைந்தார். அவ்வாறு அவர் விழுந்தபோது பகல் நேரம், நல்ல வெளிச்சம் இருந்தது. சாலையின் குறுக்கே இருந்த கழியை வாதி நூறு கெசதூரத்திலேயே பார்த்திருக்கமுடியும் என்றும், வாதி கவனத்துடன் இருந்திருந்தால் கழியில் மோதியதைத் தவிர்த்திருக்கலாம் என்றும் கூறி வாதியின் தற்கவனமின்மையே வாதியின் காயத்திற்கு உடன் காரணமாதலால் எதிர்வாதியிடமிருந்து வாதி நட்டஈடு பெற முடியாது என்று தீர்ப்பு அளிக்கப்பட்டது. [Butterfield V. Forrester (1809) 2. East. 60] ஒருவர் பிழை செய்தார் என்பதற்காக இன்னெருவர் தற்கவனமின்றி நடந்துகொள்ளக் கூடாது. இந்த வழக்கில் வாதியின் தற்கவனமின்மையே விபத்தின் கடைசிக்காரணமாக இருந்தது.

சில வேளைகளில் வாதியின் கவனமின்மையும் எதிர்வாதியின் கவனமின்மையும் ஒரே நேரத்தில் சேர்ந்தாற்போல் நிகழலாம். அதனுல் நேர்ந்த தீங்கிற்கு எவருடைய கவனமின்மை காரணம் என்பது தீர்மானிக்கமுடிவதில்லை. இப்பொழுதும் வாதிக்கு நட்ட ஈடு கிடையாது. இரவில் விளக்கு இன்றி எதிரெதிரே வந்த இரண்டு மோட்டார்கள் மோதிக்கொண்டன என்ருல் எந்த மோட்டாரை ஓட்டியவர் கவனமின்றி இருந்தார் என்றுகூற முடியும்? இருவர் கவனமின்மையுமே மோதலுக்குக் காரணம். எனவே, வாதி நட்டஈடு பெறுவதற்கில்லை. [France V. Parkinson (1954) 1 A.E.R. 739]

எனவே, வாதியின் தற்கவனமின்மையே விபத்தின் கடைசிக் காரணமாக இருக்கும்பொழுதும், வாதி எதிர்வாதி இருவரின் கவனமின்மையும் ஒரே வேளையில் சேர்ந்து நிகழ்ந்து விபத்தை விளைவித்தாலும் வாதிக்கு நட்டஈடு கிடைப்பதில்லை.

சில வேளைகளில் வாதியின் கவனமின்மையான செயலுக்குப் பிந்தி நிகழும் எதிர்வாதியின் கவனமின்மை விபத்தின் உடன் காரணமாக இருக்கலாம். அப்படியெனில் வாதி நட்டஈடு பெற லாம்.

வாதி தம்முடைய கழுதையின் முன்கால்களைக் கட்டி ஒரு குறுகலான தெருவிலே விட்டிருந்தார். எதிர்வாதியின் வேலை யாளின் கவனமின்மையால் அவரது குதிரை பூட்டப்பட்ட வண்டி அதை ஓட்டுபவர் இன்றியே சரிவான தெரு வழியாக வந்து கழுதையின்மீது மோதியதால் கழுதை கொல்லப்பட்டது: எதிர் வாதியின் வேலையாளின் கவனமின்மையே விபத்துக்கு உடன் காரணம். ஆகையால் கழுதையின் மரணத்திற்கான நட்டஈட்டை எதிர்வாதியே கொடுக்கவேண்டியதாயிற்று. [Davies V. Mann (1842) 10 M&W 546]

Davies V. Mann என்ற இந்த வழக்கில் சொல்லப்பட்ட கொள்கை மிகவும் முக்கியமானதாகும். அஃதாவது, வாதி முதலில் தற்கவனமின்றி இருந்தார் என்ற காரணத்தைக் காட்டி எதிர்வாதி தமது கவனமின்மைக்குச் சமாதானம் கூற முடியாது. வாதி கவன மின்றி இருந்திருந்தாலும், எதிர்வாதி கவனத்துடன் இருந்தால் விபத்து தவிர்க்கப்பட்டிருக்கும் என்ருல் எதிர்வாதியே அந்த விபத்துக்குப் பொறுப்பாகிருர். இவ்வாறு விதி இல்லை எனில் பல கவனமின்மைச்செயல்கள் குற்றமற்றவையாகிவிடும். சாலை ஓரத்திற் படுத்துறங்குவது தற்கவனமில்லாத செயல்தான். எனினும் அவ்வாறு உறங்குபவர்மீது காரை ஏற்றினுல், காரை ஏற்றியவரே பொறுப்பாகிருர்.

### எதிர்வாதியின் கவனமின்மையால் ஏற்படும் ஆபத்துக்களைத் தவிர்க்க வாதி செய்யும் முயற்சிகள்

எதிர்வாதியின் செயலால் நிகழும் ஆபத்திலிருந்து தப்புவதற்கு வாதி இன்னோர் ஆபத்தான செயலைச் செய்யலாம். அதனுல் வாதிக்குத் தீங்கு விளைந்தால் அதற்கும் எதிர்வாதியே பொறுப்பாகிருர்.

எதிர்வாதி ஓட்டிச்சென்ற குதிரை வண்டியில் வாதி பயணம் செய்துகொண்டிருந்தார். திடீரென்று கடிவாளம் அறுந்துபோய்க் குதிரைகள் கட்டுக்கடங்காத நிலையில் பயந்து ஓடத்தொடங்கின. வாதி தம்மைக் காப்பாற்றிக்கொள்வதற்கென வண்டியிலிருந்து வெளியில் குதித்தார். அதனுல் அவர் கால் முறிந்துவிட்டது. ஆனுல், அவர் வண்டியிலேயே இருந்திருந்தால் ஆபத்து விளைந்திருக்காது. ஏனெனில் குதிரைகள் சிறிது நேரத்தில் அடக்கப்பட்டுவிட்டன. வாதியின் நடத்தையைக் குறை சொல்லுவதற்கில்லை என்றும் அவர் தமக்கு விளைந்த காயத்திற்கு எதிர்வாதியிடமிருந்து நட்டஈடு பெறலாமென்றும் தீர்ப்புச் செய்யப்பட்டது. [Jones V. Boyce (1816) I Starkie 493]

### எதிர்வாதியின் நடத்தையால் வாதி விழிப்பின்றி இருத்தல்

சாதாரணமாக ஒருவர் தம்மைப் பாதுகாத்துக்கொள்வதில் விழிப்பாக இருக்கவேண்டும். ஆனுல், சில வேளைகளில் எதிர்வாதியின் செயல் வாதியின் கவனமின்மைக்குக் காரணமாகலாம். அப்பொழுது வாதியின் கவனமின்மை அவருக்கு எதிராகப் பயன்படுத்தமுடியாது.

இரயில்வேக் கம்பெனியார், சாலையும் இரயில் பாதையும் சேரும் இடத்திலுள்ள சாலைக் கதவுகளை மூடாது வைத்திருந்தனர். எனவே, இரயில் எதுவும் வரவில்லை என்ற எண்ணத்தில் இரயில் பாதையை வாதி கடக்கலாம். அப்பொழுது அவருக்குக் காயம் விளைந்தால் அதற்கு இரயில்வே பொறுப்பு ஆகிறது. [North Eastern Ry V. Wanless (1874) L. R. 7]

### தற்கவனமின்மை பற்றிய சில வழக்குகள்

பனிமூட்டமான காலை வேளையில் மோட்டார் சைக்கிளில் போய்க்கொண்டிருந்த வாதி சாலையில் குறுக்கே நிறுத்தி வைக்கப்பட்டிருந்த எதிர்வாதியின் லாரியின்மீது மோதிவிட்டார், இருவரும் விபத்திற்குப் பொறுப்பானவர்கள் என்பது தீர்ப்பு. [Harvey V. Road Haulage (1952) I KB 120]

தம்முடைய முதலாளி கொடுத்த களிம்பைத் தடவிக்கொண்டு வேலை செய்யாததால் தொழிலாளி நோய்வாய்ப்பட்டார். முதலாளி தொழிலாளி இருவரும் இதற்குப் பொறுப்பானவர்கள். [Clifford V. Challan & Son Ltd. (1951) I K.B. 495]

குப்பை சேகரிக்கும் லாரியில் ஏறிச் செல்லக்கூடாது என்று விதிக்கப்பட்டிருந்தும், வேலையாளான ஒருவர் அதில் ஏறிச் சென்ருர். இன்னெரு காருடன் இந்த லாரி மோதியதால் அவர் இறந்தார். இறந்தவரின் தற்கவனம் இன்மையே அவர் இறப்பிற்குக் காரணம் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Davies V. Swan Motor Co. (1949) 2 K.B. 291]

### தற்கவனமின்மைக் கொள்கை குழந்தைகளைப் பொறுத்து ஏற்கப் படுவதில்லை

கவனமாக இருக்கும் அறிவு குழந்தைகளுக்கு இல்லாததால், குழந்தைகளின் தற்கவனமின்மையால் அவர்களுக்குத் தீங்கு விளைந்தது என்று கூறுவதைச் சட்டம் ஒப்புவதில்லை.

எதிர்வாதியின் குதிரை பூட்டிய வண்டி கவனிப்பாரற்றுத் தெருவில் நிறுத்தி வைக்கப்பட்டிருந்தது. ஏழு வயதுப் பையன் ஒருவன் வாதி வண்டியின் மேல் ஏறினுன். இன்னெரு சிறுவன் குதிரையை ஓட்டி விட்டான், வண்டியில் ஏறிய சிறுவன் விழுந்து காயம் அடைந்தான். அதற்குப் பொறுப்பு எதிர்வாதியே என்பது தீர்ப்பு. [Lynch V. Nurdin (1841) 1 Q. B 29]

மூன்றரை வயதுள்ள குழந்தை தெருவில் ஓடிக்கொண்டிருந்த போது எதிர்வாதியின் வண்டியில் அடிபட்டது. எதிர்வாதி நட்டஈடு கொடுக்கவேண்டியது எனத் தீர்ப்புச் செய்தனர். [Gardner V. Grace (1858) 1 F & F 359]

ஒன்பது வயதுள்ள சிறுவன் தன் தாயாரின் காருக்குப் பெட்ரோல் வேண்டும் என்று கேட்டு எதிர் வாதியிடமிருந்து வாங்கி வந்தான். ஒரு பந்தம் செய்து அதில் பெட்ரோலை ஊற்றித் தீ வைத்தான். அதன் பயனுய்ச் சிறுவன் காயமுற்ருன். சிறுவனுக்குப் பெட்ரோலின் தன்மை தெரியாதாகையால் அவனது கவனமின்மையை எதிர்வாதிக்குச் சாதகமாக ஏற்றுக்கொள்ள முடியாது என்பது தீர்ப்பு, [Yachuk V. Oliver Blais Co. Ltd. (1949) A.C. 386]

சிறுவர்களின் வயதையும் அவர்கள் அறிவு வளர்ச்சியையும் ஆராய்ந்து அவர்களுக்கு விளையத்தக்க தீங்கின் தன்மையை அறியும் திறன் இருந்ததா என்பதையும் பார்த்தே, "தற்கவன

மின்மை'' என்ற குறைக்கு அவர்களை ஆளாக்குவது முறையா என்பது தீர்மானிக்கப்படுகிறது.

வாதியின் தற்கவனமின்மை அவருக்கு விளைந்த தீங்கிற்குக் காரணமாக இருந்ததால் அவருக்கு நட்டஈடு கிடைக்கத்தக்கதில்லை என்ற விதி ஆங்கில நாட்டில் இருந்தது. ஆனால், 1945ஆம் வருடத்திய சட்டப்படி [Law Reform (Contributory Negligence) Act 1945] இங்கிலாந்துநாட்டில் பழைய விதி மாற்றப் பட்டுவிட்டது. புதுச்சட்டத்தின்படி தற்கவனமின்மைக் கொள்கை ஏற்கப்படும் வழக்குகளில் வாதிக்கு ஏற்பட்ட தீங்கிற்கான பொறுப்பை வாதி எதிர்வாதி இருவருக்கும் சூழ்நிலைகளுக்கேற்பப் பகிர்ந்து அதற்கேற்ற விகிதப்படியுள்ள நட்டஈட்டுத் தொகையை எதிர்வாதி அளிக்கவேண்டும்.

நம் நாட்டில் தற்கவனமின்மை ஏற்கப்படும் வழக்குகளில் நட்டஈட்டுப் பொறுப்பை வாதி எதிர்வாதிகளுக்குள் பகிர்வது பற்றிச் சட்டம் ஏதுமில்லை. இதற்குச் சட்டம் இயற்றுவது இன்றியமையாததாகும். நம் நாட்டு நீதிமன்றங்களும் ஆங்கில நாட்டு 1945ஆம் வருடத்திய சட்டத்தின் கொள்கைகளைப் பின்பற்றியே வழக்குகளைத் தீர்ப்பார்கள் என்று நாம் எதிர்பார்க்கலாம்.

இவ்வாறு, கவனமின்மையான ஒருவரது நடத்தையால் பிறருக்குக் கேடு விளைவதைச் சட்டம் தீங்கெனக் கொள்ளுகிறது. தமது செயலால் பிறருக்குக் கேடு விளைவதைத் தவிர்க்கவேண்டிய கடமை ஒருவருக்கு இருந்தும் அதில் அவர் தவறுவது ''கவனமின்மை'' என்ற தீங்காகும். அதனால் பிறருக்கு விளையும் நட்டத்திற்குத் தீங்கிழைத்தவர் பொறுப்பாகின்றார்.

---

# பகுதி 11

## இடர் விளைக்கும் பொருள்களும், கடும் பொறுப்பும் (Dangerous Chattels and Strict Liability)

### (அ) கடும் பொறுப்பு அல்லது வரம்பிலாப் பொறுப்பு (Absolute or Strict Liability)

*கடும் பொறுப்பு (அல்லது வரம்பில்லாப் பொறுப்பு) (Strict Liability) என்றால் என்ன? - Rylands V. Fletcher வழக்கிற்கூறப் பட்ட கொள்கை விளக்கம்*

ஒருவர் கருதிச் செய்யும் தீங்கிற்கும், கவனமின்மையால் விளை விக்கும் தீங்கிற்கும் பொறுப்பாகிறார் எனக் கண்டோம். சில வேளைகளில், தீயகருத்தும், கவனமின்மையும் இல்லாத ஒருவரை, பிறருக்கு விளையும் தீங்கிற்குச் சட்டம் பொறுப்பாக்குகிறது. இது எப்பொழுது எனக் காண்போம்.

ஒரு நகரில் விலங்குப் பயிற்சிக் காட்சி (Circus) நடக்கிறது. கொடிய வனவிலங்குகள் பயிற்றுவிக்கப்பட்டு, காட்சிச் சாலை நடக்கும் இடத்தில் கூண்டுகளில் அடைத்து வைக்கப்பட்டிருக் கின்றன. வழக்கம்போல் காட்சிக்கென்று கூண்டைத் திறந்ததும், ஒரு புலி அதைப் பயிற்றுவிப்பவரைத் திடீரென்று தாக்கி விட்டுத் தப்பி ஓடி, நகருக்குள் புகுந்து வேறு சில பொதுமக்களையும் தாக்கிக் காயம் விளைவித்தது என வைத்துக் கொள்வோம். இப்பொழுது, புலியால் பொதுமக்களுக்கு விளைந்த தீங்கிற்கு யார் பொறுப்பாவது? புலி கூண்டிலிருந்து தப்பியது பயிற்சிக் காட்சி நடத்துபவரின் கவனமின்மையால் அன்று. கூண்டில் கவனமாகவே புலி அடைத்து வைக்கப்பட்டிருந்தது. அது தப்பி யது எதிர்பாராத செயலாகும். அது காட்சியாளர் வேண்டு மென்று செய்ததும் அன்று. எனவே, புலி தப்பியோடியது காட்சி நடத்துபவரின் கருதிய செயலாலுமன்று, கவனமின்மையாலு மன்று. அப்படியிருக்கப் புலியால் விளைந்த தீங்கிற்கு யாரைப் பொறுப்பாக்குவது?

நமது உள்ளறிவு உணர்த்துகிறது, காட்சியை நடத்துபவர் தாம் புலியின் செயலுக்குப் பொறுப்பாக வேண்டுமென்று. ஏன்? வன விலங்குகளை நகருக்குள் கொண்டு வந்து வைத்தவர் அவர். இடர் விளைக்கும் இயல்புள்ள அந்த விலங்குகள் தப்பித்துச் சென்றால் பிறருக்குத் தீங்கு நிச்சயம் விளையும். இந்நிலையில் அவற்றை நகரில் கொண்டு வந்து வைத்தால் அதற்கான முழுப் பொறுப்பையும் அவர் ஏற்றேயாக வேண்டும். ஆபத்தான சூழ்

நிலையை ஏற்படுத்திய அவரே அதனால் விளையும் எல்லாவற்றுக்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டியவர் ஆகிறார். ஆகையால், அவருடைய கவனமின்மை ஏதுமின்றிப் புலி தப்பிச் சென்றாலும் அதனால் விளையும் தீங்கிற்கும் அவரே பொறுப்பை ஏற்க வேண்டும். இதுவே, நம் பொது அறிவு புகலும் நியாயம்.

இதையேதான் சட்டமும் விதிக்கிறது. சட்டப்படியும் புலியால் விளைந்த தீங்கிற்குக் காட்சி நடத்துபவரே பொறுப்பாகிறார். "புலி தப்பியது என் கவனமின்மையால் அன்று, கருதிய செயலாலும் அன்று" என்று அவர் கூறுவதைச் சட்டம் ஏற்பதில்லை. இம்மாதிரிச் சூழ்நிலையில் காட்சி நடத்துபவருக்குள்ள பொறுப்பைக் கடும்பொறுப்பு (வரம்பில்லாப் பொறுப்பு - Absolute Liability) எனச் சட்டம் குறிப்பிடுகிறது.

Rylands V. Fletcher வழக்கிற் கூறப்பட்டகொள்கை விளக்கம் :

"கடும் பொறுப்பு" (Strict or Absolute Liability) என்ற சட்டக் கொள்கை முதன் முதலாகத் தெளிவுபடுத்தப்பட்டது Rylands V. Fletcher (1866) L.R. I Ex. 265 என்ற வழக்கில் என்பார்கள். அவ்வழக்கின் சாரம்:

ஆலையொன்றை நடத்திய எதிர்வாதி ஆலையின் உபயோகத்திற் கெனத் தம் ஆளுகையில் உள்ள நிலத்தில் ஒரு நீர்த் தொட்டியை அமைத்திருந்தார். அந்த நிலத்திற்கு அருகில் வாதியின் நிலக்கரிச் சுரங்கம் இருந்தது. இதற்கு நெடுநாட்களுக்கு முன், நிலக்கரி தோண்டும் வேலைக்காக அமைக்கப்பட்ட சுரங்க வழிகள் வாதி நிலத்திற்கும் எதிர்வாதியின் நிலத்திற்கும் இடையில் இருந்திருக்கின்றன. இது எவருக்கும் தெரியாது. எதிர்வாதி நிலத்தில் கட்டப்பட்ட நீர்த்தேக்கம் நிரப்பப்பட்ட உடன் அதிலிருந்து நீர் சுரங்கவழியாக வாதியின் நிலக்கரிச் சுரங்கத்திற்குச் சென்று அச்சுரங்கத்தை வெள்ளக்காடாக்கியது. அதனால் நட்டமடைந்த வாதி எதிர்வாதியிடமிருந்து நட்டஈடு கோரி வழக்கிட்டார். போதிய கவனத்துடனேயே எதிர்வாதி நீர்த்தேக்கத்தைக் கட்டினார் என்பது வழக்கில் மெய்ப்பிக்கப்பட்டது. இருந்தும் வாதிக்கு விளைந்த நட்டத்திற்கு எதிர்வாதி ஈடுசெய்ய வேண்டும் எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. கீழ்க்கண்டவாறு தீர்ப்பின் அடிப்படைக் கொள்கையை பிளேக்பர்ன் (Blackburn) என்ற நீதிபதி விளக்கினார்:

"இடர் விளைவிக்கும் இயல்புள்ள ஒரு பொருளை ஒருவர் தமது நிலத்தில் கொண்டு வந்து சேகரித்துவைத்தால், அதற்கான முழுப்பொறுப்பும் அவரையே சாரும். அந்தப் பொருள் அவர் நிலத்தைவிட்டு வெளிவந்து அதன் இயல்புப்படி விளைவிக்கும் எல்லாக் கேடுகளுக்கும் அவரே ஈடுசெய்ய வேண்டியவர் ஆகிறார்."

எனவே, எதிர்வாதி கவனமின்றி நடந்துகொண்டார் என்று வாதி மெய்ப்பிக்க வேண்டிய அவசியம் இல்லை. "நான் கேடு விளையக் கூடாது என்று எல்லா முன்னெச்சரிக்கையான நடவடிக்கைகளும் எடுத்திருந்தேன்" என்று எதிர்வாதி கூறுவதையும் சட்டம் ஏற்பதில்லை.

மேலே சொல்லப்பட்ட விதி, தீங்கு விளைவிக்கும் எல்லாப் பொருள்களுக்கும் பொருந்துவதாகும். இடர் விளைவிக்கும் இயல்புள்ள பொருள்கள், விலங்குகள் எல்லாம் இந்த விதியின்கீழ் வருகின்றன. நீர், நெருப்பு, நச்சுப்புகை, வெடி மருந்துகள், வனவிலங்குகள், மின்சாரம் இவைகளெல்லாம் இடர் விளைக்கும் இயல்புள்ளவையாதலால் இந்த விதியின்கீழ் வருபவை என்று பின் தீர்ப்புகளில் கூறப்பட்டது.

ஒருவர் நிலத்தில் இயல்பாக விளையும் பொருள் வெளியேறி இன்னொருவருக்குத் தீங்கு விளைவித்தால் மேலே கூறப்பட்ட விதி பொருந்துவதில்லை. அந்த நிலத்தில் கொண்டு வந்து சேகரிக்கப்பட்ட பொருள்களுக்கே விதி பொருந்துவதாகும்.

இடர் விளைக்கும் பொருள்களைத் தம்முடைய சொந்த நிலத்தில்தான் ஒருவர் வைத்திருக்கவேண்டும் என்பதில்லை. வாடகைக்கோ, குத்தகைக்கோ பெறப்பட்ட நிலத்தை அவ்வாறு பயன்படுத்துவோரும் அதற்கான பொறுப்பை உடையவர்கள்தாம்.

தீங்கு இழைக்கப்பட்டவர் எதிர்வாதியின் அண்டை நிலத்தில் உள்ளவராக இருக்கவேண்டும் என்பது கட்டாயம் இல்லை. எவருக்குத் தீங்கு விளைந்தாலும் அவர் நட்டஈடு பெறலாம்.

ஆபத்தான பொருளைப் பொதுச் சாலையில் ஒருவர் கொண்டு செல்லும்பொழுது அது தப்பிப்போய் இன்னொருவருக்குத் தீங்கு விளைவிக்கலாம். அப்பொழுதும் தீங்கிற்கான பொறுப்பு அவரையே சாருகிறது. [Manton V. Brockle Bank (1923) 2 K. B. 212]

எதிர்வாதி தம் நிலத்தில் உரம் உற்பத்தி செய்வதற்கென எலும்புத் துண்டுகளைச் சேகரித்து வைத்திருந்தார். எலும்புகளைத் தின்ன வரும் எலிகள் அடுத்திருந்த வாதியின் நிலத்தில் உள்ள பயிர்களுக்குத் தீங்கு விளைத்தன. இதற்கு எதிர்வாதி பொறுப்பல்லர் என்பது தீர்ப்பு. ஏனெனில் எதிர்வாதி தம்முடைய நிலத்தை வழக்கு மீறிய முறையில் பயன்படுத்தவில்லை. மேலும், எலும்பைத் தின்ன வரும் எலிகள் எதிர்வாதியின் நிலத்திலோ அல்லது கட்டுப்பாட்டிலோ இல்லை. [Stearn V. Prentice Brothers Limited (1919) I. K. B. 394]

எதிர்வாதி நம் நிலத்தில் பல தேன் கூடுகள் வைத்திருந்தார். தேன் எடுப்பதற்கு முன் புகையிட்டதால் தேனீக்கள் பறந்து போய்ப் பக்கத்து நிலத்தில் இருந்த வாதியின் குதிரைகளைக் கொட்ட, குதிரை வாதியை ஒரு சுவரின்மீது மோதும்படி தூக்கி எறிந்தது. இதற்கு எதிர்வாதி பொறுப்பாக்கப்பட்டார். வாதியை எச்சரித்தபின் எதிர்வாதி புகையிட்டிருந்தால் எதிர்வாதி நட்ட ஈடு கொடுக்க வேண்டியிருந்திருக்காது. [O' Gorman V. O' Gorman (1903) 2. L. R. 573]

எதிர்வாதியின் நிலத்தில் நின்ற நச்சு இலைகளுள்ள மரம் அவர் நிலத்திற்கும் அப்பாலுள்ள வாதியின் தோட்டத்திற் குள்ளும் கிளைகளைச் செலுத்தி வளர்ந்திருந்தது. வாதியின் குதிரை அந்த இலைகளைத் தின்றதால் மாண்டது. இதற்கு எதிர் வாதி பொறுப்பாக்கப்பட்டார். [Crowhurst V. Amersham Board (1878) L. R. 4. Ex 5.] நச்சு இலைகள் உள்ள மரக்கிளைகள் எதிர் வாதியின் நிலத்தில் வரம்புக்குள்ளேயே இருந்திருந்தால் எதிர் வாதிக்குப் பொறுப்பேதுமில்லை.

ஒரு வெடி மருந்துத் தொழிற்சாலையை மேற்பார்த்துக் கொண்டிருந்த ஒரு பணியாளர் குண்டு வெடித்ததால் காய முற்றார். அதற்குத் தொழிற்சாலையாளர் பொறுப்பல்லர் என்பது தீர்ப்பு. ஏனெனில் வெடி மருந்து வெடித்துச் சேதத்தை விளைத் தது இன்னொருவர் நிலத்தில் அன்று. [Read V. Lyons & Co (1947) A. C. 156]

இடர் விளைவிக்கும் இயல்புடைய பொருளைத் தமது நிலத்தில் வைத்திருக்கும் ஒருவர், அது அவருடைய கட்டுப்பாட்டிலிருந்து தப்பிப் போய் இன்னொருவருக்குக் கேடு விளைவித்தால், அதற்கு முழுப் பொறுப்பும் உடையவர் ஆகிறார். கவன மின்மையாக அவர் நடக்கவில்லை என்பதால் அந்தப் பொறுப்புத் தீர்வதில்லை. இந்தக் கோள்கையையே "கடும் பொறுப்பு" அல்லது "வரம்பிலாப் பொறுப்பு" (Absolute or Strict Liability) என்று கூறுகிறோம்.

### (ஆ) "கடும் பொறுப்பு" விதிக்கு விலக்குகள்

"கடும் பொறுப்பு" உள்ளவர்களுக்கு அந்தப் பொறுப் பிலிருந்து சில வேளைகளில் சட்டம் விலக்களிக்கிறது. அவையாவ:

(1) தெய்வச் செயல் (Act of God).

(2) மூன்றாவது நபரின் செயலால் விளையும் தீங்கு.

(3) வாதியின் தவறுதல்.

(4) வாதியின் சம்மதம்.

(5) சட்டப்படியுள்ள அதிகாரம் (Statutory authority).

(1) தெய்வச் செயல் (Act of God): மனித ஆற்றலுக்கு மிஞ்சிய, மனிதனால் முன்னறிய முடியாத நிகழ்ச்சிகளைத் "தெய்வச் செயல்" என்று குறிப்பிடுகிறோம். பெரும்புயல், மின்னல், வழக்க மீறிய கடும்பனி இவை போன்றவையெல்லாம் இயற்கையின் சீற்றத்தால் எழுபவை; மனிதனால் கட்டுப்படுத்த முடியாதவை. இவற்றின் காரணமாக எதிர்வாதி தம் நிலத்தில் வைத்திருந்த ஆபத்தான பொருள் வெளியேறிப் பிறருக்குத் தீங்கு விளைவித்தது என்றால், எதிர்வாதி அதற்குப் பொறுப்பாவது இல்லை.

எதிர்வாதி ஒரு நீரோட்டத்தைத் தடுத்துத் தமது நிலத்தில் சில செயற்கைக் குளங்களைக் கட்டிவைத்திருந்தார். குளங்களின் கரைகள் நன்றாகவே அமைந்திருந்தன. திடீரென அடித்த புயலினால் குளத்தின் கரைகள் உடைந்து, குளங்களின் நீர் ஓடையில் வெள்ளமாகச் சென்று, சில பாலங்களைத் தகர்த்துவிட்டது. இதற்கு எதிர்வாதி பொறுப்பன்று என்றும், இது தெய்வச் செயலால் விளைந்தது என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. [Nichols V. Marsland, (1876) 2. Ex. D. 1.]

(2) மூன்றாவது நபரின் செயல்: மூன்றாவது மனிதர் வேண்டுமென்று செய்த செயலால், இடர் விளைக்கும் பொருள் எதிர்வாதியின் நிலத்திலிருந்து வெளியேறித் தீங்கு விளைவித்தால் அதற்கு எதிர்வாதி பொறுப்பாவதில்லை.

(3) வாதியின் தவறுதல்: வாதியின் தவறான செயல் காரணமாக அவருக்குத் தீங்கு நேர்ந்தால் அதற்கு எதிர்வாதி பொறுப்பாவதில்லை.

எதிர்வாதியால் கூண்டில் அடைத்து வைத்திருக்கும் புலியைப் பார்க்கச் சென்றவர் கூண்டின்மீது ஏறிக் கூண்டிற்குள் கையை விட்டதால் புலியால் காயப்படுத்தப்பட்டார். இதற்கு எதிர்வாதி பொறுப்பல்லர். [Marlor V. Ball (1900) TLR. 239]

(4) வாதியின் சம்மதம்; வாதிக்கும் எதிர்வாதிக்கும் பொதுவான நலனுக்காக வைக்கப்பட்டிருந்த இடர் விளைக்கும் பொருள் வெளியேறி வாதிக்குத் தீங்குவிளைவித்தால் அதற்கு எதிர்வாதி பொறுப்பாக மாட்டார்.

ஒரு கட்டிடத்தின் அடுக்கு மாடிகளில் இருக்கும் எல்லோருடைய உபயோகத்திற்குமென்று உச்சி மாடியில் கட்டப்பட்டிருந்த நீர்த் தொட்டி உடைந்து, ஒரு மாடியில் உள்ள வாதி குடியிருக்கும் பாகத்தை நீராக்கிச் சேதப்படுத்தியது எனில், அதற்கு அக்கட்டிடத்தின் சொந்தக்காரர் பொறுப்பாவதில்லை. பொதுப் பயனுக்கு நீர்த்தொட்டி வைக்கப்பட்டது வாதியின் சம்மதத்தையும் பெற்றுத்தான் எனக் கருதப்படுகிறது.

(5) சட்டப்படியுள்ள அதிகாரம்: சட்டமளிக்கும் அதிகாரத்தின் படி ஒருவர் இடர் விளைக்கும் பொருளை வைத்திருந்து அது வெளியேறித் தீங்கு விளைத்தால் அதற்கு அவர் பொறுப்பாவதில்லை.

சாகுபடிக்கான ஏரியைப் பராமரிப்பதற்குச் சட்டப்படி அதிகாரம் உண்டு. ஏரி பெருகி இன்னொருவருக்குத் தீங்கு விளைந்தால் அதற்கு ஏரியைப் பராமரிக்கவேண்டியவர் "கடும் பொறுப்பு" உடையவர் அல்லர். கவனமின்மை இருந்தால் மட்டும் பொறுப்புள்ளவர் ஆவார். [Madras Railway Co. V. The Zamindar of Karvetnagar - (1874) I. I. A. 364]

இடர் விளைக்கும் பொருள்களைத் தம் வசம் வைத்திருப்பவர்கள் அவைகளால் பிறருக்கு விளையும் தீங்குகள் அனைத்திற்கும் பொறுப்பேற்பதுதான் நேர்மையாகும். விளைந்த தீங்கு அவரது கவனமின்மையால்தான் ஏற்பட்டிருக்கவேண்டும் என்பதன்று. இதுவே, கடும்பொறுப்பு அல்லது வரம்பிலாப் பொறுப்பு என்று சட்டத்தில் கூறப்படுகிறது. Ryland, V. Fletcher என்ற வழக்கில் இந்த விதி தெளிவுபடுத்தப்பட்டது.

## (இ) விலங்குகள் வைத்திருப்போரின் கடமை

*இடர் விளைக்கும் காட்டு விலங்குகள், வீட்டு விலங்குகள் இவைகளைப் பொறுத்த வேறுபாடு - விலங்குகள் அத்துமீறி நுழைதல்.*

விலங்குகளாலும் மக்களுக்கு இடர் விளைவதுண்டு. எனவே, விலங்குகளை வைத்திருக்கும் ஒருவர் அதன் மூலம் பிறருக்குத் தீங்கிழையாது இருத்தல் வேண்டும்.

நம் வாழ்விற்கு ஆடு மாடுகள், நாய்கள், குதிரைகள் முதலியன உதவியாக இருக்கின்றன. இவை நம்மால் வளர்க்கப்படுகின்றன. இவற்றால் சாதாரணமாகத் தீங்கு விளைவதில்லை. இவற்றை வீட்டு விலங்குகள் (Domesticated animals) என்று நாம் குறிப்பிடுகிறோம். புலி, சிறுத்தை, குரங்கு போன்ற இடர் விளைக்கும் விலங்குகளை இடர் விளைக்கும் விலங்குகள் (Dangerous animals) என்று குறிப்பிடுகிறோம்.

ஒருவர் வீட்டு விலங்குகளை வளர்ப்பதற்கும், இடர் விளைக்கும் விலங்குகளைத் தம் வசம் வைத்திருப்பதற்கும் வேறுபாடு உண்டு.

(1) இடர் விளைக்கும் விலங்குகளை வைத்திருப்பவரின் பொறுப்புக் "கடும் பொறுப்பாகும்." அவருடைய கவனமின்மையால் அவ்விலங்குகள் விளைவிக்கும் தீங்குகளுக்கு மட்டுமே அவர் பொறுப்பு என்பதில்லை.

ஒரு விலங்குப் பயிற்சிக் காட்சியைப் பார்க்கச் சென்ற ஏழு வயதுச் சிறுவன் சிங்கத்தின் கூண்டினருகில் சென்று விட்டான். சிங்கம் கூண்டிற்கு வெளியே தன் கால்களை நீட்டிச் சிறுவனைப் பிடித்து இழுத்துக் காயப்படுத்தியது. காட்சியை நடத்துபவர் இத்தீங்கிற்குப் பொறுப்பாக்கப்பட்டார். [Pearson V. Coleman Bros. (1948) 2. K. B. 359]

காட்டு விலங்குகளுக்கு இடர் விளைக்கும் குணம் இயல்பாகவே இருப்பதால், அவற்றை வைத்திருப்பவரின் பொறுப்பு வரம்பிலாப் பொறுப்பாகின்றது.

(2) வீட்டு விலங்குகளிலும் நாய், காளை போன்ற விலங்குகளில் சில தீங்கு விளைவிக்கும் குணமுடையதாக இருக்கலாம். சில நாய்கள் கோழிகளைப் பிடித்துக் கொன்றுவிடும். சில வண்ணத் துணிகளைக் கண்டால் மிரண்டு அவற்றை முட்டி வீழ்த்தும் தன்மையுடைய காளைகள் உண்டு. இம்மாதிரி இடர் விளைக்கும் குணமுடைய வீட்டு விலங்குகளை வைத்திருப்போரின் பொறுப்பும் கடும் பொறுப்பாகும். ஆனால், அந்த விலங்கு குறிப்பிட்ட சேட்டை செய்யும் தன்மையுடையது என்பது அதன் சொந்தக்காரருக்குத் தெரிந்திருக்க வேண்டும். ஒரு குறிப்பிட்ட விலங்கினுடைய குறும்புத்தன்மையை அதற்கு உடையவர் அறிந்திருந்தால் அதை ஆங்கிலத்தில் Scienter என்பார்கள். குறிப்பிட்ட விலங்கினது இடர் விளைக்கும் இயல்பை, அதை உடையவர் அறிந்திருப்பது (Scienter) எனப்படும். அந்த விலங்கின் சொந்தக்காரர் அதன் குறும்புத் தன்மையை அறிந்தவர் என்பது மெய்ப்பிக்கப்பட்டால்தான், அந்த விலங்கால் தீங்கிழைக்கப்பட்டவர் அதன் சொந்தக்காரரிடமிருந்து நட்ட ஈடு பெற முடியும். [May V. Burdett. (1846) 9. Q. B. 101]

அந்தக் குறிப்பிட்ட விலங்கின் குறும்புக் குணத்தை அதன் சொந்தக்காரரின் வேலையாளோ, அல்லது அவர் குடும்பத்தைச் சேர்ந்த எவரோ அறிந்திருந்தாலும் அது சொந்தக்காரரால் அறியப்பட்டதாகவே கருதப்படும்.

வெறி கொண்ட நாய், முட்டித் தள்ளும் செம்மறியாடு, உதைக்கும் குதிரை இவற்றால் விளைவிக்கப்பட்ட தீங்கிற்கு அவற்றின் குணம் தெரிந்த சொந்தக்காரர்கள் பொறுப்பாக்கப் பட்டிருக்கின்றனர். அவர்கள் கவனமின்மையாக இருந்தாலும் இல்லாவிடினும் அவர்களுக்குப் பொறுப்புண்டு.

"காட்டு விலங்குகள் நன்றாகப் பழக்கி வைக்கப்பட்டவை. எனவே அவை மூர்க்கத்தன்மையை வெளிக்காட்டும் என நான் நினைக்கவில்லை," என்று கூறும் வாதம் ஏற்கப்படுவதில்லை. ஒரு மிருகக் காட்சியில் வலம் வந்து கொண்டிருந்த யானை ஒன்று,

நாய் குலைத்ததைக் கேட்டு மிரண்டு ஓடியதால் கூடாரம் சாய்ந்து வாதிகளுக்குக் காயம் ஏற்பட்டது. காட்சிச் சாலை நடத்தியவர் அதற்குப் பொறுப்பாக்கப்பட்டார். யானை மிரண்டது நாய் குலைத்ததால்தான் என்றாலும், யானையின் இயல்பான மூர்க்கத் தன்மையே வெளியாயிற்று. எனவே, யானையை வைத்திருந்த வரின் பொறுப்புக் கழிவதில்லை — [Behrens V. Bertram Mills Circus Ltd. (1957) 2. Q. B. 1.]

இடர் விளைக்கும் இயல்புடைய காட்டு விலங்கு, குறிப்பிட்ட இடர் விளைக்கும் குணம் பெற்ற வீட்டு விலங்கு,—(வீட்டு விலங் கின் குறிப்பிட்ட இடர் விளைக்கும் குணம் அதை வைத்திருப் போருக்குத் தெரிந்திருக்க வேண்டும்) — இவற்றால் ஏற்படும் தீங்குகளுக்கு அவற்றை வைத்திருப்போர் பொறுப்பாகின்றனர். அந்தப் பொறுப்புக் "கடும் பொறுப்பாகும்"; அஃதாவது அவர் கவனமின்மையாக இருந்தாலும் இல்லாவிட்டாலும் அவருக்கு அந்தப் பொறுப்பு உண்டு.

### விலங்குகள் அத்துமீறி நுழைதல் (Trespass by animals)

விலங்குகளை வைத்திருப்பவர்கள் அவை பிறர் நிலத்தில் நுழையாதவாறு பார்த்துக்கொள்ள வேண்டும். இது அவர்களின் கடும் பொறுப்பாகும். ஒரு மாடு இன்னொருவர் தோட்டத்தில் நுழைந்து பயிரை அழித்தாலோ, அங்குள்ள புல்லைத் தின்றாலோ அதற்கு மாட்டுக்காரர் பொறுப்பாகின்றார். ஒருவர் குதிரை இன் னொருவர் இடத்திற்குள் சென்று அங்குள்ளவர்களை உதைத்து விட்டது என்றால் அதற்குக் குதிரைக்காரர் பொறுப்பாகின்றார். அவர் கவனமின்றி இருந்தாரா என்பது பற்றி அக்கறையில்லை.

பூனை, நாய் இந்த இரண்டு விலங்குகளைப் பொறுத்தவரை சட்டம் சிறிது சலுகை காட்டுகிறது. ஏனெனில் அவற்றைக் கட்டுப்படுத்துதல் அவற்றின் சொந்தக்காரரால் முடியாத காரியம். மேலும் அவற்றின் அத்துமீறிய நுழைவால் விளையும் நட்டம் அற்பமானதாகவே இருக்கும்.

### வீட்டு விலங்குகளை வைத்திருப்பவரின் கவனமின்மை

வீட்டு விலங்குகளும் சில வேளைகளில் அவற்றை வைத்திருப் போரின் கவனமின்மையால் பிறருக்கு இடர் விளைவிப்பதுண்டு. அந்நிலை ஏற்படாமல் பார்த்துக் கொள்ள வேண்டியது அவை களை வளர்ப்போரின் கடமையாகும். பழக்கப்படாத குதிரையைக் கூட்டம் உள்ள இடத்தில் சவாரி செய்ய முயன்று அதனால் பிறருக்குத் தீங்கு விளைந்தால் அதற்குச் சவாரி செய்தவர் பொறுப்பாகின்றார்.

விட்டு விலங்கு நெடுஞ்சாலையில் (Highway) கவனிப்பாரற்று விடப்பட்டிருந்து அதனால் பிறருக்குத் தீங்கு விளைந்தால் அதற்கு அதை உடையவர் பொறுப்பாவது இல்லை. [Searle V. Wallbank-(1947) A. C. 341]

சாலை ஓரத்தில் படுத்திருந்த பன்றி சாலையில் ஓடிக்கொண்டிருந்த குதிரையைத் திகிலடையச் செய்ததால், குதிரை மிரண்டு ஒரு மோட்டார்மீது மோதியது. இதற்குப் பன்றிக்காரர் பொறுப்பில்லை என்பது தீர்ப்பு.

ஆனல், குதிரை பூட்டிய வண்டியை நகரின் வீதிகளில் கவனிப்பாரற்று விட்டு வைத்தால் அது கவனமின்மையான செயலாகும். [Haynes V. Harwood & son. (1935) I. K. B. 146]

## (ஈ) ஆபத்து விளைவிக்கும் இதர பொருள்கள்

*ஆபத்து விளைக்கும் இதர பொருள்கள் - இவைகளைக் கையாளுகையில் உள்ள கடமை.*

இடர் விளைக்கும் பொருள்களான மின்சாரம், வெடி மருந்து, நஞ்சு கலந்த பொருள்கள், நச்சு ஆவி, நெருப்பு இவைகளைச் சேகரித்துத் தம் நிலத்தில் வைத்திருப்பவர்கள் மிகுந்த கவனத்துடன் இருக்க வேண்டும், இவை பிறருக்குத் தீங்கு விளைவித்தால் அதற்கான முழுப் பொறுப்பும் சேகரித்து வைத்தவரையே சேருகிறது.

இடர் விளைக்கும் பொருள்களைக் கையாளும்பொழுது மிகவும் கவனமாக இருப்பது அந்தப் பொருளைக் கையாளுபவரின் கடமையாகிறது.

அதை இன்னொருவரிடம் கொடுக்கும்பொழுது அதில் அடங்கியிருக்கும் ஆபத்தைத் தெரியப்படுத்திக் கொடுத்தல் வேண்டும். நஞ்சு கலந்த மருந்தை விற்பவர் அந்த மருந்து உள்ள புட்டியில் வேறு ஒரு குறிப்புச் சீட்டைக் கவனமின்றி ஒட்டி விற்ருர் என்ருல் அச்சீட்டை நம்பி மருந்தை உண்டு பிறர் அடையும் தீங்கிற்குப் பொறுப்பாகிருர்.

தம்முடைய துப்பாக்கியைத் தம் நண்பரிடம் கொடுத்திருந்த ஒருவர் அதை வாங்கி வரும்படி சிறு வயதுள்ள தம் வேலைக்காரப் பெண்ணை அனுப்பினர். துப்பாக்கி மருந்தை எடுத்து விட்டுத்தான் துப்பாக்கியை அனுப்பும்படி சொல்லியிருந்தார். ஆனல் மருந்து சரியாக எடுக்கப்படவில்லை. துப்பாக்கியை வாங்கி வந்த வேலைக்காரப் பெண் வாதியின் குழந்தையை நோக்கி வேடிக்கையாகத் துப்பாக்கியைக் காட்டி விசையை இழுத்தது. மருந்து சரியாக எடுக்கப்படாததால் துப்பாக்கி வெடித்துக்

குழந்தை இறந்தது. இதற்குத் துப்பாக்கியின் சொந்தக்காரர் பொறுப்பு எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. [Dixon V. Bell. (1816) 5. M & S. 198]

சிறு பையனிடம் பெட்ரோலைக் கொடுத்து அனுப்பியவர் அதனுல் சிறுவனுக்கு விளைந்த தீங்கிற்குப் பொறுப்பாளுர்.

பலர் நடமாடும் இடத்தில் துப்பாக்கியை விட்டு வைப்பவர் அதைப் பிறர் எடுத்துச் சுட்டதால் விளையும் தீங்கிற்குப் பொறுப்பாகின்ருர். மாணவர்களுக்கு எட்டும் இடத்தில் எரியகத்தை (Phosphorus) வைத்து அதனுல் விளைந்த தீங்கிற்கு ஆசிரியர் பொறுப்பாளுர்.

இடர் விளைக்கும் பொருளை வைத்திருப்பவர் மிகவும் கவனத்துடன் நடந்து கொள்ளவேண்டும். அதைப் பிறர், முக்கியமாக வயது வராதவர்கள், கையாள முடியாத நிலையில் வைத்திருக்க வேண்டும். இந்தக் கடமையில் அவர் தவறிஞல் அது கவனமின்மையான செயலாகும். அந்தப் பொருள் இன்னெருவரால் கையாளப்பட்டு அதனுல் தீங்கு விளைந்தால் அதற்கான பொறுப்பு அப்பொருளை வைத்திருந்தவரைச் சேருகின்றது.

---

# பகுதி 12

## நிலம், கட்டிடம் இவைகளை உடையவரின் கடமை
## (Duties of Persons in Possession of Buildings and Structures)

*அழைக்கப்பட்டவர் (Invitee) - அனுமதி பெற்றவர் (Licensee) - அத்துமீறி நுழைபவர் (Trespasser) - இவர்களைக் குறித்து நிலத்தை அல்லது கட்டிடத்தை உடையவர்களுக்கு உள்ள கடமைகள் - கட்டிடத்தில் அல்லது இடத்தில் நடக்கும் செயல்களால் விளையும் தீங்கு.*

நம் அன்றாட வாழ்வில், நாம் இன்னொருவரின் ஆளுகையில் இருக்கும் கட்டிடம், கூடாரம், வண்டி, விளையாட்டு மைதானம் இவைகளுக்குள் சென்று வருகிறோம். ஒரு பொருளை வாங்குவதற்கென்று கடைக்குப் போகிறோம். விளையாட்டுக்களைப் பார்ப்பதற்கென்று விளையாட்டு மைதானத்திற்குள் கட்டணம் செலுத்திச் செல்லுகிறோம். பேசும்படம், நாடகம், நாட்டியம் இவைகளைக் கண்டு மகிழ்வதற்கு அந்தந்தக் கொட்டகைகளுக்குச் செல்லுகிறோம். நண்பர் ஒருவர் நம்மை விருந்துண்ண அழைத்தால் அதற்கு அவர் வீட்டிற்குப் போகிறோம். நம் வீட்டிற்கும் பிறர் வருகின்றனர். இவ்வாறு, ஒருவர் வசமுள்ள நிலம் அல்லது கட்டிடத்திற்குள் பிறர் போய் வருவது அவசியமாகிறது. தம் வசமுள்ள கட்டிடத்தில் பிறர் இருக்கும்பொழுது அவர்களுக்கு அக்கட்டிடத்தின் நிலை காரணமாகவோ வேறு வழியிலோ தீங்கு விளையாதபடி பார்த்துக்கொள்ள வேண்டியது ஒருவரது கடமையாகிறது.

பிறர் வருவதற்குரிய கட்டிடத்தை வைத்திருப்பவரின் கடமையைப் பற்றி இப்பிரிவில் காணவிருக்கிறோம். "கட்டிடம்" என்பதில் நிலம், வண்டி, கப்பல், இரயில் வண்டி முதலியனவும் அடங்கும்.

ஒரு கட்டிடம் அல்லது நிலம் யார் ஆளுகையில் இருக்கிறதோ அவருக்கே அங்கு வருபவர்களுக்குத் தீங்கு விளையாதபடி பார்த்துக் கொள்ள வேண்டிய கடமை இருக்கிறது. கட்டிடத்தின் உடைமை தன்னுடைய வசம் இல்லாத அதன் சொந்தக்காரருக்குப் பொறுப்பேதும் இல்லை.

ஆங்கில நாட்டுத் தீர்ப்புகளில் ஒருவர் வசமுள்ள கட்டிடத்திற்குள் வருபவர்கள் மூன்று வகையினராகப் பிரிக்கப்படுகின்றனர்.

(1) அழைக்கப்பட்டவர் (Invitee)

(2) அனுமதி பெற்றவர் (Licensee)

(3) அத்து மீறி நுழைந்தவர் (Trespasser)

இடத்தை உடையவரின் கடமை இவர்கள் ஒவ்வொரு வகையினரைப் பொறுத்தும் வெவ்வேறு விதமாக அமைகிறது.

1957ஆம் ஆண்டில் உடைமையிலுள்ளோரின் பொறுப்புச் சட்டம் (The Occupiers Liability Act, 1957) என்ற சட்டம் இங்கிலாந்து நாட்டில் இயற்றப்பட்டு 1958 சனவரி முதல் நாளிலிருந்து அமுலில் இருக்கிறது. இச்சட்டத்தில் அழைக்கப்பட்டவருக்கும், அனுமதி பெற்ரேருக்கும் உள்ள வேறுபாடு அகற்றப்பட்டு, இரு சாரார் பாலும் கட்டிடத்தை உடையவர் கவனமாக இருந்து பாதுகாப்பளிக்க வேண்டும் என விதிக்கப்படுகிறது.

இருப்பினும் முன் தீர்ப்புக்களில் உள்ள கொள்கைகளை நாம் தெரிந்துகொள்ளவேண்டும்.

(1) "அழைக்கப்பட்டவர்" (Invitee) என்றுகுறிப்பிடுவது யாரை?

பொதுவாக, நமது இடத்திற்கு விருந்தினராக அழைக்கப்பட்டவர்களையே, "அழைக்கப்பட்டவர்கள்" (Invitees) என்று நாம் குறிப்பிடுவது வழக்கம். ஆனல் இங்கு அச்சொற்ருெடர் தனிப்பட்ட பொருளுடையதாகும். விருந்தினர்கள் சட்டத்தில் "அழைக்கப்பட்டவர்கள்" ஆவதில்லை.

ஒரு கட்டிடத்தை உடையவரின் தொழில் அல்லது பொருள் நலத்திற்கென அவரால் அழைக்கப்பட்டவர்களே, "அழைக்கப்பட்டவர்" ஆகின்றனர். கட்டிடத்தை உடையவர், அதற்குள் வருபவர் இருவருக்கும் "பொதுவான நலன்" (Common interest) இருக்கவேண்டும். [Indermaur V. Dames - (1866) L. R. C. P. 274]

வணிகர் தமது ஆதாயத்திற்காக, விற்பனைக்கான பொருள்களைத் தமது கடையில் வைத்து அதை வாங்க வருபவர்களை வரவேற்று நிற்கிருர். எனவே, பொருள்கள் வாங்கும் பொருட்டு ஒரு கடைக்குள் செல்பவர்கள் "அழைக்கப்பட்டவர்கள்" ஆகின்றனர்.

ஒரு வைத்திய சாலையில் பணம் கொடுத்துக் குணம் பெற்று வரும் நோயாளியைப் பார்க்கச் செல்லுபவர், கொடுத்த கடனை வசூலிக்கச் செல்லுபவர், தங்கள் குழந்தைகளின் திறமையைக் காட்டும் காட்சிகளைக் காண்பதற்கென அக்குழந்தைகளின் பள்ளிக்குச் செல்லும் பெற்ரேர், நண்பரை வழியனுப்ப அல்லது வரவேற்க அல்லது சரக்குகளை எடுப்பதற்கு என்று இரயில் நிலையம் செல்பவர், தீயணைப்பதற்கென அழைக்கப்பட்டு வந்த

தியணைப்பவர், ஒருவரின் கட்டிடத்தைப் பழுது பார்ப்பதற்கென வருபவர், இவர்கள் எல்லாம் "அழைக்கப்பட்டவர்கள்" எனத் தீர்ப்புக்கள் கூறுகின்றன.

இவ்வாறு, இடத்தையுடையவருடன் "பொது நலன்" கொண்டிருப்பவர் அல்லது அவருடைய தொழில், பொருள் நலன் இவற்றிற்கென அவரால் அழைக்கப்படுபவர், இவர்கள் அவர் இடத்திற்குள் வந்தால் "அழைக்கப்பட்டவர்கள்" எனப் படுகின்றனர்.

### (2) "அனுமதி பெற்றவர்" (Licensee) என்று குறிப்பிடுவது எவரை?

கட்டிடத்தை உடையவரின் அனுமதி பெற்றுக் கட்டிடத்திற் குள் வருபவர் "அனுமதி பெற்றவர்" ஆகிறார்.

அனுமதி பெற்றவர் கட்டிடத்திற்குள் வருவது வருபவரின் நலனுக்காகவேதான். கட்டிடத்தை உடையவருக்கும் அனுமதி பெற்று வருவோருக்கும் பொதுவான நலன் ஏதுமில்லை. இந்தப் பொதுவான நலன் இல்லாததாலேயே அவரை அழைக்கப்பட்ட வர் என்று கூறாமல் 'அனுமதி பெற்றவர்' என்று வேறுபடுத்து கிறோம்.

ஒருவர் வீட்டிற்கு வந்திருக்கும் விருந்தினர் சட்டப்படி 'அனுமதி பெற்றவர்' என்ற வகையையே சேருகின்றார்; 'அழைக் கப்பட்டவர்' என்ற வகையில் அன்று; [Pitt. V. Jackson (1939) I. AER. 129] ஏனெனில் வந்த விருந்தினர் கட்டிடத்தை உடைய வரின் தொழில் அல்லது பொருள் நலனைப் பொறுத்து வரவில்லை.

ஒருவர் தம் வீட்டில் ஒரு பாகத்தை இன்னொருவருக்கு வாடகைக்கு விட்டிருக்கிறார் என வைத்துக் கொள்வோம். வாட கைக்குக் குடியிருப்பவர் தம் பாகத்திற்குச் செல்லுவதற்கு வீட்டுக் காரர் வசம் உள்ள பகுதியைத் தாண்டியே போக வேண்டியிருக்க லாம். இப்பொழுது வாடகைக்குக் குடியிருப்பவர் "அழைக்கப் பட்டவர்" ஆகின்றார். அவரைப் பார்க்க வருகிறவர்கள், அவரு டைய குடும்பத்தினர் இவர்களும் வீட்டின் சொந்தக்காரரின் வழி யாகவே செல்ல வேண்டியிருக்கிறது. ஆனால் இவர்கள் "அனுமதி பெற்றவர்கள்" தாம்; "அழைக்கப்பட்டவர்கள்" அல்லர்;

அளிக்கப்பட்டிருக்கும் அனுமதி வெளிப்படையாகத்தான் கொடுக்கப்பட்டிருக்க வேண்டும் என்பதில்லை. ஒருவர் தமது நிலத்தின் வழியாக இன்னொருவர் செல்வதைப் பல நாட்கள் தடுக் காமல் இருந்தால் அதற்கு அவர் அனுமதியளிப்பதாகவே சட்டம் கருதுகிறது.

நம் வீட்டிற்கு வரும் நண்பர், உறவினர், விருந்தினர், நம்மால் அனுமதிக்கப்பட்டு (அல்லது நாம் தடுக்காததால் வழக்கமாக) நம் நிலத்தின் வழியாகக் கடந்து செல்பவர்; விற்பனைப் பொருள்களைப் பற்றி விளம்பரம் செய்ய வருபவர்; நம்மிடம் இருந்து தகவல் பெறுவதற்கு அல்லது நமக்குத் தகவல் கொடுப்பதற்கு வருபவர்; நம் அனுமதியுடன் இலவசமாக நம் வண்டியில் ஏறி வருபவர், இவர்கள் எல்லாம் ''அனுமதி பெற்றவர்கள்'' (Licensees) எனத் தீர்ப்புக்கள் கூறுகின்றன.

நகராண்மைக் கழகம் அல்லது அரசாங்கம் நடத்தும் இலவசப் பொருட்காட்சிச் சாலை, பூங்கா, புத்தக நிலையம், இவைகளுக்குச் செல்வோரை 'அனுமதி பெற்றோர்' என்றே தீர்ப்புக்கள் கொள்கின்றன. [Sutton V. Bootle Corporation (1947) K.B. 359]

அதிகார உரிமையுடன் ஒரு வீட்டைச் சோதனை போட வரும் அரசாங்க ஊழியரும் ''அனுமதி பெற்றவர்'' எனவே கருதப்படுகிறார்.

### (3) அத்துமீறி நுழைபவர் (Trespasser) யார்?

எவ்வித உரிமையுமின்றி இன்னொருவர் நிலத்தில் அல்லது கட்டிடத்தில் நுழைபவர்கள் ''அத்துமீறி நுழைபவர்'' எனப்படுகின்றனர். நிலத்தை உடையவரின் அனுமதியோ, அழைப்போ இன்றி அந்நிலத்தில் நுழைபவர்களை இவ்வாறு அழைக்கிறோம்.

இரயில் வண்டியில் பயணச் சீட்டு (ticket) இல்லாமல் பிரயாணம் செய்பவர், நம் வீட்டிற்குள் நுழையும் பிச்சைக்காரர்கள், நம் வீட்டின் அல்லது தோட்டத்தின் எல்லைச் சுவர்களை ஏறிக் குதித்து வருபவர்கள், இவர்கள் போன்றோர் ''அத்துமீறி நுழைபவர்'' ஆகின்றனர்.

### இடத்தை உடையவரின் கடமை

''அழைக்கப்பட்டவர்'', ''அனுமதி பெற்றவர்'', ''அத்துமீறி நுழைந்தவர்'' என்று மேலே கூறப்பட்ட மூன்று வகையினரைக் குறித்தும் கட்டிடத்தை அல்லது நிலத்தை உடையவருக்குள்ள கடமை வெவ்வேறு விதமானது; அதைப் பற்றி இனிக் காண்போம்.

### ''அழைக்கப்பட்டவர்''களைக் (Invitees) குறித்த கடமைகள்

இடத்தையுடையவர் அங்கு வரும் அழைக்கப்பட்டவர்களைக் குறித்து எவ்வகையில் கவனத்துடன் இருக்கவேண்டும் என்பதை Indermaur V. Dames (1866) L.R. C.P. 274 என்ற முக்கிய வழக்கில் Wills என்ற நீதிபதி கூறியிருக்கிறார். அஃதாவது:

"அழைத்தவர் (கட்டிடத்தை உடையவர்) தகுந்த கவனத்துடன் இருந்து வழக்கமில்லாத ஆபத்துக்களால் (Unusual dangers) அழைக்கப்பட்டவருக்குத் தீங்கு விளையாதபடி பார்த்துக்கொள்ள வேண்டும்...... அழைக்கப்பட்டவரும் தற்கவனத்துடன் இருக்கவேண்டும்......"

"வழக்கமில்லாத ஆபத்துக்கள்" என்ற சொற்றொடர் பின் வழக்குகளில் சிக்கல்களை ஏற்படுத்தியது.

எளிதில் புலப்படாத ஆபத்துக்களையே—அழைக்கப்பட்டவரால் எளிதில் காணமுடியாத இடையூறுகளையே—"வழக்கம் இல்லாத ஆபத்து" என்பது குறிப்பதாகும். ஒரு கட்டிடத்தில் உள்ள மின் விளக்குகளுக்கான விசைகளில் உள்ள கோளாறினால், அவைகளைத் தொடுதல் ஆபத்து என வைத்துக் கொள்வோம். அங்கு வேறு வேலையாக வருபவர்களுக்கு இது தெரிந்திருக்கக் காரணம் இல்லை. அந்தக் கட்டிடத்தை உடையவரின் தொழில் நிமித்தமாக 'அழைக்கப்பட்டவர்' ஒருவர் மின் விசையைப் போடுவதற்கெனக் கை வைத்ததால் மின்சாரம் பாய்ந்து அதிர்ச்சி பெற்று அதனால் அவருக்குத் தீங்கு விளைந்தது எனில் இதற்குக் கட்டிடத்தை உடையவர் பொறுப்பாகின்றார். ஏன்? மின்விசையில் இருந்த ஆபத்து யாருக்கும் எளிதில் புலப்படாத ஆபத்து. இதைத் தடுக்கும் வகையில் கட்டிடக்காரர் நடந்து கொள்ளவில்லை. எனவே, அவர் பொறுப்பாகிறார். மின்விசைகள் இருக்குமிடத்தில், "விசைகள் சரியில்லை, தொடாதீர்கள்" என்று எழுதியிருந்தார் என வைத்துக் கொள்வோம்; அல்லது சுவரில் விசைகள் இருந்த பாகத்தை மூடி வைத்திருந்தார் என்று வைப்போம். இப்பொழுது, அவர் கடமையை நிறைவேற்றிவிட்டார் என்று சொல்லலாம். ஏனெனில் மறைந்திருந்த ஆபத்தை "அழைக்கப்பட்டவர்" தெரிந்துகொள்ளும்படி அறிவித்துவிட்டார்.

எதிர்பாராத இடத்தில் பள்ளம் இருத்தல், வழுக்கும் தன்மையுடன் தரை இருத்தல், இவைபோன்ற மறைந்திருக்கும் இடையூறுகளை எளிதில் தெரிந்துகொள்ளுமாறு செய்வது கட்டிடத்தை உடையவரின் கடமையாகிறது.

இம்மாதிரி இருக்கும் இடையூறுகளை "அழைக்கப்பட்டவர்" ஏற்கனவே அறிந்திருந்தார் எனில், அதைப் பற்றி முன்னெச்சரிக்கை செய்யும் கடமை அழைத்தவருக்கு இல்லை.

ஓர் இடத்திலுள்ள ஆபத்து "வழக்கமில்லாத ஆபத்தா" இல்லையா என்பது சூழ்நிலைகளிலிருந்து நிச்சயிக்கப்பட வேண்டியதாகும். அழைக்கப்பட்டவர் வந்தது எதற்காக? அந்த இடத்தின் தன்மை என்ன? என்பவற்றையெல்லாம் ஆய்ந்தே ஒரு இடையூறு "வழக்கமில்லாததா, இல்லையா" என்பது தீர்மானிக்கப்

பட வேண்டும். இயந்திரங்கள் வேலை செய்யும் தொழிற்சாலையில் உள்ள "வழக்கமான ஆபத்து" சாதாரண கட்டிடத்தில் வழக்கமானதாக இருப்பதில்லை. ஒரு சுரங்கத்தில் உள்ள 'வழக்கமான ஆபத்து' ஒரு வியாபாரக் கட்டிடத்தில் "வழக்கமில்லாத" ஆபத்தாகும். நம் விட்டில் உள்ள மின்விசைக் கம்பி அமைப்பைப் பழுது பார்க்க வருபவருக்கு ஒரு மின் விசைப்பொத்தானிலிருந்து (Switch) மின்சாரம் வெளியேறுவது "வழக்கமான ஆபத்தே" யாகும்; ஆனால் அது வேறு அலுவலாக வருபவருக்கு "வழக்கமில்லாத" ஆபத்தாகிறது.

ஒரு சர்க்கரை ஆலையில் இயந்திரங்களைப் பழுது பார்த்துக் கொண்டிருந்த வாதி, மேல் தளத்திலுள்ளதும் வேலி போடாததுமான ஒரு திறப்பின் வழியே விழுந்து காயமுற்றார். அந்தத் திறப்பிற்கு வேலி போடாதது ஆலைக்காரரின் கவனமின்மையான செயலாகும். வேலியில்லாத திறப்பு இருப்பதை ஆலைக்காரர் வாதிக்குச் சொல்லி எச்சரிக்கவும் இல்லை. எனவே, ஆலைக்காரர் விழுந்து காயமுற்ற வாதிக்கு நட்ட ஈடு கொடுக்கவேண்டும் எனத் தீர்ப்பளித்தனர். [Indermaur V. Dames]

வைத்திய சாலையிலுள்ள நோயாளியைப் பார்க்கச் சென்ற வாதி, வழவழப்பான தரையில் விரிக்கப்பட்ட பாயில் நடந்ததால் வழுக்கி விழுந்து காயப்பட்டார். வைத்தியசாலையை நடத்துபவர் அதற்கு நட்ட ஈடு கொடுக்கவேண்டும் என்பது தீர்ப்பு.

எதிர்வாதியின் கடையில் சாமான் வாங்கிக் கொண்டிருந்த வாதி அங்கே கிடந்த காய்கறித் துண்டை மிதித்ததால் வழுக்கி விழுந்து விட்டார். எதிர்வாதி நட்டஈடு கொடுக்கவேண்டுமென்பது தீர்ப்பு.

கட்டிடத்திற்குள் கொடிய மிருகம் இருந்தது எனில் அதுவும் வழக்கமில்லாத ஆபத்தேயாகும்.

அழைக்கப்பட்டவருடைய பொருள் திருட்டுப் போனால் அதற்குக் கட்டிடத்தை உடையவர் பொறுப்பாவதில்லை.

வண்டிகள், கப்பல் இவைகளை உடையவருக்கும் மேற்சொன்னபடி பொறுப்பு உண்டு.

### "ஒப்பந்தப்படி அழைக்கப்பட்டவர்களை"க் குறித்த கடமை (Invitee under a contract)

கட்டணம் கொடுத்து ஒரு விடுதி, கொட்டகை முதலிய இடத்திற்குள் வருபவர்களை "ஒப்பந்தப்படி அழைக்கப்பட்டவர்கள்" என்று குறிப்பிடுவது உண்டு. இவர்களைக் குறித்து இடத்தையுடையவர்களுக்குள்ள கடமை ஒப்பந்தத்தின் அடிப்படையில் அமைகிறது.

"அழைக்கப்பட்டவரைப்" பொறுத்துள்ள கடமையும், "ஒப்பந்தப் படி அழைக்கப்பட்டவரை"ப் பொறுத்துள்ள கடமையும் அநேகமாக ஒரு தன்மையுடையனவாகும்.

விடுதியில் தங்கியிருந்த வாதி இரவில் குளிப்பறைக்குச் செல்லும் பாதையில் வெளிச்சம் இல்லாததால் அங்கிருந்த படிகளில் விழுந்து காயமுற்ருர். இரவில் குளிப்பறைக்குச் செல்லும் பாதையில் வெளிச்சம் போடாதது விடுதியை நடத்துவோரின் கவனமின்மை எனக் கொண்டு, வாதிக்கு நட்ட ஈடு அளிக்கப்பட்டது. [Campbell V. Shelbourn Hotel (1939) 2 KB. 534]

இரயில்வே நிலையத்தினுள் உள்ள ஒரு பள்ளத்தில் விழுந்து காயப்பட்ட வாதி, இரயில்வேக் கம்பெனி அப்பள்ளத்தருகில் விளக்கு வைக்கவோ அல்லது அதை வேலி போட்டுத் தடுக்கவோ செய்யவில்லையாதலால், இரயில்வேக் கம்பெனியிடமிருந்து நட்ட ஈடு பெறலாம் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Mack V. M. & S. M. Ry. (1922) 45 MLJ 424]

குதிரைப் பந்தயம் பார்க்கச் சென்றவர், மக்கள் உட்காரும் மேடை இடிந்ததால் காயமுற்ருர். அதற்குப் பந்தயம் நடத்துபவர் பொறுப்பாக்கப்பட்டார். [Francis V. Cockrell (1870) L. R. 5. Q. B. 501]

தம்முடைய வேலையாள், தனிப்பட்ட ஒப்பந்தக்காரர் (Independent Contractor) இவர்களின் செயலுக்கும் அழைத்தவரே பொறுப்பாகிருர்.

ஒரு விடுதியின் கூரை இடிந்து விழுந்து அங்கு இருந்தவர்களுக்குக் காயத்தை விளைவித்தது. அவ்வாறு இடிந்தது விடுதி நடத்துபவரின் கவனமின்மையால் அன்று. இருப்பினும் அவரே அதற்குப் பொறுப்பாக்கப்பட்டார்.

மதுரையில் கோபாலகிருஷ்ண டாக்கீஸ் என்ற பேசும்படக் கொட்டகையில் படம் பார்த்துக் கொண்டிருந்த ஒருவர்மீது, அக் கொட்டகையின் சுவர் இடிந்து விழுந்ததால், அவர் மரணமடைந்தார். இறந்தவரின் மனைவிக்கு மரணத்திற்கான நட்டஈட்டைக் கொட்டகைக்காரர் அளிக்கவேண்டுமெனத் தீர்ப்புக் கூறப்பட்டது. [Naginlal Hiralal Javeri V. Pushpa Ben J. Patel and Others (1951) I. L. R. Madras 701]

குதிரை வண்டியிலுள்ள குற்றத்தினல் அதை வாடகைக்கு எடுத்து ஏறியவர் காயமடைந்ததால், வண்டிக்காரர் அதற்குப் பொறுப்பு என்பது தீர்ப்பு. [Hayman V. Nye. (1881) 6 QBD. 685]

சில வேளைகளில் ஒரு கட்டடத்தின் ஒருபாகத்தை மட்டும் பயன் படுத்தும் உரிமையுடையவர் இன்னொரு பாகத்திற்குச் சென்று அங்கு இடருற்றால் அதற்குக் கட்டிடக்காரர் பொறுப்பாவது இல்லை. ஒரு விடுதியில் தங்கியிருக்கும் ஒருவர், அவர் போகவேண் டாத இடத்திற்குச் சென்றபொழுது காயமுற்றார் எனில், அந்த இடத்தைப் பொறுத்து அவர் "அழைக்கப்பட்டவர்" இல்லை யாதலால் அவர் நட்டஈடு பெற முடியாது.

## கட்டிடத்தில் அல்லது இடத்தில் நடக்கும் செயல்களால் விளையும் தீங்கு

கயிற்றின்மீது நடனமாடிக் கொண்டிருந்தவரின் கையி லிருந்த நாற்காலி காட்சியைப் பார்த்துக் கொண்டிருந்த ஒருவர் மேல் விழுந்து காயத்தை விளைவித்தது. அவையோர்களுக்கும் மேடைக்கும் நடுவில் வலை போட்டுப் பாதுகாப்பு அளிக்காததால், காட்சியை நடத்தியவர் அதற்குப் பொறுப்பானார். [Welsh V. Canterbury and Paragon Ltd. (1894) 10 TLR 478]

நடனமாடிக் கொண்டிருந்தவரின் காலணியின் அடிப்பாகம் கழன்று வந்து அவையோர் ஒருவருக்குக் காயத்தை விளைவித்தது நடனமாடுவதில் இது போன்ற ஆபத்துக்கள் நடப்பது முன்னறிய முடியாதவையாகையால், காட்சியை நடத்துபவர் அதற்குப் பொறுப்பில்லை என்று தீர்ப்புக் கூறப்பட்டது.

கிரிக்கட், கால்பந்து முதலிய விளையாட்டுக்களைப் பார்க்கச் செல்பவர்கள், தங்கள்மேல் பந்து விழுவதற்கு வாய்ப்பே இல்லாது தங்களுக்குப் பாதுகாப்பு அளிக்கப்பட வேண்டும் என எதிர்பார்ப்பது பொருந்தாது. அதிலுள்ள ஆபத்துக்களை அறிந்தேதான் அவர்கள் செல்லுகின்றனர்.

வேகப்பந்தயத்தில் ஈடுபட்ட இரு மோட்டார்கள் மோதிக் கொண்டதால் சிதறிய மோட்டாரின் துண்டுகள் பந்தயத்தைப் பார்க்க வந்திருந்தவர்கள்மீது விழுந்தது. இதற்கு, அந்தப் பந்தயத்தை நடத்துபவர் அல்லது அந்த இடத்திற்கு உரியவர் பொறுப்பில்லை என்று விதிக்கப்பட்டது. [Hall V. Brooklands Auto Racing Club (1933) I. K. B. 205]

மறைந்திருக்கும் இடையூறுகளால்—அழைக்கப்பட்டவரால் எளிதில் காண முடியாத அல்லது எதிர்பார்க்க முடியாத இடை யூறுகளால்—அழைக்கப்பட்டவருக்குத் தீங்கு விளையாமல் பாது காப்பது இடத்தையுடையவரின் கடமையாகும். இவ்வாறு, "அழைக்கப்பட்டவர்களை"ப் பொறுத்து அழைத்தவரின் கடமை அமைகிறது.

## "அனுமதி பெற்றவர்களைப்" பொறுத்த கடமைகள் (Duty to licensees)

"அனுமதி பெற்றவர், கட்டிடம் இருக்கும் நிலையிலேயே அதை ஏற்றுக்கொள்ளவேண்டும்........ஆனால், மறைந்து கிடக்கும் ஆபத்துக்களுக்கு (Concealed dangers) அவர் ஆளாகாமல் கட்டிடத்திற்கு உரியவர்பார்த்துக் கொள்ளவேண்டும். சில ஆபத்துக்கள் கட்டிடத்தை உடையவருக்கு மட்டும் தெரிந்தும், அனுமதி பெற்றவருக்குத் தெரியாமலும் இருக்கலாம். அனுமதி பெற்றவர் கவனத்துடன் இருந்தாலும் அந்த ஆபத்தை அறிய முடியாமல் இருக்கலாம். அத்தகைய ஆபத்துக்கள் பற்றி அனுமதி பெற்றவருக்கு அனுமதி அளித்தவர் தெரிவிக்கவேண்டும்.......இத்தகைய வெளியில் தெரியாத ஆபத்தால் 'அனுமதி பெற்றவருக்கு'த் தீங்கு விளைந்தால் அதற்குக் கட்டிடத்தை உடையவர் பொறுப்பாகின்றார்."

இவ்வாறு, Lord Wrenbury என்ற நீதிபதி [Fairman V. Perpetual Building Society (1923) A. C. 74] என்ற வழக்கில், அனுமதிபெற்றுக் கட்டிடத்திற்குள் வருபவரைப் பொறுத்துக் கட்டிடத்தை வைத்திருப்பவருக்குள்ள கடமையைத் தெளிவுபடுத்தினார்.

அனுமதி பெற்றோரை ஆபத்தில் ஏமாற்றிச் சிக்கவைப்பது கூடாது. அஃதாவது இருக்கும் ஆபத்துக்களை மறைத்து வைத்து அதனால் அவர் தீங்கு அடையும்படி கட்டிடத்திற்குரியவர் செய்யக் கூடாது. ஆதலால், வெளிப்படையான ஆபத்துக்களைத் தவிர்த்தல் அனுமதிபெற்று வருபவரின் பொறுப்பாகும்.

எனவே, வழவழப்பான தளத்துணிமேல் நடந்ததால் விழுந்த விருந்தாளி, விருந்தளிப்பவரிடமிருந்து நட்டஈடு பெறமுடியாது. [Pitt V. Jackson (1939) I. A. E. R. 129]. அனுமதி பெற்றவர் இருட்டில் நடந்து பள்ளத்தில் விழுந்துவிட்டார் எனில் அதற்கு அனுமதியளித்தவர் பொறுப்பல்லர்.

தம்முடைய நிலத்தைப் பாதையாகப் பிறர் பயன்படுத்துவதை நிலத்துக்காரர் தடுக்கவில்லை. மக்கள் தம் நிலத்தின் வழியாகப் போவது தெரிந்தும், எச்சரிக்கை ஏதும் கொடுக்காமல், மக்களைத் தாக்கும் குணமுடைய தம்முடைய குதிரையை அந்த நிலத்தில் விட்டிருந்தார். அது நிலத்தில் நடந்து சென்றவர்களைத் தாக்கியது. அதற்கு நிலத்துக்காரர் பொறுப்பாக்கப்பட்டார். [Lawery V. Walker (1911) A. C. 10].

நகராண்மைக்கழகம் நிர்வகித்து வந்த நீச்சல் குளத்தின் அடியில் கிடந்த கண்ணாடியால் குழந்தை ஒன்று காயமுற்றது. அதற்கு நகராண்மைக் கழகம் பொறுப்பு என்பது தீர்ப்பு. [Ellis V. Fulham (1938) I. K. B. 212].

எனவே, அனுமதிபெற்று வந்தவரால் எளிதில் அறிய முடியாதபடி மறைந்து கிடக்கும்—ஆனால் சொத்தை உடையவரால் அறியத்தக்க—ஆபத்துக்கள் பற்றி மட்டும் எச்சரிப்பது சொத்தை உடையவரின் கடமையாகிறது. அவ்வித ஆபத்துக்களால் அனுமதி பெற்றவருக்குத் தீங்கு விளைந்தால் அதற்கு அனுமதி யளித்தவர் பொறுப்பாகிறார்.

மேலே கூறியபடி, 1958 ஆம் ஆண்டிலிருந்து, அழைக்கப் பட்டோர், அனுமதி பெற்றோர் என்ற வேறுபாடு, இங்கிலாந்தில் (Occupier's Liability Act) என்ற சட்டத்தால் அகற்றப்பட்டுவிட்டது.

### அத்துமீறி நுழைபவர்களைப் பொறுத்துள்ள கடமைகள் (Duty to Trespassers)

ஒருவர் நிலத்தில் அல்லது கட்டிடத்தில் அனுமதியோ, அழைப்போ இன்றி நுழைபவர் அத்துமீறி நுழைந்தவர் ஆகிறார். கட்டிடத்திலுள்ள ஆபத்துக்களால் அவருக்கு விளைந்த தீங்கு பற்றி அவர் எவ்வித நடவடிக்கையும் எடுக்கமுடியாது. அவரைப் பொறுத்து நிலத்தை உடையவருக்கு, எந்தக் கடமையும் கிடையாது; ஆனால் இடத்தை உடையவர் வேண்டுமென்றே அவருக்குத் தீங்கு விளைத்தல் கூடாது.

ஒருவர் நிலத்தில் அத்துமீறி நுழைந்தவர் அந்நிலத்தி லுள்ள வேலி இல்லாத குழியில் விழலாம்; அங்கிருந்த மிருகத்தால் தாக்கப்படலாம்: பயணச் சீட்டு இல்லாமல் இரயில் பிரயாணம் செய்தவர் இரண்டு இரயில் வண்டி மோதியதால் காயமுறலாம்; இதற்கெல்லாம் அவரால் நட்டஈடு பெற முடியாது.

ஆனால் மீறி நுழைபவர்க்குத் தீங்கு விளைவிக்கும்பொருட்டு இடத்துக்காரர் மறைமுகமாகப் பொறிகளை வைத்து அவருக்கு ஊறு விளைத்தல் கூடாது. தம் நிலத்தில் பிறர் அத்துமீறி நுழைவதைத் தடுப்பதற்கு ஒருவர் முள் வேலியை அமைக்கலாம். சுற்றுச் சுவரின்மேல் கூரிய கதிர்களை வைக்கலாம். ஆனால் நுழைந்தவரைத் தாக்கும் பொருட்டு நாயை ஏவி விடுவதோ, சுடுவதோ கூடாது.

ஒருவர் தம் நிலத்தில் உரிமையின்றிப் பிறர் நுழைவதைத் தடுப்பதற்காக நிலத்தில் "பாய்ந்து சுடும்" துப்பாக்கி (Spring gun) ஒன்றைப் பொருத்தி வைத்திருந்தார். அத்துமீறி நுழைந்த ஒருவர் அதனால் காயமடைந்தார். நிலச் சொந்தக்காரர் இதற்கு ஈடு கொடுக்கவேண்டும் என்பது தீர்ப்பு. [Bird V. Holbrook (1828) 4. Bing. 628]. ஆனால், இம்மாதிரித் துப்பாக்கி வைக்கப் பட்டிருப்பது தெரிந்தும் ஒருவர் அத்துமீறி இன்னொருவர்

நிலத்தில் நுழைந்து காயப்பட்டால் அதற்கு அவர் பரிகாரம் பெற முடியாது. [Ilott V. Wilkes (1820) 3. B & Ald, 304].

வேலியிடப்பட்ட தம் நிலத்திற்குள் பன்றிகள் நுழைந்து பயிரை அழித்ததால், பன்றிகளைப் பிடிப்பதற்கென்று கண்ணிகளை எதிர்வாதி நிலத்தில் வைத்திருந்தார். வாதியின் பசு அந்த நிலத்திற் புகுந்ததால் கண்ணியில் சிக்கி மாண்டது. இதற்கு எதிர்வாதி பொறுப்பில்லை என்று சென்னை உயர்நீதிமன்றம் தீர்ப்பளித்தது. [Herbert Richard V. Munisami (1950) I. L. R. Madras 365.] Deane V. Clayton (1817) 7, Taunt 489. என்ற ஆங்கிலநாட்டு வழக்குத் தீர்ப்பு சென்னை உயர்நீதிமன்றத்தின் தீர்ப்பில் பின்பற்றப்பட்டது.

உரிமையின்றி இரயில் பாதையில் நடந்து செல்வோரை விலகிச் செல்லும்படி ஒலியைக் கிளப்பியோ, வேறு விதத்திலோ எச்சரிக்கை செய்யவேண்டும். அவசியமானால் இரயிலை நிறுத்தவும் வேண்டும். அத்துமீறி இரயில் பாதையில் நடக்கிறார் என்பதற்காக அவர்மீது இரயிலை ஏற்றிக் கொல்லுவது சரியன்று. [Ismail V. B. B. & C. I. Ry. (1932) 34. B. L. R. 826].

எனவே, அத்துமீறி நுழைந்தவர்களைக் குறித்து நிலச் சொந்தக்காரருக்குக் கடமை ஏதும் இல்லையென்றாலும், அவருக்கு வேண்டு மென்றே தீங்கு செய்தல் கூடாது.

## குழந்தைகளைப் பொறுத்துள்ள கடமைகள்

அழைக்கப்பட்டவர்கள், அனுமதி பெற்றவர்கள், அத்துமீறி நுழைபவர்கள் என்ற பிரிவு குழந்தைகளுக்கும் பொருந்தும். ஒரு கட்டிடத்தை வைத்திருப்பவருக்கு அங்கு வரும் குழந்தைகளைப் பொறுத்துள்ள கடமை வயது வந்தவர்களைக் குறித்துஉள்ளதை விட வேறுபட்டதாகும்.

முக்கியமாக, தம் நிலத்தில் கவர்ச்சி மிக்க விதத்தில் (allurement) ஆபத்துக்கள் இருந்தால் அதில் குழந்தைகள் சிக்கிவிடாதபடி பார்த்துக்கொள்ள வேண்டியது நிலத்தை உடையவரின் கடமையாகிறது.

வயது வந்தவர்களுக்கு எச்சரிக்கையளிக்கும் விதத்திற்கும் குழந்தைகளை எச்சரிக்கும் விதத்திற்கும் மாறுதல் உண்டு.

பொதுமக்களுக்கான பூங்காவிலிருந்த அழகான தோற்றமுடைய நச்சுப் பழங்களைக் குழந்தை தின்றதால் இறந்தது. அந்தப் பழங்கள் நச்சுத் தன்மையுள்ளவை என்பதை அறிந்திருந்தும் அந்தப் பூங்காவிற்குப் பொறுப்பான நகராண்மைக் கழகம் அவற்றை அங்கு வரும் குழந்தைகள் தின்னுதவாறு

செய்வதற்கு எந்த எச்சரிக்கையும் ஏற்பாடு செய்யவில்லை. எனவே, குழந்தை இறந்ததற்கு நகராண்மைக் கழகம் பொறுப்பாக்கப்பட்டது. [Glasgow Corporation V. Taylor (1922) I. A. C 44].

குழந்தைகள் நீந்தி விளையாடும் குட்டையில் கண்ணாடித் துண்டுகள் கிடந்து காயம் விளைவித்ததற்கு அந்தக் குட்டையைப் பராமரித்து வந்தவர்கள் பொறுப்பாயினர். [Ellis V. Fulham Corporation (1938) I. K. B. 212].

குழந்தைகள் வந்து விளையாடுகின்றன என்பது தெரிந்தும் அந்த இடத்தில் சுற்றும் மேசையை வைத்திருந்ததால் அதைச் சுற்றி விளையாடிய குழந்தை காயமுற்றது. அவ்வாறு மேசையை வைத்த இரயில்வேக் கம்பெனி குழந்தையின் காயத்திற்குப் பொறுப்பாக்கப்பட்டது.

இவ்வாறு, குழந்தைகளைக் கவரும் பொருள்களை வைத்திருப்போர் அதனால் குழந்தைகளுக்குத் தீங்கு விளையாதவாறு தடுப்பதில் கவனமாக இருக்கவேண்டும்.

ஒரு நிலத்திற்குள் அத்துமீறி நுழையும் குழந்தையைப் பொறுத்து அந்த நிலத்திற்கு உரியவருக்கு எவ்விதக் கடமையும் கிடையாது.

ஒரு நிலம் அல்லது கட்டிடம் (வண்டி, கப்பல்) இதற்குள் வருபவர்களைப் பொறுத்து, அந்த இடங்களை ஆளுகையில் உள்ளவருக்கு உள்ள கடமையைப் பற்றி இதுவரை கண்டோம்.

---

# பகுதி 13

## I

## பொய்ம்மை (Falsehood)

**பொய்ம்மை (Falsehood) - தீமை பயக்கும் பொய்ம்மையே தீங்காகிறது - இருவகைப் பொய்ம்மை - (1) ஏமாற்றுதல் (Fraud - Deceipt). (2) தீங்கான பொய்ம்மை (Injurious Falsehood).**

"பொய்யாமை அன்ன புகழில்லை எய்யாமை
எல்லா அறமுந் தரும்." (குறள் - 296)

என்பது பொதுமறை.

பொய்யாமையே மற்ற அறங்களுக்கெல்லாம் அடிப்படையாக அமைகிறது. பொய்ம்மை இல்லையெனில் அறமல்லாத செயல்களுக்கு இடமில்லை. பொய்ம்மையற்ற வாழ்வு நடத்துவோர் உலகில் மிகச் சிலரேயாவர். எல்லோரும் பொய்ம்மையின்றி ஒழுகும்படி செய்வதற்குச் சட்டத்தாலும் இயலாது. ஆனால், ஒருவர் தமது பொய்க்கூற்றினல் பிறருக்குக் கேடு விளைவிப்பதைச் சட்டம் அனுமதிப்பதில்லை.

நிகழ்ந்தது கூறல் மெய்ம்மை, நிகழாதது கூறல் பொய்ம்மை என்று பொதுவாக நாம் நினைக்கிறோம். நிகழாதது கூறல் அனைத்தையுமே, சட்டம் பொய்ம்மையாகக் கொள்ளுவதில்லை. நிகழாததைக் கூறுவதாலோ, உண்மையை மறைப்பதாலோ, பிறருக்குக் கேடு விளைந்ததா என்று கண்டு, அவ்வாறு தீமை விளைந்தால் மட்டுமே அச்செயல்களைத் தீங்கு எனச் சட்டம் கருதுகிறது. "யாதொன்றும் தீமை யிலாத" சொல்லை வாய்மையாக அறநூல் கொள்வது போன்றே, தீமை விளைவிக்காத பொய்ம்மையைச் சட்டமும் தீங்கெனக் கொள்வதில்லை.

ஒருவருடைய பொய்ம்மைச் செயல்களால் பிறருக்குப் பல வழிகளில் கேடு விளையலாம். அவ்வாறு கேடு அடைந்தவருக்குச் சட்டம் பரிகாரம் அளிக்க வேண்டும். ஆகவே, கேடு அடைந்தவர் பொய்ம்மைச் செயலைச் செய்தவரிடமிருந்து நட்ட ஈடு பெறுவதற்கும், பொய்ம்மைச் செயல் நிகழாதவாறு தடுப்பதற்கும் சட்டம் வகை செய்கிறது.

ஒருவர் இன்னொருவரிடம் பொய் கூறி ஏமாற்றி, அதை அவர் நம்பி நடக்கும்படி செய்து, அதனல் அவருக்குத் தீங்கு விளைவித்தலை ஏமாற்றுதல் அல்லது வஞ்சித்தல் (Deceipt or Fraud) என்கிறோம்.

ஒருவர் பொய்த் தகவலைப் பிறருக்கு வெளியிட்டு, அதைப் பிறர் நம்பி நடந்ததன் காரணமாக இன்னொருவருக்குத் தீங்கு விளைந்தால் அதைத் "தீங்கான பொய்ம்மை" (Injurious Falsehood) என்று குறிப்பிடுகிறோம்.

பொய்ம்மையால் விளையும் தீங்குகளை மேலே கூறியவாறு, ஏமாற்றுதல், தீங்கான பொய்ம்மை என இரண்டு வகைகளாகப் பிரிக்கலாம்.

இந்த இருவகைத் தீங்குகள்பற்றிக் காண்போம்.

## II

## ஏமாற்றுதல் (வஞ்சித்தல்) (Fraud or Deceipt.)

*ஏமாற்றுதல் என்பது என்ன? - பொய்க்கூற்று (திரித்துரைத்தல்) (Misrepresentation) என்பது என்ன?-பொய்ம்மைத் தன்மையை நிச்சயிப்பது எவ்வாறு? - நெஞ்சறிந்த பொய்ம்மையாக இருக்க வேண்டும் - வழக்கில் மெய்ப்பிக்கவேண்டிய கூறுகள்.*

ஒருவர் ஒரு பொய்யான தகவலை, பிறர் அதை உண்மையென நம்பி நடக்க வேண்டும் என்ற கருத்துடன், வெளியிட்டு, அவ்வாறு அதை நம்பி நடந்தவருக்கு அதன் பயனாய் நட்டம் அல்லது கேடு விளைந்தால், தகவலை வெளியிட்ட செயல் ஏமாற்றுதல் அல்லது வஞ்சித்தல் (Deceipt or Fraud) எனப் படுகிறது. இவ்வாறு ஒருவர் மற்றொருவரை ஏமாற்றி நட்டம் விளைவித்தார் எனில், ஏமாற்றப்பட்டவர் ஏமாற்றியவரிடமிருந்து நட்ட ஈடு பெறலாம் எனச் சட்டம் விதிக்கிறது.

பொய் கூறுதலே ஏமாற்றும் செயலுக்குக் கருவியாக இருக் கிறது.

### பொய்க்கூற்று (திரித்துரைத்தல் - Misrepresentation) என்பது என்ன?

கடந்த கால அல்லது நிகழ்கால நிகழ்ச்சிகளை மாற்றியோ திரித்தோ கூறுவதையே பொய்க்கூற்று அல்லது திரித்துரைத்தல் என்கிறோம். ஒருவர் மனதில் நிகழ்வதும் நிகழ்ச்சிதான். ஆதலால், ஒருவர் தமது எண்ணத்தைக் குறித்தும் பொய் கூறலாம்.

ஒரு கம்பெனியின் இயக்குநர்கள் அந்தக் கம்பெனிக்குப் புது இயந்திரங்களும் கட்டிடங்களும் வாங்குவதற்கென்று விளம்பரம் செய்து பங்குதாரர்களிடமிருந்து கடன் கோரினர். ஆனால் அவர்கள் அவ்வாறு பெற்ற பணம் அந்தக் கம்பெனியின் கடன் களைச் செலுத்தவே பயன்படுத்தப்பட்டதாகப் பின்னால் தெரிய

வந்தது. முன் செய்யப்பட்ட விளம்பரம் இயக்குநர்களின் கருத்தை மறைத்த பொய்க்கூற்று எனக்கொண்டு, அவர்கள் செயல் "ஏமாற்றுதல்" ஆகிறது எனத் தீர்ப்புச் செய்யப்பட்டது. [Edgington V Fitzmaurice - (1885) 29 Ch. D. 459]. மனதிலுள்ள கருத்தை மாற்றிச் சொல்லுதல், ஒரு நிகழ்ச்சியைத் திரித்துக் கூறுதல் போன்றதேயாகும். "உள்ளொன்று வைத்துப் புறம் ஒன்று பேசுதலே"ப் பொய்க் கூற்று எனச் சட்டம் கொள்கிறது.

ஒருவர் கொடுத்த வாக்குறுதியை நிறைவேற்றவில்லை யென்பதற்காக அது ஏமாற்றிய செயல் என்று சொல்லமுடியாது. ஏனெனில் அவர் வாக்குறுதி அளிக்கும்பொழுது அவர் கருத்து அதை நிறைவேற்ற வேண்டும் என்றே இருந்திருக்கலாம். எனவே, வாக்குறுதியை நிறைவேற்ருத செயல் ஒப்பந்தத்தை மீறிய செயலாகலாம்; ஏமாற்றிய செயலாகப் பொதுவாகக் கருதப் படுவதில்லை. ஆனல், வாக்குறுதி அளிக்கும்பொழுதே அவருக்கு அதை நிறைவேற்றும் எண்ணம் இருந்ததில்லை என்பது இதர சூழ்நிலைகளிலிருந்து தெளிவாகத் தெரிந்தால் அது "ஏமாற்றும்" செயல் ஆகிவிடும்.

பொய்ம்மையை வெளியிடுதல் சொல்லால் மட்டுமின்றிச் செயலாலும் இருக்கலாம்.

பல்கலைக் கழக மாணவர்களுக்கு மட்டும் கடனுக்குப் பொருள் கள் வழங்கும் கடையில் மாணவரல்லாத ஒருவர் மாணவர்களுக் குரிய அங்கியும் குல்லாயும் அணிந்து பணம் கொடுக்காமல் பொருள்களை வாங்கினர். தாம் மாணவர் என்று யாரிடமும் அவர் சொல்லவில்லை யெனினும், அவர் நடத்தை அவரை மாணவர் என்று பிறர் நினைத்து ஏமாற வேண்டும் என்ற அவர் கருத்தைப் புலப்படுத்துவதால் அது ஏமாற்றிய செயல்தான் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [R. V. Barnard (1837) 7. C. & P. 784]

இவ்வாறு பொய்ம்மையை வெளியிடுதல் வாய்மொழியாலோ, எழுத்தாலோ, சைகையாலோ, நடத்தையாலோ செய்யப்படலாம்.

பொய் கூறுபவர் எத்தனையோ சூழ்ச்சிகளைக் கையாண்டு பிறரை ஏமாற்றுகிருர். பொய்ம்மையை வெளியிடுதல் வெளிப் படையாகவோ அல்லது மறைமுகமாகவோ இருக்கலாம். உண்மையையே கூறினுலும் கேட்பவர் அதை நம்பக்கூடாத விதத்தில் கூறலாம். "தாம் கூறும் உண்மையைக் கேட்பவர் உண்மையென்று நம்பக்கூடாது" என்ற எண்ணத்துடன் கூறப்படும் உண்மையும் பொய்யுரையேயாகும் என்பது தீர்ப்பு. [Moens V. Heyworth (1842) 10 M.&W. 147]

ஒருவர் பொய்யே கூறினாலும் அதைக் கேட்பவர் அதை அப்படியே நம்பவேண்டும் என்ற எண்ணமின்றி அது கூறப் பட்டால், அது பொய்யுரை ஆவதில்லை.

ஒரு செய்தியை அரைகுறையாகவோ, சிறிது திரித்தோ கூறி அதன்மூலம் பிறரை ஏமாற்றலாம்.

பொய்ம்மைத் தன்மையை நிச்சயிப்பது எவ்வாறு?

நெஞ்சறிந்த பொய்ம்மையாக இருக்கவேண்டும்:

ஒருவர் கூறியது வாய்மையா அல்லது பொய்ம்மையா எனக் காண்பதற்கு நாம் அவரது மனநிலையையே ஆராயவேண்டிய திருக்கிறது. தாம் கூறுவதை உண்மை என்று நம்பி அவர் கூறினால் அது வாய்மையேயாகும். தாம் கூறுவது உண்மையா இல்லையா என்பதுபற்றித் தெரியாதிருந்தும் அல்லது உண்மை யன்று என்று தெரிந்திருந்தும் அதைப் பிறர் நம்பும்படி கூறினால் அது பொய்ம்மை ஆகிறது.

சில வேளைகளில் ஒரு செய்தி மெய்யானதா, பொய்யானதா என்பதுபற்றி நமக்குத் தெரியாமல் இருக்கலாம். ஒரு செய்தி மெய்ம்மையானதா என்பதுபற்றி நமக்கு நிச்சயமாகத் தெரியாமல் இருந்தும் அதை மெய்யான செய்தி என்று பிறர் நம்பும்படி நாம் கூறினால், அதுவும் பொய்யுரையேயாகும்.

ஒருசெய்தி பொய்யானதுதான் என்று நமக்குத் தெரிந்திருந்தும் அதைப் பிறர் நம்பும்படி சொல்லுவதும், அச்செய்தி மெய்யானதா இல்லையா என்பது நமக்குத் தெரியாதிருந்தும் அதைப் பிறர் நம்பும்படி சொல்லுவதும் ஒரே வகையைச் சேர்ந் தவைதாம். இரண்டும் பொய்யுரையின்பாற் படுவனவேயாகும். [Reese River Co., V. Smith - (1869) L. R. 4. H. L. 64]

தாம் சொல்லும் கூற்றில் மெய்ம்மையை மனதில் உணர்ந்து கூறுவதே "மனத்தொடு வாய்மை" யாகும். தம் கூற்று உண்மை யானது என்ற நம்பிக்கை மனதிலின்றிக் கூறப்படுவனவெல்லாம் சட்டப்படியும் வாய்மையல்லாதவை, பொய்ம்மையானவை. "தன்நெஞ்சறிவது பொய்யற்க" என்றே சட்டமும் விதிக் கின்றது.

ஒருவர் ஒரு தகவலின் ஒரு பகுதியை மட்டும் மறைத்துக் கூறலாம். கூறப்பட்ட பாதித் தகவலின் உண்மைத் தன்மை இதனால் மறையலாம். இவ்வாறு, அரைகுறை உண்மையும் பொய்ம்மையேயாகும்.

தகுந்த காரணமின்றிக் கவனக் குறைவால் ஒரு செய்தியை ஒருவர் மெய்யென்று நம்பி அதை வெளியிட்டால், அதற்கான பொறுப்பு யாரைச் சேருகிறது?

ஒரு டிராம்வண்டிக் கம்பெனியார் பங்குகள் சேர்ப்பதற்கெனச் செய்த விளம்பரத்தில், டிராம் வண்டிகள் நீராவியால் ஓட்டப்பட இருக்கின்றன என்று கூறியிருந்தனர், ஆனால், முடிவில் நீராவி யின் சக்தியால் டிராம் வண்டிகளை ஓட்ட அதிகாரிகள் அனுமதி யளிக்கவில்லை. ஆதலால் கம்பெனியைக் கலைத்துவிட வேண்டிய நிலை ஏற்பட்டது. விளம்பரத்தை நம்பிப் பங்குகள் வாங்கிய ஒருவர் கம்பெனியின் இயக்குநர்கள்மீது ஏமாற்றியதற்காக நட்டஈடு கோரி வழக்குத் தொடர்ந்தனர். இந்த வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. இந்த வழக்கில் நீதிபதி லார்டு ஹெர்கல் (Lord Herschell) வகுத்த கொள்கைகள் முக்கியமானவை. அவையாவன :

ஏமாற்று வழக்கில் முக்கியமாக நிரூபிக்கப்பட வேண்டியது வஞ்ச எண்ணமாகும். ஒரு செய்தி பொய்யானது என்று தெரிந்தபின்னும் அதை இன்னொருவர் நம்பும்படி கூறுவது வஞ்சம். ஒரு செய்தி உண்மையானது என்ற நம்பிக்கை இல்லாம லிருந்தும் அதை இன்னொருவர் நம்பும்படி கூறுவதும் வஞ்சமே. ஒரு செய்தி உண்மையானதா, பொய்யானதா என்று தெரிந்து கொள்ளாமலே, அசட்டுத் துணிவுடன் (reckless) அதைப் பிறர் நம்பும்படி கூறுதலும் வஞ்சனையேயாகும்.

உண்மை இல்லாததைக் கவனக் குறைவினால் மெய்யென நம்பி அதைப் பிறருக்கு வெளியிட்டால் அது வஞ்சனையாவதில்லை. மேலே கூறப்பட்ட வழக்கில் 'நீராவியால் டிராம் வண்டிகள் ஓட்டப்பெறப்போகின்றன' என்று விளம்பரப் படுத்தியது கவனக் குறைவின்பாற்பட்ட (negligent) செயலேயாகும். ஆதலால் அது வஞ்சனையற்ற செயல் எனவும் முடிவுசெய்யப்பட்டது. Derry V. Peek- (1889) 14 App. Cases. 337]

கவனக் குறைவால் எழும் பொய்ம்மையால் பிறர் உடலுக்கு ஊறு விளைந்ததெனில், அதற்கான நட்டஈட்டைச் சட்டம் அளிக்கிறது.

இந்தியக் கம்பெனிச் சட்டப்படி பொய்யான செய்தி களை விளம்பரப்படுத்தினால் கம்பெனி நிர்வாகிகள் பொறுப்பா கின்றனர். இங்கிலாந்திலும் இத்தகைய சட்டம் இப்பொழுது இருக்கிறது.

தம் பிரதிநிதியாக உள்ளவர் (ஏஜண்டு) கூறிய பொய் யுரைக்கு முதல்வரும் (Principal) பொறுப்பாகிறார். ஒரு கம்பெனி யின் நிர்வாகி இன்னொருவரை ஏமாற்றி நட்டம் விளைவித்தால் கம்பெனியே அதற்குப் பொறுப்பாகிறது.

வழக்கில் மெய்ப்பிக்கப்பட வேண்டிய கூறுகள்:

எதிர்வாதியின் செயல் வாதியை ஏமாற்ற வேண்டும் என்ற எண்ணத்துடன் செய்யப்பட்டது, என்பது வழக்கில் மெய்ப்பிக்கப் படவேண்டும். எதிர்வாதியின் வஞ்சகக் கூற்றை வாதி நம்பி அதன்படி நடக்கவேண்டும் என்று எதிர்வாதி கருதினரா என்பதைச் சட்டம் ஆராய்கின்றது. தமது கூற்றை நம்பி வாதி நடக்க வேண்டும் என்ற எண்ணம் எதிர்வாதிக்கு இருந்தால்தான் வாதி அடையும் நட்டத் திற்கு எதிர்வாதியைப் பொறுப்பாக்க முடியும்.

எதிர்வாதி தமது கூற்றை வாதியிடம் நேரடியாகக் கூறியிருக்க வேண்டும் என்பது அவசியமன்று. அதை இன்னெருவர் மூல மாகவோ, விளம்பரத்தின் வாயிலாகவோ, வாதிக்குத் தெரியப் படுத்தலாம். ஒரு சொத்து வாடகைக்கு விடப்படும் என்று ஒருவர் பொய்யாக விளம்பரப்படுத்துகிருர். விளம்பரத்தை நம்பி இன்னெருவர் அந்தச் சொத்தைப் பல முறை பார்வையிட்டு அதற்காகச் செலவு செய்கிருர். விளம்பரத்தை நம்பி ஏமாந்து நட்டப்பட்டவருக்கு, பொய்யாக விளம்பரம் செய்தவர் நட்டஈடு கொடுக்கக் கடமைப்பட்டவர் ஆகிருர். [Richardson V. Silvester (1873) L. R. 9. Q. B. 34]

எதிர்வாதியின் கூற்றை நம்பி நடந்ததாலேயே தமக்குக் கேடு விளைந்தது என்பதை வாதி மெய்ப்பிக்க வேண்டும். அஃதாவது எதிர்வாதியின் வஞ்சகச் செயலே தமது நட்டத்திற்குக் காரணம் என்பதை வாதி நிலைநாட்டவேண்டும். வஞ்சகமான கூற்றை எதிர்வாதி வெளி யிட்டால் மட்டும் போதாது. அதை வாதி நம்பி நடந்திருக்க வேண்டும். வாதி அவ்வாறு நடந்தபின்தான் ஏமாற்றுதல் என்ற தீங்கு முடிவடைகிறது.

எதிர்வாதியின் கூற்று உண்மையானதா இல்லையா என்பதைக் கவனமாக இருந்தால் வாதி தெரிந்துகொண்டிருக்கலாம் என்று எதிர்வாதி கூறினுல் அதைச் சட்டம் ஏற்பதில்லை. வாதி போதிய கவனமின்றி நடந்துகொண்டாலும், எதிர்வாதி தமது பொய்க் கூற்றுக்குப் பொறுப்பாகிருர்.

ஆபத்தான பொருளை விற்கும்பொழுது அதிலுள்ள குறைபாடுகளை விற்பவர் வாங்குபவருக்குச் சொல்லக் கடமைப் பட்டவர். அவ்வாறு சொல்லத் தவறினுல் அது ஏமாற்றும் செயலேயாகும். இம்மாதிரியே, ஆபத்தான ஒரு பொருளை இன்னெருவரின் உபயோகத்திற்கு இரவலாகக் கொடுப்பவருக் கும், அல்லது இனமாக அளிப்பவருக்கும், இத்தகைய கடமை உண்டு. இவ்வாறு, உண்மையை வேண்டுமென்றே மூடிமறைப் பது சில சூழ்நிலைகளில் பொய்ம்மை ஆகிறது.

தொற்று வியாதியால் பீடிக்கப்பட்ட பசுவை ஒருவர் இன்னொருவருக்கு விற்ருர். வாங்கியவர் தம்முடைய நல்ல பசுக்களுடன் இந்தப் பசுவையும் சேர்த்து வைத்ததன் பயனுய், மற்றப் பசுக்களும் நோய்வாய்ப்பட்டு இறந்தன. இப்பொழுது வியாதியுடைய பசுவை விற்றவர் ஏமாற்றிய குற்றத்திற்கு ஆளாகிருர். வியாதியுடைய பசுவை நல்ல பசு என்று கூறியது விற்றவரின் ஏமாற்றுச் செயலாகும். [Mullet V. Mason. (1866) L.R. 1. C.P.559]

ஒருவர் ஒரு தகவலை இன்னொருவரிடம் வெளியிடும்பொழுது அது பொய்யாக இருக்கலாம். ஆனல் அந்தத் தகவலைக் கேட்டவர் அதை நம்பி நடக்க ஆரம்பிக்கையில் அந்தத் தகவல் உண்மையாகிவிடலாம். இப்பொழுது தகவலை வெளியிட்டவர்மீது எந்த நடவடிக்கையும் எடுப்பதற்கில்லை. [Briess V. Woolley (1954) A. C. 333]

ஒருவர் ஒன்றை உண்மை என்று நம்பி அதை இன்னொருவரிடம் கூறினர். பிறகு, அது உண்மையன்று என்பது அவருக்குத் தெரியவருகிறது. இதை அவர் உடனேயே மற்றவருக்குத் தெரிவிப்பது கடமையாகும்.

பொய்த் தகவலை வெளியிடுபவர் பிறருக்கு நட்டம் விளைவிக்க வேண்டும் என்ற தீய நோக்கம் இல்லாதவராக இருக்கலாம் இருப்பினும் விளைந்த நட்டத்திற்கு அவரே பொறுப்பாகிருர்.

நாணயம் சிறிதும் இல்லாத ஒரு வேலையாளை மிகவும் நம்பிக்கைக்குப் பாத்திரமானவன் என்று பொய்யாகக் கூறி நான் என் நண்பரிடம் அவனை வேலைக்குச் சேர்க்கிறேன். அந்த வேலையாளின் வஞ்சனையான நடத்தையால் என் நண்பர் நட்டம் அடைகிருர். இப்பொழுது அந்த நட்டத்திற்கு நானே பொறுப்பாகிறேன். என் நண்பருக்குக் கேடு விளைவிக்க வேண்டும் என்ற தீய கருத்தின்றி நான் நடந்திருக்கலாம். இருப்பினும் உண்மையை மறைத்துச் சொல்லிய எனது பொய்க்கூற்றை நண்பர் மெய்யென்று நம்பி நடக்கவேண்டும் என்ற எண்ணம் எனக்கு இருந்ததால் எனது செய்கை ஏமாற்றிய அல்லது வஞ்சித்த செயலாகிறது.

வெளியிடப்பட்ட தகவல் பொய்யானதா? அதைப் பிறர் நம்பி நடக்கவேண்டும் என்ற கருத்துடன் அது வெளியிடப்பட்டதா? என்ற இந்த இரண்டு கூறுகளையே சட்டம் கவனிக்கிறது. இன்னெருவருக்குத் தீங்கு விளைவிக்கவேண்டும் என்ற நோக்கம் தகவலை வெளியிட்டவருக்கு இருந்ததா இல்லையா என்பது முக்கியமன்று.

தாம் இன்னெருவரால் ஏமாற்றப்பட்டதாக நட்டஈடு கோரி வழக்கிடும் வாதி கீழ்க்கண்ட கூறுகளை மெய்ப்பித்தல்வேண்டும்:

(1) எதிர்வாதி பொய்யான தகவலை வெளியிட்டார் என்பது.
(2) அந்தத் தகவல் பொய்யானது என்று தெரிந்தோ அல்லது அது உண்மையானது என்ற நம்பிக்கை இல்லாமலோ வஞ்சனை எண்ணத்தோடு எதிர்வாதி தெரிவித்தார் என்பது.
(3) வாதி அந்தத் தகவலை நம்பி நடக்கவேண்டும் என்று எதிர்வாதி கருதினுர் என்பது.
(4) வாதி அந்தத் தகவலை உண்மை என நம்பி நடந்து அதனுல் நட்டம் அடைந்தார் என்பது.

இக்கூறுகள் மெய்ப்பிக்கப்பட்டால், எதிர்வாதி நட்டஈடு கொடுக்கக் கடமைப்பட்டவர் ஆகிருர். [Bradford Building Society V. Borders. (1941) 2. A. E. R. 205]

இவ்வாறு தமது வஞ்சகத்தால் பிறருக்குத் தீங்கு விளைவிப்பவர்கள் அத் தீங்கிற்கு ஈடு செய்யும் பொறுப்பிற்கு ஆளாகின்றனர்.

## III

## தீங்கான பொய்ம்மை (Injurious Falsehood)

*ஏமாற்றுதல், அவதூறு, தீங்கான பொய்ம்மை இவைகளுக்குள்ள வேறுபாடுகள் - சொத்துரிமை பற்றிய பொய்ம்மை (Slander of title) - போலிப் பொருள் வாணிபம் (Passing of goods) - போலி வணிகக் குறிகள் (False Trade Marks).*

ஒரு நபரைக் குறித்தோ அல்லது அவருடைய சொத்து, தொழில் இவற்றைக் குறித்தோ பொய்யான தகவலை வெளியிட்டதால், அந்த நபரின் சொத்துரிமை, தொழில் முதலியவற்றைப் பொறுத்துத் தீங்கு விளைந்தது எனில், அதைத் "தீங்கான பொய்ம்மை" என்று கூறுகிறோம்.

"ஏமாற்றுதல்" என்ற செயலில் பொய்த் தகவலைப் பெறுபவரும், அதை நம்பி நடந்து நட்டம் அடைபவரும் ஒரே நபராக இருக்கிருர். "தீங்கான பொய்ம்மை"ச் செயலில் பொய்த் தகவலைப் பெறுபவர் ஒருவர், நட்டமடைபவர் மற்ரெருவர். இதுவே இரண்டிற்கும் உள்ள வேறுபாடு.

அவதூறு: தீங்கான பொய்ம்மை - வேறுபாடு

ஒருவர் வெளியிடும் தகவலின் பயனுய் மற்ரெருவரின் புகழுக்கு ஊறு விளைந்தால் அதை "அவதூறு" என்கிறோம். புகழுக்கு இழுக்கின்றி, வேறு வகையில் நட்டம் ஏற்படுத்துதல் "தீங்கான பொய்ம்மை"யின் விளைவாகும். "அவதூறு"ச்

செயலில் வெளியிடப்பட்ட தகவல் பொய்யானதாக இருக்க வேண்டுமென்ற அவசியமில்லை. வெளியிடப்பட்ட தகவல் பொய் யானதாக இருந்தால்தான் அது "தீங்கான பொய்ம்மை" எனப் படுகிறது. இதுவே, "அவதூறு"ச் செயலுக்கும் "தீங்கான பொய்ம்மைக்கும்" இடையே உள்ள வேற்றுமை.

தீங்கான பொய்ம்மைக்கு மேற்கோள்கள்: திருமணம் நிச்சயிக்கப் பட்ட ஒரு பெண்ணைப்பற்றி அவள் ஏற்கெனவே மணமானவள் என்று பொய்யாக அவளை மணக்க இருந்தவருக்கு ஒருவர் தெரிவித்தார். அதனால் அந்தத் திருமணம் நின்றுவிட்டது. பொய்த் தகவலைக் கொடுத்தவர் அந்தப் பெண்ணிற்கு நட்டஈடு கொடுக்கவேண்டுமென்று தீர்மானிக்கப்பட்டது. [Shepherd V. Wakeman (1661) 1. Sid. 79] வாதி நடத்திக்கொண்டிருந்த தொழில் நின்றுவிட்டதென்றும், அவர் நடத்திவந்த வியாபார நிறுவனம் கலைந்துவிட்டதென்றும், எதிர்வாதி தம் பத்திரிகையில் பொய்யாக வெளியிட்டார். இதனால் வாதியின் தொழிலில் நட்டம் ஏற்பட்டது. எதிர்வாதி நட்டஈடு கொடுக்கப் பொறுப்பானவர். [Ratcliff V. Evans. (1892) 2 Q. B. 524]

## சொத்துரிமை பற்றிய பொய்ம்மை (Slander of Title)

ஒருவருடைய சொத்தைப் பற்றிப் பொய்த் தகவலை வெளி யிட்டு நட்டம் விளைவித்தால் அது ஆங்கிலத்தில் "சொத்துரிமை பற்றிய பொய்ம்மை" (Slander of Title) என்று கூறப்படுகிறது.

ஒருவர் விற்க விரும்பும் வீட்டை, "பேய் நடமாட்டமுடைய வீடு" என்று பொய்யாகக் கூறுவது, ஒருவர் விற்கும் பொருளைத் தரத்தில் குறைந்தது என்று பொய் கூறுவது, ஒருவர் விற்க இருக்கும் சொத்தின்மீது வேறு வில்லங்கங்கள் இருப்பதாகப் பொய்த் தகவலை வெளியிடுவது, இவையெல்லாம் ஒருவருடைய சொத்துப்பற்றிக் கூறப்படும் பொய்ம்மையாகும்.

வழக்கில் வாதி மெய்ப்பிக்க வேண்டிய கூறுகள்: வெளியிடப்பட்ட செய்தி பொய்யானதாக இருக்கவேண்டும். வாதிக்கு நட்டம் விளை விக்கவேண்டும் என்ற தீயநோக்கத்துடன் எதிர்வாதி நடந்திருக்க வேண்டும்; வாதி அதன் விளைவாக நட்டம் அடைந்திருக்கவேண்டும். இந்த மூன்று கூறுகளும் மெய்ப்பிக்கப்பட்டால்தான் வாதி நட்ட ஈடு பெறமுடியும்.

வியாபார விளம்பரங்கள்: ஒரு வணிகர் தாம் தயாரித்து விற்கும் ஒரு குறிப்பிட்ட சரக்குத்தான் எல்லாச் சரக்குகளையும்விட உயர்ந்தது என்று விளம்பரம் செய்கிறார். இதன் பொருள் மற்ற சரக்குகள் இந்த வணிகர் தயாரிக்கும் சரக்கைவிடத் தரத்தில்

குறைந்தவை என்பதுதான். இருப்பினும், இவ்வாறு விளம்பரம் செய்வது, பிறர் விற்கும் பொருள்களைக் குறை கூறுவது ஆகாது. இன்னொருவர் விற்கும் ஒரு சரக்கைக் குறிப்பிட்டுக் குறை கூறினால் அது தீங்காகலாம். தமது சரக்கைப் பொய்யாகப் புகழ்ந்து கூறினாலும், மற்றவர்களுக்குத் தீங்கிழைக்கும் நோக்கத்துடன் செய்யப்படும் செயலாகச் சட்டம் அதைக் கொள்வதில்லை. [White V. Mellin (1895) A. C. 154]. வியாபாரப் போட்டியில் அவரவர் விற்பனை செய்யும் பொருள்களைப் புகழ்ந்து விளம்பரம் செய்வது இயல்பேயாகும். அந்தப் புகழ்ச்சி நியாயமானதா, இல்லையா என்பதை நீதிமன்றங்கள் நிச்சயிப்பது இல்லை. அப்படி இல்லை யெனில், ஒவ்வொரு விற்பனைப் பொருளின் தரத்தையும் நிர்ண யிக்கும் பொறுப்பு நீதிமன்றங்களைச் சேர்ந்துவிடும்.

### போலிப் பொருள் வாணிபம் (Passing of Goods)

ஒருவருக்கு வாணிபம் நடத்த உரிமை இருக்கிறது. ஆனால் அவர் விற்கும் பொருள் இன்னொரு வணிகர் விற்பனை செய்யும் பொருள்போன்று தோற்றமளிப்பது கூடாது. அவ்வாறு தோற்ற மளித்தால் அப்பொருளை வாங்குவோர் அது இன்னொரு வணிகர் விற்கும் பொருள் என நம்புவதற்கு இடமளிக்கிறது. அவ்வாறே, ஒருவர் நடத்தும் வாணிபத் தொழிலின் விலாசம் மற்றொருவருடையது எனப் பிறர் நினையாத வகையில் இருக்க வேண்டும்.

ஒருவர் நடத்தும் வாணிபத் தொழிலோ அல்லது அவர் விற்கும் பொருளோ மற்றொருவருடையது என்று பிறர் நம்பத் தக்க வகையில் இருப்பதைச் சட்டம் அனுமதிப்பதில்லை. அவ்வாறு இருந்தால் அது "போலிப் பொருள் வாணிபம்" (Passing of Goods) என்று கூறப்படுகிறது. இந்தப் பொய்த் தோற்றம் சொல்லாலோ அல்லது வேறு அடையாளக் குறிகளாலோ அளிக்கப்படலாம். போலிப் பொருள் வாணிபத்தைத் தீங்காகச் சட்டம் கொள்கிறது.

போலி வணிகக் குறிகளைக் கையாளுவதே போலிப்பொருள் வாணிபம் நடைபெறுவதற்கு முக்கிய சாதனமாகிறது.

### போலி வணிகக் குறிகள் (False Trade Marks)

வணிகர்கள் தங்கள் விற்பனைப் பொருள்களை மக்களுக்கு நன்கு அறிமுகப் படுத்துவதற்கென வணிகக் குறிகளைப் (Trade Marks) பயன்படுத்துகின்றனர். நாளடைவில் மக்களுக்கு அந்த வணிகக் குறிகள் நன்கு பழக்கமாகி விடுகின்றன. மக்களால் விரும்பி வாங்கப்படும் ஒரு குறிப்பிட்ட வணிகக் குறியுள்ள

பொருளை மற்றொரு வணிகர் அதே வணிகக் குறியுடனோ அல்லது அதேபோல் தோற்றமளிக்கும் வணிகக் குறியுடனோ விற்க முன் வரலாம். போலி வணிகக் குறியுடன் கூடிய பொருளை மக்கள் ஏமாந்துபோய் வாங்கலாம். அதனால் மூல வணிகக் குறியுடன் உள்ள பொருள்களின் விற்பனை குறைந்து அதில் வாணிபம் செய்பவருக்கு நட்டம் விளைகிறது. இவ்வாறு, போலி வணிகக் குறிகள் பயன்படுத்தப்படுவதைச் சட்டம் தடுக்கிறது.

மூல வணிகக் குறி பதிவு செய்யப்பட்டிருந்தால் வணிகக் குறிச் சட்டத்தின் (Trade Marks Act)படி போலி வணிகக் குறியுடன் விற்பனை செய்பவர்மீது நடவடிக்கை எடுக்கலாம்.

வணிகக் குறி என்பது தனித் தோற்றமுடைய அடையாளமாகவோ, எழுத்துக்களாகவோ, இலக்கங்களாகவோ, தனி உருவமைப்புடையதாகவோ (get up) இருக்கலாம்.

தான் விற்கும் பொருள்களுக்குள்ள வணிகக் குறி மக்களுக்கு நன்றாகத் தெரிந்தது என்றும், அந்தக் குறியுடன் உள்ள பொருள் ஒரு குறிப்பிட்ட தயாரிப்பாளர்களால் செய்து விற்கப்படுவது என்பது வணிகத் துறையிலுள்ளவர்களுக்கும், பொதுமக்களுக்கும் தெரியும் என்றும் வாதி நிலைநாட்டவேண்டும்.

போலி வணிகக்குறி மூல வணிகக்குறி போன்றே எல்லாக் கூறுகளிலும் ஒரு சிறிதும் வேறுபாடின்றி அமையவேண்டும் என்ற அவசியம் இல்லை. இரு குறிகளுக்கும் உள்ள வேற்றுமை மேலெழுந்த வாரியாகப் பார்க்கும்பொழுது புலப்படுவதில்லையெனில், மக்கள் ஒன்றை மற்றொன்று என நினைத்து ஏமாறுவதற்கு ஏதுவாகிறது.

போலி வணிகக்குறியைப் பயன்படுத்தியவருக்கு மக்களை ஏமாற்றவேண்டும் என்ற எண்ணம் இருந்ததா என்பது பற்றியோ, அவர் மற்ற வணிகருக்கு நட்டம் விளைவித்தாரா என்பது பற்றியோ சட்டம் ஆராய்வது இல்லை. மூல வணிகக் குறியும் போலி வணிகக்குறியும் எளிதில் தோன்றும் வேறுபாடுகளின்றி இரண்டும் ஒன்று என்று மக்கள் மருட்சி கொள்ளத் தக்கபடி இருக்கின்றனவா என்பதை மட்டுமே சட்டம் கவனிக்கிறது.

நன்றாகக் கூர்ந்து கவனித்தால் இரு வணிகக்குறிகளுக்கும் உள்ள வேறுபாடு புலப்படும் என்று கூறுவதைச் சட்டம் ஏற்பதில்லை. அதிக விழிப்பில்லாத சாதாரணமான மக்கள் ஏமாறத் தக்க வகையில் போலி வணிகக்குறி அமைந்தால் போதுமானது. [Singer Manufacturing Co. V. Loog. (1882) 8. A. C. 15].

"பேரீஸ்" (Parrys) என்ற வணிகக்குறியுடன் மிட்டாய்களை விற்கும் புகழ்பெற்ற கம்பெனியார், "பெரீஸ்" (Perrys) என்ற வணிகக்குறியுடன் இன்னொரு கம்பெனியார் மிட்டாய்கள் விற்பதைத் தடை செய்யவேண்டும் எனக் கோரி வழக்குத் தொடர்ந்தனர். அவ்விரு சொற்களும் ஒலி வடிவிலும், வரி வடிவிலும் ஒன்றுபோலவே தோன்றுகின்றன என்றும், இச் சொற்களைக் கேட்பவர்களும், பார்ப்பவர்களும் இரண்டும் ஒன்று என்று எண்ண ஏதுவிருக்கிறது என்றும் முடிவுசெய்து "பெரீஸ்" என்ற வணிகக்குறியை மிட்டாய்களுக்குப் பயன்படுத்தக்கூடாது என்று சென்னை உயர்நீதிமன்றம் தடை விதித்தது. இது அண்மையில் கூறப்பட்ட தீர்ப்பாகும்.

ஒரு வணிகர் ஒரு பொருளுக்குப் பயன்படுத்தும் வணிகக் குறியை மற்றொரு வணிகர் அதே வகைப் பொருளுக்குப் பயன்படுத்துவதைத் தான் சட்டம் தடுக்கிறது. அந்த வணிகக் குறியை வேறு வகைப் பொருள்களுக்குப் பயன்படுத்தத் தடையில்லை. ஒரு வணிகக் குறியுள்ள மிட்டாய்கள் புகழடைந்து இருக்கலாம். ஆனால், அதே வணிகக்குறியுடன் இன்னொரு வணிகர் கடிகாரங்களையோ, பொம்மைகளையோ விற்பதைச் சட்டம் தடுப்பதில்லை. ஏனெனில், ஒரு குறிப்பிட்ட பொருளும் அத்துடன் இணைந்த வணிகக் குறியுமே மக்கள் மனதில் பதிந்து இருக்கின்றன. அதே வணிகக் குறியை வேறு வகைப் பொருளுக்குப் பயன்படுத்தினால் மக்கள் ஏமாறுவதற்குக் காரணமில்லை.

வருணனையான சொற்றொடர்களை வணிகக்குறி எனச் சட்டம் கொள்ளுவதில்லை. குழந்தைகளுக்கான புட்டி உணவு விற்கும் ஒரு கம்பெனியார் அந்த உணவிற்குச் "சத்துள்ள உணவு" என்று பெயர் கொடுத்து விற்பனை செய்யலாம். "சத்துள்ள உணவு" என்பது எல்லோரும் பயன்படுத்தும் சொற்றொடர். ஆகவே, இன்னொரு வணிகர் தாம் விற்கும் குழந்தைகளுக்கான புட்டி உணவைச் "சத்துள்ள உணவு" என்று வருணிப்பதைச் சட்டம் தடுப்பதில்லை.

ஒரு வணிகரால் ஒரு பொருள் ஒரு தனிப் பெயருடன் விற்பனை செய்யப்பட்டிருக்கலாம். ஆனால் நாளடைவில் அந்தத் தனிப் பெயர் அந்த வணிகர் தயாரிக்கும் பொருளுக்கு மட்டுமின்றி, அந்தப் பொருளுக்கான பொதுப் பெயராக மாறிவிடலாம். அப்படியெனில், அந்தப் பெயரை எல்லா வணிகரும் பயன்படுத்துவதைச் சட்டம் தடை செய்வதில்லை. மேற்கோளாகக் "கிராமபோன்" (Gramophone) என்ற சொல்லை எடுத்துக் கொண்டால் அது தொடக்கத்தில் ஒரு குறிப்பிட்ட வணிகர் தயார் செய்த இசைப்பெட்டியை மட்டும் குறிக்கும் பெயராக இருந்தது.

நாளடைவில் எல்லா இசைப்பெட்டிகளும் இதே பெயரால் அழைக்கப்பட்டன. ஆதலால் எல்லா வணிகர்களும் அவரவர் தயார்செய்து விற்கும் இசைப்பெட்டிகளைக் "கிராமபோன்" என்று குறிப்பிட்டாலும் அது தீங்கானசெயல் ஆவதில்லை. [Gramophone Cos, Application. (1910) 2. Ch. 423].

வணிகக்குறியைச் சட்டம் பாதுகாப்பது போலவே வாணிபப் பெயரையும் பாதுகாக்கிறது. ஒருவர் நடத்தும் வியாபாரப் பெயரில் இன்னொருவரும் அதே வியாபாரத்தை நடத்துவதைச் சட்டம் தடை செய்கிறது.

ஆனால் இரு வணிகரின் பெயர்கள் ஒன்றாக இருக்கலாம். முதலாவதாக வாணிபம் தொடங்கியவர் பின்னால் ஆரம்பிக்கப் படும் தம் பெயருள்ள வாணிபத்தைத் தடை செய்ய முடியாது. இராமசாமி என்ற பெயருடைய இருவர் துணி வியாபாரத்தைத் தம் பெயர்களையுடைய விலாசத்தில் நடத்தலாம். முதலில் வியா பாரத்தை ஆரம்பித்தவர் அடுத்தவர்மீது வழக்கிட முடியாது. ஒருவர் தமது பெயரில் வாணிபம் நடத்து வதை மற்றவர் தடை சொல்லுவதற்கில்லை.

புத்தகங்கள், பத்திரிகைகள் இவைகளின் பெயர்களையும் சட்டம் பாதுகாக்கின்றது. ஒரு புகழ்பெற்ற நூலாசிரியரின் பெயரால் அவரால் எழுதப்படாத ஒரு நூலைப் பிரசுரித்தலும் தீங்கான செயலாகும். [Lord Byron V. Johnston. (1816) 2. Mer. 29].

ஒரு நடிகர் தம்மை மற்றொரு புகழ்பெற்ற நடிகர் என மக்கள் நினைக்கவேண்டும் என்ற நோக்கத்துடன், தமது குரலைப் புகழ் பெற்ற நடிகரின் குரலைப்போல் மாற்றியமைத்து நடித்தார். போலி நடிகர் செய்தது தீங்குச் செயல் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Sim. V. Heinz & Co. Ltd. (1959) 1. WLR. 313.]

மனித வாழ்வில் பொய்ம்மை பல வழிகளில் தீங்கு இழைக் கிறது. வாணிபத் துறையில் "போலிப் பொருள் வாணிபமாக" அது நிலவுகிறது. ஒருவரை ஒருவர் ஏமாற்றவும், வஞ்சிக்கவும் பொய்ம்மையே ஆதாரமாக இருக்கிறது. மக்களிடை நம்பிக்கையும், நல்லெண்ணமும் நிலவவேண்டுமெனில் பொய்ம்மை அகற்றப் படவேண்டும். இல்லையேல், சந்தேகமும் நம்பிக்கையின்மையும் பரவி வாழ்வில் இருளைப் புகுத்திவிடும். எனவே தீமை பயக்கும் பொய்ம்மைகளை "ஏமாற்றுதல்", "தீங்கான பொய்ம்மை", "போலிப் பொருள் வாணிபம்" என்ற தீங்குகளாகக் கொண்டு சட்டம் அவைகளைத் தடை செய்கிறது.

---

# பகுதி 14

## அச்சுறுத்தல் (Intimidation)

அச்சுறுத்தல் என்பது என்ன? - கட்டாயப்படுத்துவதற்குக் கையாளப்படும் செயல் சட்ட முரணுனதாக இருந்தால்தான் அது நீங்காகும் - அச்சுறுத்தல் குற்றமுமாகும்.

**அச்சுறுத்தல் என்பது என்ன?**

ஒருவர் தம்மிச்சைப்படி செயலாற்றுவதை அச்சுறுத்தலால் தடுத்து, அதனுல் அவருக்கோ அல்லது பிறருக்கோ கேடு விளை விப்பது "அச்சுறுத்தல்" (Intimidation) என்ற தீங்காகிறது.

இராமன் என்பவர் தம் விருப்பப்படி ஒரு வாணிபம் செய்து கொண்டிருக்கிருர். அது கோவிந்தன் நடத்தும் வாணிபத்திற் குப் போட்டியாக இருக்கலாம். கோவிந்தன், தமக்குப் போட்டி யாக இருக்கும் இராமனைக் கொன்றுவிடுவதாகவோ அல்லது உடலுக்கு ஊறு விளைக்கப் போவதாகவோ கூறி இராமனை அச் சுறுத்துகிருர் என வைப்போம். இதனுல் இராமன் தாம் நடத்தும் வாணிபத்தை நிறுத்தும்படியான நிலை ஏற்பட்டால், கோவிந்தன் "அச்சுறுத்தல்" என்ற தீங்கு இழைத்தவர் ஆகின்ருர். அல்லது இராமனுடைய கடையிலிருந்து சாமான்கள் வாங்குபவர்களை அச் சுறுத்தி, இராமன் கடையில் வாணிபம் செய்யாதவாறு கோவிந் தன் தடுக்கலாம். இதனுலும், இராமனுக்கு நட்டம் விளைகிறது. இப்பொழுதும் கோவிந்தனின் செயல் "அச்சுறுத்தல்" ஆகின்றது.

இராமனுக்கு விளையும் கேடு அவரை நேரடியாக கோவிந்தன் அச்சுறுத்தியதாலும் விளையலாம்; அல்லது மூன்ருவது நபர்களைக் கோவிந்தன் அச்சுறுத்தியதாலும் விளையலாம். இச் செயலால் இராமனுக்கு விளையும் நட்டத்திற்குக் கோவிந்தன் பொறுப்பா கின்ருர்.

"சாதாரண திடமனதுடையவர்களால் எதிர்த்து நிற்க முடி யாதபடி வெருட்சியூட்டும் சொல்லாலோ செயலாலோ, ஒருவரை அவர் இச்சைக்கு மாருக நடக்கும்படி செய்து, அதனுல் அவருக்கு மற்ருெருவர் கேடு விளைவித்தால், கேடு அடைந்தவர் அச்சுறுத் தியவரிடமிருந்து நட்டஈடு பெறுதற்குரியவர்" என்ற கொள்கை ஹாக்கின்ஸ் (Hawkins) என்ற நீதிபதியால் விளக்கப்பட்டது. [Allen V. Flood (1898) A.C. 1]

**கட்டாயப்படுத்துவதற்கு கையாளப்படும் செயல் சட்ட முரணுனதாக இருந்தால் தான் அது தீங்காகும்:**

எதிர்வாதி சட்ட முரணுன செயலைச் செய்யப் போவதாக அச்சுறுத்தியிருக்க வேண்டும். அப்பொழுதுதான் அது தீங்கான செயலாகும். வாதி ஒரு செயலைச் செய்யக்கூடாது என்ற நோக்கத்துடன் எதிர்வாதி சட்ட இசைவான ஒரு காரியத்தைச் செய்யலாம் அல்லது செய்யப் போவதாக வாதியிடம் கூறி அவரைக் கட்டாயப்படுத்தலாம். எனினும், அது அச்சுறுத்தல் ஆவதில்லை. கட்டாயப்படுத்தலுக்குக் கையாளப்படும் செயல் சட்ட முரணுன செயலாக இருக்கவேண்டும். அப்பொழுதுதான் அது ''அச்சுறுத்தல்'' ஆகிறது.

ஒருவர் மற்றெருருவரிடம் கடன் கேட்கிருர். கடன் கொடுப்பவர் தமது விருப்பப்படி ஒரு காரியத்தைச் செய்யவேண்டுமென்று கடன் பெறுபவரை வற்புறுத்தி, அதைச் செய்தால்தான் கடன் கொடுக்க முடியும் என்று கூறுகின்ருர், இவ்வாறு, கடன் பெறுபவர் வற்புறுத்தப்படலாம். எனினும், இதை ''அச்சுறுத்தல்'' என்று கூறுவதற்கில்லை. ஏனெனில், கடன் கொடுக்க மறுப்பது சட்ட முரணுன செயலன்று.

வாதியின் கற்சுரங்கத்திலிருந்து கற்களை வாங்க விடாமல் வாடிக்கைக்காரர்கள் எதிர்வாதியால் தடுக்கப்பட்டனர். வாடிக்கைக்காரர்களைத் தாக்கிக் காயம் விளைவிக்கப் போவதாக எதிர்வாதி அவர்களைப் பயமுறுத்தினுர். இதனுல் வாதிக்கு விளைந்த நட்டத்திற்கு எதிர்வாதி ஈடு கொடுக்கவேண்டும் என்பது தீர்ப்பு. [Garret V. Taylor (1620) Cro. Jac 567]

வாணிபத்தில் ஈடுபட்ட இரு கப்பல்கள் ஒரு நாட்டின் கரையோரமாக நின்றுகொண்டிருந்தன. ஒரு கப்பலிலிருந்து பொருள்களைப் பெறுவதற்கென வந்த படகின்மீது அடுத்த கப்பலின் தலைவர் சுட்டார். அதனுல் படகில் இருந்தவர்கள் பயந்துபோய்ச் சாமான்களை வாங்காமல் சென்றுவிட்டனர். முதற்கப்பலின் வாணிபம் இதனுல் தடைப்பட்டது. இந்த நட்டத்திற்குப் படகை நோக்கிச் சுட்ட கப்பல் தலைவர் பொறுப்பாளுர். [Tarleton V. Mc Gawley — (1793) 1. Peake — 270]

அச்சுறுத்தல் குற்றமுமாகும்

''குற்றமான அச்சுறுத்தல்'' (Criminal intimidation) இந்தியக் குற்றச்சட்டத்தின் 503ஆவது பிரிவுப்படி தண்டனைக்குரிய குற்றமுமாகும். இதனுல் விளையும் நட்டத்திற்கு ஈடு பெறுவதற்குத் தீங்கியல் சட்டம் வகை செய்கிறது.

---

# பகுதி 15

## சதி (Conspiracy)

'சதி' என்பது என்ன? பிறருக்குக் கேடு விளைவிக்கும் நோக்குடன் சேர்ந்து செயல்படல் - அதனால் பிறருக்கு விளையும் கேடு - இதுவே சதித் தீங்கின் சாரம் - தனி மனிதர் செய்வது சட்ட முரணான செயலாகா திருக்கலாம் - அதே செயல் கூட்டாகச் செய்யப்பட்டால் தீங்காகலாம் - வாணிபத் துறையில் கூடி இயங்குதல் - கூட்டியக்கத்தின் முக்கிய நோக்கத்தை வைத்தே செயலின் தன்மை உறுதிசெய்யப்படுகிறது - சதிக் குற்றத்திற்கும், சதித் தீங்கிற்கும் உள்ள வேறுபாடு - முக்கிய வழக்குகள்.

### 'சதி' என்பது என்ன?

ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் தங்களுக்குள் இசைந்து இயங்குவதன் மூலம் பிறருக்குத் தீங்கு விளைவிக்க முற்படுதல் "சதிச் செயல்" என்று பொதுவாகக் கூறப்படுகிறது. (i) பிறருக்குத் தீங்கு விளைவிக்க வேண்டுமென்ற தீய நோக்கத்துடன் அவர்கள் சேர்ந்து செயல்படவேண்டும். (ii) அதன் விளைவாகப் பிறருக்குக் கேடு விளைந்திருக்க வேண்டும். இப்பொழுது, நட்டமடைந்தவர் சதியில் ஈடுபட்டவர்களிடமிருந்து நட்டஈடு பெறலாம் எனச் சட்டம் விதிக்கிறது.

* * *

சட்டத்தில் பயன்படும் "சதி" என்ற சொல்லின் இலக்கணத்தைப் பார்ப்போம்.

(i) சட்ட முரணான காரியத்தைச் செய்வதற்கென்றோ,

(ii) சட்ட முரணில்லாத காரியத்தைச் சட்ட முரணான வழிகளால் செய்வதற்கென்றோ,

(iii) இன்னொருவருக்குக் கேடு விளைவிக்க வேண்டும் என்ற நோக்கத்துடனோ,

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் சேர்ந்து இயங்கி, அதனால் பிறருக்குத் தீங்கு விளைந்தால். அது "சதி" (Conspiracy) என்று கூறப்படுகிறது.

மேலே கூறப்பட்டபடி "சதி"யின் இலக்கணத்தில் உள்ள கூறுகளைப் பற்றிக் காணலாம்.

கொலை, களவு போன்ற தண்டிக்கத்தக்க குற்றங்கள் சட்ட முரணான செயல்கள். இவைகளைச் செய்யும் நோக்கத்துடன் ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் கூடி இயங்கி அதனால் பிறருக்குத் தீங்கு விளைந்தால் அதுவும் "சதி"யாகிறது.

சில வேளைகளில், ஒருவர் தனித்துச் செய்யும் செயல் சட்ட முரணில்லாததாகவும், ஆனால் அதே செயலைப் பலர் சேர்ந்து செய்யும்பொழுது அது சட்ட மீறிய செயலாகவும் ஆகின்றது. அது எவ்வாறு?

சட்டப்படி நமக்குள்ள உரிமைக்கு இன்னொருவர் ஊறு விளை வித்தால்தான் அது தீங்கு (legal wrong) ஆகிறது எனக் கண்டோம். நமது உரிமையைப் பாதிக்காத வகையில் நமக்கு இன்னொருவர் நட்டத்தை விளைவித்தால் அது சட்டப்படி தீங்கு ஆவதில்லை. நான் ஒரு வாணிபம் செய்கிறேன். என் பகைவர் என்னிடமிருந்து பொருள்களை வாங்கவேண்டும் என்ற கட்டாயம் இல்லை. அவர் என்னிடம் பொருள்களை வாங்கினால் எனக்கு ஆதாயம் அதிகமாகலாம்; அவர் அவ்வாறு வாங்காததால் எனது ஆதாயம் குறைந்து நட்டம் விளைகிறது. எனினும், அவர் பகைமையின் காரணமாக என்னிடமிருந்து பொருள்கள் வாங்கவில்லை என்பதற்காக அவர்மீது நடவடிக்கை எடுக்கமுடியாது. ஏனெனில், என்னிடமிருந்து பொருள்களை வாங்குவதும் வாங்காமலிருப்பதும் அவரது விருப்பத்தைப் பொறுத்தது. ஆனால், பலர் ஒன்று கூடி எனக்கு நட்டம் விளைவிக்க வேண்டும் என்ற தீய நோக்கத்துடன் என்னிடம் பொருள்கள் வாங்குவதில்லை எனத் தங்களுக்குள் ஒப்புக்கொண்டு அதன்படி நடக்கிறார்கள் என வைத்துக் கொள்வோம். இதன் விளைவாக எனக்கு நட்டம் விளைகிறது. இப்பொழுது அவர்கள் செயல் சட்டப்படி தீங்கான செயலாகும். நான் எனக்கு விளைந்த நட்டத்திற்கு அவர்களிடமிருந்து நட்டஈடு பெறலாம்.

ஒரு சிட்டிகையளவுள்ள வெடி மருந்தினால் கேடு விளைவதில்லை. ஆனால், அது அளவில் கூடிவிட்டால் பெருத்த இடர் விளைகிறது. அளவோடு அருந்தும் மருந்து நோயைக் குணப்படுத்துகிறது. அளவிற்கு மீறிய மருந்து நஞ்சாக மாறுகிறது இதுபோலவே, தனித்து ஒருவர் தீய நோக்கத்துடன் ஒரு செயலைச் செய்தாலும் அதனால் பிறருக்கு விளையும் கேடு ஓர் அளவில் தான் நிற்கிறது. ஆனால், பலர் கூடி அதே செயலைச் செய்யும் பொழுது விளையும் கேடு அதிகமாகிறது. எனவே, ஒருவர் மட்டும் செய்யும் கேடு விளைவிக்கும் செயலைச் சட்டம் பொருட்படுத்தாது இருப்பினும், பலர் கூடிப் பிறருக்குக் கேடு விளைவிப்பது சட்ட முரணான செயலாகக் கொள்ளப்படுகிறது. பிறருக்குக் கேடு விளைவிக்க வேண்டும் என்ற நோக்கத்துடன் பலர் கூடிச் சேர்ந்து இயங்குவது சட்ட முரண்பாடான செயல் ஆகும். இவ்வாறு 'சதி'யின் கூறுகளை விளக்கும் தீர்ப்புக்களில் கூறப்படுகிறது. Quinn V. Leathem (1901) A. C. 495]

இந்த முறையில், ஒருவர் தனித்துச் செய்யும் செயல் சட்ட முரண்பாடில்லாத தாகவும், அதே செயலைப் பலர் கூடிச் செய்கையில் தீங்கானதாகவும் (சட்ட முரண் பாடு உள்ளதாகவும்) மாறுகின்றது.

வாணிகத்துறையில் கூடி இயங்குதல்

வாணிகத் துறையில் பலர் ஒன்று கூடித் தங்கள் நலனைப் பாதுகாப்பதற்கெனச் சேர்ந்து இயங்கலாம். இவ்வாறு அவர்கள் கூட்டாகச் சேர்ந்து இயங்குவதன் பலனைய் அந்தக் கூட்டில் சேராத வணிகருக்கு நட்டம் விளையலாம். பிறருக்கு நட்டம் ஏற்படுத்தினால் தான் தங்கள் நலனைப் பாதுகாக்க முடியும் என்ற நிலை ஏற்படுவதுண்டு. இப்படிப்பட்ட சூழ்நிலைகளில் கூட்டுச் சேர்ந்து இயங்குவது சட்ட முரண்பாடானதா, இல்லையா என்பது வினா. ஒரு கூட்டியக்கத்தின் தலையாய நோக்கம் எது என்பதைச் சட்டம் கவனிக்கிறது. தங்கள் நலனைப் பாதுகாக்கும் முக்கிய நோக்கத்துடன் கூட்டு ஏற்பட்டிருந்தால், அது சட்ட முரணான செயல் ஆவதில்லை. அம்மாதிரியான கூட்டியக்கத்தினால் பிற ருக்குக் கேடு விளைந்தாலும் அது வணிகப் போட்டியின் இயல்பான விளைவாகவே கருதப்படுகிறது. ஆனால் கூட்டுச் சேர்ந்ததன் முக்கிய நோக்கம் இன்னொருவருக்குக் கேடு விளைவிப்பதுதான் எனில் அது சட்ட முரணான செயலாகிறது.

எனவே, கூட்டு இயக்கத்தின்—சேர்ந்து செயல்படுதலின்—முக்கிய நோக்கத்தை (Predominant motive) அடிப்படையாக வைத்தே அச்செயல் சட்ட முரணானதா இல்லையா என்பது உறுதி செய்யப்படுகிறது. சேர்ந்து இயங்குபவர்களின் நோக்கமே முக்கியமாகிறது.

தங்கள் நலனைப் பாதுகாப்பதற்கெனப் பலர் சேர்ந்து இயங்கும்பொழுது, சட்ட முரணான வழிகளைக் கையாளவும் கூடாது. பிறரை அச்சுறுத்தியோ (threat) வலுக்கட்டாயப்படுத்தியோ (coercion) தங்கள் நலனுக்குகந்த வகையில் நடக்குமாறு செய்தல் சட்டத்திற்கெதிரான செயலாகும். எனவே, தங்கள் நலனைப் பாதுகாத்தல் என்ற குறிக்கோள் குற்றமற்றதாக இருப்பினும், அந்தக் குறிக்கோளை எய்துவதற்குச் சட்டத்திற்கு முரணான வழிகள் கையாளப் பட்டால் அது சட்டப்படி தீங்கான செயலாகிறது.

எனவே, சட்ட முரணான செயல்களைச் செய்வது, சட்ட முரணான முறைகளைக் கையாளுவது, பிறருக்குத் தீங்கு விளைப்பது, இவைகளில் எந்த நோக்கத்துடனும் ஒன்றுக்கு மேற்பட்ட நபர்கள் கூடி இயங்கி அதன் பயனாய் இன்னொருவருக்கு நட்டம் விளைந்தால் அது "சதிச் செயல்" என்று கொள்ளப்படுகிறது. சதிச் செயலைத் தீங்கு எனச் சட்டம் விதிக்கிறது.

குற்றச் சட்டத்தில் (Penal Code) குறிப்பிடப்படும் "சதிக் குற்றத்திற்கும்'' (Criminal Conspiracy) இங்கு நாம் "சதி" என்று கூறுவதற்கும் வேறுபாடு உண்டு.

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் தண்டிக்கத் தக்க குற்றமான செயலை (Offence)ச் செய்வது என ஒப்புக் கொள்ளுதலே கூடச் ''சதிக் குற்றம்'' ஆகிறது. அந்த ஒப்புதலை ஒட்டி வேறு செயல் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. அந்த ஒப்புதலே குற்றமான செயலாகும். ஆனால், நட்ட ஈடு கோருவதை அடிப்படையாகக் கொண்ட உரிமை வழக்குகளில் சதியின் பயனாய் இன்னொருவருக்குத் தீங்கு அல்லது கேடு விளைந்தால்தான் அது "தீங்கான சதி'' (Tort of Conspircy) ஆகிறது. இவ்வாறு, உரிமை வழக்குகளில், இன்னொருவருக்கு விளைந்த கேட்டை அடிப்படையாகக் கொண்டே சதியில் ஈடுபட்டவர்கள் பொறுப்பாகின்றனர்.

சதியின் பயனாய் நட்டம் விளைந்திருக்கவேண்டும். தமக்கு விளைத்த நட்டத்தை மெய்ப்பித்தால்தான் வாதி அதற்கான நட்ட ஈடு பெற முடியும். வாதிக்கு எந்த வித நட்டமும் ஏற்படவில்லை யெனில், எவ்வித இழப்பீடும் பெற முடியாது.

சதியில் ஈடுபட்ட ஒவ்வொருவரும் தீங்கு இழைக்கப்பட்ட வருக்கு ஈடு செய்யும் பொறுப்புடையவர் ஆகின்றார்.

* * *

இனி, இது தொடர்பான முக்கிய வழக்குகள் சிலவற்றைக் காணலாம்.

சீனாவிற்கும் ஐரோப்பாவிற்கும் இடையில் சரக்குகளைக் கப்பலில் கொண்டு செல்லும் கம்பெனிகள் அந்தத் தொகுதியில் தனி உரிமை (monopoly) பெறும் நோக்கத்துடன் கூட்டாகச் சேர்ந்து கொண்டு, இன்னொரு கம்பெனிக்குப் போட்டியாகத் தாங்கள் பெறும் கட்டண விகிதத்தைக் குறைத்தன. இதனால் தனித்தியங்கிய கம்பெனி மூலம் சரக்கு அனுப்புபவர்கள் குறைந்து போய் அதற்கு நட்டம் ஏற்பட்டது. அந்தக் கம்பெனி தொடர்ந்த வழக்கில், கூட்டாகச் சேர்ந்து இயங்கிய கம்பெனிகள் தனி உரிமை (monopoly) பெற்றுத் தங்கள் நலனைப் பாதுகாக்கும் நோக்கத்துடனேயே அவ்வாறு இயங்கின என்றும், அந்த நோக்கத்தில் வெற்றி பெறுவதற்குச் சட்ட முரணான வழி எதையும் பின்பற்றவில்லை என்றும் காணப்பட்டன. எனவே, கூட்டுச் சேர்ந்த கம்பெனிகள் நட்ட ஈடு கொடுக்க வேண்டியதில்லை என்பது தீர்ப்பு. [Moghul Steamship Co. V. Mc. Gregor Gow & Co. (1892) A. C. 25]

சட்டப்படியான செயல் தீய நோக்குடன் செய்யப்பட்டது என்பதால் மட்டும் அது சட்ட முரணான செயலாக மாறுவதில்லை என்று Allen V. Flood (1898) A. C. I என்ற வழக்கில் கூறப்பட்டது. ஆனால் பலர் கூடி இயங்கும்பொழுது அவர்கள் நோக்கம் முக்கியமாகக் கவனிக்கப்பட வேண்டும் என்பது அடுத்து வந்த வழக்குகளில் வற்புறுத்தப்பட்டது.

கூட்டியக்கத்தில் முக்கிய நோக்கம் பிறருக்குக் கேடு விளை விக்க வேண்டுமென்பதாக இருந்தால், அந்தக் கூட்டியக்கம் சட்ட மீறிய செயலாகும் என்பது Quinn V. Leathem (1901) A. C, 495 என்ற வழக்கில் தெளிவாகக் கூறப்பட்டது. வழக்கின் சாரம்:—

ஓர் இறைச்சி வணிகரான வாதியின் வேலையாட்கள் குறிப்பிட்ட தொழிற்சங்கத்தின் உறுப்பினர்களாக இல்லை. ஆதலால், தொழிற்சங்கத்தினர் அந்த வேலையாட்களை வேலையினின்றும் நீக்கிவிடும்படி இறைச்சி வணிகரைக் கோரினர். அதற்கு அவர் இசையவில்லை. எனவே, வாதியிடம் இறைச்சி வாங்கும் முக்கியமான வாடிக்கைக்காரரை அவரிடமிருந்து வாங்காமல் சங்கத்தினர் தடுத்தனர். வாடிக்கைக்காரரின் வேலையாட்கள் வேலைக்கு வராமல் தடுக்கப்பட்டு விடுவார்கள் என்று அச்சுறுத்தப்பட்டதால், அந்த வாடிக்கைக்காரர் வாதியிடமிருந்து இறைச்சி வாங்குவதை நிறுத்திக் கொண்டார். இவ்வாறு வாதியின் வாணிபம் பாதிக்கப்பட்டது. எனவே, வாதி தொழிற்சங்கத்தின்மீது நட்ட ஈடு கோரி வழக்குத் தொடர்ந்தார். தொழிற்சங்கம் நட்ட ஈடு கொடுக்க வேண்டும் என்று தீர்ப்பளிக்கப்பட்டது.

இந்த வழக்கு, சதித் தீங்கின் கூறுகளை விளக்கிக் கூறும் முக்கிய வழக்காகும்.

தங்களுடைய தொழிலின் முன்னேற்றத்திற்கெனப் பலர் ஒன்று சேர்ந்து இயங்குவது முறையேயாகும். இவ்வாறு இயங்குவதால் நியாயமான போட்டி ஏற்பட்டுப் பிறருக்குத் திங்கு விளையலாம். அதைத் தடுப்பதற்கில்லை. ஆனால், இன்னொருவருக்குத் தீங்கு விளைவிக்க வேண்டும் என்ற முக்கிய நோக்கத்துடன் பலர் சேர்ந்து செயல்படுவது சட்டத்திற்குப் புறம்பான செயலாகும். இவ்வாறு Lord Shand என்ற நீதிபதி அந்தத் தீர்ப்பில் கூறினர்.

தம் விருப்பப்படி வாணிபம் செய்யும் உரிமை எல்லோருக்கும் உண்டு. அச்சுறுத்தியோ, கட்டாயப்படுத்தியோ, ஒருவர் அவர் விருப்பப்படி வாணிபம் செய்வதைத் தடுப்பது சட்ட மீறிய செயலாகும் என்று Lord Lindley என்ற நீதிபதி மேலே கூறப்பட்ட தீர்ப்பில் கூறியிருக்கிறார்.

எனவே, தங்கள் நலனைப் பாதுகாப்பதற்கென்ற சரியான நோக்கத்துடன் பலர் கூடி இயங்குவது சட்ட முரணான செயல் ஆவதில்லை. ஆனால், இன்னொருவரைக் கெடுக்க வேண்டும் என்ற தீய நோக்குடன் பலர் சேர்ந்து செயல்படுவது சட்ட மீறிய சதிச் செயல் ஆகின்றது. இரண்டு நோக்கங்களும் இருந்தால், எது தலையாய நோக்கம் என்று பார்த்து அதன்படி செயலின் தன்மை உறுதி செய்யப்படுகிறது. [Crofter Hand - Woven Harris etc. Co. V. Veitch. (1942) A.C. 435] [Sorrel V. Smith (1925) A.C. 700]

பிறர் இன்ன செய்ய வேண்டும் என்று கட்டாயப் படுத்தும் வல்லமை தங்களிடம் இருக்கிறது என்பதைக் காட்டுவதற்கோ, குறிப்பிட்ட ஒரு சூழ்நிலையில் தங்கள் கைதான் ஓங்கியிருக்கிறது என்பதைக் காட்டும் வகையிலோ, பிறரின் சமயம் அல்லது அரசியல் கொள்கைகள் மீதுள்ள வெறுப்பின் விளைவாகவோ, பலர் கூடி இயங்குவதும் சதித் தீங்கான செயலேயாகும்.

பலர் கூட்டாகச் சேர்ந்து தங்கள் நலனைப் பாதுகாப்பதற்கென இயங்குவது தொழிலாளர்கள் முதலாளிகள் இவர்களிடையே ஏற்படும் பூசல்களினால்தான் பெரும்பாலும் தோன்றுவதாகும். இந்தப் பூசல்களைத் தீர்ப்பதற்கென்று பல நாடுகளிலும் சட்டங்கள் இயற்றப்பட்டிருக்கின்றன. நம்நாட்டில் 1947ஆம் வருடத்திய தொழில் தகராறுகள் (வழக்குகள்) சட்டம் அமுலில் இருப்பதால் அவை சம்பந்தமான வழக்குகள் அவற்றிற்கென நியமிக்கப்பட்ட முறைமன்றங்களால் தீர்க்கப்படுகின்றன. வழக்கு விசாரணையில் இருக்கும்பொழுது தொழிலாளர் வேலை நிறுத்தம் செய்வது குற்றமான செயலாகிறது.

இவ்வாறு, பலர் கூட்டாகச் சேர்ந்து இயங்கி ஒருவருக்குக் கேடு விளைவிப்பதைத் தீங்கான செயலாகச் சட்டம் விதிக்கிறது.

---

# பகுதி 16

## ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல்
## (Interference with Contractual Relations)

*ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல் என்பது என்ன? அது எப்போது நீங்குகிறது? குறுக்கிடுதலின் வகைகள் - குறுக்கீடு எப்போது நியாயமாகின்றது - தொழிற் பூசல்கள்.*

ஒருவருக்குள்ள உரிமை சட்டத்தால் அளிக்கப்படுவது போன்று, ஒப்பந்தத்தால் எழுவதும் உண்டு.

ஒருவர் தமக்குச் சொந்தமான நிலத்தை ஒரு குறித்த விலைக்குக் குறிப்பிட்ட காலத்திற்குள் எனக்கு விற்பதாக என்னுடன் உடன்பாடு செய்து கொள்கிறார். குறித்த விலையைக் கொடுத்து அந்நிலத்தை வாங்கும் உரிமை எனக்கு இந்த ஒப்பந்தத்தின் மூலம் எழுகின்றது. இதை ஒப்பந்த உரிமை (Contractual right) என்கிறோம். இந்த ஒப்பந்தத்தை அவர் மீறினால் அது ஒப்பந்த மீறுதல் (Breach of Contract) ஆகின்றது. ஒப்பந்தச் சட்டத்தின் (Contract Act) படி அந்த ஒப்பந்த மீறலால் விளைந்த நட்டத்தை நான் வழக்கிட்டுப்பெற முடியும்; அல்லது குறித்த நிவாரணச்சட்டத்தின் (Specific Relief Act) கீழ் வழக்கிட்டு அந்த ஒப்பந்தப்படி அவரை நடக்கும்படி செய்யலாம்.

### ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல் என்றால் என்ன ?

என்னுடன் ஒப்பந்தம் செய்து கொண்டவருக்கும் எனக்கும் ஒப்பந்த உறவு (Contractual relation) ஏற்படுகிறது. அதில், மூன்றாமவர் தலையிட்டு, ஒப்பந்தம் செய்து கொண்டவரை ஒப்பந்தத்தை மீறும்படி செய்தார் என வைத்துக் கொள்வோம். மீறச்செய்தவர்மீது நாம் எவ்வாறு நடவடிக்கை எடுப்பது ? மேலே கூறப்பட்ட சட்டங்களின்படி அவர் மீது வழக்கிட முடியாது. ஏனெனில், அவர் ஒப்பந்தத்துடன் சம்பந்தப்படாத நபர். ஆனால், மூன்றாமவர் செய்த செயலைத் "தீங்கு" எனத் தீங்கியல் சட்டம் விதிக்கிறது.

உரிமைக்கு ஊறு விளைத்தல் தீங்கான செயலாவது போல் ஒப்பந்த உறவில் குறுக்கிடுதலும் தீங்கேயாகிறது.

இரண்டு நபர்களுக்குள் ஏற்பட்ட ஒப்பந்தத்தில் நியாயமான காரணமின்றிக் குறுக்கிட்டு அதனால் அவர்களில் ஒருவருக்குக் கேடு விளைத்தல் "ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல்" (Interference with Contractual Relations) என்ற தீங்காகிறது.

நம்முடன் ஒப்பந்தம் செய்து கொண்டவர் அதன்படி நடக்கத் தயாராக இருக்கலாம். ஆனால், நம்மீது பகைமை கொண்டவர்கள் தீய எண்ணத்துடன், ஒப்பந்தம் செய்துகொண்டவரை வன்முறையினாலோ, வஞ்சித்தோ, ஒப்பந்தப்படி நடக்காமல் தடுத்துவிடலாம். அவ்வாறு, ஒப்பந்த உறவில் குறுக்கிடுவதைச் சட்டம் தடை செய்யவில்லையெனில் சட்டம் போற்றிக்காக்கும் ஒப்பந்தஉறவு திற நிறைவற்றதாகிவிடும்.

வாதியுடன் ''வேக்னர்'' என்ற புகழ்பெற்ற பாடகி ஓர் ஒப்பந்தம் செய்து கொண்டிருந்தார். அந்த உடன்பாட்டில் வாதிக்குச் சொந்தமான பாடலரங்கில் ஒரு குறிப்பிட்ட காலத்திற்குப் பாடுவது என்றும், அந்தக் காலத்தில் வேறு எங்கும் பாடுவதில்லை என்றும் பாடகி ஒப்புக்கொண்டிருந்தார். இந்த ஒப்பந்தம் பற்றி அறிந்திருந்த எதிர்வாதி, வாதிக்குக் கேடு விளைவிக்கவேண்டும் என்ற தீய எண்ணத்துடன், பாடகியைக் கடத்திச் சென்றார். அதனால், ஒப்பந்தம் நிறைவேறவில்லை. வாதிக்கு நட்டம் விளைந்தது. இந்த நட்டத்திற்கு எதிர்வாதி ஈடு செய்யவேண்டும் என்று தீர்ப்பளித்தனர். [Lumley V. Gye. (1853) 2 E&B 216]

''நியாயமான காரணமின்றி ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல், சட்டப்படியான உரிமைக்கு ஊறு செய்வதாகும். எனவே, அது தீங்கான செயல்'' என்று லார்டு மக் நாட்டன் (Lord Macnaghten) என்ற நீதிபதி விளக்கியுள்ளார். [Quinn V. Leathem (1901) A.C. 495]

### குறுக்கிடுதல் எப்போது தீங்கு ஆகிறது ?

**ஒப்பந்தம் இருந்ததுபற்றி எதிர்வாதிக்குத் தெரிந்திருக்கவேண்டும்.**

ஒப்பந்த முறிவிற்குக் காரணமாயிருந்த எதிர்வாதிக்கு, ஒப்பந்தம் இருந்தது என்பது தெரிந்திருக்க வேண்டும். அவ்வாறு, தெரிந்தும் அதில் அவர் குறுக்கிட்டிருக்க வேண்டும். ஒப்பந்தம் பற்றித் தெரியாதவர்மீது, அவர் செயல் ஒப்பந்த உறவில் குறுக்கிட்டாலுங்கூட, வழக்கிட முடியாது. [British Industrial plastic Ltd. V. Fergusan (1940) 162 L.T. 313]

**சட்டப்படியான ஒப்பந்தமாக இருக்கவேண்டும்:** —சட்டப்படி செய்யத் தகாத ஒப்பந்த உறவில் குறுக்கிடும் எவர்மீதும் வழக்கிட இயலாது. ஏனெனில், செல்லாத ஒப்பந்தத்தை இல்லாததாகவே சட்டம் கருதுகிறது. இல்லாத ஒப்பந்தத்தால் உரிமை ஏதும் எழுவதில்லை. எனவே, அதற்கு ஊறு எதுவும் நிகழமுடியாது. [Mc. Manus V. Bowes (1938) 1. K. B. 98]

நியாயமான காரணத்திற்கென ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல் தீங்கன்று.

### குறுக்கிடுதலின் வகைகள்

(1) ஒப்பந்தத்தில் சம்பந்தப்பட்டவர்களைத் தூண்டி ஒப்பந்தத்தை மீறும்படி செய்தல்.

(2) ஒப்பந்தம் நிறைவேற முடியாத வகையில் அதில் சம்பந்தப் பட்டவரை வன்முறையால் தடுப்பது;

(3) ஒப்பந்த முரணான செயலால் ஒப்பந்தம் நிறைவேற முடியாத நிலையை ஏற்படுத்துவது.

ஒப்பந்தப்படி ஒருவருக்கு விற்கப்படவேண்டிய பொருளை இன்னொருவர் விலைக்கு வாங்கிக் கொள்கிறார் என்றால், ஒப்பந்தம் நிறைவேற முடியாத நிலை ஏற்படுகிறது.

### குறுக்கீடு எப்போது நியாயமாகின்றது

ஒரு பெண் ஒரு தீயவனை மணம் செய்துகொள்வதாக ஒப்புக் கொண்டிருக்கலாம். அந்தப் பெண்ணின் பெற்றோர்கள், பெண்ணின் நலனைக் கருதி அந்த ஒப்பந்தத்தை மீறும்படி பெண்ணைத் தூண்டலாம். அறிவு முதிராத ஒரு பெண் தீயோனின் வலையில் விழாதபடி தடுப்பது பெற்றோர், உற்றோர் இவர்களின் கடமையாகும். இவர்களைத் தீங்கிழைத்தவர்கள் என்று கூறுதல் தகாது.

வைத்தியர் நோயாளியை ஓய்வு எடுக்கும்படி ஆலோசனை கூறலாம். அதனால் நோயாளி இன்னொருவரிடம் செய்துகொண்ட தமது ஒப்பந்தத்தை நிறைவேற்றாமல் இருக்கலாம். இப்போது வைத்தியர் கூறியது ஆலோசனையே அன்றி, ஒப்பந்த உறவில் குறுக்கிடுவது ஆகாது.

தம்முடன் செய்துகொண்ட ஒப்பந்தத்தை நிறைவேற்றும்படி ஒருவரை மற்றொருவர் வற்புறுத்துகிறார். அதனால், பின்னால் ஏற்பட்ட இன்னோர் ஒப்பந்தத்திற்குப் பாதகம் விளையலாம். இதை வைத்து முன் ஒப்பந்தக்காரர் முதல் ஒப்பந்தத்தை வற்புறுத்தி நிறைவேறச் செய்தல் தீங்கானது என்று கூற முடியாது.

ஒப்பந்தத்தின் தன்மை, அதில் சம்பந்தப்பட்டவர்களின் நிலைமை, அவர்களுக்கும் ஒப்பந்த உறவில் குறுக்கிடுவோருக்கும் உள்ள உறவு, குறுக்கிட்டவர்கள் கையாண்ட முறை இவையனைத்தையும் ஆய்ந்தே ஒப்பந்தம்பற்றி ஒருவர் குறுக்கிட்டது நியாயமானதா என்பதை உறுதிசெய்ய வேண்டியிருக்கிறது.

### தொழிற் பூசல்கள்

ஒரு தொழிற்சாலையில் வேலை செய்யும் தொழிலாளியை வேலை நிறுத்தம் செய்யும்படி தூண்டுவது, பணி செய்யும் ஒப்பந்

தத்தை மீறும்படி தூண்டுவதுதான். ஆனால் தொழில் தகராறு சம்பந்தமான சட்டங்கள் குறிப்பிட்ட காரணங்களுக்கு வேலை நிறுத்தம் செய்வது சட்டப்படியான செயல் என்று விதிக்கிறது. சட்டத்தில் கூறப்படும் விதிகளைப் புறக்கணித்துவிட்டு வேலை நிறுத்தம் செய்வதோ, செய்யத் தூண்டுவதோ சட்ட முரணான செயலாகும்.

மக்களுக்குள் ஏற்படும் ஒப்பந்தத்தைச் சட்டம் புனிதமாகக் கருதுகிறது. ஒப்பந்தப்படி ஒருவர் நடக்க வேண்டும் என்பது சட்டத்தின் அடிப்படை விதி. ஒப்பந்தப்படி பிறர் நடப்பார்கள் என்ற உறுதிப்பாடு மக்களிடை இல்லை யெனில், தொழிலோ வாணிபமோ செய்தல் இயலாது. மக்களுக்குள் உள்ள வாணிப உறவு முறை சிதைந்து விடும். இவ்வளவு முக்கியம் வாய்ந்த ஒப்பந்த உறவில் ஒருவர் குறுக்கிட்டுப் பிறருக்குத் தீங்கு விளைவிப்பது, நேரடியாகத் தீங்கு விளைவித்தல் போன்றதே யாகிறது. எனவே தான் இருவர்களுக்குள்ள ஒப்பந்த உறவு பிறர் குறுக்கீட்டால் சிதையாதபடி சட்டம் பாதுகாக்கின்றது.

இவ்வாறு, ஒப்பந்த உறவுகளில் குறுக்கிட்டு உரிமைகளுக்கு ஊறு விளைவிப்பதைத் தீங்கெனச் சட்டம் தடை செய்கிறது.

---

# பகுதி 17

## இல்வாழ்விற்கு இடையூறுகள்
## (Injuries to Domestic Relations)

*மனைவியைக் கணவனிடமிருந்து பிரித்தல் - பிறன் மனை நயத்தல் - பெற்றோர்களிடமிருந்து பிள்ளைகளைப் பிரித்தல் - மனைவி மக்களுக்கு உடலூறு விளைத்தல் இவை எல்லாம் தீங்குச் செயல்கள்; இல்வாழ்விற்கு இடையூறு விளைவிக்கும் செயல்கள்.*

ஒருவரது நல்வாழ்விற்கு இல்வாழ்வே அடிகோலுகிறது. மனைவியும், மக்களும் "மனைமாட்சி"க்கு அணிகலன்களாக அமைகின்றனர். இவர்களால் நாம் அடையும் இன்பத்திற்கு இடையூறு செய்கின்றவர்கள் தீங்கிழைத்தவராகின்றனர்.

ஒருவரின் மனைவியை மற்றவர் கவர்ந்து செல்லுதல், மனைவியைக் கணவரிடமிருந்து பிரித்து வாழவைத்தல், பிறன் மனைக்குத் தஞ்சமளித்தல், இச்செயல்களால் கணவன்—மனைவி வாழ்க்கை பாதிக்கப்படுகிறது. எனவே, இவைகளைத் தீங்கான செயல்களெனச் சட்டம் கொள்கிறது.

மனைவியிடமிருந்து பெறும் சேவையைக் கணவன் இழக்கின்றார் என்ற அடிப்படையில் ஆங்கில நாட்டு முற்காலத் தீர்ப்புக்களில் மேற்சொன்ன தீங்குகளுக்கான நட்டஈடு வழங்கப்பட்டது. [Izard V. Izard. (1889) 14 P.D. 5]

கணவனுக்குத் தொண்டு செய்வதே அந்நாளில் மனைவியின் மாண்புமிக்க கடனாகக் கருதப்பட்டது, எனவே, மனைவிக்குத் தீங்கு விளைவித்தால், மனைவியால் கிடைத்த சேவையைக் கணவன் இழக்கிறான் என்ற கொள்கை அன்று முக்கியமாக இருந்தது. ஆனால், இன்று "சேவை இழப்பு" என்ற அடிப்படையை முக்கியமாகக் கருதாமல், இல்வாழ்க்கைக்கு இடையூறு விளைத்தலே தீங்கானது என்ற கொள்கை ஒப்புக்கொள்ளப்படுகிறது.

பிறன் மனை நயத்தலைத் தீங்கெனச் சட்டம் கூறுகிறது. "பிறர்க்குரியாள் தோள் தோய்தலை," "அறன் கடைநின்ற" செயலென்று அறநூல் கூறுவது போன்றே, சட்டமும் அதைத் தீங்கென விதிக்கின்றது. இத் தீங்கு "குற்றமான கூட்டுறவு" (Criminal Conversation) எனப்படும்.

ஆங்கில நாட்டில் இத்தீங்கிற்கு ஈடு பெறலாமென 1950ஆம் ஆண்டில் சட்டம் இயற்றப்பட்டது. (Matrimonial Causes Act 1950)

தன் கணவனைத் தன்னிடமிருந்து பிரித்தவர்மீது மனைவி வழக்குத் தொடர்ந்து நட்டஈடு பெறலாம். [Best V. Samuel Fox Ltd. (1952) A.C. 716]

பிள்ளைகளைக் கவர்ந்து செல்லுதல், முறையின்றி அவர்களை சிறை வைத்தல், அவர்களுக்குக் காயம் விளைத்தல் இச் செயல் களுக்குப் பெற்றோர்கள் (கார்டியன்கள்) நட்டஈடு பெறலாம். மக்களால் அடையும் சேவையைப் பெற்றோர்கள் இழக்கின்றனர் என்ற அடிப்படையில் நட்டஈடு அளிக்கப்படுகிறது. சேவை செய்ய இயலாத இளம் பிள்ளைகளாக இருந்தால் நட்டஈடு கிடைப்பதில்லை.

வயது வராதவர்களுக்கு இவ்விதத் தீங்குகள் விளைக்கப் பட்டால் அவர்களே, வழக்குத் துணைவர்கள் (Next friends) மூலம், வழக்கிட்டுத் தங்களுக்குரிய நட்ட ஈட்டைப் பெறலாம். இந்தப் பகுதியில் நாம் கவனிப்பது பெற்றோர்களுக்குரிய நட்டஈட்டைப் பற்றியதாகும்.

பிறரைக் கவர்ந்து செல்லலும், பிறன்மனை நயத்தலும், பெற் றோர்களிடமிருந்து பிள்ளைகளைப் பிரித்தலும் தண்டிக்கத்தக்க குற்றங்கள் ஆகின்றன. இச் செயல்களைச் செய்தவர்கள் குற்ற வியல் சட்டப்படி தண்டனை பெறுகின்றனர்.

தீங்கியல் சட்டத்தின்கீழ் நாம் இங்குக் காண்பது இச்செயல் களைச் செய்தவர்களிடமிருந்து பெற்றோர்களுக்குரிய நட்டஈடு எந்த அடிப்படையில் பெறப்படுகிறது என்பதாகும்.

இம்மாதிரிச் செயல்களுக்கு நட்டஈடு கோரி எழுந்த வழக்கு கள் நம் நாட்டில் மிக அரிதாகவே உள்ளன.

---

# பகுதி 18

## நுண்பொருட் செல்வங்களுக்கு விளையும் தீங்குகள்
## (Wrongs to Incorporeal Property)

"நுண்பொருட் செல்வம்" என்பது என்ன? - பதிப்புரிமைக்கு (Copy right) விளையும் தீங்குகள் - முதலாயமைந்த படைப்புக்களே (Original Works) பதிப்புரிமை உடையவை - முதலாயமைந்த நூல் எது? - புதுப் புனைவு உரிமைகள் (Patent rights)

### "நுண்பொருட் செல்வம்" என்பது என்ன?

கம்பரையும் காளிதாசரையும், வள்ளுவரையும் வான்மீகியையும் இன்றும் போற்றிப் புகழ்கின்றோம். எழுத்தும் இலக்கியமும் இவ்வுலகில் இருக்கும்வரை, மக்கள் உள்ளத்தில் அவர்களுக்கு மங்காத இடமுண்டு. அவர்கள் உலகுக்களித்த இலக்கியச் செல்வம் இளமை குன்றாது என்றும் இலங்குகின்றது. இன்னும் இரவிவர்மாவின் சித்திரங்கள் சிந்தனையைக் கவர்கின்றன. காலத்தைக் கடந்து நிற்கும் கற்சிற்பங்கள் நம் முன்னோர்களின் கலைத் திறனைக் காட்டி நிற்கும் காட்சிப் பொருள்களாய்க் கவினுற விளங்குகின்றன. மனிதனின் உயர் உணர்விலே உருவெடுத்துப் பிறர் உள்ளத்தை உயர்த்தும் இந்தக் கலைச்செல்வங்களை நுண்பொருட் செல்வங்கள் என்கிறோம்.

புறப்புலன்களால் உணர்ந்து நுகரப்படும் வீடும் விளை நிலமும், மாடும் மனையும் பருப்பொருள் செல்வங்கள் (Corporeal Property). இவை உடலுக்கு உறுதியளிப்பவை. அகப்புலன்களாலும் அறிவாலும் துய்த்து மகிழப்படும் இலக்கியமும், இன்கலைகளும் நுண்பொருட் செல்வங்கள் (Incorporeal Property); இவை உள்ளத்திற்கு ஏற்றம் தருபவை. மேலும் நிலைத்து நிற்பன; நீங்காப் புகழுடையன. எனவே, பருப்பொருட் செல்வத்தைப் பாதுகாக்கும் சட்டம், ஒருவரது நுண்பொருட் செல்வத்தையும் போற்றிப் பேணுகிறது. ஒருவர் ஈட்டிய பருப்பொருள்கள் அவருக்குச் சொந்தமாவது போல், அவர் கற்பனையில் எழுந்த காவியமும், கலைப்பொருள்களும் அவருக்குச் சொந்தமானவை எனச் சட்டம் விதிக்கிறது.

இந்த நுண்பொருட் செல்வங்கள் குறித்து ஒருவருக்குள்ள உரிமைக்குப் பிறர் ஊறு விளைவிப்பதைச் சட்டம் தீங்கெனக் கொள்கிறது.

நுண்பொருட் செல்வத்துக்கு விளையும் தீங்குகள்:— நான் வரைந்த ஓவியம் அல்லது நான் வனைந்த சிற்பம் எனது சொத்து என்றால்,

அந்த ஓவியமும், சிற்பமும் மட்டுந்தான் எனக்குச் சொந்தமானவை என்பதில்லை. அந்தப் படைப்பின் அழகு உருவ நுண் அமைப்பை (abstract sense of artistic form) பிறர் அவ்வாறே நகலெடுத்து வரைதலோ, வனைதலோ கூடாது. அந்தக் கலை நுண்ணமைப்புரிமை (Artistic Copyright) எனக்கே உரியதாகிறது. இந்த உரிமையை மீறி, ஒருவர் வரைந்த சித்திரத்தை அப்படியே புகைப்படமாகவோ, நகலெடுத்தோ மற்றொருவர் வெளியிடுவது தீங்கான செயலாகும். தீங்கிழைத்தவர் அச்சித்திரத்தை முதலாவதாக வரைந்தவருக்கு ஏற்படும் நட்டத்திற்கு ஈடுசெய்ய வேண்டும்.

### "பதிப்புரிமை"க்கு விளையும் தீங்குகள்

ஒருவர் ஒரு சிறந்த நூலையெழுதி வெளியிடுகின்றார். உடனே அந்நூலை இன்னொருவர் தம் பெயரால் அச்சிட்டு விற்றார் என்றால், நூலை எழுதியவருக்கு நட்டம் விளைகின்றது. புத்தக விற்பனையால் கிடைக்கும் பண நட்டம் ஒரு புறமிருக்க, அந்நூலை ஆக்கிய பெருமை தம்முடையது என்பதை உலகறியச் செய்யும் ஒப்பற்ற உரிமையையும் நூலை ஆக்கிய ஆசிரியர் இழக்கின்றார். எனவே, ஒருவர் எழுதிய நூலைப் பிறர் அவருடைய அனுமதியின்றி அச்சிடுவதைச் சட்டம் தடை செய்கிறது. ஒரு குறிப்பிட்ட காலத்திற்கு அந்நூலை அச்சிட்டு வெளியிடும் உரிமை அதை எழுதிய ஆசிரியருக்கு அல்லது அவருடைய அனுமதிபெற்றவருக்குத்தான் உண்டு. இந்த உரிமையைப் பதிப்புரிமை (Copyright) என்கிறோம்.

### முதலாயமைந்த படைப்புக்களே (Original Works) பதிப்புரிமை உடையவை

இலக்கியம், நாடகம், இசை, கலை இவையெல்லாம் பதிப்புரிமை பெறுகின்றன. இவைகளை ஆக்கியோர் முதல் தடவைகளாக இவைகளைப் படைத்திருக்க வேண்டும். முதலாயமைந்த படைப்புக்களுக்கே பதிப்புரிமை உண்டு.

### முதலாயமைந்த நூல் (Original) எது ?

பல நூல்களிலிருந்து தொகுக்கப்பட்ட (Compilation) இலக்கியமும் பதிப்புரிமை பெற்றது. பள்ளிப் பாடப் புத்தகத்தில் புதிய கருத்துக்கள் இல்லாமல் இருக்கலாம். பிற நூல்களிலிருந்து எடுக்கப்பட்டு எழுதியவையே அதில் இடம் பெறுகின்றன. இருப்பினும் அது முதலாயமைந்த நூலாகவே கருதப்படுகிறது. [Moffatt V. Gill (1902) 86. L.T. 465] தகவல் தொகுதிகளையும், விவரத் திரட்டுக்களையும் கொண்ட புத்தகம் (Directory) பதிப்புரிமை உடையது, ஏனெனில், உண்மைத் தகவல்களைச்

சேகரித்துத் தொகுக்கும் உழைப்பு அதில் அடங்கியுள்ளது. [Lamb V. Evans (1893) 1 Ch. 218] மொழிபெயர்ப்பு நூல்கள், தேர்வு வினக்கள், இவையும் பதிப்புரிமை பெற்றவை. முதலாயமைந்த நூல் என்ருல் முதல் நூலாக இருக்கவேண்டியதில்லை. வழி நூலும் முதலாயமைந்த நூல்தான். இன்னெரு நூலின் படிவமாக இல்லாத நூல் முதலாயமைந்த நூல் ஆகும்.

ஒரு நூலின் தலைப்பை உறுதி செய்வதற்குத் திறனும் தேர்ச்சியும் வேண்டியிருக்கின்றன. பொதுவாக, ஒரு புத்தகத்தின் தலைப்பிற்கு (Title of Book)ப் பதிப்புரிமை இல்லை. ஆனல், இலக்கியத் தன்மையுடன் கூடிய நீண்ட தலைப்பாக அது இருந்தால் அதற்குப் பதிப்புரிமை உண்டு. [Dicks V. Yates (1881) 18. Ch. D. 76]

ஒருவர் எழுதிய நூலின் கருத்துக்களை அவ்வாறே, அல்லது சிறிது மாற்றியோ இன்னெருவர் எடுத்துக் கையாளுவதையும் ஒருவர் கற்பனையில் படைத்த கதையிலோ நாடகத்திலோ உள்ள கதை நிகழ்ச்சிகளை அப்படியே ஏற்று அல்லது அவற்றைத் தழுவி இன்னெருவர் எழுதுவதையும் சட்டம் தடுக்கின்றது. ஒரு நூலைச் சுருக்கி எழுதுவதும், கதையை நாடகமாக மாற்றி எழுதுவதும், பதிப்புரிமைக்கு எதிரான செயல்கள். ஒருவர் இயற்றிய கவிதைகளிலும் உரைநடை நூல்களிலுமுள்ள சொற்கோவையும், கருத்தமைவும் அவருக்குரிய சொத்தாகின்றன. இம்மாதிரியே, ஒருவரால் தொகுக்கப்பட்ட இன்னிசை மெட்டமைப்பும் அவருடைய தனிச் சொத்தாகும். (Musical Copyright). ஒருவருக்குச் சொந்தமான இவைகளைப் பிறர் முறையின்றிக் கையாளுதல் பதிப்புரிமையை மீறும் செயலாகும்.

1957ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட இந்தியப் பதிப்புரிமைச் சட்டம் (Copyright Act of 1957) பதிப்புரிமை பற்றிய விதிகளை விளக்குகின்றது. திரைப்படங்களும் ஒலி பரப்புக்களும் பதிப்புரிமை உள்ளவையெனச் சட்டம் விதிக்கிறது.

## புதுப் புனைவு உரிமைகள் (Patent Rights)

ஒருவர் தமது ஆராய்ச்சி மதித் திறனல் புதியதோர் இயந்திரத்தைக் கண்டு பிடித்திருக்கலாம்; அல்லது புதியதொரு மருந்து செய்யும் முறையைக் கண்டறியலாம். இத்தகைய புதுப் புனைவுப் பொருள்கள் (Inventions) அவைகளைக் கண்டு பிடித்தவர்களின் நுண்பொருட் செல்வங்களாகச் சட்டம் கருதிப் பாதுகாக்கிறது. இவைகளைக் குறித்த உரிமைகளைப் புதுப்புனைவு உரிமை (Patent - right) என்பார்கள்.

இந்த உரிமைகளை மீற முற்படுபவர்களுக்கெதிராக நீதி மன்றங்களிலிருந்து தடையுத்தரவு பெறலாம்; அல்லது மீறியவர் களிடமிருந்து நட்டஈடு பெறலாம்.

புதியன படைக்குந்திறன் போற்றப்பட வேண்டும்; ஆக்குந் திறனுக்கு (Creative Work) ஊக்கமளிக்கவேண்டும். எனவே, உலக ஐக்கிய நாடுகளின் மன்றம் "மனித உரிமைப் பிரகடனத் தில்" கீழ்க்கண்டவாறு கூறுகின்றது :

"ஒவ்வொரு மனிதனுக்கும் தான் ஆக்கிய விஞ்ஞான, இலக் கிய, கலைப் படைப்புக்களில் உள்ள பொருள், புகழ் நலன்களைப் பாதுகாக்கும் உரிமை உண்டு."

மேலே கூறப்பட்ட நுண்பொருட் செல்வங்களே மனிதனின் உண்மையறிவாலும், ஊக்கத்தாலும், உழைப்பாலும் உயர் கலை யுணர்வாலும் பெறும் அரிய செல்வங்கள். இவை உலகின் பொதுச் செல்வங்களாயினும், அவைகளை ஆக்கியோர் புகழும் பொருளும் பெறுவதற்குச் சட்டம் வகைசெய்கிறது.

---

# மூன்ருவது பிரிவு

## பகுதி 1

### பகரப் பொறுப்பு (Vicarious Liability)

பணியாளின் செயலுக்குத் தலைவர் பொறுப்பாவது "பகரப் பொறுப்பு" - "பகரப் பொறுப்பு" எப்பொழுது தோன்றுகிறது? - பணியாள் என்பவர் யார்? - ஒப்பந்தக்காரருக்கும் பணியாளுக்கும் உள்ள வேறுபாடு - கண்காணிப்பிற்கும் கட்டளைக்கும் அடங்கியவர் பணியாள் - ஊதியம் பெறுபவர் தாம் ஊழியர் என்பது இல்லை - ஏவியவரும், ஏவலரும் - நுட்பத் தொழில் புரியும் பணியாளர்கள் - மேல் நிலை ஊழியர் தலைவராவதில்லை - உரிய பணியைப் புரியும் வகையில் உதித்த தீங்காய் இருத்தல் வேண்டும் - பணியாளர்களின் கவனமின்மையால், தவறுதலால், ஒழுங்கு தவறிய நடத்தையால், தலைவர் உத்தரவைப் பணியாள் மீறியதால், விளையும் தீங்குகள் - உரிய பணிக்குப் புறம்பான செயல் - பணியாளரின் சொந்த நலனுக்கான செயல்கள் - "உரிய பணியைப் புரியும் வகை" என்பதன் விளக்கம் - ஒப்பந்தக்காரரால் விளையும் தீங்குகள் - "கம்பெனிகளுக்"கும் பகரப் பொறுப்பு உண்டு - முதல்வரும் முகவரும் - கூட்டாளிகள் - கூட்டாகத் தீங்கிழைத்தோர் - கூட்டு இணைப்பொறுப்பு - கூட்டு ஊழியம்

முதலாவது பிரிவில் "தீங்கியல்" சட்டத்தின் தன்மையையும், "தீங்கு" என்ற சொல்லின் விளக்கத்தையும் கண்டோம். இரண்டாவது பிரிவில் தீங்குகளின் வகைகளை விரிவாக ஆராய்ந்தோம். தீங்கிற்கான பொறுப்பின் தன்மை, தீங்கு ஆகாத்தறுவாய்கள், வழக்கிடத்தகாதவர்கள், தீங்கு தீரும் திறன்கள் (நிவாரணங்கள்) இவைபற்றி இந்த மூன்ருவது பிரிவில் காணவிருக்கிருேம்.

#### பகரப் பொறுப்பு

நம்முடைய வேலைகளனைத்தையும் நாமே செய்ய இயலுவதில்லை. எனவே, வேலையாட்களை வைத்துக் கொள்கிருேம். நாம் இடும் வேலையை நம் பணியாள் செய்கின்ருர். அந்தப் பணியை அவர் செய்யும்பொழுது பிறருக்குத் தீங்கு விளைந்தால் அதற்கு யார் பொறுப்பாவது?

தமது செயலால் விளைந்த தீங்கிற்குப் பணியாள் பொறுப்பாகின்ருர். ஆனல். தீங்கிற்கான ஈடு செய்யும் பணவசதி பணியாளுக்கு இருப்பதில்லை. பிறரிடம் பணி புரிபவர்கள் பெரும்

பாலும் பொருள் வசதி இல்லாதவர்களாகவே இருக்கின்றனர். இப்பொழுது தீங்கிழைக்கப்பட்டவர் பணியாளிடமிருந்து தீங்கிற்கான நட்டஈட்டைப் பெறுவது எவ்வாறு? தீங்கடைந்தவருக்கு நட்டஈடு கிடைத்தாக வேண்டும். இதற்குச் சட்டம் எப்படி வகை செய்கிறது?

பணியாளால் (Servant) விளைக்கப்பட்ட தீங்கிற்கு அவருடைய தலைவரையும் (Master) சேர்த்துச் சட்டம் பொறுப்பாக்குகிறது. பணியாள் இழைத்த தீங்கிற்கு ஈடு செய்யும் பொறுப்பைப் பணித்தவர் ஏற்பது நேர்மை தானே? தலைவருக்கு இப்பொறுப்பு ஏற்படுவதால் பணியாளின் பொறுப்பு மறைந்து விடுவதில்லை. அப்பொறுப்பு, தலைவர், பணியாள் இருவருக்கும் உண்டு. தீங்கிழைக்கப்பட்டவர் பணியாள் மீதோ, அல்லது தலைவர் மீதோ, அல்லது இருவர்மீதும் சேர்த்தோ வழக்குத் தொடர்ந்து நட்டஈடு பெறலாம் எனச் சட்டம் விதிக்கிறது.

வேலையைச் செய்வதற்குத் தலைவரின் பகர (பதில்) ஆளாகப் பணியாள் இருப்பது போல், பணியாள் விளைக்கும் தீங்கிற்குப் பணியாளின் பகர ஆளாகத் தலைவர் பொறுப்பேற்கின்றார். இவ்வாறு, தலைவருக்குள்ள பொறுப்பைப் "பகரப் பொறுப்பு" (பதில் பொறுப்பு) (Vicarious Liability) என்று கூறுவார்கள்.

"தம் வேலையைப் பிறர் மூலம் செய்கின்றவர் அதைத் தாமே செய்கின்றவராவார்" (qui facit per alium facit per se) என்பது இலத்தீன் மொழியிலுள்ள ஒரு விதி. பகரப் பொறுப்பிற்கு நியாயம் கூறும் வகையில் இந்த விதி எடுத்துக்காட்டப்படுவதுண்டு. எனது வேலையை இன்னொருவர் மூலமாகச் செய்கின்றேன். எனில், அதனால் விளையும் பயனுக்கும் நான் பொறுப்பேற்பதுதான் நேர்மையாகும். இந்த நேர்மைக் கொள்கையையே சட்டம் ஏற்று நடத்துகிறது. இழைத்த தீங்கிற்கு ஈடு அளிக்கும் ஆற்றல் பணியாளுக்கு இல்லை என்பதால், தீங்கடைந்தவருக்கு நிவாரணம் கிடையாது என்ற நிலையைச் சட்டம் தவிர்க்க முயலுகிறது. எனவே, ஈடு செய்யும் பொறுப்பைத் தலைவர்மீது சட்டம் சுமத்துகிறது. இவ்வாறு, பணியாளின் செயலுக்குப் பணித்தவர் பொறுப்பாவது நியாயத்திற்கும் சட்டத்தின் நோக்கத்திற்கும் இசைந்ததோர் ஏற்பாடாகும்.

பணியாளின் பணி சார்ந்த செயலால் விளையும் தீங்கிற்குப் பணித்தவர் மீதும் ஏற்படும் பொறுப்பு "பகரப் பொறுப்பு" (Vicarious Liability) எனப்படும்.

**"பகரப் பொறுப்பு" எப்பொழுது தோன்றுகிறது?**

(1) பகரப் பொறுப்பேற்பவருக்கும் தீங்கிழைத்தவருக்கும் தலைவர்—பணியாள் என்ற உறவு இருத்தல் வேண்டும்.

(2) உரிய பணியைப் புரியும் வகையில் உதித்த தீங்காக (Wrong committed in the course of employment) இருத்தல் வேண்டும். அஃதாவது, பணியாள் தமக்கு இட்ட வேலையை இயற்றும் விதத்தில் இழைத்த தீங்காய் இருத்தல்வேண்டும்.

தீங்கிழைத்தவர் மற்றொருவரின் பணியாளாக இருத்தல், பணியாளின் உரிய பணியைப் புரியும் வகையில் தீங்கு விளைத்தல், இந்த இரு கூறுகளும் இருந்தால் தான் தலைவர்மீது "பகரப் பொறுப்பு" ஏற்படுகிறது.

இரு கூறுகளின் விளக்கத்தை இனிக் காண்போம்.

## (அ) "பணியாள்" (Servant) என்பவர் யார்?

பகரப் பொறுப்பை ஏற்கும் தலைவருக்கும் தீங்கிழைப்பவருக்கும் தலைவர்—பணியாள் (Master and Servant) என்ற தொடர்பு இருக்கவேண்டும். இந்தத் தொடர்பு இல்லையெனில் பகரப் பொறுப்புத் தோன்றுவதில்லை. எனவே, ஒருவருடைய பணியாளாக மற்றொருவரை எப்பொழுது கருதுகிறோம் என்பது முக்கியமானதாகும்.

ஒருவருடைய கட்டுப்பாட்டிற்கு உட்பட்டு அவர் இடும் கட்டளைப்படி வேலையைச் செய்வதற்கென அமர்த்தப்பட்டிருப்பவரை அவருடைய வேலையாள் அல்லது பணியாள்—(Servant) என்கிறோம்.

என்னுடைய தோட்டக்காரன் என் பணியாள்; மோட்டாரை ஓட்டுவதற்கென்று என்னிடம் வேலை செய்பவர் என் பணியாள். வேலையைச் செய்வதற்கென நம்மால் அமர்த்தப்பட்டு, நமது கண்காணிப்பிலும் (supervision) கட்டளைப்படியும் (directions) நம் வேலையைப் பணியாளர் செய்கின்றார். சம்பளம் பெறுபவர் தாம் பணியாள் என்றோ, மாதக் கணக்கில் வேலையில் இருப்பவர் தாம் பணியாள் என்றோ நாம் கொள்ளுதல் சரியன்று. நமது கண்காணிப்பிற்கும் கட்டளைக்கும் உட்பட்டு ஒருவர் ஒரு வேலையைச் செய்தால், அவரை நமது பணியாள் என்று சட்டம் கொள்ளுகிறது.

## ஒப்பந்தக்காரருக்கும் (Contractor) பணியாளுக்கும் (Servant) உள்ள வேறுபாடு

சில வேளைகளில் குறிப்பிட்ட ஒரு வேலையைச் செய்வதற்கென நாம் மற்றொருவரிடம் ஒப்பந்தம் செய்து கொள்ளுவதுண்டு. அவரை நம் பணியாள்—ஊழியர்—என்று அழைத்தல் தகாது.

ஒரு புது வீடு கட்டுவதற்காக நாம் ஒருவருடன் ஒப்பந்தம் செய்து கொள்ளுகிறோம். நாம் கொடுக்கும் திட்டப்படி வீட்டை

நல்ல முறையில் கட்டிக் கொடுத்து அதற்கான தொகையை அவர் பெறுகின்றார். இவ்வாறு ஒப்பந்தப்படி ஒரு வேலையை முடித்துத் தருவதாக உடன்பட்டு அந்த வேலையைச் செய்பவரை ஒப்பந்தக்காரர் (Contractor) என்று கூறுவார்கள். ஒப்புக்கொண்ட திட்டப்படி வீடு கட்டப்படுகிறதா என்றுதான் நாம் பார்க்க முடியும். ஆனால் அதைக் கட்டும்பொழுது நம் கட்டளையை ஏற்று நடக்கும் கடமை அவருக்கு இல்லை. கட்டிட வேலையும் நம் கண்காணிப்பில் நடப்பதில்லை. கட்டிட வேலையை எவ்வாறு செய்வது, எப்பொழுது செய்வது என்பதெல்லாம் ஒப்பந்தக்காரரின் விருப்பைப் பொறுத்தது. இவை குறித்து நம் கட்டளையையோ, கண்காணிப்பையோ அவர் ஏற்பதில்லை. இவ்வாறு, நம் கட்டளைக்கும் கண்காணிப்பிற்கும் கட்டுப்படாது, ஒப்பந்தத்திற்கு மட்டும் கட்டுப்பட்டு, நம் வேலையைச் செய்பவரைக் "கட்டுப்பாடற்ற ஒப்பந்தக்காரர்" (Independent Contractor) என்பார்கள்.

ஒப்பந்தக்காரரின் செயல்களுக்கு மற்றவர் எவரும் பொறுப்பாவதில்லை. அவர் மட்டுமே அவர் இழைக்கும் தீங்கிற்குப் பொறுப்பாகிறார். அவருடன் ஒப்பந்தம் செய்து கொண்டவர் பொறுப்பாவது கிடையாது.

வாடகைக்காரை அமர்த்திக்கொண்டு ஓர் இடத்திற்குச் செல்லுகிறேன். அந்த வாடகைக் காரை ஓட்டுபவர் என் ஊழியர் அல்லர்; ஒப்பந்தக்காரர். அவர் நான் செல்லவேண்டிய இடத்திற்குக் கொண்டுபோய் விடவேண்டும். அதற்கான வாடகைப் பணத்தை நான் அவருக்குத் தரவேண்டும். இந்த ஒப்பந்தப்படியே வாடகைக் காரை ஓட்டுபவர் காரைச் செலுத்துகிறார். அவர் அப்பொழுது என் கட்டுப்பாட்டில் இல்லை. எனவே, நான் அந்தக் காரில் சென்று கொண்டிருக்கையில் அவர் இன்னொருவர்மீது மோதிக் காயம் விளைவித்தால் அதற்கு நான் பொறுப்பாவதில்லை. காரை ஓட்டுபவரேதாம் பொறுப்பு; அல்லது அந்த வாடகைக் காரின் சொந்தக்காரர், அஃதாவது காரோட்டிக்குத் தலைவராக உள்ளவர்தாம் பொறுப்பாவார்.

துறைமுகத்தினரிடமிருந்து பாரந் தூக்கும் இயந்திரத்தையும் அதை இயக்குபவரையும் வாடகைக்குப் பெற்றுக் கப்பலிலிருந்து சாமான்களை ஒரு கம்பெனியார் இறக்கிக் கொண்டிருந்தனர். இயந்திரத்தை இயக்குபவரின் கவனக் குறைவால் வாதிக்குக் காயம் விளைந்தது. இந்தத் தீங்கிற்கு ஈடு செய்யும் பகரப் பொறுப்பு துறைமுகத்தினரையே சேரும் என்று தீர்ப்புக் கூறினர். இயந்திரம் இயக்குபவர், இயந்திரத்தை வாடகைக்குப் பெற்ற கம்பெனியாரின் கட்டுப்பாட்டிலும் கண்காணிப்பிலும் வேலை

செய்யவில்லை. ஆதலால், இயக்குபவர் துறைமுகத்தினரின் பணியாளாகவே இருக்கிறார். எனவே, இயக்குபவரின் கவனமின்மைச் செயலுக்குத் துறைமுகத்தினரே பொறுப்பேற்க வேண்டுமென்பது தீர்ப்பு. [Mersey Docks and Harbour Board V. Coggins & Criffith (Liverpool) Ltd. (1947) A.C. 1]

இதிலிருந்து ஊழியருக்கும் ஒப்பந்தக்காரருக்கும் இடையே உள்ள வேறுபாடு புலப்படும். நமது கட்டளைக்கும் கட்டுப்பாட்பாட்டிற்கும் அடங்கி நடப்பவர் நம்முடைய பணியாள்; ஊழியர். நமது கட்டுப்பாட்டிற்கு உட்படாமல் ஒரு வேலையை முடித்துத் தருவதெற்கென்று மட்டும் ஒப்புக்கொண்டு நம் வேலையைச் செய்பவர் ஒப்பந்தக்காரர்.

நம் ஊழியருக்கும் நமக்கும் உள்ள ஒப்பந்தம் வேலையைச் செய்வதற்கென்று (Contract of Service) ஏற்படுவது. ஒப்பந்தக்காரருக்கும் நமக்கும் உள்ள ஒப்பந்தம் வேலையை முடித்துத் தருவதற்கென்று ஏற்படுவது (Contract for Services). முன்னதில் ஒரு வேலையைச் செய்யச் சொல்லவும் அதை எப்படிச் செய்ய வேண்டும் என்று வழி காட்டவும் நமக்கு அதிகாரம் உண்டு. பின்னதில் வேலையைச் செய்யச் சொல்லலாம்; ஆனால் அது எவ்வாறு செய்யப்பட வேண்டும் என்று சொல்லும் அதிகாரம் நமக்கு இல்லை.

எனவே, நமது வீட்டு வேலையாள் நம் ஊழியர்; நமது வீட்டிற்குச் சுண்ணாம்பு பூசி வெள்ளையடிக்கும் கொத்தனார் நம் ஊழியரல்லர். நம் வீட்டிலுள்ள மின்சாரக் கம்பியைப் பழுது பார்க்க வருபவர் நம் பணியாள் அல்லர்.

நம் ஊழியர் இழைக்கும் தீங்குகளுக்கே நாமும் பொறுப்பாகின்றோம். ஒப்பந்தக்காரர்கள் செய்யும் தீங்குகளுக்கு நாம் பொறுப்பாவதில்லை.

ஊழியரல்லாத ஒப்பந்தக்காரரையும் நாமே ஒரு செயலைச் செய்யும்படி தூண்டி விட்டு, அதனால் தீங்கு விளைந்தால் அதற்கான பகரப்பொறுப்பு நம்மைச் சேருகின்றது. வாடகைக் காரில் நாம் போகும்பொழுது அந்தக் காரை ஓட்டுபவர் நம் பணியாள் இல்லை என்பதைக் கண்டோம். ஆனால் அவரை அதிக வேகத்தில் ஓட்டுமாறு நாம் கூறி, அதன்படி அவர் வேகமாகச் சென்றதால் இன்னொருவருக்குத் தீங்கு விளைந்தால், அதற்கான பகரப் பொறுப்பு நம்மையே சேருகின்றது. எனவே, ஒப்பந்தக்காரரை முறையற்ற செயலையோ, தீங்கான செயலையோ செய்யும்படி நாம் தூண்டினால், அதன் விளைவிற்கு நாமே பொறுப்பாகிறோம்.

பொதுவாக, ஒப்பந்தக்காரரின் செயல்களுக்குப் பிறர் பொறுப்பாவதில்லை. இதற்குள்ள விதிவிலக்குகளைப் பின்னல் காண்போம்.

தீங்கு விளையும்பொழுது யாருடைய கண்காணிப்பில் பணியாள் இருந்தாரோ அவரே பணியாளின் தலைவர்.

ஒருவரிடம் நிரந்தரமாகப் பணி செய்யும் ஒருவர், தம் தலைவரின் உத்தரவுப்படி இன்னொருவரிடம் தற்காலிகமாகப் பணி செய்யலாம். அந்தக் காலத்தில் பணியாளால் செய்யப்படும் தீங்கிற்கு யார்மீது பொறுப்பு ஏற்படுகிறது? இதை உறுதி செய்வதில் சிக்கல்கள் தோன்றுவதுண்டு. தீங்கு நிகழும் காலத்தில் பணியாள் யாருடைய கண்காணிப்பில் இருந்தார் என்பதைச் சட்டம் கவனிக்கிறது. இந்தக் கண்காணிப்பை உடையவரே பணியாளின் தலைவர் எனக் கருதப்படுகிறார்.

எனது காரையும் காரோட்டும் பணியாளையும் என் நண்பரின் உபயோகத்திற்கென்று சில நாட்கள் அனுப்பி வைக்கிறேன். அந்த நாட்களில் காரோட்டுபவர் விளைவிக்கும் தீங்கிற்கு யார் பொறுப்பாவது? காரோட்டி என் நண்பரின் கட்டளைக்குட்பட்டுத் தமது வேலையைச் செய்தாரா என்பதை நாம் பார்க்கவேண்டும். காரோட்டிமீதுள்ள கண்காணிப்பு என்னிடமே இருந்தால் அவர் என்னுடைய பணியாளராகவே கருதப்படுகிறார். ஆனல் என் நண்பரே காரோட்டிக்குக் கட்டளையிடவும், அவர் வேலையைக் கண்காணிக்கவும் செய்தார் எனில், காரோட்டியை என் நண்பரின் பணியாளாகச் சட்டம் கொள்கிறது.

நம் நண்பர் ஒருவரை இரயில் நிலையத்தில் விட்டு வரும்படி நம் காரோட்டிக்குக் கட்டளையிடுகிறோம். அவ்வாறு செல்லும் பொழுது காரோட்டியின் கவனமின்மையால் தெருவில் நடந்து சென்ற ஒருவருக்குத் தீங்கு விளைந்தால் அதற்கு நாமேதாம் பொறுப்பாகின்றோம். நம் நண்பர் காரில் அப்பொழுது அமர்ந்திருந்தாலும் காரோட்டுபவர்மீதுள்ள கண்காணிப்பு நம்மிடமே இருக்கிறது.

தீங்கு இழைக்கப்பட்டபொழுது பணியாள் யாருடைய கண்காணிப்பிற்கும் கட்டுப்பாட்டிற்கும் உட்பட்டுப் பணியாற்றினரோ அவர்மீதே அதற்கான பகரப் பொறுப்பு ஏற்படுகிறது.

### ஊதியம் பெறுபவர்தாம் ஊழியர் என்பதில்லை

நம்மிடம் ஊதியம் பெறுபவர் தாம் பணியாள் என்பது சரியன்று. நாம் காரில் அமர்ந்து கொண்டு நம் நண்பரை ஓட்டச்

சொல்லலாம். அப்பொழுது நம் நண்பர் இழைக்கும் தீங்கிற்கு நாமே பொறுப்பாகிறோம். ஏனெனில், நமது கட்டுப்பாட்டிற்கு உட்பட்டே நம் நண்பர் காரை ஓட்டுகிறார். [Ormrod V. Crosville Motor Services Limited - 1953 - I.W.L.R. 1120]

நண்பர் தமது உபயோகத்திற்கென்று காரை நம்மிடமிருந்து எடுத்து ஓட்டிச் சென்றார் எனில், அப்பொழுது அவர் நம் கண் காணிப்பில் இல்லை. எனவே, அப்பொழுது இழைக்கப்படும் தீங் கிற்கான "பகரப் பொறுப்பு" நமக்கு இல்லை.

### ஏவியவரும்—ஏவலரும்

ஒரு மோட்டார் காரின் சொந்தக்காரர் அதை விலைக்கு வாங்கு வதாகச் சொன்ன ஒருவரின் மகனை மோட்டாரை ஓட்டுவதற்கு அனுமதித்துத் தாமும் மோட்டாரில் அமர்ந்திருந்தார். ஓட்டியவ ரின் கவனக் குறைவால் விளைந்த தீங்கிற்கான பகரப் பொறுப்பு மோட்டாரின் சொந்தக்காரரையே சேரும் என்று தீர்ப்பளித்தனர் [Samson V. Aitchison - (1912) A.C. 844]. இவ்வாறு, ஏவலரின் செயலுக்கு ஏவியவர் பொறுப்பாகின்றார்.

பகரப் பொறுப்பைக் குறித்தவரை, "பணியாள்" என்றால் ஊதியம் பெற்று ஊழியம் செய்பவராகவோ நிரந்தரமான வேலையாளாகவோ இருக்க வேண்டும் என்ற அவசியம் இல்லை. இன்னொருவரின் கட்டுப்பாட்டிற்கோ, கண்காணிப் பிற்கோ அடங்கி ஒரு செயலில் ஈடுபடுபவரை அவருடைய பணி யாளாகவே சட்டம் கருதுகிறது. ஏவலரை, ஏவியவரின் பணி யாள் எனச் சட்டம் கொள்ளுகிறது.

### நுட்பத் தொழில் புரியும் பணியாளர்கள்

தொழில் நுணுக்கம் நிறைந்த வேலையைச் செய்பவர்கள் இன்னொருவரிடம் பணியாற்றுவது உண்டு. பொறியியலர், டாக்டர்கள், இவர்கள் செய்யும் தொழில்கள் தேர்ச்சி மிக்கவை, தொழில் நுட்பம் கொண்டவை. இவர்களுக்குத் தலைவராக உள்ள வரிடம் வேலை செய்யும் வகையைக் காட்டும் விதத்தில் கட்டளை யிடவோ, வேலையை மேற்பார்க்கவோ வேண்டிய ஆற்றலும், தேர்ச்சியும் இல்லாதிருப்பது இயல்பேயாகும். இருப்பினும், தலைவருக்குப் பகரப் பொறுப்பு உண்டு.

தொழில் நுட்பம் மிகுந்த வேலையைச் செய்யும் பணியாள் விளைக்கும் தீங்கிற்கும் தலைவரே பொறுப்பாகின்றார் என்று சட்டம் விதிக்கிறது.

இரண சிகிச்சை செய்யும்பொழுது கவனமின்மையாக டாக்டர் வைத்தியம் செய்ததால் வாதியின் கை பயனற்றுப் போய்விட்டது. டாக்டரின் கவனமின்மையால் விளைந்த தீங்கிற்கு அந்த வைத்திய சாலையை நடத்தும் குழுவினர் பொறுப்பாக்கப்பட்டனர். [Cassidy V. Ministry of Health (1951) 2 K.B. 343]

பணியாளர்களாக இருக்கும் டாக்டர்கள், நர்சுகள், மயக்க மருந்து கொடுப்பவர்கள் இவர்களால் தீங்கு விளைந்தால் வைத்தியசாலையை நடத்துபவர்மீது பகரப் பொறுப்பு ஏற்படுகிறது.

மேல்நிலை ஊழியர் தலைவராவதில்லை

ஒரு நிறுவனத்தில் பலதரப்பட்ட ஊழியர்கள் இருக்கின்றனர்; கீழ்நிலை ஊழியர்களுக்குத் தலைவராக மேல்நிலை ஊழியரைச் சொல்லுவதில்லை. எனவே, கீழ்நிலைப் பணியாள் விளைத்த தீங்கிற்கான பொறுப்பு அவருக்கும் மேல் நிலையில் பணி செய்பவரைச் சேர்வதில்லை. எல்லா ஊழியர்களுக்கும் தலைவராக உள்ளவரையே அப்பொறுப்புச் சேருகின்றது. ஒரு கம்பெனியின் கீழ்நிலை ஊழியர் விளைத்த தீங்கிற்கு அதன் இயக்குநர்கள் பொறுப்பாவதில்லை. தீங்கிழைத்த ஊழியரை நியமிக்கும் அதிகாரமும், அவர்கள் வேலையைக் கண்காணிக்கும் அதிகாரமும் இயக்குநர்களுக்கு இருக்கலாம். இருந்தாலும் பகரப் பொறுப்பு கம்பெனியைச் சேருமேயன்றி, இயக்குநர்களைச் சேருவதில்லை. சட்டம் இப்படி இல்லாவிடில் கம்பெனிகளுக்கு ஏற்பட்ட வரையறை செய்த பொறுப்பு முறை சிதைந்து விடும். [Performing Right Society V. Ciryl Theatrical Syndicate (1924) 1. K.B. 1]

(ஆ) உரிய பணியைப் புரியும் வகையில் உதித்த தீங்காய் இருத்தல் வேண்டும். (Wrongs Committed in the Course of Employment)

இதுவரை "பணியாள்" என்று யாரைச் சட்டம் கொள்ளுகிறது என்றும், தலைவர்—பணியாள் உறவு எந்தெந்தச் சூழ்நிலைகளில் தோன்றுகிறது என்றும் கண்டோம். பகரப் பொறுப்புத் தோன்றுவதற்கு வேண்டிய முதற் கூறு தலைவர்—பணியாள் உறவு; அஃதாவது தீங்கிழைத்தவர் மற்றொருவரின் பணியாளாக இருப்பது. தீங்கிழைத்தல், உரிய பணியைச் செய்கையில்—பணி சார்ந்த செயலால்—விளைந்திருக்க வேண்டும் என்பது இரண்டாவது கூறு.

பணியாள் செய்யும் எல்லாச் செயல்களின் விளைவிற்கும்,—அவர் எப்பொழுது, எங்கு, எவ்விதத்தில் தீங்கிழைத்தாலும்—

தலைவர் பொறுப்பேற்கவேண்டும் என்று சட்டம் கூறவில்லை. நம் வேலைக்காரருக்கும் மற்றொருவருக்கும் பகைமை இருக்கலாம். இதனால் இருவருக்கும் சண்டை ஏற்பட்டு நம் பணியாள் தம் பகைவரை அடித்துக் காயம் விளைவித்தால் அதற்கு நாம் பொறுப் பேற்க வேண்டுமென்பது முறையன்று. சட்டமும் அவ்வாறு விதிக்கவில்லை. தலைவர் இடும் வேலையைப் பணியாள் செய்யும் பொழுது விளைவிக்கப்படும் தீங்குகளுக்கே தலைவர் பொறுப்பா கிறார். தலைவரால் இடப்பட்ட பணி வேலையாளுக்கு உரிய பணியாகிறது. பணியாள் தமக்குரிய பணியைச் செய்தல் பணி சார்ந்த செயலாகும் (act in the course of employment). பணி சார்ந்த செயலால் விளையும் தீங்குகளுக்கே தலைவர் பொறுப்பாகின்றார்.

தோட்டத்தைத் துப்புரவு செய்வது தோட்டக்காரனுக்கு உரிய பணி. காரை ஓட்டுவது காரோட்டுபவருக்குரிய பணி. நம் தோட்டக்காரன் தானாக நம் காரை எடுத்து ஓட்டி இன்னொரு வர்மீது ஏற்றி அவருக்குக் காயம் விளைவித்தால் நாம் என்ன செய்ய முடியும்? காரை ஓட்டுவது நம் தோட்டக்காரனுக்கு உரிய பணியன்று; அவ்வாறு அவன் ஓட்டியது பணி சார்ந்த செயலன்று. அவனுக்குரிய பணியில்லாத வேறொன்றைச் செய்த தோட்டக்காரனது செயலுக்கு நாம் பொறுப்பாவதில்லை. ஆனால் காரோட்டும் பணியையுடைய நம் காரோட்டுபவர் அதே தீங்கை விளைத்தால் அதற்கு நாம் பொறுப்பாகின்றோம். ஏனெனில் விளைந்த தீங்கு உரிய பணியைச் செய்கையில் விளைந்ததாகும். எனவே, உரிய பணியாற்றுகையில் உற்ற தீங்கிற்கே தலைவர் பொறுப்பாகின்றார்.

இழைக்கப்பட்ட தீங்கு உரிய பணியாற்றுகையில் உற்ற தீங்கா, என்பதை உறுதி செய்வதில் சிக்கல்கள் எழுவதுண்டு. தீங்கு இழைக்கப்படும் பொழுது, பணியாளின் நடத்தை அவ ருக்கு "உரிய பணியைப் புரியும் வகையில்" அமைந்திருந்ததா என்பதைச் சட்டம் ஆய்கின்றது.

"உரிய பணியைப் புரியும் வகை" (Course of employment) என்பது என்ன?

பிறருக்குத் தீங்கிழைக்க வேண்டுமென்று எவரும் ஒரு பணி யாளை வைத்துக் கொள்வதில்லை. எனவே, தீங்கிழைத்தல் ஒரு வேலையாளுக்கு உரிய பணியாக இருக்க முடியாது. முறையான வேலைகளைச் செய்வதற்கென்றே பணியாட்களை அமர்த்துகிறோம். ஆனால், அந்த வேலையைச் செய்வதில் பணியாள் கவனக்குறை வாக நடப்பதுண்டு; தவறுதல் புரிவதுண்டு; வேண்டுமென்றே தீங்குகள் இழைப்பதுண்டு. உரிய பணியை ஒருவர் கவனக் குறைவாகச் செய்தலும், தவறாகச் செய்தலும், அந்தப் பணியை

ஒழுங்கற்ற முறையில் செய்வதாகும். ஒருவருக்குற்ற பணியை அவர் ஒழுங்காகச் செய்யவில்லை என்பதால், அது அவருக்குரிய பணியன்று என்று கூறுதற்கில்லை. உரிய பணியை ஊழியர் ஒழுங்கீனமாகச் செய்தாலும், அதற்கான பொறுப்புத் தலைவரைச் சேருகின்றது.

பணியாளின் கவனமின்மையால் விளையும் தீங்குகள்

குதிரைகள் பூட்டிய வண்டியைச் சாலையில் நிறுத்தி விட்டுப் பணியாள் உணவருந்தச் சென்றிருந்தார். அப்பொழுது குதிரைகள் தாமாக ஓடியதால் வாதிக்குக் காயம் ஏற்பட்டது. குதிரைகளைக் கவனிப்பாரற்று விட்டுச் சென்றது பணியாளின் கவனமின்மைச் செயல். அந்தப் பணியாளின் தலைவருக்கு இதற்கான பகரப் பொறுப்பு உண்டு என்பது தீர்ப்பு. [Whatman V. Pearson (1868) L. R. 3 C. P. 422]

எதிர்வாதிகளின் மோட்டார் லாரிகளை நிறுத்துவதற்கென்று வாதி தம்முடைய கொட்டகையை வாடகைக்கு விட்டிருந்தார் லாரிகளுக்குப் பெட்ரோல் விடும்பொழுது, எதிர்வாதியின் பணியாள் சிகரெட்டைப் பற்றவைப்பதற்குக் கொளுத்திய தீக்குச்சியைத் தரையில் எறியவே, பெட்ரோல் தீப்பற்றியதால் கொட்டகையும் எரிந்து போயிற்று. எதிர்வாதியின் பணியாள் சிகரெட்டைப் பற்ற வைத்தது உரிய பணியைக் கவனமின்றிச் செய்ததாகும் எனக் கொண்டு, விளைந்த தீங்கிற்கு எதிர்வாதி பொறுப்பாக்கப்பட்டார். [Jefferson v. Derbyshire Farmers Limited (1921) 2. K. B. 281]

டிராம் வண்டியில் ஒரு பெண் ஏற முயன்றுகொண்டிருக்கும் பொழுதே வண்டிக்குள் இருந்த ஒரு பிரயாணி வண்டி புறப்படுவதற்குள்ள அறிவிப்பு மணியை அடித்து விட்டார். வண்டி ஓட ஆரம்பித்ததால் அந்தப் பெண் கீழே விழுந்து காயமுற்றார். அந்த வண்டியில் இருந்த கண்டக்டர் தமக்குக் குறிப்பிட்ட இடத்தில் இருந்திருந்தால் பிரயாணி மணியை அடித்திருக்க முடியாது. கண்டக்டரின் கவனமின்மைச் செயலே தமக்கு விளைந்த காயத்திற்குக் காரணம் என்று கூறிக் காயமுற்ற பெண் டிராம் கம்பெனியின்மீது வழக்கிட்டு நட்டஈடு பெற்றார். கண்டக்டரின் கவனமின்மையான செயலுக்குக் கம்பெனியும் பொறுப்பாக்கப்பட்டது. [Davies V. Liverpool Corporation (1949) 2. A. E. R. 175]

பணியாள் கவனக் குறைவாக நடந்து கொள்வது அவர் பணி செய்யும் பான்மையேயாகும். உரிய பணியைப் புரியும் வகையில், இட்ட வேலையை இயற்றும் விதத்தில், கவனமின்றிப் பணியாள் நடக்கிறார். எனவே, தலைவருக்கு அதில் பொறுப்புண்டு.

**பணியாளின் தவறுதலால் விளையும் தீங்குகள்**

இரயில் வண்டியில் அமர்ந்திருந்த வாதியை, அவர் அந்த நிலையத்திலேயே இறங்க வேண்டியவர் என்று தவருகக் கருதி இரயில்வேக் கம்பெனியின் கூலியாள் வண்டியிலிருந்து இறக்கி விட்டார். வாதி இறங்கவேண்டிய இடம் அதுவன்று. இதனுல் வாதியின் பயணம் தடைப்பட்டு நட்டம் விளைந்தது. கம்பெனியின் கூலியாளுக்குப் பயணிகள் அந்தந்த இரயில் நிலையங்களில் இறங்கும்படி செய்யும் கடமை உண்டு. வாதியைக் கூலியாள் இறக்கியது உரிய கடமையைச் செய்வதில் இழைத்த தவறுதலாகும். எனவே, இரயில்வேக் கம்பெனியாருக்குப் பகரப் பொறுப்புண்டு என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Bayley V. M. S. L. Ry. (1873) L. R. 8. C. P. 148].

எனவே, உரிய பணியைத் தவருகச் செய்தாலும் அது "உரிய பணியைப் புரியும் வகையை"ச் சேர்ந்தது என்பது தெளிவாகும்.

**பணியாளின் ஒழுங்கு தவறிய நடத்தையால் விளையும் தீங்குகள்**

எதிர்வாதியின் மோட்டார் ஓட்டும் பணியாள், வண்டியை இன்னெருவரிடம் கொடுத்து ஓட்டச் செய்தார். அப்பொழுது விளைக்கப்பட்ட தீங்கிற்கு எதிர்வாதி மீது பகரப் பொறுப்பு உண்டு என்பது தீர்ப்பு. பணியாளின் கடமை வண்டியை ஓட்டுவது. அதை இன்னெருவரைக் கொண்டு ஓட்டுவது, தமக்குரிய வண்டியை ஓட்டும் பணியை முறை தவறிச் செய்வதே யாகும். [Union S. S. Co. V. Colville. (1960) N. Z. L. R. 100] [Rickett V. Thomas Tilling Limited (1915) I. K. B. 644]

சென்னை உயர்நீதி மன்றத்தின் முன் இதுபோன்ற வழக்கொன்று வந்தது. [Rasipuram Union Motor Services Limited V. Ramasami Gounder - I. L. R. 1957 Madras. 513]

இராசிபுரம் பஸ் கம்பெனியைச் சேர்ந்த "பஸ் டிரைவர்" "கண்டக்டரை" ஓட்டச் சொல்லி விட்டுத் தாமும் அருகில் அமர்ந்திருந்து கண்காணித்துக் கொண்டிருந்தார். அப்பொழுது பஸ் வாதியின்மீது ஏறி வாதிக்குக் காயம் விளைவித்தது. கண்டக்டரை ஓட்ட அனுமதித்தது டிரைவரின் ஒழுங்கு தவறிய செயல். அதற்குப் பஸ் கம்பெனிதான் பொறுப்பேற்கவேண்டும் என்பது தீர்ப்பு. மேலே கூறிய Rickett V. Thomas என்ற ஆங்கில நாட்டு வழக்கின் கொள்கை சென்னை வழக்கில் விளக்கப்பட்டுப் பின்பற்றப்பட்டது.

**தலைவர் உத்தரவைப் பணியாள் மீறியதால் விளையும் தீங்குகள்**

சில வேளைகளில் தலைவரால் தடை சொல்லப்பட்ட காரியங்களைப் பணியாட்கள் செய்வதுண்டு.

இன்னொரு மோட்டாருடன் போட்டி போட்டுக் கொண்டு வேகமாகச் செல்வது கூடாது என்றும், சாலையின் குறுக்கே காரை நிறுத்தித் தடை செய்வது கூடாது என்றும், ஒரு பஸ் கம்பெனியார் தம்முடைய காரோட்டிகளுக்கு உத்தரவிட்டிருந்தனர். இந்த உத்தரவை மீறிக் கம்பெனியின் பணியாள் ஒருவர் சாலையின் குறுக்கே வண்டியை நிறுத்தியதால் வாதியின் காருடன் கம்பெனியின் கார் மோதி வாதிக்கு நட்டம் விளைந்தது. வாதி இட்ட வழக்கில் கம்பெனிக்குப் பகரப் பொறுப்பு உண்டு என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Limpus V. London General Omnibus Company (1862) 1. H & C. 526]

பணியாளின் ஒழுங்கு தவறிய செயல் தலைவரால் தடை செய்யப்பட்டதாக இருந்தாலும், தலைவரின் பொறுப்பு நீங்கிவிடுவதில்லை. இவ்வாறு சட்டம் இல்லையெனில், ஒவ்வொரு தலைவரும் தம் வேலையாட்களுக்கு "முறை தவறி நடக்காமல் பணி செய்ய வேண்டும்" என்று ஓர் உத்தரவை இடலாம். இந்த உத்தரவைக் காட்டிப் பணியாளர்களின் முறைதவறிய செயல்களுக்குத் தாம் பொறுப்பு இல்லை என்று வாதாடலாம். இதற்குச் சட்டம் இடமளிப்பதில்லை. தலைவரின் உத்தரவை மீறிய முறையில் பணியாள் தீங்கு விளைத்தாலும் அதற்கான பகரப் பொறுப்புத் தலைவரையே சேருகின்றது.

இதுபோன்ற வழக்குகளில் பணியாளுக்குரிய வேலையென்ன என்பதைத் தான் சட்டம் கவனிக்கிறது. உரிய வேலையைச் செய்வதில் விதிக்கப்பட்ட விலக்குகளைப் பற்றிச் சட்டம் கவனிப்பதில்லை. பணியைச் செய்கையில் தலைவரின் கட்டளைகளைப் பணியாள் மீறி நடந்தார், அதனால் தீங்கு விளைந்தது என்பது உண்மையாக இருந்தாலும், தமக்குள்ள பகரப் பொறுப்பைத் தலைவர் தவிர்த்தல் முடியாது. [Alford V. National Coal Board (1952) 1. A. E. R. 754]

### பணியாள் வேண்டுமென்றே விளைக்கும் தீங்குகள்

போதையில் இருந்த ஒருவர் விரும்பிய மதுவை விற்பதற்குக் கடையில் இருந்த பணியாளர் மறுத்தார். போதையில் இருந்தவர் கோபங் கொண்டு ஒரு கண்ணாடிப் புட்டியைப் பணியாள் மீது விசி எறிந்தார். விசப்பட்ட புட்டியின் உடைந்த கண்ணாடித் துண்டை எடுத்துப் பணியாள் திருப்பி விசினார். அந்தத் துண்டு அருகில் இருந்த வாதியின் கண்ணில் பட்டுக் காயம் விளைந்தது. உடைந்த கண்ணாடியை மீண்டும் வீசியெறிந்தது பணியாளின் தகாத செயல்தான். இருந்தும் கடைக்காரர் பணியாளின் செயலுக்குப் பொறுப்பாக்கப்பட்டார். [Patterson V. Royal Oak Hotel Limited (1948) N. Z. L. R. 136]

**பணியாளின் மோசடியால் விளையும் தீங்குகள்**

ஒரு வங்கியின் கிளை அலுவலர் வங்கியின் வாடிக்கைக் காரருக்குப் பொய்யான தகவலை மோசடியாகக் கூறி அவருக்கு நட்டம் விளைவித்தார். வாடிக்கைக்காரர் இட்ட வழக்கில் மோசடியால் நட்டம் விளைந்ததற்கு வங்கியும் பொறுப்பாகும் என்பது தீர்ப்பு. [Barwick V. English Joint Stock Bank (1867) L. R. 2. Ex. 259] பாங்கின் ஆதாயத்திற்கென்றே அதன் அலுவலர் மோசடி செய்தார் என்று இந்தத் தீர்ப்பில் காணப்பட்டது. எனவே, பணியாள் செய்யும் மோசடி தலைவரின் நலத்துக்கன்றிப் பணியாளின் ஆதாயத்திற்குத்தான் என்றால் அதற்குத் தலைவர் பொறுப்பாவதில்லை என்ற கொள்கை இருந்து வந்தது.

ஆனால், Lloyd V. Grace Smith & Company (1912) A. C. 716 என்ற வழக்கில், தமது ஆதாயத்திற்கென்று பணியாள் செய்யும் மோசடிக்கும் தலைவருக்குப் பொறுப்புண்டு என்று முடிவு செய்யப் பட்டது. வழக்குகள் நடத்துவதில் உதவி புரியும் ஒரு நிலையத் தில் பணியாற்றும் எழுத்தர் ஒருவர், கட்சிக்காரியாக வந்த ஒரு கைம்பெண்ணை ஏமாற்றி அவள் சொத்துக்களைத் தம் பேருக்கு எழுதி வாங்கிக்கொண்டார். வழக்கு நடத்துவதற்கு அவ்வாறு சொத்தை மாற்றுவது அவசியம் என்று கூறி மோசடி செய்தார். தாமே சொத்தை அடையவேண்டுமென்ற தீய எண் ணத்துடன் தான் அந்தப் பணியாள் மோசடி செய்தது. எனினும், அந்த மோசடிக்குப் பணியாளரை வேலைக்கு வைத்திருந்த அந்த நிலையத்தினர் பொறுப்பாகின்றனர் எனத் தீர்ப்புக் கூறினர்.

“நேர்மையாக நடப்பார் என்ற நம்பிக்கையுடன் ஒரு வேலையைத் தம் பணியாளிடம் தலைவர் ஒப்புவிக்கிறார். அந்த வேலையைச் செய்வதில் பணியாள் நேர்மை தவறி நடந்தார் எனில் அதற்குத் தலைவரும் பொறுப்பாக வேண்டும். பணியாளின் மோசடி தலைவரின் ஆதாயத்திற்கெனச் செய்யப்பட்டிருக்க வேண்டும் என்பது அவசியமன்று” என்ற கொள்கை Lloyd V Grace Smith & Co. என்ற தீர்ப்பில் விளக்கப்பட்டது.

ஒரு கடைக்காரர் தமது கடையில் தங்க நகைகளையும் தங்க முலாம் பூசிய நகைகளையும் விற்கின்றார். அவர் வேலையாள் முலாம் பூசிய நகையைத் தங்க நகை என்று பொய்யாகக் கூறி ஒருவருக்கு விற்று, அவ்வாறு ஏமாற்றியதால் வந்த பணத்தையும் தாமே எடுத்துக் கொள்ளுகிறார் என வைப்போம். ஏமாற்றப் பட்டவர் அதற்கான நட்ட ஈட்டைக் கடைக்காரரிடமிருந்தும் பெறலாம். வேலையாளின் மோசடிச் செயல் அவரது சொந்த ஆதாயத்திற்கே செய்யப்பட்டது என்றாலும், கடையை நடத்தும் தலைவருக்கும் அதற்கான பொறுப்பு உண்டு என்பது சட்டம்.

பொய்க் கையெழுத்திட்டு ஒரு கம்பெனியின் பணியாள் மற்ருெருவரை ஏமாற்றினர். இதற்கும் கம்பெனி பொறுப்பாகியது. கள்ளக் கையெழுத்திடுதல் பணியாளருக்கு உரிய வேலையாக இருக்க முடியாது. எனினும் தமக்கு அளிக்கப்பட்ட அதிகாரப் போர்வையின் மறைவில் பணியாள் செய்யும் மோசடி தலைவரையும் பாதிக்கின்றது. [Uxbridge Permanent Benefit Building Society V. Pickard (1939) 2. K. B. 248.]

மேலே கண்ட தீர்ப்புக்களிலிருந்து தெரிவதென்ன ?

பணியாள் உரிய பணியாற்றும்பொழுது உற்ற தீங்கிற்குத் தலைவர் பொறுப்பாகின்ருர்.

உரிய பணியை ஒழுங்கு தவறிச் செய்தாலும் தலைவருக்குப் பொறுப்பு உண்டு.

"கவனமாகச் செய்ய வேண்டிய வேலையைக் கவனமின்றிப் பணியாள் செய்யலாம் ; நேர்மையாகப் புரிய வேண்டிய பணியை நேர்மையற்ற வகையில் புரியலாம்; ஒழுங்காகச் செய்ய வேண்டியதை ஒழுங்கு தவறிச் செய்யலாம். இவ்வாறு, பணியாளால் இழைக்கப்படும் கவனமின்மைக்கும், மோசடிக்கும், தவற்றுக்கும் தலைவரே பொறுப்பேற்க வேண்டும்'' என்று Solmond என்ற பேராசிரியர் தெளிவாகக் கூறுகிருர்.

பணியாளின் உரிய பணியால் விளைவது, அந்தப் பணி செய்யப்படும் விதத்தால் விளைவது, இரண்டுக்குமே தலைவர் பொறுப்பேற்க வேண்டும் என்பது சட்ட விதி.

(இ) உரிய பணிக்குப் புறம்பான செயல்

தமக்குரிய பணியல்லாத மற்ருென்றைப் பணியாள் செய்து, அதனுல் தீங்கு விளைந்தால் அதற்குத் தலைவர் பொறுப்பாவதில்லை.

ஒரு பஸ் கம்பெனியின் கண்டக்டர் டிரைவர் இல்லாத சமயத்தில் பஸ்ஸை ஓட்டினுர். அவர் கவனமின்றி ஓட்டியதால், இன்னொரு வண்டிமீது மோதி வாதிக்கு நட்டம் விளைந்தது. கண்டக்டருக்குள்ள பணி காரை ஓட்டுவதன்று. அவர் அவ்வாறு ஓட்டியது உரிய பணிக்கு அப்பாற்பட்ட செயல். எனவே, விளைந்த தீங்கிற்குத் தலைவர் பொறுப்பல்லர் என்பது தீர்ப்பு. [Beard V. London General Omnibus Company (1900) 2. Q. B. 530.]

பணியாள் தமது சொந்த வேலையில் ஈடுபட்டிருக்கையில் விளையும் தீங்கு

நம்மிடம் காரோட்டுபவர் தமது குடும்பத்தாரையோ, நண்பர்களையோ ஓர் இடத்திற்கு அழைத்துச் செல்ல வேண்டும் என்று

கூறிக் காரை இரவலாகக் கேட்கிருர். நாமும் கொடுக்கிருேம். இப்பொழுது காரோட்டுபவரால் தீங்கு விளைந்தால் அதற்கு நாம் பொறுப்பாவதில்லை. காரை இரவலாகப் பெற்றவுடன் காரோட்டி நம் பணியாளாக இல்லை. காரை அவர் வசம் நாம் ஒப்படைத்திருக்கிருேம். ஆகவே, அவர் காரை ஒப்படை பெற்றவராகவே (bailee) இருக்கிருர். எனவே, நமக்கு அப்பொழுது பொறுப்பு இல்லை. [Britt V. Galmoye - 1928 - 44 TLR. 294.]

தம்முடைய பொழுது போக்கிற்கெனத் தம் நண்பர்களுடன் வேலையாள் தலைவரின் காரைத் தலைவரின் அனுமதியின்றி எடுத்துச் சென்று, அப்பொழுது தீங்கு விளைந்தாலும் அதற்குத் தலைவர் பொறுப்பாவதில்லை. [Sanderson V. Collins (1904) 1. K. B. 628.]

(ஈ) "உரிய பணியைப் புரியும் வகை" என்பதின் விளக்கம் என்ன?

பணியாள் செய்த வேலை அவருக்கு உரிய பணியா, இட்ட வேலையா, என்பதையே சட்டம் கவனிக்கிறது. உரிய பணியைப் புரிகையில், கவனமின்மையாக, தவறுதலாக, ஒழுங்கீனமாக, மோசடியாகப் பணியாள் நடக்கலாம். இந்த நடத்தை, பணியைப் புரியும் வகையைச் சேர்ந்தது. எனவே, பணியாளின் இந்த நடத்தைகளால் பிறருக்குத் தீங்கு விளைவது, பணியைச் செய்யும் வகையில் விளையும் தீங்காகும். இவ்வாறு விளையும் தீங்குகளை, "உரிய பணியைப் புரியும் வகையில் உதித்த தீங்குகள்" (Wrongs done in the course of employment) என்கிருேம். இவைகளை, இட்ட வேலையை இயற்றும் விதத்தில் இழைத்த தீங்குகள் என்றும் கூறலாம். இவைகளுக்கான பகரப் பொறுப்புத் தலைவரையே சேருகின்றது. உரிய பணியைப் புரியும் வகையாக இல்லாமல், பணிக்குப் புறம்பான செயலாக இருந்தால் அதற்குத் தலைவர் பொறுப்பாவதில்லை. எனவே, பணியாள் செய்த தீங்கிற்குத் தலைவர் பகரப்பொறுப்பு ஏற்க வேண்டுமெனில், அது, உரிய பணியைப் புரியும் வகையில் உதித்த தீங்காய் இருத்தல் வேண்டும்; இட்ட வேலையை இயற்றும் விதத்தில் இழைத்த தீங்காய் இருக்க வேண்டும்.

* * * *

(உ) ஒப்பந்தக்காரரால் விளையும் தீங்குகள் (Wrongs by Independent Contractors)

ஒருவர் தம் வேலையாளால் விளைக்கப்படும் தீங்குகளுக்கே பொறுப்பாகிருர் என்றும் ஒப்பந்தக்காரரால் (Contractor) இழைக்கப்படும் தீங்குகளுக்குப் பொறுப்பில்லை என்றும் கண்டோம்.

நம் மோட்டார்க் காரைப் பழுது பார்ப்பதற்கென்று ஒரு தொழிற்சாலையில் விடுகிருேம். பழுது பார்க்கப்பட்டபின் மோட்

டாரை ஓட்டிச் செல்லுகையில் திடீரென்று ஒரு சக்கரம் கழன்று போய்ப் பிறர்மீது மோதிக் காயம் விளைவித்தால் யார் பொறுப் பாவது? சக்கரம் கழன்று சென்றது பழுது பார்த்ததில் உள்ள குறைபாட்டால்தான் என்றால், அதற்கான பொறுப்பைப் பழுது பார்த்தவர்தாம் ஏற்கவேண்டும் என்பது சட்டம். [Stennett V. Hancock (1939) 2. A. E. R. 578].[3]

எந்த ஒரு செயலையுமே கவனக்குறைவாகவோ, ஒழுங்கின மாகவோ செய்யும்போது அதனால் பிறருக்குத் தீங்கு விளையலாம். அந்தத் தீங்குகளுக்கெல்லாம் ஒப்பந்தக்காரரிடம் வேலையை ஒப் படைத்தவர் பொறுப்பானவர் என வைத்தால், ஒப்பந்தக்காரருக் கும் பணியாளுக்கும் வேறுபாடு இல்லாமற் போய்விடும். நம் முடைய கண்காணிப்பிலும் கட்டுப்பாட்டிலும் வேலை செய்யும் பணியாளின் செயலுக்கு நாம் ஆளாவது போல் ஒப்பந்தக் காரரின் செயலுக்குச் சட்டம் நம்மை ஆளாக்குவதில்லை.

இந்தப் பொது விதிக்கு விலக்குகள் உண்டு.

(1) சட்டத்தால் விதிக்கப்படும் கடமைகள் :—சில வேலைகளில் ஒரு வருக்குள்ள கடமை சட்டத்தால் விதிக்கப்படலாம். வெடி மருந்துப் பொருள்களைச் செய்யும் தொழிலை ஒருவர் நடத்துகிறார். இது மிகவும் இடர் நிறைந்த தொழில். மிகவும் கவனத்துடனும் முன் னெச்சரிக்கையுடனும் செய்யப்படவேண்டிய தொழில். இந்தத் தொழில் நடைபெறும் இடம், அதில் வேலை செய்யப்படவேண்டிய முறை இவை குறித்துச் சட்ட விதிகள் உள்ளன. இந்த வேலையை ஓர் ஒப்பந்தக்காரரிடம் ஒப்புவித்துவிட்டு, சட்ட விதிகளின் படியுள்ள கடமைகளிலிருந்து ஒருவர் தப்ப முடியாது. விதிகளின் படி நடப்பதில் தவறினாலோ, அதனால் தீங்கு விளைந்தாலோ அதற்குத் தொழில் நடத்துபவரேதாம் பொறுப்பேற்க வேண்டும்.

எனவே, சட்டத்தால் விதிக்கப்படும் கடமைகளைப் (Statutory Duties) பொறுத்தவரை, ஒப்பந்தக்காரரின் தவறுகளுக்கு ஒப்படைத்தவரே பொறுப்பாகின்றார். [Groves V. Wimborne [1898) 2. Q. B. 402].

(2) நெடுஞ்சாலை போன்ற இடங்களில் ஆபத்து ஏற்படுத்தும் செயல்கள் :— பொதுமக்கள் அடிக்கடி நடமாடும் இடத்திலோ பொதுப் போக்குவரத்து உள்ள நெடுஞ்சாலையிலோ ஆபத்து ஏற்படுத்தும் செயலில் ஈடுபடுபவர், அச்செயலை ஒப்பந்தக்காரரிடம் ஒப்படைத் தாலும் அதன் விளைவுகளுக்கு அவரே பொறுப்பாகின்றார்.

எதிர்வாதி தம்வீட்டுச் சாக்கடையைப் பொதுக் கழிகாலுடன் சேர்ப்பதற்காக இடையில் இருந்த பொதுச் சாலையில் பள்ளந் தோண்டிச் சேர்த்தார். பள்ளம் சரியாகத் தூர்க்கப்படவில்லை.

எனவே, சாலையில் வந்து கொண்டிருந்த வாதி பள்ளத்தில் விழுந்து காயமுற்றார். எதிர்வாதி இந்த வேலையை ஒப்பந்தக் காரரிடமே ஒப்புவித்திருந்தார். பள்ளத்தைச் சரியாக நிரப்பாத தவறு ஒப்பந்தக்காரர் செய்தது எனினும், எதிர்வாதியே வாதிக்கு ஏற்பட்ட தீங்கிற்கு நட்டஈடு அளிக்க வேண்டும் என்பது தீர்ப்பு. [Gray V. Pullen (1864) 5 B & S. 970.]

கல்கத்தா நகர் வீதியில் ஒப்பந்தக்காரரால் தோண்டி எச்சரிக்கை ஏதுமின்றி விடப்பட்டிருந்த பள்ளத்தில் விழுந்த வாதிக்குக் கல்கத்தா நகராட்சி மன்றமும் நட்ட ஈடு கொடுக்க வேண்டும் என்று தீர்ப்பளித்தனர். [The Corporation of the Town of Calcutta V. Anderson (1884) 10. Cal. 445.]

(3) கடும் பொறுப்புடைய செயல்கள் :—இடர் நிறைந்த செயல் களில் ஈடுபடுவோர்கள் கவனக் குறைவாக இல்லாத நிலையில் பிறருக்குத் தீங்கு விளைந்தாலும், அதற்கு அவர்கள் பொறுப்பா கின்றனர். இது கடும் பொறுப்பு அல்லது வரம்பில்லாப் பொறுப்பு (Strict Liability) எனப்படும். நெருப்பு, வெடிமருந்து போன்ற பொருள்களைப் பயன்படுத்தித் தொழில் செய்வோர் கடும் பொறுப் புக்குள்ளாகின்றனர். இந்த வகைப் பொறுப்புடைய செயலை ஒப்பந்தக்காரரிடம் விடுவதால், கடும் பொறுப்புடையவரின் கடமை கழிவதில்லை.

(4) தொல்லை விளைவிக்கும் செயல்கள் :—நம் நிலச் சொத்தைப் பயன்படுத்தும் விதத்தால் அண்டை நிலச் சொத்தில் இருப்ப வருக்குத் தொல்லை (Nuisance) ஏற்படுத்துவது கூடாது. ஒப்பந் தக்காரரின் செயலால் தொல்லை விளைக்கப்பட்டாலும் அதற்கு நாமே பொறுப்பாகிறோம். [Matania V. National Provincial Bank. (1936) 2 A. E. R. 633.]

(5) சட்ட முரணான செயல்கள் :—சட்ட முரணான செயல்களைச் செய் வதற்கென்றே ஓர் ஒப்பந்தக்காரரை நாம் அமர்த்தினால் அதனால் விளையும் தீங்கிற்கான பொறுப்பு நம்மையே சேருகின்றது.

மேலே கூறப்பட்ட வகைகளில் விளையும் தீங்குகளுக்கு ஒப்பந் தக்காரர், ஒப்படைத்தவர் இருவருமே பொறுப்பாகின்றனர்.

* * *

### (ஊ) "கம்பெனி"களுக்கும் பகரப் பொறுப்பு உண்டு

பலரிடமும் பங்குகள் பெற்றுக் "கம்பெனிகள்" (Companies) அமைக்கப்படுகின்றன. "கம்பெனி"யைச் சட்டம் ஒரு நபராகவே கருதுகிறது. சாதாரண நபர் போன்றே, கம்பெனிமீது பிறர் வழக்கிடலாம். கம்பெனியும் பிறர்மீது வழக்கிடலாம். 'கம்பெனி'

என்பது ஓர் உயிரற்ற, கற்பனை நபராக இருந்த போதிலும், கம்பெனி தன் வேலையாட்கள் வாயிலாக இயங்குகிறது. சாதாரணமாக, பணியாளின் செயலுக்கு அவருடைய தலைவர் பொறுப்பாவது போல், கம்பெனியின் பணியாட்களால் விளைக்கப்படும் தீங்குகளுக்குக் கம்பெனியே பொறுப்பாகின்றது. தீநோக்குடன் குற்ற வழக்கிடுதல், அவதூறு இழைத்தல் போன்ற தீங்குகளைக் கம்பெனியின் வேலையாட்கள் செய்தாலும், அதற்கான பொறுப்புக் கம்பெனியைச் சேருகின்றது. கம்பெனியின் அலுவல்களையும் நோக்கங்களையும் விளக்கும் விதிகளிற் கூறப்படும் வேலைகளைச் செய்கையில் கம்பெனியின் பணியாட்களால் தீங்கு விளைக்கப்பட்டால் அதற்குக் கம்பெனியே பொறுப்பாகிறது. இந்த விதிகளை மீறிய செயல்களுக்குக் கம்பெனி பொறுப்பாவதில்லை.

இரயிலில் ஏற்றி வந்த குதிரைக்குக் கட்டணம் செலுத்தவில்லை என்பதற்காக வாதியை இரயில்வேக் கம்பெனியின் பணியாள் கைது செய்து சிறைப்படுத்தினர். கைது செய்வதற்கோ, சிறைப் படுத்துவதற்கோ இரயில்வேக் கம்பெனிக்கு அதிகாரம் கிடையாது. எனவே, பணியாள் செய்தது கம்பெனியின் அதிகாரத்திற்கு அப்பாற்பட்ட செயல் என்றும், அதற்குக் கம்பெனி பொறுப்பன்று என்றும் தீர்ப்பளிக்கப்பட்டது. [Poulton V. London & S.W. Ry. (1867) L.R. 2. Q.B. 534] எனவே, ஒரு நிறுவனத்தின் அதிகார வரம்பை மீறிய செயலை அதன் பணியாள் செய்தால் அதற்கு அந்த நிறுவனம் பொறுப்பு ஆவதில்லை.

கம்பெனியில் அதிகாரமளிக்கப்பட்ட செயல் அல்லது பின்னுறுதி செய்யப்பட்ட செயல் (ratified act) இவைகளால் தீங்கு விளைந்தால் அதற்கான பொறுப்புக் கம்பெனிக்கு உண்டு.

### (ஏ) முதல்வரும் முகவரும் (Principal and Agent)

தம்முடைய குறிப்பிட்ட அலுவல்களைச் செய்வதற்கென்று ஒருவர் மற்றொருவருக்கு அதிகாரமளிக்கலாம். அதிகாரமளித்தவரின் பிரதிநிதியாக அதிகாரமளிக்கப்பட்டவர் தமக்கு இட்ட அலுவலைச் செய்கின்றார். இவ்வாறு, அதிகாரமளிப்பவரை முதல்வர் (Principal) என்றும், அதிகாரம் பெற்றவரை முகவர் என்றும் அழைக்கிறோம். முகவர் தமக்குரிய அலுவல்களைச் செய்கையில் தீங்கிழைத்தால் அதற்கான பகரப் பொறுப்பு முதல்வருக்கு உண்டு என்பது விதி.

பணியாளின் செயல்களுக்குத் தலைவர் பொறுப்பாகும் வகையிலேயே முகவரால் இழைக்கப்படும் தீங்குகளுக்கு முதல்வர் பொறுப்பாகின்றார். [Burns V. Poulson (1873) L. R. 8. C.P. 563]

முதல்வர் அளித்துள்ள அதிகார வரம்பை மீறி முகவர் ஆற்றும் செயல்களுக்கு முதல்வர் பொறுப்பாவதில்லை.

(ஏ) கூட்டாளிகள் (Partners)

சிலர் கூடி ஒரு தொழிலை நடத்தலாம். அதைத் தொழிற்கூட்டு (Firm) என்பார்கள். அதில் சேர்ந்தவர்களைக் கூட்டாளிகள் (Partners) என்கிறோம். கூட்டாளிகள் ஒவ்வொருவரும் இதர கூட்டாளிகளின் முகவர்களாகக் கருதப்படுகின்றனர்.

ஒரு கூட்டாளிக்கும் மற்றொரு கூட்டாளிக்கும் உள்ள உறவு முதல்வர் முகவர் நிலையில் உள்ளதாகும். ஒருவர் மற்றவருக்கு முதல்வராகவும், முகவராகவும் இருக்கிறார். இவ்வாறு அவர்களிடையுள்ள உறவை இந்தியக் கூட்டமைப்புச் சட்டம் (Indian Partnership Act) விதிக்கின்றது. எனவே, ஒரு கூட்டாளியின் செயலுக்குப் பிறகூட்டாளிகளும் "பகரப்பொறுப்பு" ஏற்கின்றனர்.

ஒரு கூட்டாளி செய்யும் தீங்கிற்கு அந்தத் தொழிற் கூட்டும் (Firm) பொறுப்பாகின்றது. ஆனால் கூட்டாளியின் செயல், கூட்டுத் தொழிலுக்குச் சம்பந்தம் உடையதாக இருத்தல் வேண்டும்.

கூட்டாகத் தீங்கிழைத்தோர் (Joint Tort feasers)

தலைவர்—பணியாள், முதல்வர்—முகவர், கூட்டாளிகள், இந்த உறவால் பகரப் பொறுப்புத் தோன்றுவதைக் கண்டோம்.

தீங்கிழைத்தவரையும் அதற்கான பகரப் பொறுப்பேற்றவரையும் "கூட்டாகத் தீங்கிழைத்தோர்" (Joint Tort feasers) என்று கூறுவார்கள். இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் சதி செய்து அத்திட்டத்தின்படி தீங்கிழைத்தால் அவர்களும் "கூட்டாகத் தீங்கிழைப்பவர்கள்"தாம்.

(ஐ) கூட்டு இணைப் பொறுப்பு (Joint and Several Liability)

கூட்டாகத் தீங்கிழைத்தோருக்குள்ள பொறுப்புக் "கூட்டு இணைப் பொறுப்பு" (Joint and Several Liability) எனப்படும்.

அவர்களில் எவர்மீதும் தனித்தோ, அல்லது அவர்கள் அனைவர்மீதும் சேர்ந்தோ வழக்கிட்டு, தீங்கடைந்தவர் நட்டஈடு பெறலாம். அவர்கள் பொறுப்புக் கூட்டாகவும் தனியாகவும் அமைகிறது. ஒவ்வொருவரின் தனிப் பொறுப்பும் மற்றவரின் தனிப் பொறுப்பிற்கு இணையாக, ஒப்ப, இருக்கிறது. எனவே, இதைக் கூட்டு இணைப் பொறுப்பு என்று கூறுகின்றோம்.

*   *   *

## (ஒ) கூட்டு ஊழியம் (Common Employment)

ஒரே தலைவரின்கீழ்ப் பல பணியாட்கள் இருக்கலாம். ஒரு பணியாளின் செயலால் மற்றொரு பணியாளுக்குத் தீங்கு விளையலாம். இதற்குத் தலைவர் பொறுப்பல்லர் என்ற கொள்கை ஆங்கிலநாட்டில் இருந்து வந்தது. 1948ஆம் ஆண்டில் இயற்றப் பட்ட சட்டத்தால் இக்கொள்கை அந்நாட்டில் அகற்றப்பட்டது.

இயந்திரங்களால் இயங்கும் பெரிய தொழிற்சாலைகள் பல பெருகி வரும் தற்காலத்தில், அங்கு வேலை செய்யும் தொழிலாளர் களுக்கு ஏற்படும் விபத்துக்களால் மரணமோ, காயமோ விளை கிறது. அந்த விபத்துக்கள் ஒரு தொழிலாளரின் கவனமின்மை யான செயலால் ஏற்படுவதும் உண்டு. விபத்தால் விளையும் தீங்குகளுக்கு ஈடு செய்யும் பொறுப்பு ஆலையின் சொந்தக்கார ருக்கு இல்லையெனில் ஏழைத் தொழிலாளர்கள் அடையும் கேட் டிற்கு ஈடு கிடைக்காமல் போய்விடும். எனவே, நம் நாட்டில் 1938ஆம் ஆண்டில் இயற்றப்பட்ட "பணி முதல்வர்களின் பொறுப்புச் சட்டம்" (Indian Employers' Liability Act, 1938), தொழிலாளர்களுக்கு, பணி புரிகையில் விளையும் கேடுகளுக்கு வேலை அளித்தவர்கள் ஈடு செய்ய வேண்டும் என விதிக்கிறது. 1923இல் ஏற்பட்ட "வேலையாட்கள் நட்ட ஈட்டுச் சட்ட"மும் (Workmen's Compensation Act) பணி செய்கையில் வேலையாட் களுக்கு விளையும் உடலூறுகளுக்கு ஈடு செய்யும் பொறுப்பைப் பணித் தலைவர்கள் ஏற்க வேண்டும் என விதிக்கிறது.

"மோட்டார் கார்கள்" அதிகமாகப் பரவி வரும் இந்நாளில் சாலை விபத்துக்கள் அதிகமாக விளைகின்றன. இந்த விபத்துக் களால் தீங்கடைந்தவருக்கு நட்டஈடு கிடைக்கவேண்டும் என்பது சட்டத்தின் நோக்கம். மோட்டாரின் சொந்தக்காரருக்கும் ஈடு செய்ய இயலா நிலை இருக்கலாம். எனவே, மோட்டாரின் சொந் தக்காரர்கள் எல்லோரும், விபத்துக்களால் பிறருக்கு விளையும் கேடுகளுக்கு ஈடு செய்யும் வகையில் இன்சூரன்ஸ் (காப்பீடு) செய்து கொள்ள வேண்டும் என்று மோட்டார் வண்டிச் சட்டம் (Motor Vehicles Act, 1939) விதிக்கிறது.

வளரும் சமூக வாழ்வில் நிகழும் பல மாறுதல்களுக்கேற்பத் தீங்கடைந்தவருக்கு ஈடு கிடைக்க வேண்டும் என்ற நோக்கத் துடன் சட்டங்கள் இயற்றப்பட்டு வருகின்றன.

---

# பகுதி 2

## தீங்கு ஆகாத் தறுவாய்கள்

*(1) இசைந்து ஏற்கும் கேடுகள் - இசைந்து ஏற்றல் என்றால் என்ன? - இசைவு வெளிப்படையாகவோ உட்கிடையாகவோ அமையலாம் - நெடுஞ்சாலை விபத்துக்கள் - ஆபத்தை ஏற்பது வேறு, அதை அறிந்தும் ஆபத்திற்கு உட்படுதல் வேறு - கடமையை ஆற்றுகையில் ஆபத்தை ஏற்றல் - சட்டமுறைக் கடமையும், ஒழுக்க முறைக் கடமையும் - ஏமாற்றி இசைவு பெறுதலைச் சட்டம் ஒப்புவதில்லை - (2) தவிர்க்க முடியாத விபத்துக்கள் - தவிர்க்க முடியாத விபத்தும், தவறால் விளையும் செயலும் - (3) தற்காப்புச் செயல்கள் - (4) கட்டாயத் தேவையால் செய்யப்படுபவை - (5) சட்டம் விதிக்கும் செயல்கள் - சட்டம் விதிக்கும் கடமைகளும், அளிக்கும் அதிகாரங்களும்.*

விளையும் கேடுகள் எல்லாம் தீங்காவதில்லை எனக் கண்டோம். சட்டப்படி நமக்குள்ள உரிமைக்கு விளையும் ஊறுகளே ஈடு பெறத்தக்க தீங்குகள் ஆகின்றன. முன் பிரிவுகளிற் கூறப்பட்ட பலவகைத் தீங்குகளும் ஒருவரது உரிமைக்கு எதிரான தீங்குகளேயாகும்.

சில தறுவாய்களில் உரிமைக்கு ஊறு செய்யப்பட்டாலும் அதைச் சட்டம் "தீங்கு" என்று கொள்வதில்லை. எனவே, அச்செயலால் நட்டம் அல்லது கேடு அடைந்தவர் அதற்கான நட்ட ஈடு பெற முடியாது. அந்தத் தறுவாய்கள் எவை என்று காண்போம் :

(1) இசைந்து ஏற்பது தீங்காவதில்லை. (Volenti non fit injuria)

(2) தவிர்க்க முடியாத விபத்துக்கள். (Inevitable Accidents)

(3) தற்காப்புச் செயல்கள். (Acts in Private Defence)

(4) கட்டாயத் தேவையால் செய்யப்படுபவை (Necessity)

(5) சட்டம் விதிக்கும் செயல்கள். (Acts under Statutory Authority)

### (1) இசைந்து ஏற்பது தீங்காவதில்லை (Volenti non fit injuria)

தமக்கு இன்னொருவர் வேண்டுமென்றே கேடு விளைவிப்பதற்கு எவரும் இசைவதில்லை. சாதாரணமாக ஒருவர் தம் உடலுக்குக் காயத்தையோ தம் சொத்திற்குச் சேதத்தையோ விரும்பி ஏற்பதில்லை.

**கேடுகளை இசைந்து ஏற்றல் என்றால் என்ன?**

சில வேளைகளில் நம் உடலுக்கு ஊறு விளைக்கக் கூடிய செயல்களில் நாம் ஈடுபட வேண்டியதாகிறது. கால்பந்து, ஹாக்கி, கிரிக்கெட், குத்துச் சண்டை முதலிய விளையாட்டுக்களில் ஈடுபடும் பொழுது ஒருவரால் மற்றவருக்கு உடலூறு விளையலாம். இந்த ஆபத்து இருக்கிறது என்பதற்காக எவரும் இவ்வித விளையாட்டுக்களில் பங்கெடுக்காமல் இருப்பதில்லை. கிரிக்கெட் பந்தயத்தைப் பார்த்துக் கொண்டிருக்கும் கூட்டத்தினர்மீது, அடிக்கப்பட்ட பந்து மோதிக் கூட்டத்தில் உள்ளவர்களுக்குக் காயம் ஏற்படலாம். இவ்வாறு, விளையாட்டில் பங்கெடுப்பவர்கள், பார்த்துக் கொண்டிருப்பவர்கள், இவர்களுக்கு இடுக்கண் விளைவதற்கு ஏதுவிருக்கிறது. தீராத வயிற்று நோவால் ஒருவர் வருந்துகிறார். வயிற்றைக் கிழித்து "ஆபரேஷன்" செய்தால் ஒருவேளை நோய் குணமாகலாம் என்று வைத்தியர் கூறுகிறார். அறுவை வைத்தியத்தால் மரணம் விளையும் ஆபத்து இருக்கிறது என்று வைத்தியர் தெளிவாக அறிவிக்கின்றார். இருந்தாலும் அறுவை வைத்தியத்திற்கு நோயாளி ஒப்புக் கொள்ளுகிறார். இப்பொழுது நோயாளி மரணத்தை வேண்டுமென்றே ஏற்றுக்கொண்டார் என்பதன்று. நோயைத் தீர்ப்பதற்கு மரணம் விளையக் கூடிய ஆபத்தையும் ஏற்றுக்கொள்ளுகிறார். இது போன்று, உடலுக்கு ஊறு அல்லது மரணம் விளையத்தக்க இடுக்கண்களை ஏற்று ஒருவர் நடக்கும் பொழுது அவருக்கு விளையும் கேடுகளை "இசைந்து ஏற்ற கேடுகள்" என்று கூறுகிறோம். இந்தக் கேடுகளைத் "தீங்குகள்" எனச் சட்டம் கொள்ளுவதில்லை.

"இசைந்து ஏற்ற கேடுகள்" என்பது, "இடுக்கண்களை இசைந்து ஏற்றதால் விளைந்த கேடுகள்" என்ற பொருளையே குறிக்கின்றது. "இசைந்து ஏற்ற ஆபத்துக்களால் ஏற்படும் கேடுகளுக்கு இன்னொருவர் பொறுப்பாவதில்லை" என்ற கோட்பாட்டையே "இசைந்து ஏற்பது தீங்காவதில்லை" (Volenti non fit injuria) என்று சுருக்கமாகக் கூறுகிறோம்.

**இசைவு வெளிப்படையாகவோ அல்லது உட்கிடையாகவோ அமையலாம்**

ஓர் ஆபத்தான நிலைக்குத் தம்மை உட்படுத்துபவர் தமது இசைவை வெளிப்படையாகப் பிறருக்குத் தெரிவிக்க வேண்டும் என்ற கட்டாயம் இல்லை. ஒருவருடைய நடத்தையிலிருந்தே அவர் ஓர் ஆபத்தை இசைந்து ஏற்றுக்கொண்டார் என்பதை நாம் அறிகிறோம். கால்பந்து, கிரிக்கட் முதலிய விளையாட்டுக்களில் ஈடுபடுபவர்கள் ஒருவருக்கொருவர் காயப்படுத்தி விட்டாலும் வழக்

கிடுவதில்லை என்று எழுத்து மூலமாக ஒப்பந்தம் செய்து கொள்ளுவது கிடையாது. ஆனால், அவர்கள் அந்த விளையாட்டில் ஈடுபடுவதிலிருந்தே, விளையாடுகையில் உடற்காயங்கள் விளைந் தாலும் அதற்கு இசைகின்றனர் என்பதை ஊகித்தறிகிறோம். வைத்தியரிடம் அறுவை சிகிச்சை செய்து கொள்ளுகிறவர்கள் ஒவ்வொருவரும் அந்தச் சிகிச்சையை இசைந்து ஏற்பதாக எழுதிக் கொடுப்பதில்லை. அறுவை சிகிச்சையால் விளையக்கூடிய ஆபத்துக் களை இசைந்து ஏற்கின்றார் என்பது அவர் அந்தச் சிகிச்சையின் தன்மையை அறிந்த பின்னும் அதற்கு உட்பட்டதிலிருந்தே உய்த் துணரத்தக்கதாகும். எனவே, ஓர் ஆபத்தை ஒருவர் இசைந்து ஏற்பதை அவரது நடத்தையிலிருந்தும், இதர சூழ்நிலைகளில் இருந்தும் நாம் அறிகிறோம்.

வேகப்பந்தயத்தில் ஈடுபட்டிருந்த இரு மோட்டார்கள் மோதியதால், பந்தயத்தைப் பார்த்துக்கொண்டிருந்த சிலர் காய மடைந்தனர். இதற்குப் பந்தயத்தை நடத்தியவர்கள் பொறுப் பல்லர் என்று தீர்ப்பாக்கப்பட்டது. [Hall V. Brooklands Auto. Racing Club (1933) l . K. B. 205] மோட்டார் வண்டிகள் விரைந்து பந்தயத்தில் ஓடும் பொழுது விபத்துக்கள் நேரலாம், கேடுகள் விளையலாம் என்பதை எவரும் எதிர்பார்க்க வேண்டியதாகும். இவ்வாறு, விபத்துக்கள் விளையலாம் என்பதை நன்கு அறிந்தும், பந்தயத்தைப் பார்க்க வருபவர்கள், கேடுகள் விளைந்தால் அவற்றை ஏற்றுக் கொள்ளும் இசைவுடனேயே வருகின்றனர். எனவே, இச்சூழ்நிலையில் விளையும் விபத்துக்களுக்கும் அதனால் வரும் கேடுகளுக்கும் பிறர் பொறுப்பாவதில்லை.

**நெடுஞ்சாலை விபத்துக்கள்**

நெடுஞ்சாலையில் நாம் செல்லும்பொழுது, எதிர்பாரா விதத் தில் இடையூறுகள் விளையலாம். திடீரென்று மிரண்டு ஓடும் குதிரை நம்மீது மோதலாம். மோட்டார்க் காரின் சக்கரம் திடீ ரென்று வெடிப்பதால் விபத்துக்கள் விளைவதுண்டு. எவருடைய கவனமின்மையும் இந்த விபத்துக்களுக்குக் காரணமில்லை. நெடுஞ்சாலையில் விளையும் இதுபோன்ற விபத்துக்களால் விளையும் ஆபத்துக்களை ஏற்பதற்கு இசைந்துதான் ஒருவர் சாலையைப் பயன்படுத்துகிறார் எனச் சட்டம் கொள்ளுகிறது. எனவே, எவருடைய கவனக் குறைவாலுமின்றி எதிர்பாராத விதமாக ஏற்படும் நெடுஞ்சாலை விபத்துக்களால் கேடு அடையும் ஒருவர் ஈடு பெறமுடியாது. [Holmes W. Mather - (1875) L. R. 10 Ex 261] பிறரது கவனக்குறைவால் விளையும் தீங்குகளுக்கு நட்ட ஈடு உண்டு.

### ஆபத்தை இசைந்து ஏற்பது வேறு; அதை அறிந்தும் ஆபத்திற்கு உட்படுதல் வேறு

ஆபத்து நிறைந்த ஒரு செயலில் இசைந்து ஈடுபடுவது ஒரு வகை; ஆபத்து இருக்கிறது என்று தெரிந்தும் அச்செயலைச் செய்யவேண்டும் என்ற அவசியத்தால் அதில் ஈடுபடுவது மற்ஞெரு வகை. முன்னது ஆபத்தை விரும்பி அதை ஏற்றல்; பின்னது ஆபத்தை அறிந்தும் அதற்கு உட்படுதல். ஆபத்தை அறிந்தும் அவசியத்தால் அதற்கு உட்படுபவரை, அதை இசைந்து ஏற்றவர் என்று கூறுதல் தகாது.

எதிர்வாதி நடத்தி வந்த கல் உடைக்கும் தொழிற்சாலையில் வாதி ஒரு தொழிலாளியாக வேலை பார்த்து வந்தார். வாதியின் தலைக்கு மேலாக உடைத்த கற்களைத் தூக்கிச்செல்லும் இயந்திரம் வழக்கமாக இயங்கிக் கொண்டிருந்தது. இது வாதிக்குத் தெரியும். ஒரு நாள் அந்த இயந்திரத்திலிருந்து ஒரு கல் வாதிமேல் விழுந்த தால் அவர் காயமுற்ருர். இதற்கு எதிர்வாதி பொறுப்பு என்று தீர்ப்புக் கூறப்பட்டது. கல்லுடைக்கும் தொழிலை நடத்திய எதிர் வாதி தகுந்த பாதுகாப்புக்களை வைத்திருந்தால் வேலை செய்து கொண்டிருந்த வாதிக்குத் தீங்கு விளைந்திருக்காது என்ற காரணம் எடுத்துக் காட்டப்பட்டது. [Smith V. Baker - (1891) A. C. 325] ஆபத்து இருப்பது தெரிந்தும் ஒரு தொழிலை அவசி யத்தால் மேற்கொண்டவர் அந்த ஆபத்தை இசைந்து ஏற்றவர் ஆகமாட்டார் என்பதை இந்த வழக்கு விளக்குகிறது.

ஒரு மோட்டாரை ஓட்டும் எதிர்வாதி குடிபோதையில் இருந் தார் என்பதை அறிந்தும் ஒரு பெண் அந்த மோட்டாரில் ஏறிச் சென்ருள். அப்பொழுது விளைந்த விபத்தால் பெண்ணிற்கு ஏற்பட்ட தீங்கிற்கு எதிர்வாதி நட்டஈடு கொடுக்க வேண்டும் எனத் தீர்ப்பளித்தனர். [Dann. V. Hamilton (1939) 1. K. B. 509].

### கடமையை ஆற்றுகையில் ஆபத்தை ஏற்றல்

சட்டப்படியான தமது கடமையை ஒருவர் ஏற்றுச்செய்கையில் அவருக்குக் கேடு விளைந்தால், அது இசைந்து ஏற்ற கேடாவ தில்லை. பணியாளுக்குத் தம் தலைவரின் சொத்தைப் பாதுகாக்கும் கடமை உண்டு. தலைவரின் சொத்துத் தீக்கிரையாகாமல் தடுப் பதில் ஈடுபட்ட பணியாள் காயமடைந்தார். எவருடைய கவன மின்மையால் தீ பரவியதோ அவரிடமிருந்து, பணியாள் நட்ட ஈடு பெறலாம் என்று கூறப்பட்டது. [D' Urso V. Sanson (1939) 4. A. E. R. 26.]

நெடுஞ்சாலையில் எதிர்வாதி குதிரைகள் பூட்டிய வண்டியை அப்படியே விட்டு வைத்திருந்தார். குதிரைகள் தாமாக வண்டியை இழுத்துக் கொண்டு ஓட ஆரம்பித்தன. தெருவில் போய்க்கொண்டிருப்பவர்களுக்கு ஆபத்து விளையாமல் தடுப்பதற்காக, ஒரு போலீசு அதிகாரி அந்தக் குதிரைவண்டியைத் தொடர்ந்து சென்று குதிரைகளை நிறுத்தினர். அவ்வாறு செய்கையில் ஒரு குதிரை அவர்மீது விழுந்து அதனல் அவர் காயமடைந்தார். போலீசு அதிகாரிக்கு விளைந்த காயத்திற்கு எதிர்வாதி பொறுப்பானர். [Haynes V. Harwood (1935) 1. K. B. 146] ஓடும் குதிரைகளை நிறுத்துவதால் தமக்குக் கேடு விளையலாம் என்பதைப் போலீசு அதிகாரி அறிந்தேதான் அதில் ஈடுபடுகிருர். இருப்பினும் அந்த ஆபத்தை அவர் இசைந்து ஏற்ருர் என்று கூறுவதற்கில்லை. ஏனெனில் அவர் பொதுமக்களுக்கு விளையக்கூடிய ஆபத்தைத் தடுக்கும் கடமை உள்ளவர்.

வண்டியை நிறுத்தியவர் போலீசு அதிகாரியாக இல்லாமல் சாதாரண ஆளாக இருந்தாலும், அவர் நட்ட ஈடு பெறலாம். பிறருக்கு விளையும் ஆபத்தைத் தடுப்பது போலீசு அதிகாரிக்குப் பணிமுறையான (Official) கடமையாக இருப்பது போல், மற்றவர்களுக்கு ஒழுக்க முறையான (Moral) கடமையாகிறது.

### சட்டமுறைக் கடமையும் ஒழுக்க முறைக் கடமையும்

ஒழுக்க முறைக் கடமையைச் செய்கையில் ஒருவருக்கு விளையும் கேட்டையும் அவர் இசைந்து ஏற்றது என்று சொல்வதற்கில்லை.

ஒருவருடைய கவனமின்மையால் மற்ருெருவருக்கு ஆபத்து விளையலாம். ஆபத்தில் சிக்கியவரைக் காப்பாற்றுவதற்கு மூன்ருவது நபர் ஒருவர் முற்படலாம். இந்த முயற்சியில் மூன்ருவது நபருக்குக் கேடு விளைந்தால், கவனமின்மையால் ஆபத்தை விளைவித்தவரே அதற்கும் பொறுப்பாகின்ருர்.

ஆபத்தில் சிக்கியவரை அதிலிருந்து மீட்க முயலுவது மனித இயல்பு ; உயரிய பண்பு. தன்னலனைக் கருதாது தமக்கு வரும் ஆபத்தை மதியாமல் பிறரைக் காப்பாற்ற வீரத்துடன் துணிபவர்கள் மனித குலத்தின் உயரிய பண்பிற்கு உதாரணமாய் நிற்கின்றனர். இந்த நன்முயற்சியிலே இவர்கள் அடையும் கேட்டிற்கு ஈடு செய்வது ஆபத்திற்குக் காரணமானவரைச் சேருகின்றது. நச்சுப்புகையில் சிக்கித் தவித்த இரு தொழிலாளர்களை மீட்க முற்பட்ட டாக்டர் ஒருவர் அடைந்த கேட்டிற்கு, அத் தொழிலாளர்களைப் பணித்த தலைவர் பொறுப்பாக்கப்பட்டார். [Baker V. T. E. Hopkins & Son Ltd. (1959) 1. W. L. R. 966]

பிறரைக் காப்பாற்ற முற்படுபவர் குருட்டுத் தன்மையான துணிச்சலுடன் நடந்தார் என்றோ, அவசியமில்லாமல் ஆபத்தில் இறங்கினார் என்றோ, ஆபத்தை விளைவித்தவர் கூறும் எதிர் வாதத்தைச் சட்டம் ஏற்பதில்லை. ஆபத்தில் அகப்பட்டுத் தவிக்கும் ஒருவரைப் பிறர் தப்புவிக்க முயலுவார்கள் என்பது யாரும் எதிர்பார்க்க வேண்டியதாகும். ஆபத்தின் இயல்பான விளைவாகவே மூன்றாவது மனிதரின் மீட்கும் செயல் கருதப்படுகிறது. ஒருவருக்கு வரவிருக்கும் ஆபத்தைப் பிறர் தடுக்க முன்வரமாட்டார்கள் என்று கருதுவது மனித குலத்தை இழிவு படுத்துவதாகும் என்று கூறுகிறார் போலக் (Pollack) என்ற பேராசிரியர்.

இரு நண்பர்கள் நீந்துவதற்கென்று செல்லுகின்றனர். ஒருவர் நீச்சல் குளத்தின் ஆழமான பகுதிக்குச் சென்று நீந்த முடியாமல் தவிக்கையில் மற்ற நண்பர் அவரை மீட்பதற்கு முற்படுகிறார். மீட்பதற்கு முற்பட்டவர் மூழ்கி இறந்து விடுகிறார். ஆனால் முதலில் தவித்தவர் தப்பிவிடுகிறார் என வைப்போம் இப்பொழுது மூழ்கி இறந்தவரின் வாரிசுகள் மூழ்காமல் தப்பியவரிடமிருந்து நட்டஈடு பெற முடியுமா? அவர்கட்கு நட்ட ஈடு கொடுப்பதுவே நியாயம் என்று சால்மண்ட் என்ற பேராசிரியர் கூறுகின்றார்.

### ஏமாற்றி இசைவு பெறுவதைச் சட்டம் ஒப்புவதில்லை

தம்முடன் கூடி மகிழ்ந்தால் குரலில் இனிமை அதிமாகும் என்று ஏமாற்றித் தம்மிடம் இசை பயின்று கொண்டிருந்த பெண்ணின் கற்பைக் கெடுத்தார் ஓர் ஆசிரியர். பெண்ணிற்கு விளைந்த தீங்கை இசைந்து ஏற்றதாகக் கொள்ளுதல் தகாது. ஏனெனில் அவளது இசைவு ஏமாற்றுச் செயலால் பெறப்பட்டதாகும் எனக் கொண்டு கற்பழித்த தீங்கிற்கு ஈடு செய்யும் பொறுப்பு ஆசிரியர்மீது சுமத்தப்பட்டது [R. V. Williams (1923) 1. K. B. 340]. எனவே, இசைவு வஞ்சனையாலோ, ஏமாற்றுதலாலோ பெறப்பட்டதெனில் அதைச் சட்டம் ஏற்பதில்லை.

மேலே கண்ட தீர்ப்புக்களிலிருந்து தெரிவதென்ன? ஆபத்தை அறிந்தும் அச்செயலில் கடமையின் காரணமாக ஈடுபடுவது, ஆபத்தை இசைந்து ஏற்பது ஆகாது; அந்தக் கடமை சட்ட முறையானதாகவோ அல்லது ஒழுக்க முறையானதாகவோ இருக்கலாம். கேடு அடைந்தவர் அளிக்கும் இசைவு முறையாகப் பெறப்படுதல் வேண்டும்; ஏமாற்றியோ, வஞ்சனை செய்தோ பெறும் சம்மதம் முறையான இசைவு ஆவதில்லை. அளிக்கப்படும் சம்மதம் வெளிப்படையாகவும் இருக்கலாம் அல்லது ஊகித்தறியும் விதத்திலும் அமையலாம். இந்தக் கூறுகளைக் கருத்திற்

கொண்டே "இசைந்து ஏற்பது தீங்காவதில்லை" என்ற விதியை நாம் புரிந்து கொள்ளவேண்டும்.

மரணத்தையோ, கொடுங்காயத்தையோ விளைவிக்கும் கருத் தின்றி ஒருவர் சம்மதத்துடன் அவருக்கு மற்றொருவர் கேடு விளைத்தல், ஒருவருக்கு சிகிச்சையளிக்கும் வகையில் அவர் சம்மதம் பெற்று அவர் உடலில் அறுவை வைத்தியம் செய்தல், இவை குற்றங்கள் ஆவதில்லை என இந்தியக் குற்றச்சட்டம் கூறு கிறது. [Section 87 and 88 of Indian Penal Code]

(2) தவிர்க்க முடியாத விபத்துக்கள் (Inevitable accidents)

ஒருவர் தகுந்த கவனத்துடனும் எச்சரிக்கையுடனும் ஒரு செயலைச் செய்யும்பொழுது கூட, எதிர்பாராத விதமாகப் பிறருக்கு அச்செயலால் கேடு விளைவதுண்டு. இதையே தவிர்க்க முடியாத விபத்துக்கள் என்று கூறுகிறோம்.

போதிய கவனமின்றி ஒருவர் நடந்து அதனால் பிறருக்குக் கேடு விளைந்தால் கவனமின்றி நடந்தவரை அதற்குப் பொறுப் பாக்கலாம். அவர் தகுந்த கவனத்துடன் நடந்தும் விபத்து விளைந்தால் சட்டம் அவரை அதற்குப் பொறுப்பு என்று கூறுவ தில்லை.

சில நண்பர்கள் வேட்டையாடக் காட்டிற்குச் சென்றனர். ஒருவர் ஒரு பறவையைக் குறி வைத்துச் சுட்டார். துப்பாக்கி ரவை ஒரு மரத்தின்மீது மோதித் திசைமாறிச் சென்று, வேட்டைக் குழுவினருக்கு வேலையாளாகச் சென்றிருந்தவர்மேல் பாய்ந்தது. இதனால் அந்த வேலையாள் காயமடைந்தார். வேலையாளுக்கு விளைந்த தீங்கிற்குச் சுட்டவர் பொறுப்பில்லை என்று தீர்ப்பளிக் கப்பட்டது. [Stanley V. Powell (1891) 1. Q. B. 86] வேலையா ளுக்கு விளைந்த காயம் துப்பாக்கியைச் சுட்டவரின் கவனக்குறை வால் ஏற்பட்டதன்று. எனவே, இது தவிர்க்க முடியாத விபத்து என்று கொள்ளப்பட்டது.

கடும் பொறுப்புள்ள (Strict Liability) தறுவாய்கள் பற்றி முன்னர்க் கண்டோம். அந்தத் தறுவாய்களில் தீங்கு விளைந் தால் அதைத் தவிர்க்க முடியாத விபத்தாகச் சட்டம் கொள்ளுவ தில்லை.

நகரின் நடுவில் மிருகக் காட்சிச் சாலையை நடத்துபவர், "எதிர்பாராத விதத்தில் கொடிய மிருகம் ஒன்று தப்பிச் சென்று பிறரைத் தாக்கி விட்டது", என்று கூறும் சமாதானத்தைச் சட்டம் ஏற்காது.

எனவே, "தவிர்க்க முடியாத விபத்து" என்னும் காரணம் கடும் பொறுப்புள்ள வர்களுக்குப் பொருந்துவதில்லை.

இந்தியக் குற்றவியல் சட்டமும் தவிர்க்க முடியாத விபத்துக் களைத் தண்டிக்கத்தக்க குற்றங்களாகக் கொள்ளுவதில்லை.

தீய கருத்து ஏதுமின்றி முறையான செயலைச் சட்ட முறை யான வழியில், போதிய கவனத்துடனும் எச்சரிக்கையுடனும் ஒரு வர் செய்கையில் தோன்றும் விளைவு குற்றம் ஆவதில்லை என்று அச்சட்டத்தின் 80 வது பிரிவு கூறுகிறது.

### தவிர்க்க முடியாத விபத்தும், தவற்றல் (Mistake) விளையும் செயலும்

தவிர்க்க இயலாத விபத்து வேறு, தவறு வேறு. தவறு தலான செயலை ஆங்கிலத்தில் Mistake என்று கூறுகிறோம். தீய எண்ணமும், கவனமின்மையும் இல்லாத செயலாக இருந்தாலும் தவறுதலான செயலைச் சட்டம் மன்னிப்பது இல்லை.

ஒருவர் தம்முடையது என்று கூறி ஒரு பொருளை நம்மிடம் விற்கிறார். நாம் அதற்குத் தகுந்த விலை கொடுத்து வாங்கு கிறோம். ஆனால் அது உண்மையில் திருட்டுப்பொருள். திருட் டுப் பொருள் என்று தெரியாத காரணத்தால் தவறுதலாகத்தான் நாம் அந்தப் பொருளை வாங்கினோம். இருப்பினும் திருட்டுப் பொருளைப் பெற்ற தீங்கிற்கு நாம் ஆளாகின்றோம். எனவே, அந்தப் பொருளை அதன் சொந்தக்காரரிடம் திருப்பிக் கொடுக்க வேண்டிய கடமை நமக்கு உண்டு.

இவ்வாறு, ஒருவரது தவறுதலால் பிறர் உரிமைக்கு ஊறு விளைந்தாலும் அது தீங்கேயாகிறது.

### (3) தற்காப்புச் செயல்கள் (Acts in private defence)

ஒருவரின் உடலுக்கும், பொருளுக்கும் பிறரால் தீங்கு விளை யாதபடி பாதுகாத்துக் கொள்ளும் உரிமை அவருக்கு இருக் கிறது. நம் உடலைத் தாக்க வருபவரை, உடலுக்கு ஊறு விளை விக்கும்படி விட்டுவிட்டு, அதற்குப் பின் அவர்மீது வழக்கிட்டு நட்டஈடு பெற வேண்டும் என்று சட்டம் விதிக்கவில்லை. நம் உடலைப் பிறர் தாக்காதவாறு தடுத்துக்கொள்ளும் உரிமையைச் சட்டம் நமக்கு அளிக்கிறது. இம்மாதிரியே நம் பொருளைப் பாதுகாக்கும் உரிமையும் நமக்கு உண்டு. நம் உடலுக்கும் பொருளுக்கும் பிறரால் கேடு விளையாதபடி தடுக்கும் ஒப்பற்ற உரிமை நமக்கு இருக்கிறது. இதையே "தற்காப்பு உரிமை" (Private Defence) என்கிறோம்.

நம்மைக் கடிப்பதற்கு என்று நம்மை நோக்கி ஒரு நாய் பாய்ந்து வருகிறது நம்மைக் காப்பாற்றிக் கொள்ளும்பொருட்டு ஒரு தடியால் அந் நாயைத் தாக்குகிறோம். இதனால் அந்த நாய்க்குக் கால் ஒடிந்து போகிறது. நாயின் சொந்தக்காரர் அவரது நாய்க்குக் கேடு விளைவித்தோம் என்ற காரணங்காட்டி நம்மீது வழக்கிட்டு நட்ட ஈடு பெற முடியாது. நாயை நாம் அடித்தது நம்மைக் காத்துக்கொள்ளுதற்காகத்தான். தற்காப்பான செயலால் பிறருக்குக் கேடு விளைந்தால் அதைத் தீங்காகச் சட்டம் கொள்ளுவதில்லை.

நம் உடலைத் தாக்க வரும் இன்னொருவரைத் தடுப்பதற்கு அவசியமான அளவு பலாத்காரத்தை நாம் பயன்படுத்துவதைச் சட்டம் அனுமதிக்கின்றது. நம்முடைய உடலைக் காப்பது மட்டும் தான் நம் பொறுப்பு என்பதன்று. நம் மனைவி, மக்கள், வேலையாள், இன்னும் பிறர் பொருட்டும் நாம் தற்காப்புச் செயல்களை மேற்கொள்ளலாம். தம் தலைவரைத் தாக்க வருபவரைத் தடுத்து நிறுத்தும் பொறுப்பும் கடமையும் பணியாளுக்கு உண்டு. பணியாளைப் பாதுகாக்கும் பொறுப்புத் தலைவருக்கு உண்டு. உதவியற்று நிற்கும் ஒருவரை மற்றொருவர் தாக்க வந்தால் அதைப் பார்த்துக் கொண்டு நாம் நிற்பதற்கில்லை அவரைப் பாதுகாக்க வேண்டும் என்ற எண்ணம் நமக்கு ஏற்படுகிறது. இது மனித இயல்பு. எனவே, தற்காப்பு என்றால் நம்மை மட்டும் பாதுகாப்பது என்பதன்று. நம் குடும்பத்தினரையும் பிறரையும் பாதுகாக்கும் நடவடிக்கைகளும் தற்காப்புச் செயல்களே ஆகின்றன. [R. V. Rose (1884) 15. Co. 540]

தற்காப்புக்கென எடுக்கப்படும் செயல்கள், விளையவிருக்கும் தீங்கை விலக்கும் முறையில் அமையவேண்டும். கையை ஓங்கிக் கொண்டு நம்மை அடிக்க ஒருவர் வருகிறார் என்றால், நாம் உடனே ஒரு கத்தியை எடுத்து அவரைக் குத்திக் கொடுங்காயம் விளைவிப்பது தற்காப்புச் செயலன்று. ஓங்கிய கையுடன் வருபவரை ஒதுக்கித் தள்ளலாம். அவர் கத்தியுடன் நம்மைக் குத்த வந்தால் நாமும் கத்தியைப் பயன்படுத்தி அவருக்குக் காயத்தை விளைவிக்கலாம். விளையவிருக்கும் ஆபத்தைத் தடுப்பதற்குத் தக்க படியே பலாத்காரத்தைப் பயன்படுத்தவேண்டும். [R. V. Wilson (1955) 1. A.E.R. 744]

நம் பொருளை எடுத்துக்கொண்டு ஓடுபவனைத் துரத்திப் பிடித்துப் பொருளை மீட்டுக்கொள்ளலாம். பொருளை மீட்ட பின்னும் அவனை அடித்துத் துன்புறுத்துவது அடாத செயலாகும்.

நம் வீட்டிற்குள் அத்துமீறி நுழைபவரைப் பலாத்காரமாக வேனும் அப்புறப்படுத்தலாம். வல்லந்தமான செயலைத் தடுப்பதற்கு வல்லந்தத்தைப் பயன்படுத்துதல் சட்டமுறையான நடவடிக்கையேயாகும் என்பது பல தீர்ப்புக்களில் ஏற்றுக்கொள்ளப் பட்ட கொள்கையாகும். [Green V. Goddard (1704) 2. Salk. 641]

தம் தோட்டத்திற்குள் நுழைந்து முயல்களைக் கொல்லும் நாயைத் தோட்டக்காரர் சுட்டுக் கொன்ருர். அது தற்காப்புச் செயல்தான் என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Wadhurst V. Damme (1604) Cro. Jac. 45]

தம் வீட்டையோ தோட்டத்தையோ பாதுகாப்பதற்கென்று மூர்க்கத்தனமுடைய நாயை வைத்திருக்கலாம். ஆனால் அவ்வாறு வைத்திருப்பது பற்றிப் பிறருக்கு எச்சரிக்கை அளிக்கவேண்டும். எனவேதான் "நாய்கள் ஜாக்கிரதை" என்ற அறிவிப்புப் பலகையை அநேக விடுகளில் காண்கிருேம். [Sarch V. Blackburn (1830) 4. C & P 297]

தம் சொத்தை நாசம் செய்யும் விலங்கினங்களிடமிருந்து பாதுகாப்பதற்கென அச் சொத்துக்களில் கண்ணிகளை வைத்து அத்துமீறி வரும் விலங்குகளைப் பிடிப்பதற்குச் சட்டம் அனுமதிக்கிறது. அம்மாதிரியே, முட்கம்பிகளால் வேலியிடுவதும், கண்ணுடித் துண்டுகள், கூரிய கம்பிகள் இவைகளைச் சுவரில் பதிய வைப்பதும் சட்டப்படியான செயல்களேயாகும். [Deane V. Clayton (1817) 7. Taunt. 489]

அத்து மீறி நுழையும் பன்றிகளைப் பிடிப்பதற்கென்று ஒருவர் நிலத்தில் வைக்கப்பட்டிருந்த கண்ணியில் மற்றவரது பசு விழுந்து இறந்தது; இதற்குக் கண்ணி வைத்திருந்த நிலத்தின் சொந்தக்காரர் பொறுப்பல்லர் என்று சென்னை உயர்நீதி மன்றம் தீர்ப்பளித்தது. [Herbert Richard V. Munisami I. L. R. (1950) Madras. 365]

இவ்வாறு உடலுரிமை, பொருளுரிமை இவைகளுக்கு விளையும் தீங்குகளிலிருந்து நம்மைப் பாதுகாத்துக் கொள்ளுவதற்குச் சட்டம் வகை செய்கிறது.

### (4) கட்டாயத் தேவையால் (Necessity) செய்யப் படுபவை

ஒரு கட்டிடத்தில் தீப்பிடிக்கின்றது. மற்ற கட்டிடங்களுக்கும் பரவி விடாமல் தடுப்பதற்கென அந்தக் கட்டிடத்தை இடிக்கின்ருேம். இதனல் அடுத்திருந்த கட்டிடத்திற்குக் கேடு விளையலாம். ஆனாலும், இது தீங்கான செயல் ஆவதில்லை.

தீயினுல் பாதிக்கப்பட்ட கட்டிடம் இடிந்து விழும் நிலையில் இருக்கிறது. பொதுமக்கள் நடமாடும் பாதையை ஒட்டி அக்கட்டிடம் இருப்பதால் பொதுமக்களுக்கு ஆபத்து விளையலாம் என்ற நிலை ஏற்படுகிறது. இந்நிலையில் அக்கட்டிடத்தை இடித்தால் அது தீங்கன்று. அடுத்த கட்டிடத்திற்கு இதனுல் கேடு விளைந்தது எனினும் அதற்கு நட்ட ஈடு கிடையாது. [Dewey V. White (1827) M & M 56]

புயலினுல் கவிழ்ந்து விடும் நிலையிலிருக்கும் கப்பலின் பாரத்தைக் குறைப்பதற்கெனக் கப்பலில் உள்ள சரக்குகள் கடலில் எறியப்படுகின்றன. இது கப்பலைக் காப்பாற்றுவதற்கு அவசியமான நடவடிக்கையாகிறது. எனவே, அது தீங்கான செயல் அன்று. [Mouse's Case (1608) 12. Rep. 63]

தம்முடைய சொத்திற்கு நெருப்பு பரவி வருவதைத் தடுப்பதற்காக ஒருவர் அடுத்தவர் நிலத்திலுள்ள காய்ந்த புதர்களை வெட்டி எறிந்தார். அவ்வாறு அடுத்தவர் நிலத்தில் நுழைந்து புதர்களை அகற்றுவது "அத்துமீறுதல்" ஆவதில்லை எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. [Cope V. Sharpe (No. 2) (1912) 1. K.B. 496]

கட்டாயத் தேவையால் ஒருவர் மற்றவருடைய சொத்திற்குக் கேடு விளைவிக்கலாம்; ஆனுல் ஒருவருடைய உடலுக்கு ஊறு விளைவிக்கலாமா என்பது பற்றித் தெளிவான தீர்ப்புகள் இன்னும் ஏற்படவில்லை.

## (5) சட்டம் விதிக்கும் செயல்கள் (Acts under Statutory Authority)

சட்டத்தால் விதிக்கப்பட்ட செயல்களைச் செய்யும் பொழுது அதனுல் விளையும் தீங்குகளுக்கு எவரும் பொறுப்பாவதில்லை. அந்தச் சட்டத்தில் ஏதாவது தீங்கிற்கான நிவாரணம் அளிக்கப்பட்டிருந்தால், அந்த நிவாரணத்தை மட்டுமே தீங்கிழைக்கப்பட்டவர் பெற முடியும்.

பொது நன்மைக்கெனச் சட்டத்தால் விதிக்கப்படும் காரியங்களில் தனிப்பட்ட நபர்களுக்குத் தொல்லைகள் (Nuisance) விளைவதுண்டு. அச்செயல்களைச் சட்டம் விதிக்கும் பொழுது அதனுல் ஏற்படும் விளைவுகளைப் பிறர் பொறுத்துத்தான் ஆக வேண்டும் என்ற அடிப்படையிலேயே சட்டம் இயங்குகிறது.

இரயில்வேக் கம்பெனி ஒன்றுக்கு அரசாங்கம் சட்டத்தின் மூலம் இரயில் வண்டிகளை ஓட்ட அதிகாரமளித்தால், ஓடும் இரயில் வண்டிகளால் ஏற்படும் ஓசையையும் அதிர்ச்சியையும்

மக்கள் பொறுத்துத்தான் ஆகவேண்டும். ஏனெனில், ஓசையும் அதிர்ச்சியும் இன்றி இரயில் வண்டிகளை விடுதல் இயலாது.

சட்டத்தால் விதிக்கப்படும் செயல் கவனத்துடனும், திறமையுடனும், செய்யப்பட வேண்டும். அவ்வாறு செய்யப்பட்டுங்கூட ஏற்படும் விளைவுகளையே பிறர் பொறுத்துக்கொள்ளக் கடமைப்பட்டிருக்கின்றனர். திறமைக் குறைவுடனே, போதிய கவனமின்றியோ அச்செயல்கள் செய்யப்பட்டு அதனால் பிறருக்குத் தீங்கு விளைந்தால், தீங்கடைந்தவர் நட்டஈடு கோரி வழக்கிடலாம். எனவே, தவிர்க்க முடியாத விளைவுகளுக்கே சட்டம் பாதுகாப்பளிக்கிறது. [Marriage V. East Norfolk Catchment Board (1950) 1. K.B. 284]

மில் நடத்துபவர்களுக்குத் தண்ணீர் தருவித்து வழங்குவதற்கென ஒரு கம்பெனியை அரசாங்கம் சட்டத்தின் மூலம் அனுமதித்திருந்தது. அதற்கென வாய்க்கால்கள், வடிகால்கள் முதலியன கட்டுவதற்கும் சட்டம் அதிகாரமளித்தது. வாய்க்கால்களைச் சரியாகத் துப்புரவு செய்யாததால் நீர் வாய்க்கால் கரைகளைக் கடந்து அண்டை நிலங்களுக்குப் பாய்ந்து சேதத்தை விளைவித்தது. இதற்கு அந்தக் கம்பெனியே பொறுப்பு என்று தீர்ப்புக் கூறப்பட்டது. ஏனெனில் கால்வாய்களைக் கழுவித் துப்புரவு செய்யாது இருந்தது கம்பெனியின் கவனமின்மையான செயல். [Geddis V. Proprietors of Reservoir (1878) 3. A.C. 430]

"சட்ட அதிகாரம் பெற்ற செயல்கள் கவனக்குறைவின்றிச் செய்யப்படும் பொழுது பிறருக்கு நட்டம் விளைந்தால் அதுபற்றி நிவாரணம் ஏதும் பெறுவது முடியாது. ஆனால் கவனக்குறைவாக அதைச் செய்வதால் பிறருக்கு விளையும் நட்டம் ஈடு செய்யப்பட வேண்டும். தவிர்க்கத்தக்க நட்டத்திற்கும் ஈடு அளிக்க வேண்டும்", என்று நீதிபதி ப்ளேக்பர்ன் (Blackburn) என்பார் மேலே கூறிய வழக்கில் சட்டத்தை விளக்கியுள்ளார்.

சட்டம் விதிக்கும் செயல் வேறு, சட்டம் அனுமதிக்கும் செயல் வேறு. பெரியம்மை நோயுடையவர்களுக்கென ஒரு வைத்திய சாலையைக் கட்டுவதற்குச் சட்டம் ஒரு நகரமன்றத்தினருக்கு அதிகாரம் அளித்தது. குடியிருக்கும் வீடுகள் உள்ள இடத்தின் நடுவில் அந்த வைத்திய சாலையைக் கட்டுவது கூடாது என்று நீதிமன்றம் தடை உத்தரவு பிறப்பித்தது. சட்டம் அதிகாரமளித்தது வைத்திய சாலையைக் கட்டுவதற்குத்தான். அதை மக்கள் குடியிருப்புக்கு மத்தியில் கட்டிப் பொது மக்களுக்கும் அந்நோய் பரவும் விதத்தில் வைத்தியசாலையைக் கட்டலாம் என்று சட்டம் விதிக்கவில்லை. ஒரு குறிப்பிட்ட காரியத்தைச் செய்யலாம் என்று

சட்டம் அதிகாரம் அளித்தால் அந்தக் காரியத்தைப் பிறருக்குக் கேடு விளைக்காத விதத்திலேயே செய்யவேண்டும். [Metropolitan Asylum District V. Hill (1881) 6. A.C. 193]

இவ்வாறு, சட்டம் விதிக்கும் செயல்களால் விளையும் கேடுகள் தீங்குகள் ஆவதில்லை.

### சட்டம் விதிக்கும் கடமைகளும், அளிக்கும் அதிகாரங்களும் (Statutory Duties and Statutory Powers)

சட்டம் விதிக்கும் கடமையில் தவறியவர் அதனால் விளையும் தீங்கிற்குப் பொறுப்பாகின்றார். ஆனால் சட்டம் அளிக்கும் அதிகாரத்தைப் பயன் படுத்தத் தவறியவர் அதற்குப் பொறுப்பாவதில்லை.

பெரியம்மை வியாதி பரவும் நகரங்களில் உள்ள மக்கள் அனைவருக்கும் அம்மை குத்தும்படி நகரமன்ற நிர்வாகத்திற்குச் சட்டம் அதிகாரம் அளிக்கிறது. நகர மன்றத்தினர் அவ்வாறு செய்யாமல் இருந்து அதன் காரணமாக நோய் அதிகமாகப் பரவுகிறது என வைப்போம். இதனால் நோய்வாய்ப்பட்ட ஒருவர் நகரமன்றத்தினர்மீது நட்டஈடு கோர முடியாது. ஏனெனில், அம்மை குத்தும் படியான அதிகாரமே (Power) சட்டத்தின் மூலம் நகரமன்றத்தினருக்கு அளிக்கப்பட்டிருக்கிறது; எல்லோருக்கும் அம்மைகுத்த வேண்டும் என்ற கடமை (Duty) அவர்களுக்கு இல்லை.

பொதுச் சாலைகளைப் பழுது பார்க்கும் அதிகாரம் தல நிர்வாகத்தினருக்கு உண்டு. அவ்வாறு பழுது பார்க்கத் தவறியதால் சாலைகளில் சிறு பள்ளங்கள் ஏற்படலாம். இந்தப் பள்ளங்கள் அதிகமாக உள்ள ஒரு சாலையில் சென்ற மோட்டாரின் சுருள் வில்லைகள் (Springs) ஒடிந்து விடலாம். ஆனால் இதற்குத் தல நிர்வாகம் பொறுப்பன்று. ஏனெனில், அளிக்கப்பட்ட அதிகாரத்தைச் சரியான முறையில் பயன்படுத்தவில்லை என்பதே தல நிர்வாகத்தின் மீதுள்ள குறையாகும். இதற்கு அவர்கள் பொறுப்பாவதில்லை.

பொதுப்பாதைகளில் போதிய வெளிச்சம் இருக்கும்படி விளக்குகள் அமைக்கும் அதிகாரம் தல நிர்வாகத்தினருக்கு இருக்கிறது. இதில் அவர்கள் தவறியதால் இரவில் மோட்டாரில் சென்ற ஒருவர் பொதுப்பாதை ஓரத்தில் உள்ள மரத்தில் மோதிக் காயப்படுகிறார் என்றால், இதற்குத் தல நிர்வாகம் பொறுப்பாவதில்லை. ஆனால், தல நிர்வாகத்தினரே பொதுப் பாதையில் பழுது பார்ப்பதற்கென்று பள்ளத்தை ஏற்படுத்தி வைத்திருந்தால் அது நன்கு தெரியும்படி வெளிச்சத்தை அவர்கள்

வைத்திருக்க வேண்டும். பள்ளத்தைக் காட்டும் விளக்கு அல்லது வேறு அடையாளம் எதுவும் வைக்கப்படாததால், அந்தப் பள்ளத்தில் விழுந்து ஒருவருக்குக் கேடு விளைந்தால் அதற்குத் தல நிர்வாகம் பொறுப்பாகின்றது. அதிகாரத்தைப் பயன் படுத்தியே சாலையில் பள்ளம் தோண்டப்பட்டது. ஆனால், தோண்டிய பள்ளம் சாலையில் போவோருக்கு அதிகமாக ஆபத்தை விளைவிப்பதாகும். அதைத் தவிர்க்கும் வகையில் எச்சரிக்கை நடவடிக்கை எடுப்பது தல நிர்வாகத்தினரின் கடமை ஆகிறது. இதில் தவறுவதால் பிறருக்கு விளையும் தீங்கிற்கான பொறுப்புத் தல நிர்வாகத்தினரைச் சேருகிறது. [Morris V. Luton Corporation (1946) 1 A.E.R. 1]

விமானத் தாக்குதல்களைச் சமாளிப்பதற்கென்று கட்டப்பட்ட பாதுகாப்புக் குழிகளைக் காட்டும் விளக்குகள் வைக்கப்படாததால் சாலையில் இரவு நேரத்தில் மோட்டாரில் வந்த வாதி அதில் மோதிக் காயமுற்றார். பாதுகாப்புக் குழிகளைக் கட்டிய தல நிர்வா கத்தினர் இதற்குப் பொறுப்பாக்கப்பட்டனர். [Fisher V. Ruislip-Northwood U.D.C. (1945) K.B. 584]

கழிவு நீர்க்கால்வாய்களைக் கட்டும் அதிகாரம் தல நிர்வாகத் தினருக்கு அளிக்கப்பட்டிருந்தது. கால்வாய்களின் கரை உயர மானதாக இல்லாததால் மழைத் தண்ணீர் கால்வாயை அடுத் துள்ள வாதியின் நிலத்திற்குள் புகுந்து சேதம் விளைத்தது. இதற்குத் தல நிர்வாகத்தினர் பொறுப்பன்று என்பது தீர்ப்பு. கால்வாய்களுக்குக் கரை கட்டும் கடமை தல நிர்வாகத்தினருக்கு இல்லை. எனவே, விளையும் நட்டத்திற்கு அவர்கள் பொறுப் பாவது இல்லை. [Smith V. C. F. Commissioners (1938) 4. A.E.R. 64] கட்டப்பட்ட கால்வாயினால், வழக்கத்திற்கு அதிகமான கேடு பிறருக்கு விளையாமல் தல நிர்வாகம் பார்த்துக்கொள்ள வேண் டும். அதிகாரத்தைப் பயன்படுத்திச் செய்யும் காரியங்களால் பிறருக்குத் தீங்கு விளைத்தல் கூடாது; அவ்வாறு விளையத்தக்க தீங்குகளைத் தவிர்க்கும் பொறுப்பு சட்டத்தினால் அதிகாரம் பெற்றவருக்கு உண்டு. [East Suffolk Catchment Board V. Kent. (1941) A.C. 74]

* * *

இந்த வகையில், இசைந்து ஏற்பது, தவிர்க்க முடியாத விபத் துக்கள், தற்காப்புச் செயல்கள், கட்டாய நிலை, சட்டம் விதிக் கும் செயல்கள், இவைகளால் விளையும் கேடுகளைத் தீங்குகளாகச் சட்டம் கொள்ளுவதில்லை.

---

# பகுதி 3

## வழக்கிடுவதற்கும், வழக்கிடப்படுவதற்கும் தகுதி

*(1) அயல்நாட்டு அரசர்கள், அந்நாட்டுத் தூதர்கள் - (2) வயது வராதோர். - (3) சித்தப்பிரமையுடையவர்கள். - (4) தண்டனை அனுபவிக்கும் குற்றவாளிகள் - (5) அயல்நாட்டார்கள். - (6) கம்பெனிகளும், கார்ப்பொரேஷன்களும். - (7) தொழிற் சங்கங்கள், - (8) பெற்றோர்கள் - பெற்றோர் நிலையில் உள்ளவர்கள்.*

வயது, மனநிலை, அரசியல் மதிப்பு, இவைகளின் அடிப்படையில் சிலர்மீது வழக்கிடுவதைச் சட்டம் தடை செய்கிறது. அவர்களால் பிறருக்குக் கேடு விளைவிக்கப்பட்டாலும் அதற்கான நட்டஈடு கோரி அவர்கள்மீது வழக்கிடுவதற்கில்லை. சிலர்மீது வழக்கிடுவதற்குச் சில கட்டுப்பாடுகள் உள்ளன. இவைபற்றி இனிக் காண்போம்.

### (1) அயல்நாட்டு அரசர்கள், அந்நாட்டுத் தூதர்கள் (Foreign Sovereigns and Ambassadors)

அயல்நாட்டு அரசர்கள் (Foreign Sovereigns), அயல் அரசுத் தலைவர்கள் (Heads of other States), அயல்நாட்டுத் தூதர்கள் (Ambassadors) இவர்கள்மீது வழக்கிட முடியாது. ஆனால் இவர்களாகவே தங்களுக்குள்ள சிறப்புரிமையை விட்டுக்கொடுத்து விட்டு, ஒரு நாட்டின் நீதிமுறை வரம்பிற்கு உட்பட இசைந்தால் அவர்கள்மீது வழக்கிடலாம்.

இந்தச் சிறப்புரிமை அரசியல் காரணங்களுக்காக ஒரு நாடு பிற நாடுகளுக்குக் காட்டும் தனிச் சலுகையாகும். இந்தச் சலுகை ஒருவர் பட்டத்திலோ, பதவியிலோ இருக்கும் காலத்தில்தான் அளிக்கப்படுகிறது. மன்னர்கள் முடி துறந்த பின்னே, அயல் நாட்டுத் தூதர்கள் பதவியிலிருந்து விலகிய பிறகோ, இச்சலுகை கிடையாது. இந்தச் சிறப்புரிமை பெற்றவர்களால் கேடு விளைந்தால் தூதியல் நிலையில் நடவடிக்கைகள் (diplomatic steps) எடுக்கப்படலாம். ஆனால் நீதிமன்றங்களில் வழக்குத் தொடரமுடியாது.

நம் நாட்டு அரசமைப்புச் சட்டத்தின் 361 ஆவது பிரிவுப்படி, இந்தியக் குடியரசுத் தலைவர், மாநிலத் தலைவர்கள் இவர்கள்மீது வழக்கிட முடியாது.

இவர்கள் இழைக்கும் தீங்குகளுக்கான பொறுப்பு இவர்களுக்குக் கிடையாது என்று சட்டம் விதிக்கவில்லை; இவர்களை விசாரிக்கும் அதிகாரம் நீதிமன்றங்களுக்குச் சட்டப்படி இல்லை. இதனல்

தான் இவர்கள்மீது சாதாரண நீதிமன்றங்களில் வழக்குத் தொடருவதற்கில்லை.

## (2) வயது வராதோர் (Infants)

பதினெட்டு வயது கழியாதவர்களை வயது வராத இளைஞர்களாக நம் நாட்டுச் சட்டம் கொள்ளுகிறது.

இளைஞர் தமக்கு விளைந்த தீங்கிற்கு ஈடு பெற வேண்டுமெனில் வயது வந்த மற்றொருவரை வழக்குத் துணைவராக (Next friend)க் கொண்டு வழக்கிடலாம்.

இளைஞர்கள்மீது வழக்கிட முடியுமா? என்பது அடுத்த வினா.

### தீயெண்ணமுடைய தீங்குகள்

ஏமாற்றுதல் (cheating), சதி செய்தல் (conspiracy) போன்ற தீங்குகள் ஒருவரது தீய எண்ணத்தைப் பொறுத்த செயல்களாகின்றன. வயது வராத இளைஞர்களுக்கு இந்த மன நிலை இருப்பதாகச் சட்டம் பொதுவாகக் கொள்ளுவதில்லை. ஓர் இளைஞர், தாம் வயது வந்தவர் என்று பொய்யாகக் கூறி இன்னொருவருடன் ஒப்பந்தம் செய்து கொள்ளுகிறார் என வைப்போம். ஒப்பந்தம் பெற்றவரால் அதை நிறைவேற்ற முடியாது. ஏனெனில், அந்த ஒப்பந்தம் உண்மையில் ஓர் இளைஞரால் செய்யப்பட்டது. இளைஞர் ஏமாற்றினார் என்பதற்காக அந்த ஏமாற்றிய தீங்கிற்கு ஈடு கோரி அவர்மீது வழக்கிடுவதையும் சட்டம் அனுமதிப்பதில்லை. [Leslie Ltd. V. Sheile (1914) 3 K. B. 607]

### இதர தீங்குகள்

மனநிலை பற்றிக் கவனிக்க வேண்டாத, அத்துமீறுதல் (Trespass) போன்ற தீங்குகளுக்கு வயது வராத இளைஞர்கள் பொறுப்பாகின்றனர். வயதுக் கேற்ற கவனமின்றி ஓர் இளைஞர் நடந்து அதனால் பிறருக்குக் கேடு விளைந்தால் "கவனமின்மை" என்ற தீங்கிற்கும் இளைஞர் ஆளாகலாம்.

ஓர் இளைஞர் இன்னொருவரின் பொருளை வாங்கி வைத்துக்கொண்டு திருப்பித் தர மறுத்தால், அது உடைமை அகற்றல் (conversion) என்ற தீங்கு ஆகிறது. அதற்கு அவர்மீது வழக்கிடலாம். [Ballet V. Mingay (1943) K. B. 281] சவாரி செய்வதற்கென்று வாடகைக்கு வாங்கிய குதிரைமீது ஓர் இளைஞர் குதித்து விளையாடியதால் குதிரைக்குக் காயம் ஏற்பட்டது. அதற்கு இளைஞர் பொறுப்பாக்கப்பட்டார் [Burnard V. Haggis (1863) 14. C. B. (N. S) 45] பதினைந்து வயதுச் சிறுவன் ஒருவர்மீது வேண்டுமென்று கல்லெறிந்து காயப்படுத்தினால் அவன்மீது அத்தீங்கிற்கு நட்ட ஈடு கோரி வழக்கிடலாம்,

### ஒப்பந்த வழக்குகளும் தீங்கு வழக்குகளும்

பொதுவாக இளைஞர்கள் செய்யும் ஒப்பந்தங்கள் சட்டப்படி செல்லாதவை. எனவே, அந்த ஒப்பந்தங்களை அமல் நடத்த முடியாது. 16 வயதுள்ள இளைஞர் மற்றொருவரிடம் ஒப்புச்சீட்டு (Pro-note) எழுதிக்கொடுத்துக் கடன் பெற்றூர் என்றூல் அந்த ஒப்புச் சீட்டை ஆதாரமாக வைத்து வழக்கிட முடியாது. இளைஞர் எழுதிக் கொடுத்த ஒப்புச்சீட்டு செல்லுபடி யாகாதது. எனவே, அந்த ஒப்புச் சீட்டை வழக்கு மூலமாக (Cause of action) வைத்து வழக்கிட இயலாது. ஒப்புச் சீட்டை எழுதிக்கொடுக்கும்பொழுது தன் வயது 19 என்று ஏமாற்றி விட்டார் என்று கூறி அந்த ஏமாற்றிய தீங்கிற்காக அவர்மீது வழக்கிடுவதையும் சட்டம் அனுமதிப்பதில்லை. சட்டம் இவ்வாறு இல்லையெனில் தீங்கு வழக்கு என்ற பெயரால் ஒப்பந்தங்கள் மறைமுகமாக நிறைவேற்றப் படலாம். எனவே, ஒப்பந்தத்தை அடிப்படையாகக் கொண்ட வழக்கை மறைத்துத் தீங்கிற்கான நட்ட ஈடு வழக்கு என்ற பெயரால் இளைஞர்கள்மீது வழக்கிடப் படுவதைச் சட்டம் அனுமதிப்பதில்லை. [Bartlett V. Wells (1862) 1. B & S. 836]

### பெற்றோர்கள் பொறுப்பு

இளைஞர்கள் இழைக்கும் தீங்கிற்குப் பெற்றோர்கள் அல்லது அவர்களின் பாதுகாப்பாளர்கள் (guardians) பொறுப்பாவது இல்லை. ஆனால், தந்தை தம் மகனைத் தமது வேலையைச் செய்யச் சொல்லி அந்த வேலையை இளைஞன் செய்யும் வகையில் பிறருக்குக் கேடு விளைந்தால் அதற்கு, வேலைக்கு ஏவியவர் என்ற முறையில் தந்தை பொறுப்பாகின்றூர்.

குதிரை பூட்டிய வண்டியை ஓட்டிச் சென்று ஒரு வேலையை முடித்து வரும்படி ஒரு தந்தை வயது வராத தம் மகனை அனுப்பினர். வண்டியை இளைஞன் கவனமின்மையாக ஓட்டியதால் கேடு அடைந்தவர் தந்தைமீது வழக்கிடலாம் என்பது தீர்ப்பு. [Gibson V. O.' Keeney (1928) N. I. 66]

ஒருவர் தம்முடைய பையனிடம் ஒரு விளையாட்டுக் கைத்துப்பாக்கியைக் கொடுத்து வைத்திருந்தார். அத்துப்பாக்கியால் சுட்டு அண்டை வீட்டுக் கண்ணுடிச் சன்னலைப் பையன் உடைத்து விட்டான். இருந்தும் அவனிடம் இருந்த துப்பாக்கியைத் தகப்பனர் திரும்பப் பெறவில்லை. மீண்டும் அந்தப் பையன் துப்பாக்கியால் இன்னொரு பையனுக்குக் காயத்தை விளைவித்தான். இது தகப்பனரின் கவனமின்மையான செயலின் விளைவு என்று கருதி அவர் அதற்குப் பொறுப்பாக்கப்பட்டார். [Bebee V. Sales (1916) 32 T.L.R. 413]

**கருவில் விளைந்த தீங்கிற்கு வழக்கிட முடியுமா?**

தான் கருவில் இருந்தபொழுது தனக்கு விளைந்த தீங்கிற்கு, பிறந்த பின் குழந்தை வழக்கிட முடியுமா? இதற்குத் தெளிவான விடை கூறும் வகையில் தீர்ப்புக்கள் ஏற்படவில்லை.

இரயிலில் பிரயாணம் செய்து கொண்டிருந்த கர்ப்பவதியான ஒரு பெண் அந்த இரயில் இன்னோர் இரயில் வண்டியுடன் மோதியதால் காயமுற்றாள். அதன் விளைவாகக் குழந்தை உருக் குலைந்து பிறந்தது. அந்தக் குழந்தையின் சார்பில் இடப்பட்ட வழக்கில் குழந்தைக்கு நட்ட ஈடு கிடைக்கத்தக்கது இல்லை எனத் தீர்ப்பளிக்கப்பட்டது. [Walker V. G. N. Railway of Ireland. (1891) 28. L. R. (Ir) 69] கானடா நாட்டில் இத்தகைய வழக் கொன்றில் நட்ட ஈடு கொடுக்கப்பட்டிருக்கிறது.

கருவில் வளரும் குழந்தையின் உடல், சொத்து, புகழ் இவற் றிற்குக் கேடு விளைந்தால் அதற்கான நட்ட ஈட்டை அது பிறந்த பின் பெறுவதற்கு உரிமை வேண்டும் என்ற கொள்கையை வின் பீல்டு (Winfield), சால்மண்டு (Salmond) போன்ற சட்ட வல்லு நர்கள் வலியுறுத்தியிருக்கின்றனர்.

### (3) சித்தப்பிரமையுடையவர்கள் (Lunatics)

பைத்தியம் பிடித்தவர்களால் விளைக்கப்பட்ட தீங்கிற்கு அவர்கள் பொறுப்பாகின்றனரா என்பதைத் தெளிவாகக் கூறும் வகையில் தீர்ப்புகள் தோன்றவில்லை.

அத்து மீறுதல், அவதூறு விளைத்தல், உடலைத் தாக்குதல் போன்ற தீங்குகளுக்குச் சித்தப்பிரமை உடையவர்களைப் பொறுப் பாக்குவது முறையேயாகும் என்பது சட்டப்புலவர்களின் கருத்து.

ஆனல், "தீய நோக்கத்துடன் குற்ற வழக்கிடல்" போன்ற தீய எண்ணங்கொண்ட தீங்குகளுக்கு அவர்களைப் பொறுப் பாக்குவது தகாது.

சித்தப்பிரமையுடையவர்கள் தாம் செய்யும் செயலின் தன் மையைத் தெரிந்து கொள்ளும் வகையில் அறிவு உள்ளவர் களாக இருந்தால், தாங்கள் இழைக்கும் தீங்கான செயல் களுக்குப் பொறுப்பேற்பது நேர்மையேயாகும்.

தாம் செய்வது என்ன என்பதையே தெரிந்து கொள்ள முடியாத அளவிற்குப் பைத்தியம் பிடித்தவர்களை எதற்கும் பொறுப்பாக்குவது முறையன்று. ஏனெனில் அவர்கள் தன்னிச் சையால் எந்தச் செயலையும் செய்வதில்லை. [Tindale V. Tindale (1950) 4. D. L. R. 363]

**(4) தண்டனை அனுபவிக்கும் குற்றவாளிகள் (Convicts)**

சிறைத் தண்டனை அனுபவித்து வரும் குற்றவாளிகள் தங்களுக்கு இழைக்கப்படும் தீங்குகளுக்கு நட்டஈடு கோரி வழக்கிட உரிமையுள்ளவர்கள்.

**(5) அயல்நாட்டார்கள் (Aliens)**

அயல்நாட்டார்கள் வழக்கிடலாம்; அவர்கள்மீதும் வழக்கிடப் படலாம். நம் நாட்டுடன் போர் செய்யும் எதிரி நாட்டில் குடியிருப்பவர்கள் அல்லது வாணிபம் செய்பவர்கள் நம் நாட்டு நீதிமன்றங்களில் வழக்கிடமுடியாது.

**(6) கம்பெனிகளும், கார்ப்பொரேஷன்களும், (Companies and Corporations)**

ஒரு தனிமனிதன் வழக்கிடலாம்; அவர்மீது வழக்கிடப் படலாம். பல மனிதர்கள் கூட்டாகச் சேர்ந்து வாணிபம் அல்லது இதர முயற்சிகளில் ஈடுபடுகின்றனர். இதைக் 'கம்பெனி'' (கூட்டமைப்பு) என்கிறோம். நகரத்தை ஆளும் மன்றத்தினர் ''கார்ப்பொரேஷன்'' (Corporation) என்றழைக்கப் படுகின்றனர். தனி மனிதனைச் சட்டம் ஒரு நபராகக் கருதுவது போலவே, கம்பெனி, கார்ப்பொரேஷன் இவைகளையும் ''நபராக''வே சட்டம் கருதுகிறது. இவை, கற்பனை நபர்கள். எனவே, இவை பிறர்மீது வழக்கிடலாம்; பிறரும் இவைமீது வழக்கிடலாம்.

எதற்குச் சட்டப்படி உரிமைகளும் (rights), கடமைகளும் (duties) இருப்பனவாகக் கருதப்படுகின்றதோ, அதையே நாம் ''நபர்'' (Person) என்று அழைக்கிறோம். கம்பெனிகள், இதர கூட்டமைப்புக்கள் இவைகளுக்கு உரிமைகளும் கடமைகளும் சட்டப்படி இருக்கின்றன. எனவே, இவைகளும் ''சட்டமுறை நபர்கள்'' (legal persons) ஆகின்றன.

ஒரு கம்பெனி, நகராண்மைக் கழகம் போன்றவைகளில் பலர் கூடி இயங்குகின்றனர். எனவே இதைத் ''தொகுதிக் கூட்டமைப்பு'' (Corporation aggregate) என்று கூறுவார்கள்.

கவர்னர், குடியரசுத் தலைவர் போன்ற பொதுப் பதவிகளை (Public Offices) ஒருவர் பின் ஒருவராகப் பலர் வகிக்கின்றனர். பதவி வகிக்கும் மனிதர்களுக்கு அப்பாற்பட்டு இப்பதவிகள் தனித்து நிலையாக நிற்கின்றன. பதவியிலிருந்து ஒருவர் விலகுவதால் அப்பதவி அழிந்து விடுவதில்லை. எனவே, அந்தப் பதவியையும் ஒரு ''நபராகச்'' சட்டம் கருதுகிறது. ஒருவர் பின் ஒருவராக ஒரு பதவிக்கு வரும் பலரையும் இணைத்து

அதை ஒரு கற்பனை நபராகத் தோற்றுவிக்கும் முறையைத் "தனிக் கூட்டமைப்பு" (Corporation sole) என்று கூறுகிறோம். கவர்னர், பல்கலைக் கழகத் தலைவர் முதலியோரின் பதவிகள் தனிக் கூட்டமைப்பைச் சேர்ந்தவை.

"கம்பெனி" என்பது ஒரு கற்பனை நபராகும் (fictitious person). உயிரும் உடலும் இல்லாத கற்பனை நபரான "கம்பெனி" பிற மனிதர்கள் மூலமாகவே தொழிற்பட வேண்டியிருக்கிறது. டைரக்டர்கள் (இயக்குநர்கள்), செயலாளர்கள், இவர்கள் கம்பெனியின் அலுவல்களை ஏற்று நடத்துகின்றனர். கம்பெனியின் இதர அலுவலர்களும் அதன் வேலையைச் செய்கின்றனர். கம்பெனியின் ஏஜண்டுகளாகவே, பணியாட்களாகவே, இவர்கள் இயங்குகின்றனர். ஆதலால், இவர்களால் கம்பெனியின் உரிய பணியைப் புரியும் வகையில் இழைக்கப்படும் தீங்குகளுக்குக் கம்பெனி பொறுப்பாகிறது. கம்பெனியின் பணியாளர்கள் செய்யும் செயல்களுக்குக் கம்பெனி பொறுப்பாவது பகரப் பொறுப்பாகும் (Vicarious Liability) என்று முன்னர்க் கண்டோம்.

பணியாள் தமக்கு உரிய பணியைப் புரியும் வகையில் ஏற்பட்ட தீங்காக இருந்தால்தான் அத்தீங்கு களுக்கான பொறுப்புத் தலைவரைச் சேருகிறது. எனவே, கம்பெனியின் அலுவலர்கள் செய்யும் வேலை அவர்களுக்கு உரிய பணியாக இருக்கவேண்டும். "உரிய பணி" என்று எதைக் கூறுவது?

ஒரு கம்பெனி தொடங்கும்பொழுது, அந்தக் கம்பெனியின் நோக்கங்கள், அது செயல்படும் முறை முதலியன அடங்கிய "கூட்டமைப்பு வரையறை விதிகள்" (Memorandum of Association) உறுதி செய்யப்படுகின்றன, அந்த விதிகளுக்கும் நோக்கங்களுக்கும் அடங்கியே கம்பெனியின் பிரதிநிதிகள், பணியாளர்கள் முதலியோர் செயல்படவேண்டும். இந்த வரையறைக்கு அப்பாற்பட்ட செயல்கள் கம்பெனியின் பெயரால் செய்யப்பட்டாலும் அதற்கான பொறுப்புக் கம்பெனியைச் சேருவதில்லை. "கூட்டமைப்பு வரையறை விதிகளுக்கு" உட்பட்ட செயல்களே, கம்பெனி அலுவலர்களின் "உரிய பணிகள்" ஆகின்றன. இந்த உரிய பணியைக் கவனமின்றியோ, ஒழுங்கீனமாகவோ, பிறரை ஏமாற்றும் வகையிலோ, கம்பெனியின் அலுவலர்கள் செய்து இதனால் பிறருக்குத் தீங்கு விளைந்தால் இதற்குக் கம்பெனியே பொறுப்பாகிறது. தீங்கிழைக்கப்பட்டவர் கம்பெனிமீது வழக்கிட்டு நட்டஈடு பெறலாம்.

இம்மாதிரியே, கம்பெனிக்கு இழைக்கப்படும் தீங்கிற்குக் கம்பெனியின் செயலாளர் அல்லது அதற்கான அதிகாரம்

பெற்றவர்கள் மூலமாக வழக்கிட்டுக் கம்பெனி நட்ட ஈடு பெறுகின்றது.

நகராட்சி மன்றங்களும் கம்பெனி போன்ற ஒரு கூட்டமைப் பேயாகும்.

ஒரு கம்பெனியின் பணியாள் தமது அதிகார வரம்பிற்கு அப்பாற்பட்ட ஒரு செயலைச் செய்தால் அதற்குக் கம்பெனி பொறுப்பாவதில்லை. இரயில்வே நிலைய அதிகாரி ஒருவர், ஒரு பிரயாணி ஏற்றி வந்த குதிரைக்குக் கட்டணம் செலுத்தத் தவறினர் என்பதற்காக, அந்தப் பிரயாணியை முறையின்றிச் சிறை வைத்தார். இவ்வாறு சிறை வைத்தது அவரது அதிகார வரம்பை மீறிய செயல் என்பதால் அதற்கு இரயில்வேக் கம்பெனி பொறுப்பன்று என்றும், அந்த அதிகாரியே பொறுப்பு என்றும் தீர்ப்பளித்தனர். (Poulton V. L & S. W. Ry. (1867) L. R. 2. Q. B. 534.)

தீய எண்ணத்துடன் செய்யப்படும் தீங்குகளுக்குக் கம்பெனிகள் பொறுப்பாவதில்லை என்று ஒரு காலத்தில் கருதப்பட்டது. ஏனெனில் கற்பனை நபரான கம்பெனிக்குக் கருதும் உள்ளம் இல்லை. எனவே, கள்ள எண்ணமோ, தீய நோக்கமோ இருத்தல் இயலாது என்று கொள்ளப்பட்டது. இந்தக் கொள்கை இப்பொழுது மாறிவிட்டது. கம்பெனியின் பணியாட்கள் தீய எண்ணங்கொண்டு பிறருக்குத் தீங்கிழைக்கலாம்; அவர்களது தீய எண்ணம் கம்பெனியின் எண்ணம் என்றே கருதப்படுகிறது. உரிய பணியைப் பணியாளர் செய்யும் வகையில் ஏமாற்றுதல் போன்ற தீயெண்ணத் தீங்குகள் (Malicious Torts) செய்யப்பட்டால், அதற்குக் கம்பெனி பொறுப்பாக வேண்டும் என்பதே இன்றைய சட்ட நிலை. [Cornford V. Carlton Bank Ltd. (1899) 1. Q. B. 392] எனவே, பொய்ம்மை, ஏமாற்றுதல், தீய நோக்குடன் குற்ற வழக்கிடல் முதலிய தீங்குகளுக்கும் ஒரு கம்பெனி பொறுப்பாகலாம்.

ஒரு கூட்டமைப்பின் வரையறை விதிகளுக்கு அப்பாற்பட்ட செயல்களை "வரம்பு மீறிய" செயல்கள் (ultra vires) என்றும், அவைகளுக்குட்பட்ட செயல்களை "வரம்பிற்கடங்கிய செயல்கள்" (intra vires) என்றும் கூறுவார்கள். வரம்புமீறிய செயலாக இருந்தாலும் அது, கம்பெனியாரால் அதிகாரமளிக்கப்பட்டதாக இருக்கலாம். அவ்வாறு அதிகாரமளிக்கப்பட்ட செயல்களுக்கும் கம்பெனி பொறுப்பாகின்றது.

ஒரு நகராண்மைக் கழகத்துக் குழுவினர் தீர்மானித்தபடி, அக்கழகத்தால் நெடுஞ்சாலையின் நடுவே ஒரு கட்டுமானம் நிறுவப்பட்டது. அது பொதுமக்கள் போக்குவரத்திற்கு

இடைஞ்சல் விளைவிக்கும் பொதுத்தொல்லையாக (Public Nuisance) இருந்ததால் அந்தத் தொல்லையை விளைவித்த பொறுப்பு நகராண்மைக் கழகத்தைச் சேரும் என்று தீர்மானிக்கப்பட்டது. [Campbell V. Paddington Corporation (1911) 1. K. B. 869] வீதிகளில் நிலையங்கள் நிறுவும் உரிமை நகராண்மைக் கழகத்திற்குச் சட்டப்படி இல்லை. ஆதலால், அது வரம்பு மீறிய செயல்தான். நகராண்மைக் கழகத்தை நிர்வகிக்கும் அதிகாரம் நிர்வாகக் குழுவினருக்கு உண்டு. எனவே, குழுவினரின் தீர்மானத்தின்படி அது செய்யப்பட்டதால் அது அதிகாரமளிக்கப்பட்ட (authorised) செயலாகிறது. ஒன்றைச் செய்வதற்கு அதிகாரமளித்த நகராண்மைக்கழகம் அதன் விளைவுகளுக்கும் பொறுப்பேற்க வேண்டும். இந்தக் கொள்கை மேலே கண்ட வழக்கில் விளக்கப்பட்டது.

இந்தக் கொள்கை சரியானதாகும் என்பது வின்பீல்டு (Winfield), சால்மண்டு (Salmond) முதலிய சட்ட வல்லுநர்கள் கருத்து. குட்ஹார்ட் (Goodhart) என்ற சட்டப் புலவர் இந்தக் கொள்கையை ஆதரிக்கவில்லை. வரம்பு மீறிய செயலை ஒரு கம்பெனியின் பணியாளர் செய்தால் அதற்குக் கம்பெனி பொறுப்பாக்கப்படக்கூடாது என்பது அவர் கருத்து. கம்பெனியை நிர்வகிப்பவர்கள் அதிகாரமளிப்பதால் வரம்பு மீறிய (ultra vires) ஒரு செயல் வரம்புக்குட்பட்ட (intra vires) செயலாகிவிடுவதில்லை. எனவே, ஒரு வரம்பு மீறிய செயலுக்குக் கம்பெனியையோ, கார்ப்பொரேஷனையோ பொறுப்பாக்குவது தகாது என்பது அவரது ஆய்வுரை.

### (7) தொழிற் சங்கங்கள் (Trade Unions)

தொழிலாளர்கள் தங்கள் நலன்களைப் பாதுகாப்பதற்கெனச் சங்கமாக இணைந்து செயல்படுவதைச் சட்டம் அனுமதிக்கிறது. இவ்வித சங்கங்களைத் "தொழிற்சங்கங்கள்" (Trade Unions) என்று கூறுகிறோம்.

அங்கீகரிக்கப்பட்ட தொழிற்சங்கங்கள் வழக்கிடத் தகுதி பெற்றவை.

### (8) பெற்றோர்கள், பெற்றோர்கள் நிலையில் உள்ளவர்கள் (Parents and those having quasi-parental authority)

பிள்ளைகளை அவர்களின் பெற்றோர்களும், மாணவர்களை ஆசிரியர்களும் அடித்துத் திருத்துகின்றனர். இவர்களின் நன்மைக்காக இவ்வாறு செய்வதைத் தீங்கு எனக் கொள்ளுதல் தகாது. அச்சுறுத்தலும், அடித்தலும், அறையிலிட்டு அடைத்

தலும் சிறுவர்களின் சீர்மைக்கெனச் செய்யப்படும் செயல்களே யாம். எனவே, இவைகளைத் தீங்கானவை என்று சட்டம் கொள்ளுவதில்லை.

பெற்றோர்களின் கவனிப்பும் கண்காணிப்பும் பிள்ளைகள் வயதடைந்த பின்னரும் இருக்கலாம். ஆனால் அடக்கியாளும் அதிகார உரிமையைப் பதினெட்டு வயதிற்கு அதிகமான பிள்ளைகள்மீது அடித்தோ அதட்டியோ அமல் செய்வதில்லை. சட்டமும் அந்த வயதிற்கு மேற்பட்ட பிள்ளைகளைப் பெற்றோர்கள் அடித்துத் திருத்துவதை ஆதரிப்பதில்லை. பெற்றோர்களுக்கு உற்ற அதிகாரம்போன்றே மாணவர்களைத் திருத்தும் உரிமை ஆசிரியருக்கும், கல்லூரி, பல்கலைக் கழகத் தலைவர்களுக்கும் உண்டு.

பள்ளி மாணவனின் பண்பையும் ஒழுங்கையும் பள்ளிக் கட்டிடத்திற்குள்தான் ஆசிரியர் கண்காணிக்கவேண்டும் என்பதில்லை. பள்ளிக்கு வெளியில் ஒழுக்கந் தவறி நடந்த மாணவனை ஆசிரியர் தண்டிப்பது முறையான செயலேயாகும். தெருவிலே புகை பிடித்த சிறுவனைத் திருத்துவதற்குப் பிரம்பினால் அடி கொடுத்தார் ஆசிரியர். அது முறையான செயலேயென்று தீர்ப்பளித்தனர். [R. V. Newport (Salop) Justices (1929) 2. K. B. 416]

அளவோடும், நிதானத்தோடுமே பிள்ளைகளைக் கண்டிக்கும் பெற்றோர்கள் நடந்துகொள்ளவேண்டும். அடித்துத் திருத்துதல் சித்திரவதையாக மாறிவிடுதல் கூடாது. பிரம்பினால் மாணவனின் கையில் அடித்தல் தீங்காவதில்லை; ஆனால் கழியினால் அடித்து மாணவனின் மண்டையை உடைத்தல் "உடலுக்கு ஊறு" விளைத்தல் என்ற தீங்கு ஆகிவிடும். எனவே, சிறுவர்களையும், மாணவர்களையும் திருத்துவதற்கெனத் தக்க அளவில் அவர்களைப் பெற்றோர்களும், ஆசிரியர்களும் அச்சுறுத்துவதையும், அடிப்பதையும் சட்டம் அனுமதிக்கின்றது. இச்செயல்களைத் தீங்குகள் எனக் கொள்ளுவதில்லை.

கணவன் மனைவியைக் கட்டுப்படுத்தி ஆளலாம் என்ற கொள்கை அந்த நாளில் ஏற்கப்பட்டு வந்தது. "ஆணும் பெண்ணும் சமமானவர்கள்" என்ற கொள்கை நிலவி வரும் இந்நாளில் மனைவியின்மீது கணவன் அதிகாரம் செலுத்தும் வகையில் அடித்து அடக்க முற்படுவதை இந்நாளையச் சட்டம் ஏற்பதில்லை.

* * *

இவ்வாறு, வயது, மனவளர்ச்சி, அரசியல் மதிப்பு, இதர சூழ்நிலைகள் இவைகளின் அடிப்படையில், ஒரு சிலர்மீது வழக்கிடுவதைச் சட்டம் தடை செய்கிறது.

---

# பகுதி 4

## அரசும், அதன் செயல்களும்

*(அ) மக்களின் உரிமைகள் - (ஆ) அரசின் அதிகாரங்கள்-சட்ட மியற்றுதல், நீதி வழங்குதல், நிர்வாகத்தை நடத்துதல் - (இ) அரசின் தனிச் செயல்கள்.*

மக்களின் இன்பத்திற்கு இடையூறு விளையாமல், அவர்கள் நலன்களுக்குத் தீங்கு ஏற்படாமல் அரசு பாதுகாத்து நிற்பதையே நீதிவழங்குதல் என்று கூறுகிறோம். ஒருவரால் இன்னொருவருக்கு இழைக்கப்படும் தீங்குகளை அரசு தடை செய்கின்றது.

### (அ) மக்களின் உரிமைகள்

அரசு என்பது கருத்துருவான (Conception) அமைப்பாகும். எனவே, அரசை நடத்துபவர்கள்தாம் அரசின் பெயரால் காரியங்களைச் செய்கின்றனர். கோனாட்சி முறையில் (Monarchy) மன்னனும், குடியாட்சி முறையில் (Democracy) மக்களின் பிரதிநிதிகளும் அரசை நடத்துகின்றனர். இவர்கள் அரசை நடத்தும் விதத்தில் மக்களுக்குத் தீங்கு விளையலாம். இவ்வாறு, அரசே மக்களுக்குத் தீங்குகளைச் செய்வது என்ற நிலை ஏற்பட்டுவிடில் மக்களின் கதி என்ன? இவ்விதத் தீங்குகளுக்கும் தீர்வு காண மக்களுக்கு வழிவேண்டும். இல்லையேல் அது "கொடுங்கோன்மை" யாகி விடுகிறது.

கொடுங்கோல் மன்னர்களை ஒழித்துக் குடியாட்சி முறையை உலகில் பல நாடுகளிலும் மக்கள் நிறுவியதை உலக சரித்திரத்தில் காண்கிறோம். குடியாட்சியிலும் கூட அரசியல் அதிகாரத்தை உடையவர்கள் கொடுங்கோலாட்சியில் இறங்கி விடலாம். குடியாட்சி மறைந்து விடலாம். எனவே, குடியாட்சி முறை நிலைக்கவேண்டுமெனில் மக்களின் நலன்களும், அடிப்படை உரிமைகளும் அரசினிடமிருந்து பாதுகாக்கப்படவேண்டும். இதற்காக அரசமைப்புச் சட்டத்தில் (Constitution) மக்களின் அடிப்படை உரிமைகளை எடுத்துக் காட்டி இவைகளுக்குக் கேடு விளைவிக்காத விதத்திலேயே அரசு இயங்கவேண்டுமென்றும், சட்டங்கள் இயற்றப்படவேண்டும் என்றும் திட்டவட்டமாகக் கூறப்பட்டிருக்கின்றன. நம் நாட்டிலும், பிற நாடுகளிலும் இம் மாதிரி அரசமைப்புச் சட்டங்கள் உள்ளன. இச்சட்டத்திற்கு உட்பட்டே அரசும் அதன் உறுப்புக்களும் இயங்கவேண்டும்.

அரசின் இயக்கத்திற்கும் அதிகாரத்திற்கும் இலக்கணம் வகுப்பது அரசமைப்புச் சட்டமாகும். 1951 ஆம் ஆண்டில் நம்

மக்களால் ஏற்கப்பட்ட நம் பாரத நாட்டு அரசமைப்புச் சட்டத்தில் மத்திய அரசாங்கமும், இராச்சிய அரசாங்கங்களும் இன்னின்ன காரியங்களுக்கெனவே சட்டங்கள் இயற்றலாம் என்பது தெளிவு படுத்தப்பட்டிருக்கிறது.

சட்டமுறைப்படியின்றித் தனி மனிதனின் பேச்சுரிமை, சொத்துரிமை, சுதந்திரம் முதலிய அடிப்படை உரிமைகள் அரசால் பாதிக்கப்படலாகாது என்பது விதிக்கப்பட்டிருக்கிறது. இவ்வாறு பாதிக்கப்பட்ட நபர் உயர்நீதி மன்றம் (High Court), உச்சநீதி மன்றம் (Supreme Court) இவைகளில் வழக்கிட்டுத் தமது உரிமையை நிலைநிறுத்துவதற்கும் அரசமைப்புச் சட்டம் வகை செய்கிறது. இந்த முறையில் மக்களை ஆளும் அரசும் சட்ட விதிகளுக்குக் கட்டுப்பட்டே இயங்குகிறது. சட்டத்தை அமல் நடத்துவதற்கு ஆதாரமாக அரசு இருந்தாலும், இறைமுறை பிழையாது அரசு இயங்குவதற்குச் சட்டமே வழி வகுத்து நிற்கிறது. இவ்வாறு, அரசுக்கும் அப்பாற்பட்டுச் சட்டம் இயங்குவது அதன் தனிப் பெருமையாகும். "மக்களை ஆளும் அரசு, அரசை ஆளும் சட்டம்", என்ற ஒப்பற்ற சிறப்பு சட்டத்திற்கு உண்டு. இதையே "சட்டத்தின் ஆட்சிமுறை" (Rule of Law) என்று கூறுகிறோம்.

"சட்டத்திற்கு அடிமை பூண்டு, நமது சுதந்திரத்தைக் காத்துக் கொள்ளுகிறோம்" என்று சிசரோ (Cicero) என்ற கிரேக்க ஞானி இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன்னரே கூறினர்.

அரசு தனது அதிகார வரம்பை மீறி நடந்ததால் மக்களுக்குத் தீங்கு விளைந்தது எனில் அதற்கு அரசு பொறுப்பாகின்றது. தீங்கிழைக்கப்பட்ட குடிமகன் (Subject) அரசின்மீது வழக்கிட்டு அதற்கான நட்ட ஈட்டையும் நிவாரணத்தையும் பெறமுடியும்.

நம் நாட்டு மத்திய அரசு, மாநில அரசுகள் இவைமீது மக்கள் வழக்கிடுவதற்கும், இவை மக்கள்மீது வழக்கிடுவதற்கும், அரசமைப்புச் சட்டத்தின் 300 வது பிரிவு வகை செய்கின்றது.

இனி, எந்தெந்த முறையில் அரசின்மீது வழக்கிடலாம் என்பது பற்றிக் காண்போம்.

## (ஆ) அரசின் அதிகாரங்கள்

அரசின் அதிகாரத்தை மூன்று பிரிவுகளாக வகுப்பதுண்டு. சட்டமியற்றுதல் (Legislative), நீதி வழங்குதல் (Judicial), நிர்வாகத்தை நடத்துதல் (Executive), இவைகளே அரசின் அலுவல்களின் கூறுபாடுகளாவன.

### (1) சட்ட மியற்றுதல்

பொது மக்களின் நலன்களுக்கென மக்களால் தேர்ந்தெடுக்கப் பட்ட பிரதிநிதிகள் கூடிப் பல சட்டங்களை இயற்றுகின்றனர். இச் சட்டங்களின் விளைவால் தனிநபர் எவருக்காவது நட்டமோ கேடோ விளைந்தால் அதைத் "தீங்கு" என்று சட்டம் கொள்ளுவ தில்லை. சட்டத்தால் விதிக்கப்படும் செயல்கள் பற்றியும், அவை எவ்வாறு தீங்குகள் ஆவதில்லை என்பது பற்றியும் முன்னர்க் கண்டோம்.

இயற்றப்பட்ட சட்டம் மக்களின் அடிப்படை உரிமைகளைப் பாதிக்கும் வகையில் இருந்தால், அந்தச் சட்டம் செல்லுபடியா காதது என்ற தீர்ப்பைக் கோரும் வகையில் உயர்நீதி மன்றங் களில் ஒருவர் வழக்கிடலாம். ஆனால், இந்த நடவடிக்கை "தீங்கியல்" சட்டப் பிரிவைச் சேர்ந்தது அன்று.

### (2) நீதி வழங்குதல்

நீதி வழங்குதல் அரசின் முக்கிய கடனாகும் என்பதைக் கண்டோம். நீதிமன்ற நடுவர்கள் அரசின் சார்பாக மக்களிடை எழும் வழக்குகளைத் தீர்த்து நீதி வழங்குகின்றனர். அவர்கள் ஒரு சிறிதும் அச்சமின்றி நீதி வழங்க வேண்டியவர்களாக இருக்கின்றனர். தங்கள் கடமைகளைச் செய்வதில் அவர்களுக்கு எவ்விதத் தயக்கமும் இருத்தல் தகாது. எனவே, அவர்களின் நீதி முறைச் செயல்கள் (Judicial acts) குறித்து எவரும் வழக்கிடுவதற் கில்லை.

நீதி மன்றங்களை மக்கள் நாடுவதில் அவர்களுக்குள்ள நம்பிக் கையும் நீதிமுறையில் உள்ள சிறப்பும் பாதுகாக்கப்படவேண்டும். எனவே, ஒரு நீதிமன்றத் தீர்ப்பை மேல் ஆய்வுக்கென அடுத்த நீதிமன்றத்திற்கு மேல் முறையீடு (appeal) செய்வதற்குச் சட்டம் வகை செய்கிறது. முதல் மன்றத்தின் தீர்ப்பு அடுத்த மன்றத்தால் மாற்றப்படலாம். முதல் நீதி மன்றத்தில் வாதி வெற்றி பெறலாம்; மேல் நீதி மன்றத்தில் எதிர்வாதி வெற்றி பெறலாம். முதல் நீதி மன்றத்திலேயே எதிர்வாதி வெற்றியடைந்திருந்தால் மேல் நீதி மன்றத்திற்கு அப்பீல் செய்வதற்கான செலவு தவிர்க்கப் பட்டு இருக்கலாம். இந்த நட்டம் முதல் நீதிமன்ற நடுவரின் தீர்ப்பினால் விளைந்தது என்று கூறி, அவர்மீது எதிர்வாதி வழக்கிட்டு நட்ட ஈடு பெற முடியுமா? முடியாது.

உயர்நீதிமன்ற நீதிபதி ஒருவர் செய்த தீர்ப்பை அப்பீலில் அதே நீதி மன்றத்திலுள்ள வேறு இரு நீதிபதிகள் மேலாய்வு செய்கின்றனர். அதனால் முதல் தீர்ப்பு மாற்றப்படுவதுமுண்டு.

இதைக் காரணமாக வைத்துக்கொண்டு அப்பீலில் வெற்றி பெற்றவர் முதல் நீதிபதி மேல் அப்பீலுக்கான செலவிற்கு ஈடு கோரி வழக்கிட முடியாது.

மேலும், ஒரு வழக்கை விசாரிக்கையில் வழக்கில் சம்பந்தப்பட்ட சொத்தின் நிர்வாகத்திற்கும், வழக்கிடைத் தோன்றும் பல சிக்கல்களுக்கும் வழக்கிடை உத்தரவுகள் (Interlocutory Orders) எத்தனையோ பிறப்பிக்க வேண்டியிருக்கலாம். இந்த உத்தரவுகள் சில வேளைகளில் தவருனவையாக இருந்து விடுவதுண்டு. தவருன உத்தரவால் ஒருவருக்கு விளையும் கேட்டைத் தீங்காகச் சட்டம் கொள்ளுவதில்லை.

சட்டம் இவ்வாறு இல்லையெனில் நீதிமன்ற நடுவர்கள் தங்கள் கடமைகளையும், அலுவல்களையும் அச்சமின்றி, நடுவு நிலையுடன் செய்தல் இயலாது போய்விடும். நீதிபதிகள் நடுநிலைமை தவருது நீதி வழங்க வேண்டுமெனில் இவ்விதப் பாதுகாப்பு இன்றியமையாததாகும்.

எனவே, நீதிமுறை சார்ந்த அலுவல்களில் ஈடுபட்டிருப்போர்கள் செய்யும் செயல்களை வைத்து அவர்கள்மீது வழக்கிடுதல் முடியாது எனச் சட்டம் விதிக்கிறது. நீதிமுறை அலுவலர்கள் பாதுகாப்புச் சட்டம் (The Judicial Officers' Protection Act) என்ற ஒரு சட்டம் நம் நாட்டில் 1850ஆம் ஆண்டிலிருந்து அமலில் இருக்கிறது. தமக்கு அதிகாரம் இருக்கிறது என்று நம்பி நீதிமுறை அதிகாரி ஒருவர் தமது அதிகாரவரம்பிற்கு மீறிய காரியத்தைச் செய்தாலும் அதற்கு அவர் பொறுப்பாவதில்லை.

நீதிபதியின் உத்தரவை நிறைவேற்றும் வகையில் பொருள்களைச் சப்தி செய்வோர், நபர்களைக் கைது செய்வோர் இவர்களுக்கும் இந்தப் பாதுகாப்பு உண்டு. ஆனுல் அமல்நடத்தப்படும் ஆணை முறைப்படி கையெழுத்தும், முத்திரையும் இடப்பட்டதாக இருக்கவேண்டும். ஆணைப்படி ஒருவரைக் கைது செய்ய வேண்டியதிருக்கத், தவருக மற்ருெருவரைக் கைது செய்தால் அதற்கான பொறுப்பு ஆணையை நிறைவேற்றும் அலுவலரைச் சேருகின்றது. [Davies V. Jenkins (1843) 11. M & W 745]

திருட்டுக்குற்றம் செய்ததாகச் சந்தேகப்பட்ட ரிச்சர்டு ஹாய் என்பவரைக் கைது செய்வதற்கு வாரண்டு பிறப்பிக்கப்பட்டது. ஆனுல், அதில் கைது செய்யப்பட வேண்டியவரின் பெயர் ஜான் ஹாய் என்று குறிப்பிடப்பட்டிருந்தது. கைதாணையை (Arrest warrant) நிறைவேற்றிய அலுவலர் கைது செய்யப்படவேண்டிய ரிச்சர்டு ஹாயைக் கைதுசெய்தார். எனினும் கைதாணையில் உள்ள பெயர் ரிச்சர்டு ஹாய் என்று இல்லையாகையால்

ரிச்சர்டைக் கைது செய்தது தீங்கான செயல் என்று கொள்ளப் பட்டது. [Hoye V. Bush (1840) 1. M & G 775]

இவ்வாறு நீதிபதிகளுக்கும் நீதித்துறை அலுவலர்களுக்கும் பாதுகாப்பளித்து, அவர்களின் பணிசார்ந்த செயலினல் பாதிக் கப்பட்ட எவரும் அவர்கள்மீது வழக்கிட முடியாது எனச் சட்டம் விதிக்கிறது.

சட்டமன்றங்கள்

மக்கள் சபை, இராச்சியங்களின் சட்டசபைகள் இவைகளுக்கு அரசமைப்புச் சட்டத்தில் சிறப்புரிமை அளிக்கப்பட்டிருக்கிறது. எனவே அந்தச் சபைகளில் தலைவர் இடும் கட்டளைகளுக்கு எதிராகச் சட்ட நடவடிக்கை ஏதும் எடுப்பதிற்கில்லை.

ஆங்கில நாட்டுப் பார்லிமெண்டின் சபா நாயகர் அங்கத்தினர் ஒருவரை வல்லந்தமாக வெளியேற்ற உத்தரவிட்டு, அதன்படி அவர் வெளியேற்றப்பட்டார். பார்லிமெண்டின் உள் விவகாரத் தில் நீதிமன்றம் தலையிடுவதற்கில்லை என்று தீர்ப்பளிக்கப்பட்டது. [Bradlaugh V. Gosset (1884) 12. Q.B.D. 271]

நம் நாட்டு அரசமைப்புச் சட்டத்தின் 212(2) வது பிரிவுப் படி, நம் நாட்டுச் சட்டமன்றங்களின் அலுவலர்களும் அங்கத்தினர் களும் தங்களுக்கு அளிக்கப்பட்டிருக்கும் அதிகாரத்தின் கீழ் செய்யும் காரியங்கள் குறித்து எந்த நீதி மன்றத்திலும் வழக்காடு வதற்கு முடியாது.

## (3) நிர்வாகத்தை நடத்துதல் (Executive)

நாட்டின் நிர்வாகத்தை அரசின் அலுவலர்கள் நடத்து கின்றனர். நிர்வாக முறையில் எத்தனையோ செயல்கள் செய்யப் படுகின்றன. அவையெல்லாம் சட்டப்படியானவையாக இருத்தல் வேண்டும். சட்டத்தால் விதிக்கப்படாத வரியை அரசாங்க அதிகாரி குடிமக்களிடமிருந்து வசூலிக்க முடியாது. சட்டவிதி களுக்கு முரணான வகையில் மக்களின் உடலுரிமை, சொத்துரிமை இவை பாதிக்கப்படுவது கூடாது. இந்த வகையிலேயே அரசாங்க அதிகாரிகளின் நடத்தையும் செயல்களும் அமைதல் வேண்டும். இவ்வாறு, சட்டப்படியான அரசின் நிர்வாகச் செயல்கள் குறித்து எவ்வித வழக்கும் இடுதல் இயலாது.

அரசாங்க அதிகாரியின் செயலால் நட்டம் அடைந்த ஒருவர் அது சட்டப்படியான செயலன்று என்று கருதினல், அது குறித்து வழக்கிடலாம். அதிகாரியின் செயல் சட்டப்படியானதா என்பதை நீதிமன்றம் ஆய்கின்றது. சட்ட அதிகாரம் பெருத செயல்களால்

ஒருவருக்குத் தீங்கு விளைந்தால் அதற்கான நட்ட ஈட்டை அவர் பெறலாம்.

சட்ட முரணான செயலால் தீங்கிழைத்த அரசாங்க அதிகாரி தம் மேலதிகாரியின் உத்தரவுப்படி நடந்திருக்கலாம், இருப்பினும் அவருக்குப் பொறுப்பு உண்டு. சட்ட முரணான செயலைச் செய் வதற்கு அரசாங்கம் அனுமதித்தால் அதற்கு அரசாங்கமும், அச் செயலைச் செய்த அதிகாரியும் பொறுப்பாகின்றனர்.

ஒரு லாரிக்கான வரிப்பணம் கட்டப்படவில்லை என்பதற்காக அந்த லாரியை ஒரு போலீஸ் அதிகாரி கைப்பற்றிப் போலீஸ் நிலையத்தில் இரண்டு நாள் நிறுத்தி வைத்துவிட்டார். மேலதி காரியின் உத்தரவுப்படியேதான் அவர் இவ்வாறு செய்தார். வரி கட்டுவதற்கென்று குறிப்பிடப்பட்டிருந்த கெடு கழிவதற்கு முன் லாரியைக் கைப்பற்றியது தீங்கான செயல் என்று நீதிமன்றம் தீர்மானித்தது. போலீஸ் அதிகாரி நட்ட ஈடு அளிக்க வேண்டு மென்று உத்தரவிட்டது. மேலதிகாரியின் உத்தரவையே தாம் நிறைவேற்றியதாகப் போலீஸ் அதிகாரி கூறிய காரணம் ஏற்றுக் கொள்ளப் படவில்லை. [Perumal Chettiar V. Peer Mohamed (1962) I. L. R. Madras. 195.]

அரசாங்க அலுவலில் உள்ள கீழ்நிலை ஊழியர் செய்த தீங் கிற்கு மேல்நிலை ஊழியர் பொறுப்பாவதில்லை. தலைவர்-பணியாள் என்ற முறையில் மேல்நிலை ஊழியருக்குப் பகரப் பொறுப்பு (Vicarious Responsibility) ஏதும் இல்லை. குறிப்பிட்ட தீங்கான செயலைச் செய்யும்படி அவர் கீழ்நிலை ஊழியருக்கு உத்தரவிட்டி ருந்தால் மட்டும் அவருக்கும் அத்தீங்கிற்கான பொறுப்பு உண்டு.

"அரசன் தீங்கிழைப்பதில்லை" (The King can do no wrong) என்ற கொள்கை ஆங்கில நாட்டில் நிலவிவந்தது. அதனால், அரசின்மீது வழக்கிடமுடியாத நிலை அங்கு இருந்தது. பின்னால், இவ்வாறு வழக்கிடுவதற்கு வகை செய்யும் சட்டங்கள் அங்கு இயற்றப்பட்டன. நம் நாட்டு அரசமைப்புச் சட்டத்தின் 300 ஆவது பிரிவில் இந்திய அரசாங்கம் இராச்சிய அரசாங்கங்கள் இவைமீது பிறர் வழக்கிடலாம், அவையும் பிறர்மீது வழக்கிடலாம் என்று தெளிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

### (இ) அரசின் தனிச்செயல்கள் (Acts of State)

ஒரு நாட்டு அரசுடன் மற்றோர் அரசு ஒப்பந்தம் முதலியன செய்து கொள்ளுகிறது. இருநாடுகளிடைப் போர் மூளுவதுண்டு. இம்மாதிரி ஒரு நாட்டு அரசுக்கும் பிற அரசுகளுக்கும் உள்ள உறவு முறையில் நடைபெறும் செயல்களை "அரசின் தனிச் செயல்கள்"

(Acts of State) என்று கூறுவார்கள். பிற நாட்டுக் குடிகளைப் பொறுத்து ஓர் அரசு செய்யும் செயல்களும் அரசின் "தனிச்செயல் களே" ஆகின்றன.

அரசின் தனிச் செயல்களைக் குறித்து நீதிமன்றங்களில் வழக் கிடுதல் முடியாது. ஒரு நாட்டின் அரசு இன்னொரு நாட்டை இணைத்துக் கொள்வது அரசின் தனிச் செயலாகும். அதுபற்றிய வழக்குகளை ஏற்பதற்கு உள்நாட்டு நீதி மன்றங்களுக்கு அதிகாரம் இல்லை. [Secretary of State for India V. Kamatchee Boye Saheba (1859) 7. M. I. A. 476] ஒரு நாட்டுடன் மற்றொரு நாடு போர் தொடுத்தல், சமாதானம் செய்து கொள்ளல், முற்றுகையிடுதல், இவை போன்ற செயல்கள் அரசின் தனிச்செயல்கள்.

பிரிட்டிஷ் கடற்படை அதிகாரி ஒருவர் ஸ்பானிய தேசத்தைச் சேர்ந்த ஒருவரின் சொத்தை நாசம் செய்தார். அச்செயலைப் பிரிட்டிஷ் அரசாங்கம் அங்கீகரித்தது. இது குறித்து நட்ட மடைந்த ஸ்பானிய நாட்டவர் இங்கிலாந்தில் இட்ட வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. [Buron V. Denman (1848) 2. Ex. 167] அரசின் தனிச் செயலால் விளையும் தீங்கிற்குப் பரிகாரம் கிடையாது என்ற கொள்கை இதில் பின்பற்றப்பட்டது.

ஓர் அரசுக்கும் அதன் குடிமக்களுக்குமிடையே எழும் விவ காரங்களை "அரசின் தனிச்செயல்கள்" என்று கூறுதல் பொருந் தாது. அரசின் தனிச்செயல் வேறு, அரசாங்கத்தின் அதிகாரம் பெற்ற செயல்கள் வேறு. உள்நாட்டில் மக்களைப்பொறுத்து அந்த அரசு செய்யும் செயல்களை அரசாங்கத்தின் அதிகாரம் பெற்ற செயல்கள் (Acts under Public Authority) என்கிறோம். அயல் நாட்டுடனோ, அயல்நாட்டுக் குடிமகனுடனோ ஓர் அரசு ஈடுபடும் விவகாரங்களையே அரசின் தனிச் செயல்கள் (Acts of State) என்கி றோம். எனவே, தன் குடிகளைப் பொறுத்து ஓர் அரசு செய்யும் காரியங்களை அரசின் தனிச் செயல்கள் என்று கூறுவது சரியன்று. இந்தக் கொள்கை P. V. Rao. V. Kushaldas Advani (1949) A. I. R. Bombay 277 என்ற வழக்கில் தெளிவாக விளக்கப்பட்டது.

அரசின் தனிச் செயல்களைத் தவிர அதன் மற்றச் செயல்கள் அனைத்தும் சட்டப்படியானவையாக இருத்தல் வேண்டும். மக்களின் உடலுரிமையையும் பொருளுரிமையையும் பாதிக்கும் அரசாங்கத்தின் செயல்கள் சட்டப்படியானவையா என்று கண்காணிக்கும் அதிகாரம் நீதிமன்றங்களுக்கு உண்டு. "சட்டத்தின் ஆட்சி" (Rule of Law) நிலவும் சனநாயக நாடுகளின் மக்களுக்கு உள்ள ஒப்பற்ற உரிமையாகும் இது.

---

# பகுதி 5

## வழக்கிடும் வகை

(அ) ஒரு தீங்குச் செயல் குறித்து ஒரு வழக்கே இடலாம் - ஒரே செயலால் இருவகை உரிமைகளுக்கு ஊறு விளைதல், தொடர்ந்து நிகழும் தீங்குகள் - (ஆ) குற்றமான தீங்குச் செயல்கள் - (இ) கூட்டாகத் தீங்கிழைத்தோர்கள் - (ஈ) வெளிநாட்டில் விளைந்த தீங்குகள்.

(அ) ஒரு தீங்குச் செயல் குறித்து ஒரு வழக்கே இடலாம்

தீங்கான ஒரு செயலைச் செய்தவர்மீது ஒரு முறைதான் வழக்கிட முடியும்.

எதை ஆதாரமாக வைத்து வழக்கிடப்படுகிறதோ அதை "வழக்கு மூலம்" (cause of action) என்பார்கள். எதிர்வாதி ஒரு தீங்கான செயலைப் புரிந்தார் என்று சொல்லி அதற்கென நட்டஈடு கோரி வாதி இடும் வழக்கில், எதிர்வாதியின் தீங்குச் செயலை "வழக்கு மூலம்" என்கிறோம். "ஒரு வழக்கு மூலத்தால் ஒரே வழக்குத்தான் இட முடியும்" என்பது பொது விதி. எனவே, ஒரு தீங்கால் விளைந்த நட்டமனைத்தையும் வாதி ஒரே வழக்கிலேயே கோரிப் பெற வேண்டும். [Richardson V. Mellish (1824) 2. Bing 229]

சட்டம் இவ்வாறு இல்லையெனில் வழக்குகள் வளர்ந்து கொண்டே போகும். தீங்கிழைத்தவர் செய்த ஒரே செயலை வைத்துப் பல வழக்குகளை அவர்மீது தொடர்ந்து அவர் அல்லற்படுத்தப்படலாம்.

எதிர்வாதி தம்மை மண்டையில் அடித்ததாகக் கூறி வழக்கிட்டு வாதி 11 பவுன்கள் நட்ட ஈடு பெற்றார். இதற்கு எட்டு வருடங்கள் கழித்து, எதிர்வாதி எட்டு வருடங்களுக்கு முன் அடித்ததின் காரணமாகத் தமது மண்டையில் இரண சிகிச்சை செய்ய வேண்டிய அவசியம் ஏற்பட்டது என்று கூறி அதற்கான நட்ட ஈட்டைக் கோரி வாதி மீண்டும் வழக்கிட்டார். இந்த வழக்குத் தள்ளுபடி செய்யப்பட்டது. [Fetter V. Beale (1701) 1. Ld. Raym. 339]

சில சூழ்நிலைகளில் ஒரே தீங்குச் செயலை வழக்கு மூலமாகக் கொண்டு ஒன்றுக்கு மேற்பட்ட வழக்குகள் இடவேண்டிய அவசியம் ஏற்படுவதுண்டு. அவை எப்பொழுது என்று காண்போம்:

(1) ஒரே செயலால் இருவகை உரிமைகளுக்கு ஊறு விளைதல்.

(2) தொடர்ந்து நிகழும் தீங்குகள்.

### (1) ஒரே செயலால் இருவகை உரிமைகளுக்கு ஊறு விளைதல்

எதிர்வாதியின் தீங்குச் செயல் ஒன்றுகவே இருக்கலாம்; அதனுல் வாதியின் உடலுரிமை, பொருளுரிமை என்ற இருவகை உரிமைகளுக்கும் ஊறு விளையலாம். இப்பொழுது, இரு வழக்குகள் இடுவதற்குத் தடையில்லை.

எதிர்வாதியின் கவனமின்மையால் தம் வண்டிக்குச் சேதம் விளைந்தது என்று கூறி நட்ட ஈடு பெற்ற பின், அதனுல் தமக்கும் காயம் விளைந்தது என்று மற்றெரு வழக்கை வாதி தொடர்ந்தார். வாதியின் வண்டிக்கு ஏற்பட்ட சேதம் அவருடைய பொருளுரிமைக்கு விளைந்த தீங்கு, அவருக்கு ஏற்பட்ட காயம் அவரது உடலுரிமைக்கு விளைந்த தீங்கு. இருவகை உரிமைகள் பாதிக்கப்பட்டதால் இரண்டாவதாக இட்ட வழக்கு தக்கதேயாகும் என்று தீர்ப்பளித்தனர். [Brunsden V. Humphrey (1884) 14. Q. B. D. 14!] இவ்வாறு, ஒரே செயல் இருவகைத் தீங்குகளாகக் கேடு விளைத்தால் இரு வழக்குகள் இடலாம்.

வாதிக்குத் தலையிலும் கையிலும் காயங்கள் ஏற்பட்டதென வைப்போம். தலைக் காயத்திற்கு ஒரு வழக்கும், கைக்காயத்திற்கு மற்றெரு வழக்கும் இட முடியாது. உடலுக்கு எத்தனை காயங்கள் ஏற்பட்டாலும் அவையனைத்தும் உடலுரிமை என்ற ஒருவகை உரிமைக்கு விளைந்த தீங்கேயாகும். எனவே, ஒரே வழக்குத்தான் இடலாம்.

பலர் முன்னிலையில் வாதியை எதிர்வாதி அடித்து விட்டார் என்ருல், வாதிக்குக் காயம் விளைகிறது, அவமானமும் விளைகிறது. இப்பொழுது உடலுரிமை, புகழுரிமை இருவகை உரிமைகளும் பாதிக்கப்படுகின்றன. எனவே, இரு வழக்குகள் இடுவதற்குத் தடையில்லை.

சாதாரணமாக, ஒரு செயலில் விளையும் இருவகைக் கேடுகளுக்கும் ஒரே வழக்கில் நட்ட ஈடு கோரிப் பெறுவதுதான் நடைமுறைக்கு உகந்தது.

### (2) தொடர்ந்து நிகழும் தீங்குகள் (Continuing Wrongs)

ஒருவர் நிலத்தில் மற்றெருவர் அத்துமீறி நுழைந்து ஆக்கிரமித்துக் கொண்டிருக்கிருர். அந்த ஆக்கிரமிப்பு அகற்றப்படும் வரை அத்தீங்கு தொடர்ந்து நிகழ்வதாகச் சட்டம் கொள்ளுகிறது. அத்துமீறுதலால் கேடு விளைந்தது என்பதை வாதி நிரூபிக்க வேண்டியதில்லை. அத்துமீறிய செயலே தீங்கானதாகும். ஆதலால், ஆக்கிரமிப்பு இருக்கும் ஒவ்வொரு நாளும் புதிய வழக்கு மூலங்கள் எழுகின்றன. ஆக்கிரமிப்பு நிகழும் ஒவ்வொரு நாளுக்-

கும் (de die in diem) தனித்தனி வழக்கிடுவதைச் சட்டம் அனுமதிக்கிறது. எனவே, ஒரு வழக்கு இட்டபின் அத்துமீறுதல் தொடர்ந்து இருந்தால் அதற்கு மீண்டும் வழக்கிடலாம்.

அத்துமீறி ஆக்கிரமித்தது ஒரு மாதமாக இருந்தது என்பதற்காக, ஒரு மாதம் கழித்து முப்பது தனி வழக்குகள் இடுவது கூடாது. ஒரு வழக்குத்தான் இடலாம். வழக்கிட்டபின்னும் தொடர்ந்து நிகழும் ஆக்கிரமிப்பிற்கு மீண்டும் வழக்கிடலாம்.

தொல்லை விளைத்தல் முதலிய தொடர்நிகழ்த் தீங்குகளால் விளையும் நட்டம் வெவ்வேறு காலத்தில் ஏற்படுவதுண்டு. எனில், புதிய நட்டம் விளைந்தபின் புதிய வழக்கிடுவது முறையேயாகும்.

எதிர்வாதி நிலக்கரி எடுப்பதற்கென்று தம் நிலத்தைத் தோண்டியதால், வாதியின் அடுத்திருந்த நிலம் சரிந்து அதிலுள்ள வீட்டிற்குச் சேதம் ஏற்பட்டது. இதற்கான நட்ட ஈட்டை வாதி வழக்கிட்டுப் பெற்றார். இதற்குப் பதினான்கு வருடங்கள் கழித்து, முதலில் எதிர்வாதி தோண்டியதன் விளைவாக வாதியின் நிலம் மீண்டும் சரிந்து வாதிக்கு மேலும் நட்டம் விளைந்தது. இரண்டாவதாக ஏற்பட்ட நட்டத்திற்குப் புதிய வழக்கிடுவது தக்கதேயென்று தீர்ப்புக் கூறினர் [Darby Main Colliery V. Mitchell (1886) 11. A. C. 127]. முதல் வழக்கிடும் பொழுது இரண்டாவது நட்டம் விளையவில்லை. நட்டம் விளைவதற்கு முன் அதற்கான நட்ட ஈட்டைப் பெறுவது முடியாது. எனவே, புதிய நட்டம் ஏற்பட்டபின் அதற்கெனப் புதிய வழக்கிடுவது அவசியமாகிறது.

மேற்கண்ட சூழ்நிலைகளைத் தவிர, பொதுவாக ஒரு தீங்குச் செயலைக் குறித்து ஒரு வழக்குத்தான் இட முடியும்.

## (ஆ) குற்றமான தீங்குச் செயல்கள் (Felonious Torts)

உடலைத் தாக்குதல், உடலுக்கு ஊறு விளைத்தல், அவதூறு முதலிய தீங்குகள் தண்டிக்கத்தக்க குற்றங்களாகவும் (Crimes) இருக்கின்றன. இந்த விதத் தீங்குகளைக் குறித்து நட்ட ஈடு கோருவதற்கு முன், இக் குற்றங்களைச் செய்தவர்கள் மீது குற்ற வழக்கிடப்படுதல் வேண்டும் என்பது விதி. [Smith V. Sewlyn (1914) 3. K. B. 98] குற்ற வழக்கும் முடிவடைந்திருக்க வேண்டும். இல்லையேல் எதிர்வாதிமீது நட்ட ஈடு வழக்கிடுவது இயலாது. [Wonder Heat Pty. Ltd. V. Bishop (1960) V. L. R. 489]

குற்றம் இழைத்தவர்கள் தண்டிக்கப்பட வேண்டும் என்பது சட்டத்தின் குறிக்கோள். குற்றமான செயல் சமூகத்திற்கு எதிரான செயலாகும். எனவேதான் குற்றவாளி தண்டிக்கப்

படுகிறார். சமூகத்திற்கு எதிராகக் குற்றம் செய்தவர் தண்டிக்கப் படுவதற்கு முன், அக் குற்றமான செயலால் தனிப்பட்ட முறையில் நட்டமடைந்தவர் அதற்கான ஈடு பெறுவதைச் சட்டம் அனுமதிப் பதில்லை.

பெரும்பாலும் குற்ற வழக்கிடும் அதிகாரம் போலீசாரிடமே இருக்கிறது. எனவே, ஒரு குற்றவாளிமீது குற்ற வழக்கிடாதது தம்முடைய தவற்றால் இல்லையென்றோ அல்லது குற்ற வழக் கிடாமல் போவதற்குத் தகுந்த காரணங்கள் இருக்கின்றன வென்றோ, ஒருவர் மெய்ப்பித்தால், அக்குற்றத்தில் அடங்கியுள்ள தீங்கிற்கான நட்ட ஈட்டைக் கோரி அவர் வழக்கை நடத்தலாம்.

சில வேளைகளில் குற்றமான தீங்கிற்கான பகரப் பொறுப்புத் தீங்கிழைத்தவருடன் தொடர்புடைய பிறருக்கு இருக்கிறது. பணி யாளின் தீங்கிற்குத் தலைவர் பொறுப்பாகிறார். இப்பொழுது பணியாள்மீது குற்ற வழக்கிடவில்லையெனினும் தலைவர்மீது நட்ட ஈடுகோரி வழக்கிடலாம். [Osborn V. Gillett (1783) L. R. 8 Ex. 88]

மரண விபத்துச் சட்டத்தின் [Fatal Accidents Act] கீழ் நட்ட ஈடு கோரி வழக்கிடும்போதும் இந்த விதி பொருந்துவதில்லை.

## (இ) கூட்டாகத் தீங்கு இழைத்தவர்கள் (Joint Wrong-doers)

இரண்டு அல்லது அதற்கு மேற்பட்ட நபர்கள் கூட்டாகச் சேர்ந்து செய்த தீங்கால் பிறருக்குக் கேடு விளைந்தது எனில் அவர்களைக் கூட்டாகத் தீங்கு இழைத்தவர்கள் [Joint Wrong-doers] என்று கூறுகிறோம். அவர்களில் எவர்மீதும் தனியாகவோ அல்லது அவர்கள் அனைவரையும் சேர்த்தோ வழக்கிட்டுத் தீங் கடைந்தவர் நட்ட ஈடு பெறலாம். அனைவர் மீதும் இட்ட வழக்கில் அளிக்கப்பட்ட நட்ட ஈட்டுத் தொகையை அவர்களில் ஒருவரிடமிருந்தே வாதி பெறலாம். இவ்வாறு, கூட்டுத் தீங் காளியான ஒருவர், தாம் அந்தத் தீங்கைக் குறித்துக் கொடுத்த நட்ட ஈட்டுப் பணத்திற்காகப் பிற தீங்காளிகளிடமிருந்து பங்கு பெறலாமா என்பது வினா. அவ்வாறு பெறுவது முடியாது என்று Merryweather V. Nixan (1799) 8. T. R. 186 என்ற வழக்கில் கூறப்பட்டது.

இந்த வழக்கில் உள்ள கொள்கை, பின் வந்த வழக்குகளில் சிறிது மாற்றப்பட்டது. சட்ட முரணான செயல்களால் தீங்கிழைத்த வர்களைப் பொறுத்தே இந்த விதி பொருந்துமென்றும், இதர வகையில் கூட்டாகத் தீங்கிழைத்தோருக்கு இது பொருந்தாது என்றும் கூறப்பட்டது. [Moxham V. Grant (1900) 1. Q. B. 88] பகரப் பொறுப்புடைய தலைவர் பணியாளின் தீங்கிற்கு நட்ட

ஈடு அளித்தார் என்றால், பணியாளிடமிருந்து அவர் அதைப் பெறலாம். ஆனால் தலைவர்மீது எவ்விதத் தவறும் இல்லாத நிலையில் பணியாள் தீங்கிழைத்திருக்க வேண்டும். [Lister V. Romford Ice and Cold Storage Co. Ltd. (1957) A. C. 555.]

### (ஈ) வெளிநாட்டில் விளைந்த தீங்குகள் (Foreign Torts)

தீங்கு நம் நாட்டிற்கு வெளியே இழைக்கப்பட்டாலும், எதிர்வாதி இந்தியாவிற்குள் இருந்தால், அவர்மீது வாதி வழக்கிட முடியும். இந்தியாவிலுள்ள ஒருவரைப் பற்றிய அவதூறு இங்கிலாந்தில் வெளியிடப்பட்டது என வைப்போம். அவதூறு இழைத்தவர் இந்நாட்டில் இருந்தால் அவர்மீது இந்நாட்டில் வழக்கிடலாம்.

இந்த விதிக்கு இரு நிபந்தனைகள் உண்டு :

(1) தீங்கான செயல் செய்யப்பட்ட நாட்டில் அது சட்ட முரணான செயலாக இருக்க வேண்டும்.

(2) நம் நாட்டுச் சட்டப்படியும் அது தீங்கான செயலாக இருக்கவேண்டும். [Phillips V. Eyre (1870) L. R. 6. Q. B. 1]

ஆனால், பிற நாட்டிலுள்ள நிலச் சொத்துக்களைப் பொறுத்த தீங்குகளுக்கு நம் நாட்டில் வழக்கிட முடியாது. இந்நாட்டில் வசிக்கும் ஒருவருக்கு அமெரிக்க நாட்டில் நிலம் இருக்கலாம். இங்குள்ள மற்றொருவர் அந்த நிலத்தை ஆக்கிரமித்துள்ளார் என்றால், அதற்கான வழக்கை இந்தியாவில் இடுவதிற்கில்லை.

---

## பகுதி 6

## தீங்குச் செயலுக்கும் விளைந்த கேட்டிற்கும் உள்ள தொடர்பு

*(1) தீங்கிற்கும் கேட்டிற்கும் உள்ள தொடர்பு - (2) நேரடி விளைவுத் தொடர்பு - (3) முன்னறியத்தக்க விளைவுத் தொடர்பு - (4) இடைநிகழ் புதுச்செயல்கள் - (5) தீங்கிழைத்தோரின் பொறுப்பு என்ன?*

தீங்கினால் விளையும் கேட்டிற்குச் சட்டம் நட்ட ஈடு அளிக்கின்றது. கேடு அடைந்தவர், தமக்கு விளைந்த கேடு பிறரது தீங்கான செயலின் காரணமாகவே விளைந்தது என்பதை மெய்ப்பிக்க வேண்டும். எதிர்வாதியின் தீங்குச் செயலுக்கும் வாதிக்கு விளைந்த கேட்டிற்கும் காரண காரியத் தொடர்பு (Causal relationship) இருக்கவேண்டும் இல்லையேல் தீங்கின் காரணமாக அந்தக் கேடு விளைந்தது என்று கூறமுடியாது. தீங்குச் செயலுடன் சம்பந்தமில்லாத விளைவுகளுக்குத் தீங்கிழைத்தவரைச் சட்டம் பொறுப்பாக்குவதில்லை.

### (1) தீங்கிற்கும் கேட்டிற்கும் உள்ள தொடர்பு

தீங்குச் செயலுக்கும் விளைந்த கேட்டிற்கும் உள்ள தொடர்பு என்ன என்று நாம் கண்டால்தான், இவை இரண்டிற்குமிடையே காரண காரியப்பிணைப்பு இருக்கிறதா என்பதை நம்மால் உறுதி செய்ய முடியும். சில வேளைகளில், தீங்குச் செயலுக்கும் விளைந்த கேட்டிற்கும் உள்ள தொடர்பை உறுதி செய்வது சட்டத்தில் ஒரு சிக்கலான பிரச்சினையாகி விடுகிறது. இது குறித்து, ஒரு திட்டவட்டமான கொள்கை இன்னும் அமையவில்லை. பல தீர்ப்புக்களிலும் பலவிதக் கொள்கைகள் கையாளப்பட்டன. அந்தந்த வழக்குகளில் தோன்றும் சூழ்நிலைக்கேற்பப் புதிய புதிய கொள்கைகளை நீதிபதிகள் இயற்றினர். முக்கியமான சில வழக்குகளில் கூறப்பட்ட கொள்கைகளை நாம் ஆய்ந்தறிவது, இந்தச் சிக்கலான பிரச்சினையை நீதிபதிகள் எவ்வாறு தீர்க்க முயன்றிருக்கின்றனர் என்பதை நாம் அறிந்து கொள்ளுவதற்கு உதவியாக இருக்கும்.

முன்னறியத்தக்க விளைவுகளே (foreseeable consequences) ஒரு செயலோடு தொடர்புடைய விளைவுகள் என்று 1850 ஆம் ஆண்டில் Rigby V. Hewitt 1850 (5. Ex. 240) என்ற வழக்கில் கூறப்பட்டது. இயல்பானதும் நிகழத்தக்கதுமான விளைவுகளே (Natural and probable consequences) முன்னறியத்தக்க விளைவுகள் ஆகின்றன. இத்தகைய விளைவுகளுக்கே ஒரு செயலைச் செய்தவர் பொறுப்பாகின்றார் என்ற கொள்கை இவ்வழக்கில் விளக்கப்பட்டது.

## (2) நேரடி விளைவுத் தொடர்பு

1870 ஆம் ஆண்டில் தீர்ப்பளிக்கப்பட்ட Smith V. L. & S. W. Ry. (1870) L. R. 6. C. P. 14 என்ற வழக்கில், நேரடி விளைவுகள் அனைத்தும் (direct consequences) தொடர்புடைய விளைவுகள் என்று கூறப்பட்டது. இரயில் பாதை ஓரத்தில் இருந்த புற்புதர்களை வெட்டிப் பாதைக்கு அருகிலேயே குவித்து வைத்திருந்தனர். கோடைகாலமானதால் குவித்து வைக்கப்பட்டிருந்த புற்கள் காய்ந்து சருகாயிருந்தன. எஞ்சினில் இருந்து விழுந்த தீப்பொறி சருகுகளின் மீது விழுந்ததால் தீப்பிடித்தது. அப்பொழுது காற்றும் அடிக்கவே, எரிந்து கொண்டிருந்த சருகுகளில் ஒன்று வாதியின் குடிசையின் மீது விழுந்து குடிசை தீக்கிரையானது. இதற்கு இரயில்வேக் கம்பெனியார் பொறுப்பாக்கப்பட்டனர். காய்ந்த சருகுகளை இரயில் பாதையருகில் போட்டு வைத்திருந்தது கவனமின்மையான செயல். இச்செயலின் நேரடி விளைவே வாதிக்கு விளைந்த நட்டம். ஆதலால், இதற்கான நட்ட ஈடு எதிர்வாதியான இரயில்வேக் கம்பெனியே கொடுக்க வேண்டும் என்று இந்தவழக்கில் (Smith V. L & S. W. Ry.) விளக்கப்பட்டது.

Re Polemis and Furness Withy & Co. Ltd. (1921) 3. K. B. 560 (Re Polemis) என்ற வழக்கில் "நேரடி விளைவு"க் கொள்கையே ஏற்கப்பட்டது. "விளைவு நிகழத்தக்கதா, முன்னறியத்தக்கதா" என்பனவெல்லாம் எதிர்வாதியின் கவனமின்மையைக் காணவே பயன்படுகின்றன. எதிர்வாதி கவனமின்றி இருந்தார் என்பது உறுதி செய்யப்பட்டு விட்டால், அந்தக் கவனமின்மைச் செயலால் நேரடியாக விளைந்த விளைவுகள் அனைத்திற்கும் அவரே பொறுப்பேற்கவேண்டும். அந்த விளைவுகள் நிகழத்தக்கனவா இல்லையா என்பதுபற்றி அக்கறையில்லை. இவ்வாறு, இவ்வழக்கில் கூறினார்கள். வழக்கின் சாரம் :

பெட்ரோல் பீப்பாய்களை ஒரு கப்பலில் ஏற்றி வைத்திருந்தனர். பீப்பாய்களிலிருந்து பெட்ரோல் ஒழுகியதால் அதன் ஆவி கப்பலின் சரக்கறையில் பரவியிருந்தது. வேறு சாமான்களை அக்கப்பலிலிருந்து அகற்றுகையில், கனமான பலகையொன்று சரக்குகள் இருந்த பகுதியில் விழுந்தது. இதனால், பெட்ரோல் ஆவியில் உடனே தீப்பற்றியதால் கப்பல் முழுதுமே தீயில் வெந்து அழிந்துவிட்டது. அந்தக் கப்பலை வாடகைக்கு எடுத்திருந்தவர்கள் கப்பலின் சொந்தக்காரருக்கு இரண்டு லட்சம் பவுன்கள் நட்ட ஈடு அளிக்க வேண்டும் என்று தீர்ப்பளித்தனர்.

பலகையைக் கப்பலின் சரக்கறையில் விழும்படி விட்டது கவனமில்லாத செயல். அவ்வாறு விழுந்ததன் நேரடி விளை

வாகவே தீப்பற்றிக் கப்பல் எரிந்துவிட்டது. பலகை விழுந்ததால் கப்பலே எரிந்து போகும்படியான தீ உண்டாகலாம் என்பது எவரும் சாதாரணமாக எதிர்பார்க்க முடியாததுதான். ஆனல், ஒரு கவனமில்லாத செயல் செய்யப்பட்ட பின், அதன் விளைவு முன்னறியத்தக்கதாக இல்லாவிடினும் அது கவனமின்மைச் செயலின் நேரடி விளைவாக இருந்தால், அதற்குப் பொறுப்பு கவனமின்றி நடந்து கொண்டவரையே சேருகின்றது. இவ்வாறு, "நேரடி விளைவு"க் கொள்கையை இந்த வழக்கில் விரிவாகக் கூறினர்.

## (3) முன்னறியத்தக்க விளைவுத் தொடர்பு

1921ஆம் வருடம் ஏற்பட்ட Re Polemis வழக்கின் கொள்கை தவறானது என்று 1961 ம் ஆண்டில் The Wagon Mound (1961) A. C. 388 என்ற வழக்கில் தீர்ப்புக் கூறப்பட்டது. The Wagon Mound வழக்கின் விவரம்:

எதிர்வாதி தமக்குச் சொந்தமான Wagon Mound என்ற கப்பலுக்கு எண்ணெயைக் கவனமின்றி ஊற்றியதால், கடலில் எண்ணெய் சிந்திக் கடல் நீரின்மேல் எண்ணெய் படர்ந்து நின்றது. வாதிக்குச் சொந்தமான சரக்குகள் ஏற்றியிறக்கும் துறையிலுள்ள கடல் நீரின் மேலும் இந்த எண்ணெய் பரவியிருந்தது. எண்ணெய் இவ்வாறு பரவி 60 மணி நேரம் கழித்து எண்ணெயில் தீப்பற்றியதால் வாதியின் சரக்குத் துறைக்கு மிகுந்த சேதம் விளைந்தது. உலோகத்தைப் பற்ற வைப்பதற்கென்று வாதியின் துறையில் வேலை நடந்து கொண்டிருக்கும்பொழுது சிதறிய நெருப்புப் பொறியாலேயே கடல் நீரில் மிதந்த எண்ணெய் தீப்பிடித்து, இந்த நெருப்புத் தோன்றியது. இதற்கு எதிர்வாதி பொறுப்பாவதில்லை என்று தீர்ப்பளித்தனர்.

இப்படி நெருப்பால் விளைந்த சேதம் சாதாரணமாக இந்த அளவில் நிகழுவதில்லை. எனவே, அது எதிர்வாதியின் கவனமின்மையின் நேரடி விளைவாக இருந்தாலும், சாதாரண முன்மதியுள்ள மனிதனல் இவ்வாறு கேடு விளையலாம் என்பது முன்னறிய முடியாததாகும். முன்னறிய முடியாத விளைவிற்கு எதிர்வாதி பொறுப்பாவதில்லை. Re Polemis வழக்கில் விளக்கப்பட்ட "நேரடி விளைவு"க் கொள்கை தவறானது என்று The Wagon Mound வழக்கில் கூறப்பட்டது.

இது இங்கிலாந்தில் பிரிவி கவுன்சிலின் (Privy Council) தீர்ப்பாகும்.

தீங்கால் ஏற்பட்ட நேரடியான விளைவுகளுக்கெல்லாம் தீங்கிழைத்தவர் பொறுப்பாகின்றார் என்பது Re Polemis வழக்கில் இயற்றப்பட்ட

கொள்கை. ஆனல் இது இப்பொழுது மாற்றப்பட்டு விட்டது. முன்னறியத்தக்க விளைவுகளுக்கு மட்டுமே தீங்கிழைத்தவருக்குப் பொறுப்பு உண்டு என்பது The Wagon Mound வழக்கில் உள்ள கொள்கை.

“ஒருவர் கவனமின்மையான தீங்கு செயலை (act of negligence)ச் செய்கின்ருர். இதன் பயனுகச் சிறிய அளவில் கேடு விளையலாம். இவ்வாறு, சிறிய அளவு கேடு விளையத்தக்க செயலை ஒருவர் செய்ததால், நேரடியாக விளைந்த கேடுகள் எவ்வளவு பெரிய அளவில் இருந்தாலும், அத்தனைக்கும் அவரே பொறுப்பாக வேண்டும் என்று கூறுவது முறையன்று. ஒரு செயலால் நிகழத்தக்க (Probable) விளைவுகளுக்கே செயலைச் செய்தவர் பொறுப்பாக முடியும். நிகழத்தகாத, முன்னறியமுடியாத விளைவுகளுக்கும் அவரையே பொறுப்பாக்கும் கொள்கை கொடுமையானதாகும். நிகழத்தக்க, சாதாரணமாக முன்னறியத்தக்க (foreseeable) விளைவுகளுக்கு மட்டுமே தீங்கிழைத்தவரைப் பொறுப்பாக்குவதுதான் முறையான, நீதிக்கும் நேர்மைக்கும் உகந்த கொள்கையாகும்”. இவ்வாறு, The Wagon Mound வழக்கில் விளக்கிக் கூறப்பட்டது.

முன்னறியத்தக்க விளைவுகளுக்கே தீங்கிழைத்தவர் பொறுப்பு என்பதுதான் இன்றைய சட்ட விதியாகும்.

ஒருவர் கவனமின்றிக் காரை ஓட்டி, இன்னெருவர்மீது மோதிவிட்டதால், மோதப்பட்டவர் விழுந்து உடனே இறந்து விடுகிருர். இறந்தவருக்கு இருதயம் மிகவும் வலுவின்றி இருந்ததால் தான் அவர் உடனே இறந்து விட்டார் என்றும், இருதய நோய் இல்லாதிருந்தால் அவர் பிழைத்திருப்பார் என்றும் தெரிய வருகிறது. இப்பொழுது அவர் இறந்தது காரால் மோதப்பட்டதன் விளைவாகவா இல்லையா? இதை முன்னறியத்தக்க விளைவாகவே கொள்ளவேண்டும் என்பது விதி.

ஒருவருடைய உடலுக்கு ஊறு விளைவிக்கும் செயலைச் செய்தவர், அதனல் தோன்றும் எல்லா விளைவுகளுக்கும் பொறுப்பாகின்ருர். ஊறு விளைக்கப்பட்டவரின் உடல் நோயாலோ, உடல் வலுவின்மையாலோ, அவருக்கு எதிர்பார்க்க முடியாத அளவிற்கும் அதிகமான கேடு விளைந்து விடலாம். எனினும், தீங்கிழைத்தவர் இதைச் சமாதானமாகக் கூறிப் பொறுப்பிலிருந்து தப்புவதற்கில்லை. [Dulieu V. White - (1901) 2. K. B. 669]

எதிர்வாதி, வாதியின் உடலைத் தாக்கி வாதியின் கையில் காயம் விளைவித்தார். இந்தக் காயத்திற்கு மருந்து கட்டுவதற்கென வாதி வைத்தியசாலைக்குச் செல்லுகிருர். அங்கு அவர்

வழுக்கி விழுந்து மண்டை உடைந்துவிட்டது. இப்பொழுது, வாதிக்கு மண்டை உடைந்ததற்கு எதிர்வாதி பொறுப்புடையவரா? எதிர்வாதியின் செயலால் தான் வாதி வைத்திய சாலைக்குச் சென்ருர். வைத்தியசாலைக்குச் செல்லவில்லை என்ருல் வாதி வழுக்கி விழுந்திருக்க மாட்டார். எனினும், வாதி வழுக்கி விழுந்தது எதிர்வாதியின் செயலுக்குத் தொடர்பில்லாதது. எனவே, வாதி வழுக்கி விழுந்ததால் ஏற்பட்ட காயத்திற்கு எதிர்வாதி பொறுப்பாவதில்லை. [The San Onofre (1922) P. 243]

வாதிக்கு ஏற்பட்ட காயத்திற்கு வைத்தியம் செய்த வைத்தியரின் கவனக் குறைவால், வாதிக்கு நோய் அதிகமாகிறது என்று வைப்போம். இதற்கு யார் பொறுப்பு? வைத்தியரின் கவனமின்மைச் செயலால் வாதியின் நோய் அதிகமாஞலோ, அல்லது புதிய நோய் தோன்றிஞலோ, அதற்கு முதலில் காயத்தை விளைவித்த எதிர்வாதி பொறுப்பன்று.

### (4) இடை நிகழ் புதுச்செயல்கள் (Intervening new acts)

ஒரு செயலின் நேரடி விளைவுகளை நாம் அறிவது எளிதானதாகும். ஒரு செயலுக்கும் விளைவிற்கும் இடையில் வேறு செயல்கள் எவையும் குறுக்கிடாமல் இருந்தால், இன்ன செயலால் இன்னது விளைந்தது என்பதை ஐயமற நாம் அறிகின்ருேம். சிலவேளைகளில், ஒரு செயலுக்கும் ஒரு விளைவிற்கும் இடையில் புதிய செயல்கள் குறுக்கிடுவதுண்டு. இப்போது, அந்த விளைவிற்கான காரணம் முதற்செயலா, அல்லது குறுக்கிட்ட செயலா என்பதை நிர்ணயிப்பதில் சிக்கல்கள் தோன்றுகின்றன.

செயலுக்கும் விளைவிற்கும் இடையில் நிகழும் புதுச் செயல்களை "இடைநிகழ் புதுச்செயல்கள்" (Novus actus interveniens) என்பார்கள். இவைகளைப் "புதிதாகக் குறுக்கிடும் செயல்கள்" என்றும் கூறலாம்.

இடைநிகழ் புதுச் செயல்கள் ஏற்படக் காரணம் என்ன? இவைகளின் தன்மை என்ன? இச் செயல்களுக்கும் முதற் செயலுக்கும் உள்ள தொடர்பு என்ன? முதற் செயலுக்கும் விளைவுக்கும் உள்ள காரண காரியத் தொடர்பைத் துண்டிக்கும் வகையில் இடைநிகழ் புதுச் செயல்கள் எழுந்தனவா? இந்தக் கூறுகளையெல்லாம் ஆராய்ந்தே முதற் செயலுக்கும் விளைவுக்கும் உள்ள தொடர்பை நாம் உறுதி செய்யவேண்டும்.

இடை நிகழ் புதுச் செயலின் இயல்பை நாம் முதலில் காணவேண்டும். இது தற்காப்புச் செயலாகவோ, கடமையின்பாற்பட்டதாகவோ, உரிமை கொண்டாடும் வகையிலோ இருக்கலாம்.

பிறருடைய தற்காப்புச் செயல்கள்:—ஒருவருடைய கூரைமீது மற்ருெருவர் தீப்பந்தம் ஒன்றை வீசுகின்ருர். அந்த வீடு தீக்கிரையாகிறது. இப்போது, தீப்பந்தத்தை வீசிய செயலால்தான் வீடு அழிந்தது என்று உறுதியாக நாம் கூறமுடிம். அடுத்த உதாரணம்: தீப்பந்தத்தை முதலில் எறிந்தவர் மற்ருெருவரின் கடைக்குள் எறிகின்ருர். கடைக்காரர் தம் கடையைக் காப்பாற்றிக் கொள்ளும் நோக்கத்துடன் அந்தப் பந்தத்தை எடுத்து இன்னொருவரை நோக்கி வீசுகின்ருர். இவ்வாறு வீசப்பட்டவர் தம் மேலே விழவந்த பந்தத்தைப் பிடித்து வேறுபக்கமாக வீசுகின்ருர். அது ஒருவர் முகத்தில் விழுந்து காயத்தை ஏற்படுத்தியது. இப்போது, கடைசி நபரின் முகத்தில் காயம் விளைந்ததற்கு யார் பொறுப்பு? பந்தத்தை முதன் முதலாக வீசியவரா? அல்லது காயமடைந்தவர் முகத்தின் மீது கடைசியில் எறிந்தவரா? அல்லது அவர்கள் எல்லோருமா? முதன் முதலாக தீப்பந்தத்தை வீசி எறிந்தவரே பொறுப்பாகின்ருர். [Scott. V. Shepherd (1773) 2. W. Bl. 892] இடையில் பந்தத்தை எறிந்தவர்கள் இருவரும் தங்களைக் காப்பாற்றிக் கொள்ளும் பொருட்டே அவ்வாறு செய்தனர். தன்னிச்சையாக நிதானித்து அவர்கள் பந்தத்தைப் பிறர்மீது வீசவில்லை. எனவே பந்தத்தை இடையில் எறிந்தவர்கள் விளைவிற்குப் பொறுப்பு ஆவதில்லை.

இடைநிகழ் புதுச் செயல்கள் தற்காப்புச் செயல்கள் எனில், முதற்செயலே கடைசி விளைவிற்குக் காரணமாகக் கருதப்படுகிறது.

### எதிர்வாதியே காரணமாயிருத்தல்

இடைநிகழ் செயலுக்கு எதிர்வாதியே காரணமாக இருப்பதுண்டு. அவ்வாருயின், விளைவுக்கான பொறுப்பு அவரையே சேருகின்றது. எதிர்வாதி, வாதியைக் குறித்த அவதூறினை இழைத்துவிட்டு அதை மீண்டும் பிரசுரிக்குமாறு இன்னொருவருக்குச் சொல்லுகின்ருர். இரண்டாவது பிரசுரத்திற்கான பொறுப்பு எதிர்வாதியையே சேருகின்றது. [Weld - Blundell V. Stephens (1920) A. C. 956] அவதூறு பிரசுரம் ஆனது எதிர்வாதிக்குச் சம்பந்தம் இல்லாதது எனில் அதற்கு அவர் பொறுப்பாவதில்லை.

இடைநிகழ் செயலுக்கு எதிர்வாதியே காரணமாயிருந்தால் விளைவிற்கான பொறுப்பு அவரையே சேருகின்றது.

### எதிர்வாதியின் கவனமின்மையின் காரணத்தால் எழும் இடைநிகழ்ச் செயல்கள்

வாதி வீட்டில் எதிர்வாதி வர்ணம் பூசிக்கொண்டிருந்தார். வாதி எதிர்வாதியிடமே வீட்டைவிட்டுச் சென்றிருந்தார். எதிர்

வாதி வெளியே செல்லவேண்டியிருந்தால் வீட்டின் வெளிக் கதவைப் பூட்டிச் செல்லுமாறு வாதி கூறியிருந்தார். ஏதோ ஒரு சாமான் வாங்குவதற்கென எதிர்வாதி வெளியே சென்றுவிட்டு இரண்டு மணி நேரங்கழித்துத் திரும்பி வந்து சேர்ந்தார். ஆனல் போகும்போது வீட்டின் வெளிக்கதவைப் பூட்ட மறந்துவிட்டார். எதிர்வாதி வெளியே போயிருந்த வேளையில், வாதியின் வீட்டிற் குள் புகுந்து ஒரு திருடன் வாதியின் நகைகளைத் திருடிப் போய் விட்டான். எதிர்வாதியே இதற்குப் பொறுப்பாக்கப்பட்டார். திருடியது மூன்ருவது நபரின் செயல்தான். ஆனல் அது எதிர் வாதியின் கவனமின்மையால் விளைந்த செயல். எனவே, எதிர் வாதியே அந்தத் திருட்டால் விளைந்த நட்டத்திற்குப் பொறுப்பு என்பது தீர்ப்பு. [Stansbie V. Troman (1948) 2. K. B. 48]

குதிரை பூட்டிய வண்டியைத் தெருவில் கவனிப்பாரற்ற வகையில் நிறுத்திவிட்டு எதிர்வாதி எங்கேயோ சென்றிருந்தார். தெருவில் போய்க்கொண்டிருந்த சிறுவன் குதிரைமீது கல்லெறி யவே, குதிரை மிரண்டு ஓடி வாதியின்மீது மோதிக் காயம் விளை வித்தது. பையன் கல்லெறிந்த செயலால்தான் குதிரை ஓடியது என்ருலும், குதிரையையும் வண்டியையும் தெருவில்விட்டுவைத்தது எதிர்வாதியாகையால் அவரே வாதியின் காயத்திற்குப் பொறுப் பாக்கப்பட்டார். [Haynes V. Harwood (1935) 1 K.B. 146]

''இசைந்து ஏற்பது தீங்காவதில்லை'' என்ற பகுதியில் எதிர் வாதியால் விளைவிக்கப்படும் ஆபத்தைத் தடுப்பதற்கென்று வாதி ஈடுபடும் செயல்களால் அவருக்குக் கேடு விளைந்தால் அதற்கு எதிர் வாதியே பொறுப்பாகிருர் என்று கண்டோம். இடையில் குறுக் கிடும் வாதியின் செயல் சட்டமுறையான செயலாவதால், அந்தக் குறுக்கீட்டிற்கான அவசிய நிலையை ஏற்படுத்திய எதிர்வாதியே குறுக்கீட்டால் விளைந்த கேட்டிற்கும் பொறுப்பாக்கப்படுகிருர். மேலே கூறப்பட்ட Haynes V. Harwood என்ற வழக்கில் இந்த விதியும் கூறப்பட்டது.

எதிர்வாதியின் கவனமின்மையால் ஒரு குழந்தைக்கு ஆபத்து விளையவிருக்கிறது. அந்த ஆபத்திலிருந்து குழந்தையைக் காப்பாற்றுவதற்கு வாதி முற்படுகிருர். அந்த முயற்சியில் அவ ருக்குக் காயம் விளைந்தால், அதற்கும் எதிர்வாதியே பொறுப் பேற்க வேண்டும். [Morgan V. Aylen (1942) 1. A. E. R. 489]

சிறுவர்களிடம் ஓர் ஆபத்து விளைவிக்கும் பொருளைக் கொடுத்தல் ஆகாது. அவ்வாறு கொடுத்து, சிறுவர்களின் செயல் களால் அவர்களுக்கோ, அல்லது பிறருக்கோ கேடு விளைந்தது எனில் அதற்கான பொறுப்பு ஆபத்தான பொருளைச் சிறுவர்

களிடம் முதலில் கொடுத்தவரையே சேருகின்றது. [Newton V. Edgerley (1959) 1. W. L. R. 1031]

இவ்வாறு, இடைநிகழ் புதுச் செயல்கள் எதிர்வாதியின் கவனமின்மையின் காரணமாக ஏற்பட்டால் விளைவிற்கான பொறுப்பை எதிர்வாதியே ஏற்கவேண்டும்.

### சட்டமுறையான வாதியின் செயல்கள்

எதிர்வாதியின் கவனமின்மையால் அவர் ஓட்டிவந்த கப்பல் இன்னொரு கப்பலுடன் மோதியது. மோதப்பட்ட கப்பல் மூழ்கி விடும் என்று அஞ்சிய அக்கப்பலின்தலைவர் உயிர்க்காப்புப் படகில் தாமும், இன்னோர் அதிகாரியும் ஏறிக்கொண்டு எதிர்வாதியின் கப்பலுக்குச் செல்ல முயன்றார். கடலின் கொந்தளிப்பால் உயிர்க் காப்புப் படகு கவிழவே அதிலிருந்த அதிகாரி கடலில் மூழ்கி மாண்டார். இறந்த அதிகாரியின் வாரிசுகள் எதிர்வாதியிட மிருந்து நட்டஈடு பெறலாம் என்று தீர்ப்பளித்தனர். [The Oropesa (1943) P. 32]

### உரிமையைக் கொண்டாடும் வகையில் உள்ள செயல்கள்

தம் உரிமையைக் கொண்டாடும் பொருட்டு ஒருவர் ஒரு செயலைச் செய்யலாம். இத்தன்மையுடைய இடைநிகழ் செயல் களால் முதற் செயலுக்கும் விளைவிற்கும் உள்ள தொடர்பு மறை வதில்லை.

கூரிய முனைகளுடன் கூடிய கம்பிகள் பொருத்தப்பட்ட தடியைப் பொதுப்பாதையின் குறுக்கே போட்டு எதிர்வாதி அப் பாதையைத் தடுத்திருந்தார். பாதையில் சென்று கொண்டிருந்த இன்னொருவர் தடுப்பை அகற்றும் வகையில் அந்தத் தடியை எடுத்துப் பாதையின் ஓரத்தில் நட்டுவைத்துச் சென்றார். வாதி, அவ்வாறு நிறுத்தப்பட்டிருந்த தடியில் மோதியதால் அதிலுள்ள கம்பி ஒன்று அவரது கண்ணைக் குத்திக் காயம் விளைவித்தது. இதற்கு எதிர்வாதியே பொறுப்பாக்கப்பட்டார். [Clark V. Chambers (1878) 3. Q. B. D. 327]

தடியை அகற்றிப் பாதையின் ஓரமாக நட்டு வைத்தது மூன் றுவது நபர் செய்த புதுச் செயல்தான். இருப்பினும், பாதையைத் தாம் பயன்படுத்தும் உரிமையைக் கொண்டாடும் வகையிலேயே அவர் அவ்வாறு செய்தார். எனவே அச்செயல் எதிர்வாதியின் முதற்செயலின் தொடர்ச்சியாகவே கருதப்படுகிறது.

### அதிர்ச்சியால் விளையும் கேடுகள்

ஒரு செயலினால் ஏற்பட்ட அதிர்ச்சியால் விளையும் கேடுகளும் நேரடி விளைவான கேடுகளாகவே கருதப்படுகின்றன.

எதிர்வாதியின் கவனமின்மையால் மோட்டார் லாரி ஒன்று தாஞகவே ஒரு சரிவான குறுகிய சாலேயில் வேகமாக ஓடிவந்து கொண்டிருந்தது. அந்தத் தெருவில் சிறிது தூரத்தில் விளே யாடிக் கொண்டிருந்த குழந்தையின் தாய், தன் குழந்தை மீது லாரி மோதிவிடுமோ என்று பயந்து பதறி நின்ருள். தெருவில் நின்றவர்கள் ஒரு குழந்தைமீது அந்த லாரி மோதியதாகச் சொன்னுர்கள். அவர்கள் குழந்தையை வருணித்தது தன் குழந்தைக்குப் பொருத்தமாக இருந்ததால், தன் குழந்தைதான் அடிபட்டது என்ற எண்ணத்தால் அதிர்ச்சியுற்று, அதிர்ச்சியின் பயனுய் அவள் இறந்துவிட்டாள். இறந்த பெண்ணின் கணவன் எதிர்வாதியிடமிருந்து நட்டஈடு பெறலாம் என்று தீர்ப்பளித் தனர். [Hambrook V. Stokes (1925) 1.K. B. 141.] எதிர்வாதியின் கவனமின்மையான செயலால்தான் இறந்த பெண்ணிற்கு அதிர்ச்சியும் மரணமும் விளேந்தன என்று தீர்ப்பில் கூறினர்.

### முன்னறிய முடியாத இடைநிகழ் புதுச் செயல்கள்

முதற் செயலுடன் சம்பந்தமுடைய இடைநிகழ் புதுச் செயல்களே முதற்செயலுடன் தொடர்புடைய செயல்களாகக் கொள்ளுகிருேம். ஆனுல் முதற்செயலுடன் எவ்வித சம்பந்தமும் இல்லாத, முன்னறிய முடியாத, இடைநிகழ் செயல்களின் விளேவு களுக்கு முதற் செயலேச் செய்தவர் பொறுப்பாவதில்லே.

மீன் விற்கும் கர்ப்பவதியான பெண் ஒருத்தி ஒரு டிராம் வண்டியிலிருந்து இறங்கிக் கொண்டிருந்தாள். டிராம் வண்டிக்கு அருகில் ஒரு மோட்டார் சைக்கிளில் சென்றவர் கவனமில்லாமல் இன்னெரு மோட்டாருடன் மோதி அதனுல் இறந்தார். இந்த மோதலே நேரடியாக மீன் வாணிச்சி பார்க்கவில்லே. ஆனுல் அந்த மோதலின் ஒலியைக் கேட்ட அவள், இறந்தவரின் உடல் அகற்றப்பட்ட பின்னர், விபத்து நடந்த இடத்தில் கிடந்த இரத் தத்தையும் கண்டாள். அதனுல் ஏற்பட்ட அதிர்ச்சியின் காரணமாக அவளுக்குக் குறைப்பிரசவம் ஏற்பட்டது. மீன் வாணிச்சிக்கு விளேந்த இக்கேட்டிற்கு மோட்டார் சைக்கிளேக் கவனமின்றி ஓட்டியதால் இறந்து போனவரின் வாரிசுகள் பொறுப்பல்லர் என்று தீர்ப்புக் கூறினர். இறந்தவரின் கவனமின்மையால்தான் அவருக்கு மரண விபத்து விளேந்தது. எனினும், தெருவில் சம்பந்தமில்லாது நின்றுகொண்டிருந்த இந்தப் பெண்ணேப் பொறுத்த கடமை எதுவும் அவருக்கில்லே. மீன் வாணிச்சிக்கு ஏற்பட்ட குறைப் பிரசவம் இறந்தவரின் கவனமின்மையால் ஏற்பட்ட நேரடி விளேவன்று என்று தீர்ப்புக் கூறினர். [Bourhill V. Young (1943) A. C. 92]

இரயில் வண்டியில் கூட்டம் அதிகமாக இருந்தது. இதனால், வண்டியில் ஏற்பட்ட நெருக்கடியைப் பயன்படுத்தி வாதியிடமிருந்த பணத்தை எவரோ ஒருவர் திருடிக்கொண்டார். பணம் திருட்டுப் போனதற்குக் கூட்டத்தை அதிகமாக வண்டியில் ஏற விட்ட இரயில்வேக் கம்பெனிதான் பொறுப்பு என்று கூறி, வாதி வழக்கிட்டார். அது தள்ளுபடி செய்யப்பட்டது. வாதிக்கு விளைந்த கேடு இரயில்வேக் கம்பெனியின் செயலுடன் தொடர்பில்லாதது என்று தீர்ப்புக்கூறினர், [Cobb V. Great Western Ry. (1894) AC. 419]

இவ்வாறு, இடைநிகழ் புதுச் செயல்களின் தன்மையை நன்கு ஆராய்ந்து முதற்செயலைச் செய்தவரின் பொறுப்பு நிர்ணயிக்கப்படுகிறது. முதற்செயலைச் செய்தவரால் முன்னறியத்தக்கதாக, எதிர்பார்க்கத் தக்கதாக, இடைநிகழ் புதுச் செயல்கள் இருந்தால், இறுதி விளைவுகளுக்கு முதற்செயலைச் செய்தவரே பொறுப்பாகின்றார்.

## (5) தீங்கிழைத்தோரின் பொறுப்பு என்ன?

ஒரு செயலுக்கும் அதன் விளைவிற்கும் உள்ள காரணகாரியத் தொடர்பை நிர்ணயிப்பதில் ஏற்படும் சிக்கல்களை நாம் கண்டோம். தீர்ப்புக்களில் பலதிறப்பட்ட விதிகள் இயற்றப்பட்டதையும் கண்டோம். தர்க்க சாத்திரப்படியோ, தத்துவக் கொள்கைகளை வைத்தோ விதிகள் அமைக்க முற்பட்டதால்தான் சிக்கல்கள் எழுந்தன. எல்லாவித வழக்குகளுக்கும் முழுதும் பொருந்தும் வகையில் ஒரு பொதுவிதியை வகுக்க வேண்டுமென்ற முயற்சியால் விளைந்த சிக்கல்களே முரண்பட்ட பல தீர்ப்புக்களுக்குக் காரணமாயிருந்தன.

தீங்கியல் சட்டத்தில் ஒரு செயலுக்கும் விளைந்த கேட்டிற்கும் உள்ள காரண காரியத் தொடர்பை ஆய்வது, விளைந்த கேட்டிற்கு யாரைப் பொறுப்பாக்குவது என்ற நோக்கத்தை அடிப்படையாகக் கொண்டது. வாதிக்கு விளைந்த கேட்டிற்கு எதிர்வாதியின் தீங்குச் செயல்தான் காரணமா என்பதை ஆய்ந்தே, அந்தக் கேட்டிற்கான பொறுப்பை எதிர்வாதி ஏற்க வேண்டுமென்று கூறுகிறோம். எனவே, எதிர்வாதியின் பொறுப்பை உறுதி செய்வதற்காகவே, காரணகாரியத் தொடர்பு என்ற கொள்கை கையாளப்படுகிறது.

பலதிறப்பட்ட வழக்குகளிலும் எதிர்வாதிக்கான பொறுப்பை அந்தந்த வழக்குக்களின் மாறுபட்ட சூழ்நிலைகளுக்குத் தக்கபடியே உறுதி செய்ய வேண்டியதிருக்கிறது. இவ்வாறு உறுதி

செய்வதில் பொதுவாக உள்ள விதிகளைக் கீழ்க்கண்டவாறு கூறலாம்:—

(1) ஒருவர் கருதிச் செய்த கேடுகளுக்கு (Intended damages) அவர் பொறுப்பாகின்றார்;

(2) கருதாது செய்யப்படும் செயல்களை (Unintended acts)க் கவன மின்மைச் செயல்கள் என்கிறோம். முன்னறியத்தக்க விளைவுகளுக்குக் கவனமின்மைச் செயலைச் செய்தவர் பொறுப்பாகின்றார். முன்மதியுள்ளவரால் முன்னறியத்தக்க விளைவுகள் (reasonably foreseeable consequences) அனைத்திற்கும் கவன மின்மைத் தீங்கை இழைத்தவரே பொறுப்பு என்பது சட்டம்.

(3) முன்னறியத்தக்க இடைநிகழ் புதுச்செயல்களால் (foreseeable intervening acts) ஏற்படும் விளைவுகளுக்கும் தீங்கான முதற் செயலைச் செய்தவர் பொறுப்பாகின்றார்.

---

## பகுதி 7

## தீங்கு தீரும் வகைகள்

### (தீங்கிற்கான நிவாரணங்கள்) (Remedies)

*(அ) தன் முயற்சி நிவாரணம் - அத்துமீறி நுழைந்தவர்களை அகற்றல், மீண்டும் புகுதல், அத்துமீறிய விலங்குகளை அடைத்து வைத்தல், தொல்லை அகற்றல் - (ஆ) நீதிமுறை நிவாரணம் - நட்ட ஈடு - பெயரளவு நட்ட ஈடு, அற்பமான நட்ட ஈடு - உண்மையான அல்லது கேட்டிற்குத் தக்க நட்ட ஈடு - பொது நட்டஈடு, தனித்த நட்டஈடு-அறிவுறுத்தும் நட்ட ஈடு, தண்டனையான நட்ட ஈடு - நீதிமன்ற ஆணைகள் - தடையிடும் ஆணை, செய்யெனும் ஆணை - வழக்கிடை ஆணை, நிரந்தர ஆணை - (இ) குறித்த பொருளை மீண்டும் பெறுதல்.*

"தீங்கு விளைந்தால் அதற்குத் தீர்வு உண்டு" என்ற அடிப்படைக் கொள்கையின் படியே "தீங்கியல்" சட்டம் இயங்குகிறது எனக் கண்டோம். எனவே ஒவ்வொருவரும் தமக்கு விளையவிருக்கும் தீங்கைத் தவிர்க்கவும், விளைந்த தீங்கிற்கு நிவாரணம் பெறவும் சட்டம் வகை செய்கின்றது. இந்த நிவாரணங்களின் வகைகளைப்பற்றி இனிக் காண்போம்.

நிவாரணங்கள் இருவகைப்படும்:

அ. தன் முயற்சி நிவாரணம் (Self-redress)

ஆ. நீதி முறை நிவாரணங்கள் (Judicial Remedies)

### (அ) தன் முயற்சி நிவாரணம் (Self-Redress)

தம்முடைய உடலுக்கோ, சொத்திற்கோ தீங்கு விளையலாம் என்று ஒருவர் எதிர்பார்க்கின்றார். அத்தீங்கு விளையாமல் தடுப்பதற்கான நிவாரணத்தை நீதிமன்றத்தில்தான் ஒருவர் பெற வேண்டும் என்ற கட்டாயம் சட்டத்தில் இல்லை. உடனடியாக விளையவிருக்கும் தீங்கை ஒருவர் தம் முயற்சியாலேயே தடுக்க வேண்டிய நிலை ஏற்படலாம். இந்நிலையில் அவர் தம் முயற்சி கொண்டு தீங்கு விளையாதவாறு தடுத்துக் கொள்ளலாம். நமது உடலுக்கு ஊறு விளைக்க வருபவர்களை நாமே தடுத்து நிறுத்தல், நம் பொருளைப் பறித்துக் கொண்டு போகின்றவர்களைப் பிடித்துப் பொருளை மீட்டல், இவை போன்ற செயல்கள் தன்முயற்சியால் தீங்கைத் தடுப்பதாகின்றன. இது தற்காப்புச் செயல் (Private Defence) எனப்படும். இது பற்றி முன்னர்க் கண்டோம். விளையவிருக்கும் தீங்கைத் தடுப்பது போன்றே,

ஒருவர் விளைந்த தீங்கிலிருந்து தம் முயற்சியால் விடுதி பெறலாம். விளைந்த தீங்கை ஒருவர் தம் முயற்சி கொண்டு விலக்குவதைத் "தன் முயற்சி நிவாரணம்" (Self-redress) என்று கூறுகிறோம்.

தன் முயற்சியால் தீங்கு விளையாமல் தடுப்பதைத் "தற்காப்பு" என்றும் தன் முயற்சியால் தீங்கை அகற்றுவதைத் "தன்முயற்சி நிவாரணம்" என்றும் கூறுகிறோம்.

தன் முயற்சியால் ஒருவர் தீங்குகளைத் தீர்த்து விடுதி பெறுவதைச் சட்டம் ஒப்புகிறது. எந்தச் சூழ்நிலைகளில் தன்முயற்சி பயன்படுகிறது?

## (1) அத்துமீறி நுழைந்தவரை அகற்றல் (Expulsion of the Trespasser)

நம்வீடு, நிலம் இவைகளில் அத்துமீறி நுழைந்திருப்பவர்களை (Trespassers) நாம் நம் முயற்சியாலேயே வல்லந்தமாகவேனும் வெளியேற்றலாம். அவ்வாறு வெளியேற்றுகையில், அதற்கு வேண்டிய அளவிற்கு அதிகமான பலாத்காரத்தைப் பயன்படுத்தல் கூடாது. நம்முடைய நேரடி உடைமையில் உள்ள சொத்தில் அத்துமீறி நுழைந்தவர்களைப் பொறுத்தே இந்த வழியை நாம் மேற்கொள்ளுதல் முறையாகும்.

## (2) மீண்டும் புகுதல் (Re-entry)

ஒருவருடைய நிலச்சொத்தில் பிறர் அத்துமீறி ஆக்கிரமித்துக் கொண்டால், அந்த ஆக்கிரமிப்பை அகற்றுவதற்கென அச் சொத்தில் மீண்டும் புகுவதற்கான உரிமை அவருக்கு உண்டு. இவ்வாறு, நுழையும்போதும் பலாத்காரத்தை மேற்கொள்ளுதல் தகாது.

## (3) அத்துமீறிய விலங்குகளை அடைத்து வைத்தல் (Distress damage feasant)

ஒருவரின் நிலத்தில் நுழைந்து பயிரை அழித்த கால்நடைகளைக் கிராமப் பட்டியில் (Village Pound) அவர் அடைத்து வைக்கலாம். கால் நடைகளால் விளைந்த நட்டத்திற்கு ஈடுபெறும் வரையில் அதை நிறுத்தி வைக்கும் உரிமை ஒருவருக்கு உண்டு என்று ஆங்கில நாட்டுத் தீர்ப்புக்கள் விதிக்கின்றன. உடலுக்கோ, சொத்திற்கோ கேடு விளைத்த விலங்காக இருக்கவேண்டும்; அது நம் நிலத்தில் இருக்கவேண்டும்; அப்பொழுதுதான் அதை நாம் பிடித்து அடைக்கலாம். நிலத்தை விட்டு வெளியேறிய பின் பிடித்து அடைப்பது கூடாது. [Vaspor V. Edwards (1707) 12 Mod. 658]

நம் நிலத்தில் வந்து கிடக்கும் பிறர் பொருள்களை நாம் வைத்துக்கொண்டு அதனால் விளைந்த கேட்டிற்கு ஈடுசெய்யும்படி கோரலாம். கண்ணாடிச் சன்னலை உடைத்துக் கொண்டு வீட்டிற்குள் வந்து விழும் பந்தை உடனே நாம் திருப்பிக்கொடுக்க வேண்டியதில்லை. உடைந்த கண்ணாடிக்கு உரிய நட்ட ஈட்டைப் பெறுவதற்கு அதைப் பிணையமாக வைத்திருக்கலாம்.

### (4) தொல்லை அகற்றல் (Abatement of Nuisance)

பிறரால் நமக்குத் தொல்லை (Nuisance) விளைந்தால் அதை அகற்றும் உரிமை நமக்கு உண்டு. தொல்லைகளை அகற்றுவது எவ்விதப் பலாத்காரமுமின்றிச் செய்யப்பட வேண்டும். பொதுவாக, தொல்லை விளைவிப்பவரை அதை நிறுத்தும்படி கேட்டு அதற்குப் பின்னும் தொல்லை விளைவித்தால்தான் நாமே அதை அகற்ற முற்படுதல் முறையாகும்.

அடுத்தவர் நிலத்திலுள்ள மரத்தின் கிளைகள் நம் நிலத்திற்கு நேர் மேலாகப் பரவி வளர்ந்து அதனால் தொல்லைகள் விளைவதுண்டு. அந்தக் கிளைகளை நாமே வெட்டி அகற்றலாம். [Lemmon V. Webb (1895) A. C. 1.] ஆனால் வெட்டிய கிளைகளை நாமே வைத்துக்கொள்ளுவது கூடாது. [Mills V. Brooker (1919) 1. K. B. 555] இம்மாதிரியே நம் சொத்திற்குள்ள பாதையைத் தடை செய்யும் தடுப்பை நாம் அகற்றலாம்.

தன் முயற்சியால் தொல்லைகள் அகற்றப்படும்பொழுது பிறருக்குக் கேடு விளையாமலும், அமைதிக்குப் பங்கம் ஏற்படாமலும் பார்த்துக்கொள்ள வேண்டியது அவசியமாகும். தீங்கிழைத்தவரைத் தண்டிக்கும் வகையிலோ, அவர் இழைத்த தீங்கிற்குப் பதிலாக இன்னொரு தீங்கை அவருக்குச் செய்யும் வகையிலோ தன் முயற்சிச் செயல் இருப்பது கூடாது. "தொல்லை அகற்றல்" போன்ற செயல்களைச் செய்கையில் அவை அளவு மீறிய வல்லந்தச் செயல்களாக மாறிவிடக் கூடாது என்ற எச்சரிக்கைகள் தீர்ப்புக்களில் உள்ளன.

### (ஆ) நீதிமுறை நிவாரணங்கள் (Judicial Remedies)

தீங்கிழைக்கப்பட்டவர் நீதிமன்றத்தில் வழக்கிட்டுப் பெறும் நிவாரணங்களை "நீதிமுறை நிவாரணங்கள்" என்று குறிப்பிடுகிறோம். இவைகளை மூன்று வகைகளாகப் பிரித்துக் கூறுவதுண்டு.

(1) நட்ட ஈடு (Damages)

(2) நீதிமன்றக் கட்டளைகள் (Injunctions)

(3) குறித்த பொருளை மீண்டும் பெறுதல் (Specifci Restitution)

நிகழ்ந்த தீங்கிற்கு ஈடு பெறுதல் நட்ட ஈடு எனப்படுகிறது. நிகழவிருக்கும் அல்லது நிகழ்ந்து கொண்டிருக்கும் தீங்கைப் பொறுத்துத் நீதிமன்றக் கட்டளை பெறப்படுகிறது; தீங்கால் இழந்த பொருளைத் திரும்பப் பெறுதல் மூன்றாவது கூறப்பட்ட நிவாரணம் ஆகும். இந்த நிவாரணங்கள் பற்றி இனி விரிவாகக் காணலாம்.

## (1) நட்ட ஈடு (Damages)

ஈடு பெறத்தக்க கேடுகளே சட்டப்படி "தீங்குகள்" ஆகின்றன. எனவே, நட்ட ஈடு பெறுதல் என்பது "தீங்கியல்" சட்டம் அளிக்கும் சிறப்பான நிவாரணம் ஆகும்.

அளிக்கப்படும் நட்ட ஈட்டின் தன்மையை அடிப்படையாகக் கொண்டு அதற்குப் பலவகைப் பெயர்களைக் கொடுத்திருக்கின்றனர்.

### (i) பெயரளவு (Nominal) நட்டஈடு; அற்பமான (Contemptuous) நட்ட ஈடு

ஒருவருடைய உரிமைக்கு ஊறு விளைந்தால் அது தீங்காகும் என்று கண்டோம். அதன் பயனாய் அவருக்குப் பொருள் அல்லது சொத்து நட்டம் ஏற்படாமல் இருக்கலாம். இது "நட்டமற்ற தீங்கு" (Injuria sine dammo) எனப்படும். பொருள் நட்டம் ஏற்படாவிட்டாலும் ஒருவருடைய உரிமைக்கு விளைந்த ஊறுக்கு ஈடு அளிக்கப்பட வேண்டும் என்பது சட்டம். தீங்கினால் உண்மையில் நட்டம் ஏதும் விளையவில்லையெனில், கொடுக்கப்படும் நட்ட ஈடு பெயரளவில்தான் இருக்கும். நட்ட ஈட்டிற்கு அடையாளமாக மிகச் சிறிய தொகையே அளிக்கப்படுகிறது.

வாதியின் வாக்களிக்கும் உரிமை அதிகாரியால் மறுக்கப்பட்டதால் அதை அவர் தற்காலிகமாக இழந்தார். ஆனாலும், அவர் எவருக்கு வாக்களிக்க எண்ணியிருந்தாரோ அவரே தேர்தலில் வெற்றி பெற்றார். இருப்பினும் வாதிக்குச் சட்டப்படியுள்ள வாக்களிப்பு உரிமை மறுக்கப்பட்டதால் அது தீங்கான செயல் என்று கொள்ளப்பட்டு, அதற்கு நட்ட ஈடு அளிக்கப்பட்டது. இந்த வழக்கில் 'நட்டமற்ற தீங்கின்' தன்மை நன்கு விளக்கப்பட்டது. [Ashby V. White (1703) 2. Ld. Raym. 938]

புகழ்பெற்ற கிரிக்கட் ஆட்டக்காரர் ஒருவருக்கு ஒரு பயணிகள் விடுதியில் இடமளிக்க அதன் சொந்தக்காரரான எதிர்வாதி மறுத்துவிட்டார். வேறு ஒரு பயணிகள் விடுதியில் வாதிக்கு இடமளிக்கப்பட்டாலும் முதல் விடுதியில் இடமளிக்க மறுத்தது தீங்கான செயலாகும் எனக் கொண்டு ஐந்து கினி மட்டும் நட்ட ஈடாக அளிக்கப்பட்டது. [Constantine V. Imperial London Hotels (1944) K. B. 693]

இவ்வாறு, உண்மையான நட்டம் விளையாத சூழ்நிலைகளிலும் சட்டப்படியான உரிமை பாதிக்கப்பட்டது என்ற காரணத்திற்காக, அந்த உரிமையை நிலைநாட்டும் வகையில் அடையாள நட்ட ஈடு அளிக்கப்படுவதைப் பெயரளவு நட்டஈடு (Nominal damages) என்று கூறுகிறோம்.

உண்மையிலேயே தீங்கினால் நட்டம் விளைந்து அதற்கு அளிக்கப்படும் நட்டஈடு "கேட்டிற்குத் தக்க நட்ட ஈடு" எனப் படுகிறது.

சில வழக்குகளில் வாதியின் நடத்தை ஒழுக்க முறையில் பாராட்டத் தகாத நிலையில் இருக்கலாம். அற்பமான தீங்கிழைத்தோர்மீது வீம்புக்கு வழக்கிடுவோருமுண்டு. இவ்வாறு வழக்கிடும் வாதிகளுக்கு அளிக்கப்படும் நட்டஈடு அற்பத் தொகையாகவே இருக்கும். இதை அற்பமான நட்டஈடு (Contemptuous damages) என்பார்கள்.

(ii) உண்மையான அல்லது கேட்டிற்குத் தக்க நட்ட ஈடு (Real or Ordinary damages)

கவனமின்மை போன்ற தீங்குகளைப் பொறுத்த வழக்குகளில் வாதிக்கு நட்டம் அல்லது கேடு விளைந்திருக்கவேண்டும். இல்லையெனில் வழக்கிட முடியாது. உண்மையாகவே பொருள் நட்டம் அல்லது கேடு அடைந்தவர்தாம், இன்னொருவரின் கவனமின்மையால் அந்தக் கேடு விளைந்தது என்று கூறி வழக்கிடமுடியும். இந்த வழக்குகளில், விளைந்த கேட்டின் தன்மையை ஆராய்ந்து அதற்குத் தக்கபடி நட்ட ஈடு அளிக்கப்படுகிறது.

நட்ட ஈடு என்றால் பணமாகவே அளிக்கப்படுகிறது. சில வகைக் கேடுகளின் அளவைப் பணத்தின் அடிப்படையில் அறுதியிட இயலாது. எதிர்வாதியின் கவனமின்மையான செயலால் வாதி தம் காலை இழந்தார் என்றால், காலை இழந்ததால் ஏற்பட்ட நட்டம் இவ்வளவு தொகைதான் என்று எவ்வாறு கூற முடியும்? ஒருவரின் ஆயுட்கால அருக்கத்திற்கும் (Shortened expectation of life) நட்ட ஈடு உண்டு என்று கண்டோம். எழுபது வயதுவரை சாதாரணமாக வாழவேண்டிய ஒருவர், அவரது உடலுக்கு விளைவிக்கப்பட்ட கேட்டின் பயனாய் ஐம்பது வயதிலேயே இறக்கலாம். இவ்வாறு தீங்கின் பயனாய் ஆயுட்காலம் அருகுவதை "ஆயுட்கால அருக்கம்" என்கிறோம். இதனால் விளையும் நட்டத்தை எவ்வாறு பணத்தின் அடிப்படையில் அறுதியிடுவது? ஒருவருடைய மனவேதனையையும், உடல் வாதனையையும் பணத்தால் அளப்பது ஆகாத காரியம். இருப்பினும்,

சட்டம் இக்கேடுகளால் விளையும் துன்பத்தை, அவைகளுக்கேற்ப அளிக்கப்படும் நட்ட ஈட்டுப் பணத்தின் பயனுய் விளைவதாகக் கருதப்படும் இன்பத்தால் ஈடுசெய்ய முயலுகிறது. இதைத் தவிர, சட்டத்தால் வேறு ஏதும் செய்வதற்கில்லையன்றே? ஒரு கேட்டை அளவிட முடியாது என்பதால் நட்ட ஈடும் கிடையாது என்ருல் அது சட்டத்தின் அடிப்படைக் கொள்கைக்கு முரண்பாடாகிவிடும். [Rose V. Ford (1937) A.C. 826]

எதிர்வாதியின் தீங்கால் வாதியின் கட்டிடம் தீப்பிடித்துச் சேதமுறுகிறது. அந்தக் கட்டிடத்தை மீண்டும் கட்டுவதற்கு வேண்டிய தொகையை நட்ட ஈடாக அளிப்பதில்லை. தீக்கிரையாவதற்கு முன் அக்கட்டிடத்தின் விலை மதிப்பு என்ன என்பதையும், சேதமுற்ற பின் அக்கட்டிடத்தின் விலை மதிப்பையும் கணித்து, இரண்டிற்குமுள்ள ஏற்றத்தாழ்வே நட்ட ஈடாக அளிக்கப்படுகிறது [Moss V. Christchurch R. D. C. (1925) 2. K. B. 750]. சில வேளைகளில் இவ்விதக் கணிப்பு முறை பொருத்தமற்றதாகலாம். சரித்திரப் புகழ்பெற்ற ஒரு கட்டிடம் தீயினுல் சேதமடைந்தால், அதைப் புதுப்பிக்கும் செலவே தக்க நட்ட ஈடாகும் என்று கொள்ளுதல் தகாது. அதற்கு அளிக்கப்படும் நட்ட ஈடு அதிகமான தொகையாகவே இருக்கும்.

இன்னெருவரின் தீங்கான செயலால் எனது காருக்குச் சேதம் விளைகிறது. சேதமடைந்த எனது காரை என் நண்பர் ஒருவர் கூலி எதுவும் பெருமல் செப்பனிட்டுத் தருகிருர். இதை வைத்து, கார் சேதமடைந்ததால் எனக்கு உண்மையில் நட்டம் ஏதும் விளையவில்லை என்று கொள்ளுதல் முறையன்று. காருக்குச் சேதம் விளைவித்தவர் அதற்கான நட்ட ஈட்டைக் கொடுத்தே ஆக வேண்டும். [The Endeavour (1890) 62. L. T. 840]

### (iii) பொது நட்ட ஈடு. (General Damages) தனித்த நட்ட ஈடு (Special Damages)

இழைக்கப்படும் தீங்கினுல் எல்லோருக்கும் பொதுவான முறையில் விளையும் கேடுகளுக்கு அளிக்கப்படும் நட்ட ஈட்டைப் பொதுநட்ட ஈடு என்று கூறுகிறேம். முறையின்றி ஒருவர் சிறைப்பட்டால் அதனுல் அவருக்கு மன வேதனையும், மதிப்பிழப்பும் ஏற்படுகின்றன. இது எல்லோருக்கும் அத்தீங்கால் நேரக்கூடியது. இதற்கு அளிக்கப்படும் நட்ட ஈட்டைப் பொது நட்ட ஈடு (General Damages) என்பார்கள். ஆனுல், அவ்வாறு சிறையிடப்பட்டதால் ஒருவருக்குத் தமது குறிப்பிட்ட முக்கியமான தொழிலைச் செய்ய முடியாமற் போய் அதனுல் மிகுந்த பொருள் நட்டம் விளையலாம். இந்தப் பொருள் நட்டம் முக்கியமான தொழிலைச் செய்யவேண்டி

யவருக்கு மட்டும் ஏற்படும் தனித்த நட்டமாகும். எல்லோருக்கும் இவ்வித நட்டம் ஏற்படுவதில்லை. இந்தத் தனித்த நட்டத்திற்குத் தக்கபடி பெறும் அதிகமான நட்ட ஈட்டுத்தொகை "தனித்த நட்டஈடு" (Special Damages) எனப்படும். தனித்த நட்ட ஈடு கோருவோர், தனித்த நட்டம் தமக்கு விளைந்தது என்பதை மெய்ப்பிக்க வேண்டும்.

ஒரு பொருளுக்குச் சேதத்தை விளைத்தவர், அந்தப் பொருள் சேதமின்றி இருந்தால் எவ்வாறு பயன்படுத்தப்படலாம் என்ற அடிப்படையில் நட்ட ஈடு கொடுக்கும் பொறுப்புடையவர். சேதமடைந்த பொருள் சேதமின்றி இருந்தாலும் பயன்படுத்தப்பட்டிருக்காது என்ற சமாதானம் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.

"என்னுடைய நாற்காலி ஒன்றை ஒருவர் எடுத்துச் சென்று ஒரு வருடத்திற்கு மேலாக வைத்திருந்தபின், அதை அவர் அவ்வாறு எடுத்துச் செல்லா விடினும் நான் அதைப் பயன்படுத்தியிருக்க மாட்டேன் என்று கூறி நாற்காலியை அகற்றிய தீங்கிற்கு நட்ட ஈடு அளிக்க வேண்டியதில்லை என்று அவர் வாதாட முடியாது. நாற்காலியில் நான் உட்காருவதில்லை என்றோ, வேறு பல நாற்காலிகள் என்னிடம் இருக்கின்றன என்று கூறுவதோ ஏற்கப்பட முடியாத சமாதானமாகும்" என்று The Mediana (1900) A. C. 113 - என்ற வழக்கில் லார்டு ஹால்ஸ்பரி (Lord Halsbury) என்ற நீதிபதி விளக்கியுள்ளார்.

### (iv) அறிவுறுத்தும் நட்ட ஈடு (Exemplary Damages) அல்லது தண்டனையான நட்ட ஈடு (Punitive damages)

பிறருடைய உரிமைகளைத் துச்சமாக மதித்துச் செருக்குடனும் தீயவெண்ணத்துடனும் தீங்கு செய்பவர்கள் இருக்கின்றனர். பிறர் உரிமைகளை வேண்டுமென்றே அவமதித்து, வீம்புக்கென்று தீங்கிழைப்போரும் உண்டு. இத்தகைய தீங்குகளுக்கு ஈடு அளிக்கையில் விளைந்த கேட்டின் அளவைவிடப் பன்மடங்குத் தொகையை நட்ட ஈடாக நீதிமன்றம் உறுதி செய்கிறது. தீங்கிழைத்தவரின் திமிரை ஒடுக்கித் தண்டிக்கும் வகையில் அதிகமான நட்ட ஈடு அளிக்கப்படுகிறது. தீங்கிழைக்கப்பட்டவர் அடைந்த அவமானத்திற்கு ஆறுதலளிக்கும் வகையிலும் அதிக நட்ட ஈடு அளிக்கப்படுவதுண்டு.

வாதியை அடிப்பதற்கென்று எதிர்வாதி கையை ஓங்குகிறார். ஆனால் அடிக்கவில்லை. எனினும் கையை ஓங்கியது "தாக்க முற்படுதல்" (assault) என்ற தீங்காகும். இதனால் வாதியின் மதிப்பிற்கும், கண்ணியத்திற்கும் பெருங் கேடு விளையலாம். மதிப்புமிக்க ஒரு

வரைப் பலர் கூடும் பொது இடத்திலோ. ஒரு மன்றத்திலோ, ''தாக்க முற்படுதல்'' அவரது நன்மதிப்பைக் கெடுக்கும் செயலாகும். இது போன்ற தீங்குகளை இழைத்தோருக்கு அவர்களுக்கு அறிவுறுத்தும் வகையில், அதிகமான நட்ட ஈடு அளிக்கப்படுகிறது. பிறர் சொத்தில் அத்துமீறி நுழைந்து தாக்க முற்பட்டவர், வாதிக்கு ஐயாயிரத்து ஐநூறு பவுன்கள் நட்ட ஈடு அளிக்கவேண்டுமெனத் தீர்ப்பளித்தனர். [London V. Ryder - (1953) 2. Q. B. 202]

பிறருக்கு அவமானம் நேரவேண்டும் என்ற தீயெண்ணத்துடன் அவருக்கு அவதூறு இழைப்பவர்களைத் தண்டனையான நட்ட ஈடு அளிக்கும்படி நீதிமன்றங்கள் உத்தரவிடுவதுண்டு. [Rook V. Fairrie (1941) 1. K. B 507]

அகங்காரத்துடனும் செருக்குடனும் பிறருடைய உரிமைகளை அவமதித்து, வேண்டுமென்றே இழைக்கப்படும் தீங்குகள் குறித்துச் சான்றோர்கள் சீற்றங் கொள்ளுவது சீரிய பண்பேயாகும். இவ்வித நேர்மைச் சீற்றங்கொள்ளும் நீதிபதிகள் தீங்கிழைத்தவர்களை ஒறுத்து அறிவுறுத்தும் வகையில், அளிக்கப்படும் நட்ட ஈட்டை அதிகமாக விதிக்கின்றனர். ''தண்டப்பணமாக இருக்கும்படி நட்ட ஈட்டுத்தொகையை அதிகமாக விதித்து எதிர்வாதிக்குப் பாடம் கற்பிக்கவேண்டும்'' என்று டெல்வின் (Delvin) என்ற நீதிபதி மேலே குறிப்பிடப்பட்ட London V. Ryder எனும் வழக்கில் கூறியிருக்கிறார்.

இவ்வாறு, தீங்கிற்கான ஈட்டுத் தொகையின் அளவை உறுதி செய்யும் முறைகளுக்குத் தக்கபடி, நட்டஈடுகளை வகைப்படுத்திக் கூறுவர்.

### (2) நீதிமன்றக் கட்டளைகள் அல்லது ஆணைகள் (Injunctions)

பொதுவாக, தீங்கினால் விளைந்த கேட்டிற்குத் தீங்கிழைத்தவரிடமிருந்து நாம் நட்டஈடு பெறுகிறோம். ஈடு செய்யப்பட முடியாத தீங்குகளும் உண்டு. தொடர்ந்து நிகழும் தீங்குகளை உடனடியாக அகற்ற வேண்டியிருக்கிறது. இழைக்கப்பட இருக்கும் தீங்கை எதிர்நோக்கி ஒருவர் வாளாவிருப்பதில்லை. அந்தத் தீங்கு நிகழாமல் தடுப்பதற்கு நீதிமன்றம் வகை செய்ய வேண்டும். அந்தந்த வழக்குகளுக்கு ஏற்ற வகையில் தீங்குகள் இழைக்கப்படாமல் தடுப்பதற்கும், தீங்குச் செயல்கள் அகற்றப்படுவதற்கும் நீதிமன்றங்கள் ஆணைகளைப் பிறப்பிக்கின்றன. இவைகளை நீதிமன்றக் கட்டளைகள் அல்லது ஆணைகள் (Injunctions) என்கிறோம்.

## தடையிடும் ஆணை (Prohibitory Injunction) செய்யெனும் ஆணை (Mandatory Injunction)

தீங்கிழைக்க இருப்பவரை அதைச் செய்தல் கூடாது என்று தடை கூறும் நீதிமன்ற ஆணையைத் "தடையிடும் ஆணை" (Prohibitory Injunction) என்று கூறுவார்கள். நம் வீட்டிற்குக் கிடைத்துக் கொண்டிருக்கும் வெளிச்சத்தை மறைத்து அடுத்தவர் கட்டிடம் கட்டப் போகிறார் என்றால், நாம் அக்கட்டிடம் கட்டி முடிவடையும் வரை காத்திருக்க வேண்டியதில்லை. கட்டிடம் கட்டப்பட்டால் நம் வீட்டு ஒளி வசதியுரிமை (Right to light) பாதிக்கப்படும் என்று கூறிக் கட்டிடம் கட்டப்படுவதை நீதிமன்றம் மூலம் தடை செய்யலாம். இவ்வாறு தடை செய்யும் நீதிமன்ற உத்திரவைத் "தடையிடும் ஆணை" (Prohibitory Injunction) என்கிறோம். தீங்கைச் செய்யாதவாறு எதிர்வாதியை விலக்குவதால், இதை "விலக்கும் ஆணை" என்றும் கூறலாம்.

ஒருவர் நம் சொத்தில் அத்துமீறி நுழையப் போவதாக அச்சுறுத்துகிறார் என வைப்போம். அவ்வாறு அவர் செய்வதினின்றும் தடை செய்ய நீதிமன்றம் ஆணை பிறப்பிக்கிறது. ஒரு முறை செய்யப்பட்ட தீங்கு மீண்டும் இழைக்கப்படாதவாறு தடை ஆணைகள் இடப்படுகின்றன. இவையெல்லாம் "தடையிடும் ஆணைகள்" ஆகின்றன.

நம் வீட்டு வெளிச்சத்தை மறைக்கும் வகையில் அடுத்த நிலத்தில் எழுப்பப்பட்ட சுவர் இடிக்கப்பட்டால்தான் நம் வீட்டிற்குப் போதிய வெளிச்சம் கிடைக்கும். எனவே, அடுத்த நிலத்தில் கட்டப்பட்ட சுவர் இடித்து அகற்றப்பட வேண்டும். ஆதலால், எழுப்பிய சுவரை இடிக்குமாறு எதிர்வாதிக்கு நீதிமன்றம் கட்டளை இடுகிறது. இவ்வாறு, எதிர்வாதியை ஒரு குறிப்பிட்ட செயலைச் செய்யுமாறு நீதிமன்றம் உத்திரவிடுவதைச் "செய்யெனும் ஆணை" (Mandatory Injunction) என்கிறோம். தீங்கை அகற்றுமாறு எதிர்வாதிக்கு விதிப்பதால் இதை "விதிக்கும் ஆணை" என்று கூறலாம்.

ஒரு செயலைச் செய்யாதவாறு எதிர்வாதியைத் தடுப்பது 'தடையிடும் ஆணை." ஒரு செயலைச் செய்யுமாறு எதிர்வாதிக்கு உத்திரவிடுவது, "செய்யெனும் ஆணை". தீங்கு நிகழாமல் தடுப்பது "தடையிடும் ஆணை" (விலக்கும் ஆணை); தீங்கை அகற்றுவது "செய்யெனும் ஆணை" (விதிக்கும் ஆணை).

தொல்லை, தொடர்ந்து நிகழும் அத்துமீறுகை, பதிப்புரிமை, புதுப்புனைவு உரிமை இவைகளுக்கு எதிரான தீங்குகள், குறித்து நாம் நீதிமன்றக் கட்டளைகள் பெறலாம்.

### "வருமுன்னர்க் காத்தல்" நடவடிக்கை

"தடுப்பு முறை நீதி தண்டமுறை நீதியை விடச் சிறந்தது" என்று கூறுவதுண்டு. (Preventive Justice excelleth punishing Justice - Sir Edward Coke.)

ஒரு கேடு வருமுன்னர் அதைத் தடுப்பதே முன் மதியுள்ளோரின் தக்க நடத்தையாகும். எனவே, தம் பொருளுக்கோ, புகழுக்கோ தீங்கு இழைக்கப்பட இருக்கிறது என்பதை அறிந்த ஒருவர், அது இழைக்கப்படாமல் தடுப்பதற்கு நீதிமன்றம் செல்லுகின்றூர். எதிர்வாதிமீது "தடையிடும் ஆணை"யைப் பெறுகின்றூர். இந்த நடவடிக்கையை "வருமுன்னர்க் காத்தல்" என்கிறோம். இதை இலத்தீன் மொழியில் *quia timet* action என்பார்கள்.

### வழக்கிடை ஆணை (Interlocutory Injunction); நிரந்தர ஆணை (Perpetual Injunction)

சாதாரணமாக ஒரு வழக்கு முடிவதற்குப் பல மாதங்கள் ஆகின்றன. சில வேளைகளில் எதிர்வாதியின் செயலை உடனடியாகத் தடுக்க வேண்டிய அவசியம் ஏற்படுகிறது. நம் நிலத்தில் ஆக்கிரமித்துக் கட்டிடம் கட்ட ஆரம்பிக்கும் எதிர்வாதியை உடனடியாகத் தடை செய்தால்தான் ஆக்கிரமிப்பைத் தடுக்க முடியும். அவதூறு இழைக்கவிருப்பதை உடனே தடைசெய்தால் தான் பலனுண்டு. எனவே, வழக்கு விசாரணை முடிவதற்கு முன்பே நீதிமன்றங்கள் எதிர்வாதிக்குக் கட்டளைகளை இடுகின்றன. வழக்கு விசாரணை முடிவதற்கு முன் இடையிலேயே இவ்வாறு இடும் கட்டளைகளை "வழக்கிடை ஆணை" [Interlocutory (Interim) Injunction] என்பார்கள். வழக்கு விசாரணை முடிந்தபின் தீர்ப்புக் கூறும் வகையில் இடும் கட்டளை "நிரந்தர ஆணை" (Perpetual Injunction) எனப்படும்.

நிவாரணங்களை அளிப்பதில் நீதிமன்றங்கள் தேர்ந்து செயல்படுகின்றன. விளையவிருக்கும் தீங்கின் தன்மை, வழக்கில் சம்பந்தப்படாதவர்களின் நலன்கள் இவைகளையெல்லாம் ஆய்ந்தே மேலே கூறப்பட்ட கட்டளைகள் இடப்படுகின்றன.

வாதிக்கு விளையவிருக்கும் தீங்கு அற்பமானதாகவோ, எளிதில் ஈடு செய்யத்தக்கதாகவோ இருந்தால் "தடையிடும் ஆணை"யை நீதிமன்றம் பிறப்பிப்பது இல்லை. சில வேளைகளில் "தடையிடும் ஆணையால்" எதிர்வாதிக்கு மிகுந்த நட்டம்விளைந்து விடலாம். எதிர்வாதியால் பெருத்த செலவில் நிறுவப்பட்ட தொழிற்சாலையால் வாதிக்குச் சிறு தொல்லை விளையலாம்.

இதை வைத்துத் தொழிற்சாலையை நிறுத்தும்படி ''தடையிடும் ஆணையை'' வாதி பெறுதல் இயலாது; விளையும் தொல்லைக்குத் தக்க நட்ட ஈட்டையே நிவாரணமாக நீதிமன்றம் அளிக்கும். எனவே, எல்லாவிதத் தீங்கிற்கும் நீதிமன்றக் கட்டளைகளை வாதி பெறுதல் முடியாது.

பொதுவாக, விளையும் தீங்கு தொடர்ந்து நிகழ்வதாகவோ, மீண்டும் மீண்டும் இழைக்கப்படுவதாகவோ அல்லது எளிதில் ஈடு செய்ய இயலாத முறையில் கேடு விளைவிப்பதாகவோ இருந்தால் மட்டுமே நீதிமன்றக் கட்டளைகள் மூலம் வாதி நிவாரணம் பெறமுடியும்.

வழக்குகளுக்குத் தக்க முறையில், கடந்த காலத்தில் விளைந்த கேட்டிற்கு நட்ட ஈடும், எதிர்காலத்தில் தீங்கு நிகழாமல் இருப்பதற்குத் ''தடையிடும் ஆணையும்'' வாதி பெறலாம். சில வேளைகளில் வாதிக்குக் கேடு விளைவிக்கும் நிலை அகற்றப்படாமல், கடந்தகால, எதிர்கால நட்டத்திற்கென்று மொத்தமாக ஓர் இழப்பீட்டுத் தொகை வாதிக்கு அளிக்கப்படுவதும் உண்டு.

### (இ) குறித்த பொருளை மீண்டும் பெறுதல் (Specific Restitution of Property)

நம் நிலத்தை ஒருவர் ஆக்கிரமித்துக் கொண்டால், அந்த ஆக்கிரமிப்பை அகற்றி நம் நிலத்தின் உடைமையை நாம் அடைவதற்குச் சட்டம் வகை செய்கிறது. ஆக்கிரமித்தவர் நிலத்தைத் தம் வசமே வைத்துக்கொண்டு நிலத்திற்கான விலையை நட்ட ஈடாக அளிப்பதைச் சட்டம் ஏற்பதில்லை. இது போன்றே, நம்முடைய அசைபொருளை நம் உடைமையிலிருந்து அகற்றியவரிடமிருந்து அதே பொருளை மீண்டும் நாம் பெறுவதற்குச் சட்டம் உரிமை அளிக்கிறது.

இவ்வாறு குறித்த பொருளை வாதி மீண்டும் பெறும் நிவாரணத்தைக் ''குறித்த பொருளை மீண்டும் பெறுதல்'' (Specific Restitution of Property) என்று கூறுகிறோம்.

நம் நாட்டில் அமலில் இருக்கும் குறித்த நிவாரணச் சட்டத்தில் (Specific Relief Act) மேற்கூறிய நிவாரணங்கள் பெறும் விதங்கள் பற்றி விரிவாகக் கூறப்பட்டிருக்கிறது.

இவ்வாறு, தீங்குகளுக்குத் தக்க தீர்வுகள் பெறுவதற்குச் சட்டம் வகை செய்கின்றது.

---

# பகுதி 8

## தீங்கியலும், அறநெறியும்

*தீங்கின் வகைகள் எண்ணற்றவை - 'தீங்கியல்' சட்ட விதிகளின் தன்மை - தீங்கியலும், அறநெறியும், ஒழுக்க முறையும் - தீங் கியலில் அடிப்படையாக அமைந்த அறநெறி.*

தீங்கியல் சட்டத்தின்கொள்கைகள், தீங்கின் வகைகள், அவை தீரும் விதங்கள், இவை பற்றி நாம் இதுவரை கண்டோம்.

### தீங்கின் வகைகள் எண்ணற்றவை

ஒருவன் மற்ஞெருவனுக்கு எந்தெந்த வகையில் எல்லாம் தீங் கிழைக்க முடியும் என்பதை அறுதியிட்டுக் கூறஇயலாது. விஞ் ஞான வளர்ச்சிக்கும், அதனுல் மாறும் வாழ்க்கை முறைக்கும் சமூக அமைப்பிற்கும் ஏற்பத் தீங்கின் வகைகளும் அவை இழைக்கப் படும் விதங்களும் மாறுதலடைகின்றன.

பேசும்படத்தின் வழியாக ஒருவர் பிறருக்கு அவதூறு இழைக் கலாம். இது எழுபது ஆண்டுகளுக்குமுன் இயலாது. ஒருவர் வீட்டிற்கு மேல் அடிக்கடி தாழ்வாகப் பறந்து செல்லும் விமானத்தின் இரைச்சலால் அவருக்குத் தொல்லே விளேகின்றது. இதற்கான நட்ட ஈடு அமெரிக்காவில் அளிக்கப்பட்டது. இது புதிய விதத் தீங்கு. பேசும்படமே பிறக்காத நாளில், வானூர்திப் பயணம் வழக்கில் இல்லாக்காலத்தில் இவ்விதத் தீங்குகள் எழுவ தில்லே. விஞ்ஞான வளர்ச்சியால் இவை போன்ற புதிய விதங் களில் தீங்குகள் விளேயலாம்.

ஆதலால், இதுவரை நீதிமன்றங்கள் முன் வராத புதுமை யான தீங்குகள் எதிர்காலத்தில் இழைக்கப்படலாம்; அவை குறித்தும் நட்ட ஈடு அளிக்கப்படலாம்.

"தீங்கின் வகைகள் எண்ணற்றவை. அவைகளே அறுதி யிட்டுக் கூறமுடியாது. இயற்கையில் உள்ள எதையுமே கருவியாக ஒருவர் பயன்படுத்தி இன்னெருவருக்குத் தீங்கு விளேவிக்கலாம்"* இவ்வாறு ப்ராட் (Pratt) என்ற நீதிபதி கூறியிருக்கிருர்.

எனவே, தீங்கின் வகைகள் பெருகிக் கொண்டே இருக் கின்றன. ஆதலால், தீங்கின் வகைகளேயெல்லாம் நாம் தீர்மான மாகக் கண்டு விட்டோம் என்று கூற இயலாது.

---

* "This action is for a tort: torts are infinitely various, not limited or confined, for there is nothing in nature but may be an instrument of mischief"—Sir Charles Pratt C. J. in Chapman V. Pickersgill (1762) 2. Wils. 145.

இந்தக் காரணத்தால்தான் "தீங்கியல்" குறித்து ஒரு பொதுவான சட்டத்தைச் சட்ட மன்றங்கள் இயற்றவில்லை. இதுவரை நாம் கண்ட "தீங்கியல்" சட்ட விதிகள், பாராளுமன்றத்திலோ அல்லது சட்டசபையிலோ இயற்றப்பட்டவை (Enacted Law or Statute) அன்று. இது முன்னரே கூறப்பட்டது.

## "தீங்கியல்" சட்ட விதிகளின் தன்மை

பின் "தீங்கியல்" சட்டத்தின் கொள்கைகளும், விதிகளும் எவ்வாறு எழுந்தன?

விளைந்த தீங்கினின்றும் விடுதி பெறுவதற்கு நீதிமன்றத்தை வாதி நாடுகின்றார். இந்த வழக்கை ஆய்வதற்கு வழிகாட்டும் வகையிலே இயற்றப்பட்ட சட்டம் ஏதுமில்லையாதலால், நீதியையும் நேர்மையையும் நீங்காத் துணையாகக்கொண்டு, தீங்கியல் வழக்குகள் தீர்க்கப்படுகின்றன. வாதிக்கு விளைந்த தீமையின் தன்மை என்ன? அது வாதியின் உரிமைக்கு ஊறு செய்யும் தீங்கா? அதனால் வாதிக்கு இழப்பு அல்லது கேடு விளைந்ததா? வாதிக்கு உரிய நிவாரணம் என்ன? அதை எவ்வாறு அளிப்பது? என்ற பல கூறுகளையும் நீதிபதிகள் தங்கள் நுண்ணறிவால் நன்கு ஓர்ந்து, தேர்ந்து, இவ்வழக்குகளை முடிவு செய்கின்றனர். இவ்வாறு, கூர்த்த மதித்திறனும் கொண்ட அனுபவமும், நடுவு நிலைத்தன்மையும் நல்ல மனச்சான்றும், ஒருங்கேயமைந்து உயர்ந்த சான்றோர்கள், உரிமைக்குத் தீங்கு உற்றதால் எழுந்த, வழக்குகளை ஆய்ந்து வகுத்த விதிகளே, தீங்கியல் சட்டத்தின் திறம்படு கொள்கைகள். இந்தக் கொள்கைகளின் தொகுப்பே 'தீங்கியல்' சட்டமாகும்.

சட்ட மன்றங்கள் இயற்றும் சட்டங்களனைத்தையும் இயற்றப்பட்ட சட்டம் (Enacted Law) என்று கூறுவார்கள். பொதுவாக, இச்சட்டத்தின் வழிநின்றே நீதிமன்ற நடுவர்கள் நியாயம் வழங்குவர். இயற்றப்பட்ட சட்டங்கள் இசையாத வேளைகளில், நீதி, நேர்மை, தூய மனச்சான்று (Justice, Equity, Good Conscience) இவைகளின் அடிப்படையிலேயே வழக்குகளைத் தீர்க்க வழிகளை வகுக்கின்றனர். நியாயமான வழியில் வழக்கை எவ்வாறு தீர்ப்பது? நேர்மை குன்றாது, நீதி தவறாது எந்த முறையில் நியாயம் வழங்குவது? என்று "அறநெறி பிழையா அன்புடை நெஞ்சொடு" அறங்கூறவையத்தினர் வழக்குகளை ஆய்ந்து முடிவு செய்கின்றனர். இயற்றப்பட்ட சட்டங்களால் எழும் கட்டுப்பாடுகள் இல்லாததால். நடுவர்கள் தங்கள் அறவுணர்வின் அடிப்படையிலேயே முறை செய்து ஒழுகுகின்றனர். இவ்வாறு அறமும் முறையும் அண்டி நிற்கின்றன. இந்த வகையில் நீதிபதிகளால் வகுக்கப்பட்ட விதிமுறைகளையும் நாட்டு

மக்களின் வழக்க நெறிமுறைகளையும், "பொதுச்சட்டம்" (Common Law) என்று கூறுகிறோம்.

பொதுச் சட்டம், நீதிபதிகளின் அறவுணர்வின் அடிப் படையில் அமைவது; அவர்களின் தரும சிந்தனையில் தழைத்து வளருவது.

"அந்தக் கொள்கை நிச்சயமாக நியாயமானது. ஆதலால் அது சட்டமே யாகும்." இவ்வாறு ஸ்க்ரூட்டன் (Scrutton) என்ற உயர்நீதிபதி கூறினார்.* நியாயத்திற்குகந்த விதிகளே, நீதியுணர்விலெழுந்த கோட்பாடுகளே, பொதுச்சட்ட விதிகள் ஆகின்றன என்பதை, நீதிபதி கூறியுள்ள இந்த வாசகம் சுருங்கக் கூறி விளங்க வைக் கிறது.

இவ்வாறு, ஒரு நாட்டு மக்களின் அறவுணர்வையும், பண்பு நிலையையும் ஒட்டியே அந்நாட்டின் "பொதுச் சட்டம்" வளர்ச்சி பெறுகின்றது. இந்தப் பொதுச்சட்டமே "தீங்கியல்"[8] சட்டத்தின் மூலமாக அமைகின்றது.

எனவே, "தீங்கியல்" சட்டத்தின் முக்கிய கொள்கைகள் அறத்தின் அடிப் படையில் எழுந்தவையாகும்.

"சட்டமும் ஒழுக்கமும் இணைந்து நிற்கின்றன. சட்ட விதி களுக்கு ஆதாரமான ஒழுக்க விதிகளை ஒருவர் உணராவிடில் ஆங்கில நாட்டுச் சட்டத்தின் அடிப்படைத் தன்மையை அறிதல் இயலாது", என்று பேராசிரியர் குட்ஹார்ட் (A. L. Goodhart) கூறுகின்றார்.†

* * * *

தீங்கியலும், அறநெறியும், ஒழுக்க முறையும்

தீங்கியல் சட்டத்தின் முக்கிய கொள்கைகளை ஆய்ந்து பார்த்தால், அவை ஒழுக்க நெறியாக, அற விதிகளாக, இருப்பதை நாம் காணலாம்.

"இதைத் "தீங்கியல்" சட்டம் என்று அழைப்பதிலிருந்தே இது ஒழுக்கவிதிகளுடன் உறவு கொண்டது என்பது தெளி வாகிறது", என்று குட்ஹார்ட் கூறுகின்றார்.‡

---

* "I am sure it is justice. It is probably the law for that reason."— Scrutton L. J. in Gardiner V. Heading. (1928 2. K. B. 284

† There is in England, therefore, a close bond between law and morals and it is impossible to understand the nature of English law unless we also recognise the various moral ideas which it represents."—Dr. A. L. Goodhart.

‡ "The fact that this branch of the law is entitled *tort*, which is the French word for *wrong*, shows how clearly it is connected with moral ideas..."—Dr. A. L. Goodhart.

"தீங்கு விளைந்தால் அதற்குத் தீர்வு உண்டு" என்பது தீங்கியல் சட்டத்தின் மூலக் கொள்கை. மக்களின் துன்பந் துடைப்பது நீதியின் குறிக்கோள். எனவே, இது அற விதியேயாகும்.

"கேடு விளைந்தாலும் விளையாவிட்டாலும் இழைத்த தீங்கிற்கும் நட்ட ஈடு உண்டு", என்பது சட்டத்தின் அடுத்த முக்கிய கொள்கை. "தீங்கென ஒன்றைக் கொண்டால் தீர்வுமே அதற்கு வேண்டும்", என்ற விதி பல வழக்குகளில் வற்புறுத்தப்பட்டதை நாம் கண்டோம். நட்டம் விளைக்காத தீங்கை நலமுடைய செயலென்று நாம் தடுமாறி நினைத்து, ஒழுக்க நெறியை ஓம்புவதில் ஓய்வுகொள்ளலாகாது என்பதற்காகத்தான், இந்த அறவிதி சட்டத்தில் அழுத்திக் கூறப்படுகிறது.

"தீங்கிழைத்தவரின் நோக்கம் எதுவாக இருந்தாலும், உற்ற தீங்கிற்கு உரிய ஈட்டினை அவர் அளித்தேயாகவேண்டும்", என்பது சட்டத்தின் விதி. வினை செய்வோரின் நோக்கத்தை விடுத்து, வினையின் விளைவையே சட்டம் கவனிக்கிறது.* ஏனெனில், தீங்கிழைத்தவரின் நன்னோக்கம் தீங்கால் ஏற்பட்ட இழப்பிற்கு ஈடு செய்வதில்லை. ஆதலால், நன்னோக்கோடு தீங்கு செய்தாலும் அது தீங்கேயாகும் என்று சட்டம் விதிக்கிறது.

"ஈன்றாள் பசிகாண்பான் ஆயினுஞ் செய்யற்க
சான்றோர் பழிக்கும் வினை" (குறள் - 656)

என்பது குறள் கூறும் சட்டநெறி. மனத் தூய்மையோடு வினைத் தூய்மையும் வேண்டும் என்ற அறவிதியை அண்டி எழுவது இச் சட்ட விதி.

கருதிச் செய்வதும் தீங்குதான், கவனமின்மையால் விளைவதும் தீங்குதான். கவனமின்மையைத் தீங்கெனக் கொண்டால்தான், பிறருக்குத் தன்னால் நேரவிருக்கும் தீங்கைத் தவிர்க்கவேண்டும் என்ற கடமை ஒவ்வொருவருக்கும் உண்டு என்பது நன்கு புலப்படும். இந்தக் கடமையை உணர்த்தும் வகையிலேயே "கவனமின்மையைத்" தீங்கெனக் கொள்ளுகிறது சட்டம்.

இடர் விளைக்கும் பொருள்களை உடையவரின் பொறுப்புக் "கடும் பொறுப்பு" (Strict Liability) என்று கூறப்படுகிறது. இடர் தரும் பொருள்களைக் கொண்டு வந்து ஆபத்தான சூழ்நிலையை ஏற்படுத்தும் ஒருவர் அதனால் விளையும் எல்லா வகைத் தீங்கிற்கும் பொறுப்பை ஏற்றுக் கொள்ள வேண்டியதுதான். இதுவே, நம் பொது அறிவு புகலும்

---

* "In such a case motives are immaterial. It is the act, not the motive for the act, that must be regarded."—Lord Macnaghten in Chasemore V. Richards.

நியாயம். இதையேதான் சட்டமும் "வரம்பிலாப் பொறுப்பு" என்று வகைப்படுத்திக் கூறுகிறது.

பணியாளரின் செயலுக்குப் பணித்தவர் பொறுப்பேற்பது "பகரப் பொறுப்" பாகிறது. இட்ட வேலையை இயற்றும் விதத்தில் இழைத்த தீங்கிற்கு ஏழையாக உள்ள ஏவலரால் ஈடு செய்ய இயலாது ஆகையால், சட்டம் ஏவியவரையும் பொறுப்பாக்கி, தீங்கடைந்தவர் ஈடுபெறு வதற்கு ஏற்ற நிலையை ஏற்படுத்துகிறது. இது, நீதியை ஒட்டிய கொள்கையாகும். இவ்வாறு, சட்டம் இல்லையெனில், தீங்கடைந்த பலரும் அதற்குத் தீர்வு பெற முடியாது.

"தாமும் வாழ்ந்து பிறரும் வாழவேண்டும்" (Live and let live) என்ற அறக் கொள்கையின்படியே தொல்லை விளைவிக்கும் செயலைச் சட்டம் தீங்கு எனக் கொள்ளுகிறது என்பதைப் பல தீர்ப்புக்கள் கூறுகின்றன.

பிறருக்குக் கேடு விளைக்கும் பொய்ம்மையையே "தீங்கான பொய்ம்மை" (Injurious Falsehood) என்றும், "ஏமாற்றுதல்" (Deceipt) என்றும் சட்டம் விதிக்கிறது. எவருக்கும் கேடு விளைவிக்காத பொய்ம் மையைச் சட்டம் வாய்மையாகவே மதிக்கிறது.

> "வாய்மையெனப் படுவது யாதெனின் யாதொன்றும்
> தீமை இலாத சொலல்." (குறள் - 291)

என்ற அறவிதியைச் சட்டமும் பின்பற்றுகிறது.

ஒரு தீங்கை இழைத்தவர் அத்தீங்கால் ஏற்படும் "முன்னறியத்தக்க" விளைவு களுக்கே (foreseeable consequences) பொறுப்பாகின்றார். முன்னறிய முடியாத எல்லா விளைவுகளுக்கும் அவர் பொறுப்பாவதில்லை. இதுவும் பகுத்தறிவுக்கு ஏற்ற கொள்கையாகும்.

இவ்வாறு, அறத்தை அண்டிய, ஒழுக்கத்தை ஒட்டிய, பகுத்தறிவின் பாற்பட்ட விதிகளை இயற்றி, நம் உடலுக்கும் உடைமைக்கும், புகழுக்கும் பொருளுக்கும் தீங்கு நேராமல் பாதுகாத்து, நம் வாழ்வை வளம் பெறச் செய்கின்றது இத் "தீங்கியல்" சட்டம்.

தீங்கியல் சட்டத்தில் உள்ள பல வழக்குகளில், சட்ட விதிகள் அறக்கொள்கைகளை அண்டி நிற்பதை நீதிபதிகள் எடுத்துக் கூறியிருக்கின்றனர்.

"அடுத்தவர்மீது அன்பு காட்டு என்ற அறவிதியே, அயலாருக்குத் தீங்கு விளை விக்காதே என்ற சட்ட விதியாக மாறுகிறது"—இவ்வாறு லார்டு அட்கின் (Lord Atkin) என்பார் Donoghue V. Stevenson என்ற புகழ் பெற்ற வழக்கிலே கூறியிருக்கிறார்.*

---

*. "The rule that you are to love your neighbour becomes in law, you must not injure your neighbour..."—Lord Atkin in Donoghue V. Stevenson. (1932) A. C. 562.

இவ்வாறு, ஒழுக்க நெறிகளை உணர்த்தும் வகையிலேயே "தீங்கியல்" சட்டம் வளர்ந்திருக்கிறது என்பது தெளிவாகும்.

* * * *

"தீங்கியலில்" அடிப்படையாக அமைந்த அறநெறி என்ன?

"உரிமைத் தீங்கி"ற்கு உற்ற இலக்கணமே இதை எடுத்து இயம்புகிறது.

பிறருடைய உரிமைக்கு ஊறு விளைத்தல், தம்முடைய கடமையில் தவறுவதால் பிறருக்குக் கேடு விளைத்தல்—இதுவே "உரிமைத் தீங்கு" எனக் கண்டோம்.

நமக்கு ஓர் உரிமை இருந்தால் அதே உரிமை பிறருக்கும் உண்டு என்பதை நாம் மறந்து விடலாகாது. உடலுரிமை பொருளுரிமை, புகழுரிமை—இவை நமக்கு இருப்பது போன்றே பிறருக்கும் இருக்கின்றன. நம்மில் சிலர், நம் உரிமைகளைப் பேணும் விதத்தில் பிறர் உரிமைகளுக்கு ஊறு விளைவித்து விடுகிறோம். சில வேளைகளில், நாம் கடமையில் தவறுவதாலும் பிறருக்குத் தீங்கு விளைகிறது.

பிறர் உரிமைகளைப் போற்றி நம் கடமைகளில் தவறாது நாம் நடந்தால் நம்மால் எவருக்கும் தீங்கு விளைவதில்லை. அதுவே ஒழுக்க வாழ்வாகிறது, உயர் வாழ்வாகிறது.

"மற்றவர் உரிமையை மறவாது ஓம்பவேண்டும், தம்முடைய கடமையைத் தவறாது செய்தல் வேண்டும்" என்ற இன்றைய சட்ட விதியை அந்த நாள் புலவர் ஒருவர் அமைவுறக் கூறுகின்றார் :—

"......தம்முறு கிழமை* போல் தம்வயிற் கடமையும்
தவாது தழுவிச் சமநிலை புணர்த்திப்
பிறர்மேல் கடமையே பேணுதல் குறைத்து
மற்றவர் உரிமையை மறவா தோம்பிப்
பிறர்பாற் கிழமையும் தம்மேற் கடமையும்
துறவா அறநல் துணையாக் கொண்டாங்கு
ஒல்லும் வகையான் ஓவாது அறவினை
செல்லும் வாயெல்லாம் விரும்பிச் செய்ய".

தீங்கற்ற வாழ்வு வாழவேண்டுமெனில், பிறர் உரிமைகளை நாம் பேணுதல் வேண்டும்; நம் கடமைகளில் தவறுதல் கூடாது.

"சட்டம் விதிக்கும் கடமையில் தவறுவதாலேயே தீங்கியல் பொறுப்பு எழுகின்றது" என்று பேராசிரியர் வின்பீல்டு (Winfield) கூறுகின்றார்.†

---

* கிழமை - உரிமை.

† "Tortious liability arises from the breach of a duty primarily fixed by the law :......"—Sir Winfield.

எனவே, சட்டம் விதிக்கும் கடமையில் தவறுதல் தீங்கு ஆகிறது. இந்தக் கடமை என்ன? இந்தக் கடமைகளை எந்தச் சட்டமும் தொகுத்துக் கூறவில்லை. அந்தந்த வழக்குகளின் சூழ்நிலைகளுக் கேற்ப ஒருவருக்குக் கடமை இருக்கிறதா என்பதையே நீதிபதிகள் முடிவு செய்கின்றனர். ஆனால், கடமையைக் கூறும் பொதுவான விதி எதுவும் சட்டத்தில் இல்லை. அந்த விதியை நாம் காணுவது எப்படி? இதற்கு அற நூலையே நாம் அணுக வேண்டியிருக் கிறது.

ஒழுக்க நெறியை உணர்த்தும் வகையில் உயர்ந்து விளங்கும் திருக்குறளிலே இதற்கு அரியதொரு விடை கூறப்பட்டுகிறது.

"இன்னா எனத்தான் உணர்ந்தவை துன்னாமை
வேண்டும் பிறன்கண் செயல்." (குறள் - 316.)

தமக்கு இன்னாதன, துன்பந் தருவன, என்று உணர்ந்தவைகளை ஒருவர் பிறர் மாட்டுச் செய்தல் தகாது. நமக்கு இன்பம் எதுவென் றும், துன்பம் எதுவென்றும் எளிதில் உணருகின்றோம். நாம் துன்பம் என்று உணரும் ஒன்றைப் பிறருக்குச் செய்தல் கூடாது. இதுவே நம் கடமையை விளக்கும் பொது விதி. எவ்வளவு எளிய விளக்கம்! எவ்வளவு அரிய உண்மை!

"அடுத்தவர்மீது அன்பு காட்டு என்ற அறவிதியே, அயலாருக்குத் தீங்கு விளைவிக்காதே என்ற சட்ட விதியாகும்", என்று நீதிபதி அட்கின் கூறியது என்றும் பொருந்தும் உண்மை யாகும்.

"நீ பிறருக்கு நன்மை புரியாவிட்டாலும் சரி; ஆனால் தீங்கு இழைக்காதே". என்று நம் நாட்டுப் புலவர்களும் நயம்பட உரைத் திருக்கின்றனர். நல்லது செய்யாவிடினும் அல்லது செய்யாது அறவழி நிற்றல் வேண்டும் என்று கூறுகின்றனர்.

இரண்டாயிரம் ஆண்டுகளுக்கு முன் எழுந்த புறநானூற்றுப் புலவரின் குரல் இந்த நெறியை எடுத்து இயம்புகிறது:

"..... நல்லது செய்தல் ஆற்றீர் ஆயினும்,
அல்லது செய்தல் ஓம்புமின்;* அதுதான்
எல்லாரும் உவப்பது; அன்றியும்
நல் ஆற்றுப் படூஉம் நெறியுமார் அதுவே." (புறம் - 195.)

தீங்கியல் சட்டங் கண்ட நாமும், இந்நெறியினைக் கடைப் பிடித்து அல்லது செய்யாது அறவழி நிற்போமாக.

---

* ஓம்புமின் - விலக்குங்கள், நீக்குங்கள்.

# கலைச்சொல் விளக்கம்

## (தமிழ் - ஆங்கிலம்)

அசை பொருள்கள் - Chattels, Movables
அசை பொருள் குறித்த தீங்குகள் - Wrongs to movables
அச்சுறுத்தல் - Intimidation
அடித்தாங்குதல் - Subjacent support
அத்துமீறி இடுதல் - Trespass by introducing things on land
அத்துமீறி இருத்தல் - Trespass by remaining on land
அத்துமீறிப் புகுதல் - Trespass by wrongful entry
அத்துமீறிய விலங்குகளை அடைத்து வைத்தல் - Distress damage feasant
அத்துமீறுதல் - Trespass
அரசமைப்பு (அரசியலமைப்பு)ச் சட்டம் - Constitution
அரசாங்கம் - Government
அரசின் தனிச் செயல்கள் - Acts of state
அரசு - State
அவதூறு - Defamation
அவமதிப்பு - Insult
அழைக்கப்பட்டவர் - Invitee
அறிவுறுத்தும் நட்டஈடு - Exemplary damages
அறுதியிடப்படாத நட்டஈடு - Unliquidated damages
அறுதியிட்ட நட்டஈடு - Liquidated damages
அற்பமான நட்டஈடு - Contemptuous damages
அனுமதி - Licence
அனுமதி பெற்றவர் - Licensee
ஆயுட்கால அருக்கம் - Shortened expectation of life
இடர் விளைக்கும் பொருள்கள் - Dangerous chattels
இடை நிகழ் செயல்கள் - Intervening acts
இந்திய வசதியுரிமைச் சட்டம் - Indian Easements Act
இயல்பான (உற்ற) உரிமை - Natural right
இயல்பானதும் நிகழத் தக்கதுமான விளைவுகள் - Natural and probable consequences
இயற்றப்பட்ட சட்டம் - Enacted Law
இருப்பாட்சி - Occupation
இல்வாழ்விற்கு இடையூறுகள் - Injuries to Domestic Relations
இழப்பீடு - Damages
இழப்பு - Damage
இறங்கு கரை நிலங்கள் - Lower riparian lands
இன்னுமை - Wrong
இன்னிசை மெட்டமைப்புரிமை - Musical copyright
ஈட்டிய (பெற்ற) உரிமை - Acquired right
உடலுக்கு ஊறு செய்தல் - Causing hurt
உடலுரிமை-Right to the person
உடலுரிமைக்கு விளையும் தீங்குகள் - Wrongs to the person
உடலைத் தாக்க முனைதல் - Assault
உடலைத் தாக்குதல் - Using criminal force, Battery
உடைமை - Possession
உடைமை அகற்றல்-Conversion of chattels
உடைமை குலைத்தல் - Trespass to chattels
உடைமைப்பாத்தியம்-Possessory Title
உண்மையான(கேட்டிற்குத் தக்க) நட்டஈடு - Real Damages
உண்மையென்று காரணங் காட்டுதல் - Justification by truth
உரிமை - Right
உரிமை இயல் சட்டம்-Civil Law-

(உரிமைத்) தீங்கு - Tort
உரிமைத் தீங்கிற்கான பொறுப்பு Tortious Liability
உரிமை நிறுத்தல் முறை - Civil Justice
உரிமை முறை மன்றங்கள் - Civil Courts
உரிமை வழக்குகள் - Civil Cases
ஊறு - Injury
ஏமாற்றுதல் - Deceipt, Fraud Cheating
ஏறு கரை நிலங்கள் - Upper riparian lands
ஒப்பந்த உரிமை - Contractual right
ஒப்பந்த உறவு - Contractual relation
ஒப்படை பெற்றவர் - Bailee
ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல் - Interference with contractual relations
ஒப்பந்தக்காரர் - Contractor
ஒப்பந்த மீறுகை - Breach of Contract
ஒப்பந்த முறிவு - Breach of Contract
ஒழுக்க நெறி - Moral Law
ஒழுக்க முறையான - Moral
ஒழுக்க முறையான கடமை - Moral duty
ஒளி வசதியுரிமை - Right to light
ஒறுத்தல் முறை - Criminal Justice
கடமை - Duty
கட்டாய நிலை - Necessity
கருதிய செயல் - Intentional act
கரை நிலங்கள் - Riparian lands
கரை நிலத்தாளர் - Riparian owner
கவனக் குறைவான செயல் - Negligent act
கவனமின்மை - Negligence
கவனம் - Care
காசோலை - Cheque
காரண காரியத் தொடர்பு - Causal relationship
கால்நடைகளை அத்துமீறிப் புக விடல் - Cattle Trespass
குடியாட்சி முறை - Democracy
குறித்த நிவாரணச் சட்டம் - Specific Relief Act
குற்ற இயல் சட்டம் - Criminal Law
குற்ற எண்ணம் - Guilty mind, Mens rea
குற்றங்கள் - Crimes
குற்ற மனம் - Mens rea
குற்றமான சதி - Criminal Conspiracy
குற்றமான தீங்குச் செயல்கள் - Felonious Torts
குற்ற முறை மன்றங்கள் - Criminal Courts
குற்ற வழக்கிடுதல் - Prosecution
குற்ற வழக்குகள் - Criminal Cases
கூட்டாகத் தீங்கிழைத்தோர் - Joint Wrongdoers
கூட்டுச் சொத்துரிமை - Co-ownership
கூட்டுச் சொத்துரிமை உடையவர்கள் - Co-owners
கேடு - Damage
கோனாட்சி முறை, முடியாட்சி முறை - Monarchy
சங்கமப் பொருள்கள்; அசை பொருள்கள் Movables
சட்டத்தால் விதிக்கப்பட்ட - Statutory
சட்டத்தின் ஆட்சி முறை; சட்டத்திற் கடங்கிய ஆட்சி முறை - Rule of Law
சட்டத்தின் மூலங்கள் - Sources of Law
சட்டத்தை ஒட்டிய நீதிமுறை - Justice according to law
சட்டப்படியான உரிமைக்கு ஊறு விளைத்தல் - Violation of legal right
சட்டப்படியான கடமையில் தவறுதல் - Breach of a legal duty
சட்டப்படியுள்ள அதிகாரம் - Statutory authority
சட்ட முரணான - Unlawful
சட்ட முறை உரிமை - Legal Right

சட்டமுறைக் கடமை - Legal Duty
சட்டமுறை நபர்கள் - Legal Persons
சட்டமுறையான - Legal
சட்டம் - Law
சட்டம் இயற்றல் – Legislation
சதி - Conspiracy
சமூக உறவு முறையான கடமை- Social duty
சனநாயகம் - Democracy
சிறப்புரிமைத் தறுவாய்கள் - Privileged occasions
சிறப்புரிமை பெற்ற செய்திகள் - Privileged communications
செய்யெனும் ஆணை (கட்டளை); விதிக்கும் ஆணை (கட்டளை) - Mandatory Injunction
சொத்து - Property
சொத்துரிமை - Ownership
சொத்துரிமைபற்றிய பொய்ம்மை - Slander of Title
தகா நோக்கம்-Improper Motive
தண்டனையான நட்டஈடு - Punitive Damages
தடையிடும் (விலக்கும்) ஆணை - Prohibitory Injuction
தவிர்க்க முடியாத விபத்துக்கள் - Inevitable Accidents
தற்கவனமின்மை - Contributory Negligence
தற்காப்புச் செயல்கள் - Acts in Private Defence
தனி நட்டஈடு-Special Damages
தனித்(த) தொல்லை - Private Nuisance
தன் முயற்சி நிவாரணம் - Self-redress
தாங்கு வசதியுரிமை - Right to support
தாவரப் பொருள்கள்; நிலை பொருள்கள் - Immovables
திரித்துரைத்தல் - Misrepresen tation
திருட்டு - Theft
தீங்கான சதி - Tort of Conspiracy
தீங்கான பொய்ம்மை - Injurious falsehood
தீங்கியல் சட்டம் - Law of Torts
தீங்கில்லா நட்டம் - Damnum sine injuria
தீங்கில் விளையா நட்டம் - Damnum sine injuria
தீங்கீடு - Damages
தீங்கு - Wrong, Injury
தீங்கெண்ணம், தகா நோக்கம் - Malice
தீயநோக்குடன் கைது செய்வித்தல் - Malicious Arrest
தீய நோக்குடன் குற்ற வழக்கிடல் - Malicious Prosecution
தீயநோக்குடன் சோதனை இடச்செய்தல் - Malicious Search
தீயநோக்குடன் ஜப்தி செய்வித்தல் - Malicious Attachment
தூய மனச்சான்று - Good Conscience
தெய்வச் செயல் - Act of God
தொடர் நிகழ் தீங்குகள் - Continuing wrongs
தொடர்ந்து நிகழும் அத்துமீறுகை - Continuing trespass
தொந்தரவு - Discomfort
தொல்லை - Nuisance
தொல்லை அகற்றல் - Abatement of Nuisance
நட்டமில்லாத் தீங்கு - Injuria sine damno
நட்டஈடு - Damages
நட்டம், கேடு - Damage
நலன்கள் - Interests
நாடாளுமன்ற நடவடிக்கைகள் - Parliamentary Proceedings
நிகழக்கூடிய - Possible
நிகழத்தக்க - Probable
நியாயமின்றி அழித்தல் - Wrongfully destroying
நியாயமின்றி உரிமை மாற்றல் - Wrongfully disposing
நியாயமின்றி எடுத்துக்கொள்ளல் - Wrongfully taking
நியாயமின்றி வைத்துக்கொள்ளல் - Wrongfully detaining

நிரந்தர ஆணை - Perpetual Injunction.
நிலச் சொத்தில் அத்துமீறுதல் - Trespass to land
நிலைபொருள்கள் - Immovables
நிலைத்த அவதூறு, நிலைவடிவு அவதூறு - Libel
நிலையா அவதூறு. உடன் மறையும் அவதூறு - Slander
நீதி - Justice
நீதிபதிகளால் வகுக்கப்படும் சட்டம் - Judge-made law
நீதிமன்ற ஆணைகள் (கட்டளைகள்) - Injunctions
நீதிமன்ற நடவடிக்கைகள் - Judicial Proceedings
நீதிமன்றம்; முறை மன்றம் - Court
நீதி முறை நிவாரணம் - Judicial Remedy
நீதிமுறையான - Judicial
நீர் வசதியுரிமை - Right in respect of water
நீதி வழங்குதல் - Administration of Justice
நுண் பொருட் செல்வம் - Incorporeal Property
நுண்பொருட் செல்வங்களுக்கு விளையும் தீங்குகள் - Wrongs to Incorporeal Property
நேரடி உடைமை - Immediate Possession
நேரடியற்ற உடைமை - Mediate Possession
நேரடி விளைவுகள்-Direct consequences
நேர்மை - Equity
நேர்மையான கருத்துரை - Fair comment
நோக்கம் - Motive
பகரப் பொறுப்பு-Vicarious Liability
பணிமுறையான கடமை - Official duty
பதிப்புரிமை - Copyright
பதிப்புரிமைச் சட்டம் - Copyright Act
பருப்பொருட் செல்வம் - Corporeal Property
பிரசுரம், வெளியிடுதல் - Publication
புதுப்புனைவு உரிமை - Patent Right
புதுப்புனைவுப் பொருள்கள் - Inventions
புறத் தாங்குதல் - Lateral support
பெயரளவு நட்டஈடு - Nominal damages
பொதுச் சட்டம் - Common Law
பொதுப்பாதையைத் தடைசெய்தல் - Obstruction to highway
பொது நட்டஈடு - General Damages
பொதுவான (பொதுத்) தொல்லை- Public Nuisance
பொய்க்கூற்று - Misrepresentation
பொய்ம்மை - Falsehood
பொருளைக் கண்டெடுத்தவர் - Finder of goods
பொறுப்பு - Liability
போலிக் காசோலை - Forged cheque
போலிப் பொருள் வாணிபம் - Passing of Goods
போலி வணிகக் குறிகள் - False Trade Marks
மரண விபத்துச் சட்டம் - Fatal Accidents Acts
மறைமுக அவதூறு - Innuendo
மீண்டும் புகுதல் - Re-entry
முடியாட்சி முறை - Monarchy
முதலாயமைந்த படைப்புக்கள் - Original works
முறைசெய்தல் - Administration of Justice
முறை மன்றம் - Court
முறையற்ற சட்ட நடவடிக்கை - Wrongful Process of Law
முறையின்றிச் சிறைப்படுத்தல் - False Imprisonment; Wrongful Confinement
முன் தீர்ப்பு முறைமை - Precedent

முன்னறியத்தக்க - Foreseeable
முன்னறியத்தக்க விளைவுகள் - Foreseeable Consequences
முன்னறியமுடியாத - Unforseeable
வசதிக் குறைவு - Inconvenience
வசதி தரும் சொத்து - Servient heritage
வசதிபெறும் சொத்து-Dominant heritage
வசதியுரிமைகள் - Easements
வசதியுரிமை பற்றிய தொல்லைகள் - Nuisance in relation to servitudes
வஞ்சித்தல் - Deceipt, Fraud
வயதுவராதோர், இளைஞர் - Infants
வரம்பற்ற சிறப்புரிமை-Absolute Privilege
வரம்பிற் கடங்கிய - Intra vires
வரம்புமீறிய - Ultra vires
வரம்புள்ள சிறப்புரிமை - Qualified Privilege
வளி (காற்று) வசதியுரிமை-Right to air
வழக்கத்தில் எழும் வசதியுரிமைகள் - Customary Easements
வழக்க நெறி - Custom
வடிக்கிடை ஆணை - Interlocutory Injunction
வழக்கிடை உத்திரவு - Interlocutory Order
வழக்குத் துணைவர் - Next friend
வழக்கு மூலம் - Cause of action
வழி வசதியுரிமை - Right to way
வெளிநாட்டில் விளைத்த தீங்குகள் - Foreign Torts
வெளியிடுதல் - Publication
வெளியேற்றுதல் - Ejectment

---

# கலைச்சொல் விளக்கம்

## (ஆங்கிலம் - தமிழ்)

Abatement of Nuisance - தொல்லை அகற்றல்
Absolute Liability - கடும் பொறுப்பு, வரம்பிலாப் பொறுப்பு
Absolute Privilege - வரம்பற்ற சிறப்புரிமை.
Acquired right-ஈட்டிய உரிமை, பெற்ற உரிமை
Act of God - தெய்வச் செயல்
Acts in Private Defence - தற்காப்புச் செயல்கள்
Acts of State - அரசின் தனிச் செயல்கள்
Administration of Justice - நீதி வழங்குதல்; முறை செய்தல்
Assault - உடலைத் தாக்க முனைதல்
Bailee - ஒப்படை பெற்றவர்
Battery - உடலைத் தாக்குதல்
Breach of a legal duty - சட்டப்படியான கடமையில் தவறுதல்
Breach of contract - ஒப்பந்த மீறுகை; ஒப்பந்த முறிவு
Care - கவனம்
Cattle Trespass - கால்நடைகளை அத்துமீறிப் புகவிடல்
Causal relationship - காரண காரியத் தொடர்பு
Cause of action - வழக்கு மூலம்
Causing hurt - உடலுக்கு ஊறு செய்தல்
Chattels - அசை பொருள்கள்
Cheating - ஏமாற்றுதல்
Cheque - காசோலை
Civil cases - உரிமை வழக்குகள்
Civil courts - உரிமை முறை மன்றங்கள்
Civil justice - உரிமை நிறுத்தல் முறை
Civil law - உரிமை இயல் சட்டம்
Common law - பொதுச்சட்டம்
Conspiracy - சதி
Constitution - அரசியலமைப்புச் சட்டம், அரசமைப்பு
Contemptuous damages - அற்பமான நட்ட ஈடு.
Continuing trespass-தொடர்ந்து நிகழும் அத்துமீறுகை
Continuing wrongs - தொடர் நிகழ் தீங்குகள்
Contractor - ஒப்பந்தக்காரர்
Contractual relation - ஒப்பந்த உறவு
Contractual right - ஒப்பந்த உரிமை
Contributory negligence - தற்கவனமின்மை
Conversion of chattels - உடமை அகற்றல்
Co-owners - கூட்டுச் சொத்துரிமை உடையவர்கள்
Co-ownership - கூட்டுச் சொத்துரிமை
Copyright - பதிப்புரிமை
Copyright Act - பதிப்புரிமைச் சட்டம்
Corporeal property - பருப்பொருட் செல்வம்
Court - நீதி மன்றம்; முறை மன்றம்.
Crimes - குற்றங்கள்
Criminal cases - குற்ற வழக்குகள்
Criminal conspiracy-குற்றமான சதி
Criminal courts - குற்ற முறை மன்றங்கள்
Criminal justice - ஒறுத்தல் முறை
Criminal law - குற்ற இயல் சட்டம்
Custom - வழக்க நெறி, வழக்கு நெறி

Customary Easements - வழக்கத்தில் எழும் வசதியுரிமைகள்
Damage - இழப்பு, நட்டம், கேடு
Damages - இழப்பீடு; நட்டஈடு; தீங்கீடு
Damnum sine injuria - தீங்கில்லா நட்டம்; தீங்கில் விளையா நட்டம்
Dangerous chattels - இடர் விளைக்கும் பொருள்கள்
Deceipt - ஏமாற்றுதல், வஞ்சித்தல்
Defamation - அவதூறு
Democracy - குடியாட்சி முறை, சனநாயகம்
Direct consequences - நேரடி விளைவுகள்
Discomfort - தொந்தரவு
Distress damage feasant - அத்துமீறிய விலங்குகளை அடைத்து வைத்தல்
Dominant heritage - வசதி பெறும் சொத்து
Duty - கடமை
Easements - வசதி யுரிமைகள்
Ejectment - வெளியேற்றுதல்
Enacted law - இயற்றப்பட்ட சட்டம்
Equity - நேர்மை
Exemplary damages - அறிவுறுத்தும் நட்ட ஈடு
Fair comment - நேர்மையான கருத்துரை
Falsehood - பொய்ம்மை
False Imprisonment - முறையின்றிச் சிறைப்படுத்தல்
False Trade Marks - போலி வணிகக் குறிகள்
Fatal Accidents Act - மரண விபத்துச் சட்டம்
Felonious Torts - குற்றமான தீங்குச் செயல்கள்
Finder of goods - பொருளைக் கண்டெடுத்தவர்
Foreign Torts - வெளிநாட்டில் விளைத்த தீங்குகள்
Foreseeable - முன்னறியத்தக்க
Foreseeable consequences - முன்னறியத்தக்க விளைவுகள்
Forged cheque - போலிக் காசோலை
Fraud - ஏமாற்றுதல், வஞ்சித்தல்
General Damages - பொது நட்ட ஈடு
Good conscience - தூய மனச்சான்று
Government - அரசாங்கம்
Guilty mind - குற்ற எண்ணம்
Immediate possession - நேரடி உடைமை
Immovables - தாவரப் பொருள்கள்; நிலை பொருள்கள்
Improper motive - தகா நோக்கம்
Inconvenience - வசதிக் குறைவு
Incorporeal property - நுண் பொருட் செல்வம்
Indian Easements Act - இந்திய வசதி யுரிமைச் சட்டம்
Inevitable accidents - தவிர்க்க முடியாத விபத்துக்கள்
Infants - வயது வராதோர், இளைஞர்
Injunctions - நீதிமன்ற ஆணைகள் (கட்டளைகள்)
Injuria sine damno - நட்டமில்லாத் தீங்கு
Injuries to domestic relations - இல்வாழ்விற்கு இடையூறுகள்
Injurious falsehood - தீங்கான பொய்ம்மை
Injury - தீங்கு, ஊறு
Innuendo - மறைமுக அவதூறு
Insult - அவமதிப்பு
Intentional act - கருதிய செயல்
Interference with contractual relations - ஒப்பந்த உறவில் குறுக்கிடுதல்
Interests - நலன்கள்
Intervening acts - இடை நிகழ் செயல்கள்
Interlocutory Injunction - வழக்கிடை ஆணை
Interlocutory Order - வழக்கிடை உத்திரவு

Intimidation - அச்சுறுத்தல்
Intra vires - வரம்பிற்கடங்கிய
Inventions - புதுப்புனைவுப் பொருள்கள்
Invitee - அழைக்கப்பட்டவர்
Joint wrongdoers - கூட்டாகத் தீங்கிழைத்தோர்
Judge-made Law-நீதிபதிகளால் வகுக்கப்படும் சட்டம்
Judicial - நீதி முறையான
Judicial Proceedings - நீதிமன்ற நடவடிக்கைகள்
Judicial Remedy - நீதிமுறை நிவாரணம்
Justice - நீதி
Justice according to law - சட்டத்தை ஒட்டிய நீதிமுறை
Justification by truth - உண்மையென்று காரணங் காட்டுதல்
Lateral support - புறத்தாங்குதல்
Law - சட்டம்
Law of Torts - தீங்கியல் சட்டம்
Legislation - சட்டம் இயற்றல்
Legal - சட்ட முறையான
Legal Duty - சட்டக் கடமை; சட்டமுறைக் கடமை
Legal Persons - சட்டமுறை நபர்கள்
Legal Right - சட்ட உரிமை; சட்டமுறை உரிமை
Liability - பொறுப்பு
Libel - நிலைத்த அவதூறு, நிலை வடிவு அவதூறு
Licence - அனுமதி
Licensee - அனுமதிபெற்றவர்
Liquidated damages - அறுதியிட்ட நட்ட ஈடு
Lower riparian lands - இறங்குகரை நிலங்கள்
Malice - தீங்கெண்ணம், தகா நோக்கம்
Malicious Arrest - தீயநோக்குடன் கைது செய்வித்தல்
Malicious Attachment - தீய நோக்குடன் ஜப்தி செய்வித்தல்
Malicious Prosecution - தீய நோக்குடன் குற்ற வழக்கிடல்
Malicious Search - தீயநோக்குடன் சோதனை இடச் செய்தல்
Mandatory Injunction - செய்யெனும் ஆணை (கட்டளை); விதிக்கும் ஆணை (கட்டளை)
Master - தலைவர், ஏவியவர், பணித்தவர்
Mediate Possession - நேரடியற்ற உடைமை
Mens rea - குற்ற எண்ணம்; குற்ற மனம்
Misrepresentation - பொய்க் கூற்று; திரித்துரைத்தல்
Monarchy - கோனாட்சி முறை, முடியாட்சி முறை
Moral - ஒழுக்க முறையான
Moral duty - ஒழுக்க முறையான கடமை
Moral Law - ஒழுக்க நெறி
Motive - நோக்கம்
Movables - சங்கமப் பொருள்கள்; அசை பொருள்கள்
Musical Copyright - இன்னிசை மெட்டமைப்புரிமை
Natural and probable consequences - இயல்பானதும் நிகழத்தக்கதுமான விளைவுகள்
Natural right - இயல்பான உரிமை, உற்ற உரிமை
Next friend - வழக்குத் துணைவர்
Necessity - கட்டாய நிலை
Negligence - கவனமின்மை
Negligent act - கவனமின்மையான செயல்
Nominal damages - பெயரளவு நட்ட ஈடு
Nuisance - தொல்லை
Nuisance in relation to servitudes - வசதி யுரிமைபற்றிய தொல்லைகள்
Obstruction to highway-பொதுப் பாதையைத் தடை செய்தல்
Occupation - இருப்பாட்சி

Official duty - பணிமுறையான கடமை
Original works - முதலாயமைந்த படைப்புக்கள்
Ownership - சொத்துரிமை
Parliamentary Proceedings - நாடாளுமன்ற நடவடிக்கைகள்
Passing of Goods - போலிப் பொருள் வாணிபம்
Patent Right - புதுப்புனைவு உரிமை
Perpetual Injunction - நிரந்தர ஆணை
Possession - உடைமை
Possessory Title - உடைமைப் பாத்தியம்
Possible - நிகழக்கூடிய
Precedent-முன் தீர்ப்பு முறைமை
Private Nuisance - தனித்த தொல்லை, தனித்தொல்லை
Privileged communications - சிறப்புரிமை பெற்ற செய்திகள்
Privileged occasions - சிறப் புரிமைத் தறுவாய்கள்
Probable - நிகழத்தக்க
Prohibitory Injunction - தடையிடும் ஆணை (கட்டளை); விலக்கும் ஆணை (கட்டளை)
Property - சொத்து
Prosecution - குற்றவழக்கிடுதல்
Publication - பிரசுரம், வெளியீடு
Public Nuisance - பொதுவான தொல்லை, பொதுத் தொல்லை
Punitive Damages - தண்டனையான நட்ட ஈடு
Qualified Privilege - வரம்புள்ள சிறப்புரிமை
Real Damages - உண்மையான (கேட்டிற்குத் தக்க) நட்ட ஈடு
Re-entry - மீண்டும் புகுதல்
Remedies - நிவாரணங்கள், தீரும் வகைகள்
Right - உரிமை
Right in respect of water - நீர் வசதி யுரிமை
Right to air - வளி (காற்று) வசதி யுரிமை
Right to light-ஒளி வசதி யுரிமை
Right to the person-உடலுரிமை
Right to support - தாங்கு வசதி யுரிமை
Right to way - வழி வசதி யுரிமை
Riparian lands - கரை நிலங்கள்
Riparian owner - கரை நிலத் தாளர்
Rule of Law - சட்டத்தின் ஆட்சி முறை; சட்டத்திற்கடங்கிய ஆட்சிமுறை
Self-redress – தன் முயற்சி நிவாரணம்
Servant - வேலையாள், ஏவலர், பணியாள்
Servient heritage - வசதி தரும் சொத்து
Shortened expectation of life - ஆயுட்கால அருக்கம்
Slander - நிலையா அவதூறு, உடன் மறையும் அவதூறு
Slander of Title - சொததுரிமை பற்றிய பொய்ம்மை
Social duty - சமூக உறவு முறையான கடமை
Sources of Law - சட்டத்தின் மூலங்கள்
Special Damages - தனி நட்ட ஈடு
Specific Relief Act - குறித்த நிவாரணச் சட்டம்
Specific restitution of property- குறித்ததொரு பொருளைத் திரும்பப் பெறுதல்
State - அரசு
Statutory - சட்டத்தால் விதிக்கப் பட்ட
Statutory authority - சட்டப்படியுள்ள அதிகாரம்
Strict liability - கடும் பொறுப்பு, வரம்பிலாப் பொறுப்பு
Subjacent support - அடித்தாங்குதல்
Theft - திருட்டு

Trespass - அத்துமீறுதல்
Trespass by introducing things on land - அத்துமீறி இடுதல்
Trespass by remaining on land- அத்துமீறி இருத்தல்
Trespass by wrongful entry - அத்துமீறிப் புகுதல்
Trespasser - அத்துமீறி நுழைபவர், ஆக்கிரமிப்பாளர்
Trespass to chattels - உடைமை குலைத்தல்
Trespass to land - நிலச் சொத்தில் அத்துமீறுதல்
Tort - (உரிமைத்) தீங்கு
Tort of conspiracy - தீங்கான சதி
Tortious Liability - உரிமைத் தீங்கிற்கான பொறுப்பு
Ultra vires - வரம்பு மீறிய
Unforeseeable - முன்னறிய முடியாத
Unlawful - சட்ட முரணான
Unliquidated damages - அறுதியிடப்படாத நட்ட ஈடு
Upper riparian lands - ஏறுகரை நிலங்கள்
Using criminal force - உடலைத் தாக்குதல்
Vicarious Liability - பகரப் பொறுப்பு
Violation of legal right - சட்டப்படியான உரிமைக்கு ஊறு விளைத்தல்
Wrong - தீங்கு, இன்னுமை
Wrongful confinement - முறையின்றிச் சிறைப்படுத்தல்
Wrongfully destroying - நியாயமின்றி அழித்தல்
Wrongfully detaining - நியாயமின்றி வைத்துக்கொள்ளல்
Wrongfully disposing - நியாயமின்றி உரிமை மாற்றல்
Wrongfully taking - நியாயமின்றி எடுத்துக்கொள்ளல்
Wrongful Process of Law-முறையற்ற சட்ட நடவடிக்கைகள்
Wrongs to Incorporeal Property- நுண்பொருட் செல்வங்களுக்கு விளையும் தீங்குகள்
Wrongs to movables - அசைபொருள் குறித்த தீங்குகள்
Wrongs to the person - உடலுரிமைக்கு விளையும் தீங்குகள்
Wrongs to Property - பொருளுரிமைத் தீங்குகள்; பொருளைப் பொறுத்த தீங்குகள்.

## இலத்தீன் விதிகளுக்கு இயைந்த தமிழ் வாசகங்கள்

1. Actio personalis moritur cum persona—ஆளைப் பொறுத்த வழக்கு ஆளுடனே மடிந்துவிடும்.
2. Damnum sine injuria—தீங்கில்லா நட்டம்; தீங்கில் விளையா நட்டம்.
3. Distress damage feasant—அத்துமீறியவைகளை அடைத்து வைத்தல்.
4. Injuria sine damno—நட்டமில்லாத் தீங்கு.
5. Mens rea—குற்ற எண்ணம்; குற்ற மனம்.
6. Novus actus interveniens—இடைநிகழ் புதுச்செயல்.
7. Qui facit per alium facit per se—தம் வேலையொன்றைப் பிறர் மூலம் செய்பவர் தாமே செய்பவராவார்.
8. Quia timet action—வருமுன்னர்க் காத்தல்.
9. Res ipsa loquitur—செயலே செப்புகிறது; செயலின் விளைவே செப்புகிறது.
10. Ubi jus ibi remedium—உரிமைக்கு ஊறு விளைந்தால் உய்தியும் அதற்கு உண்டு.
11. Volenti non fit injuria—இசைந்து ஏற்றது தீங்காவதில்லை; இசைந்து ஏற்றது இன்னாமையாகாது.

---